ஸ்ரீ

# ஸ்ரீபாகவதம்.

ஸப்தம அஷ்டம ஸ்கந்தங்கள்

## தமிழ் வசனம்.

இஃது

அ· வீ· நரஸிம்ஹாசார்யரால்

இயற்றப்பெற்று




சென்னை :

ஆர். வேங்கடேஶ்வர் கம்பெனியாரவர்களால்

ஆநந்த அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1917




ஸப்தம அஷ்டம ஸ்கந்தங்களின்

# பொருளடக்கம்.

அத்யாயம் ஸப்தம ஸ்கந்தம். பக்கம்.

## அஷ்டம ஸ்கந்தம்.

ஸப்தம அஷ்டம ஸ்கந்தங்களிலுள்ள

# படங்களின் விவரம்.

நெம்பர். பக்கம்.



# ஸ்ரீபாகவதம்.

## ஸப்தம ஸ்கந்தம்.

பரீக்ஷித்து வினவுதலும், ஸ்ரீசுகர் ஸமாதானம் சொல்லி யுதிஷ்டிர நாரதர்களுடைய ஸம்வாதத்தைக் கூறுதலும்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:—ப்ரஹ்மரிஷீ! பகவான் ஷாட்குண்யபூர்ணன்; தோஷங்கள் எவையும் தீண்டப்பெறாதவன்; எல்லோரிடத்திலும் ஸமனாயிருப்பவன். அவனுக்கு த்வேஷியாவது ப்ரியனாவது எவனும் கிடையாது. ஸமஸ்த ப்ராணிகளுக்கும் அவன் நண்பன், அந்தராத்மாவாகையால் அவன் அனைவர்க்கும் ப்ரீதிக்கிடமானவன். இத்தகைய பகவான், ராகம் த்வேஷம் முதலிய ப்ராக்ருத குணங்களால் வைஷம்ய முடைய அற்பன்போல, இந்த்ரனுடைய ப்ரயோஜனத்திற்காகத் தைத்யர்களை ஏன் கொன்றான்? ஸாக்ஷாத் பரமபுருஷார்த்த ஸ்வரூபனான இந்தப் பகவானுக்கு இந்த்ரன் முதலிய தேவக்கூட்டங்களால் ஆகவேண்டிய ப்ரயோஜனம் என்னவிருக்கின்றது? அவனுக்கு அஸுரர்களிடத்தினின்று பயம் உண்டாவதற்கும் இடமில்லை. அவர்களிடத்தில் த்வேஷத்திற்கும் ப்ரஸக்தி இல்லை. ஸத்வாதி குணங்களும் அவற்றின் மூலமாய் விளையும் ராக த்வேஷாதிகளும் அவனுக்கு இல்லையல்லவா? மிகுந்த மதியுடைய மஹானுபாவரே! ஸ்ரீமந்நாராயணனுடைய குணங்களைப் பற்றி எனக்குப் பெரிய ஸம்சயம் உண்டாயிருக்கின்றது. அதைத் தேவரீர் போக்கியருள வேண்டும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்: மஹாராஜனே! ஸ்ரீஹரியின் சரித்ரத்தைப் பற்றி நீ நன்றாக வினவினை. அது பாகவதர்களின் மஹிமை உள்ளடங்கப்பெற்றது. அந்தப் பாகவதமஹிமை பகவானிடத்தில் பக்தியை வளர்க்கும். ஆகையால் உன் கேள்விக்கு நான் ஸந்தோஷம் அடைந்தேன். நாரதர் முதலிய ரிஷிகள் மிகவும் பரிசுத்தமான அந்தப் பகவானுடைய சரித்ரத்தைப் பாடுகிறார்கள். நான் வ்யாஸமுனிவருக்கு நமஸ்காரம் செய்து பகவானுடைய குணங்களில் உனக்கு உண்டான ஸம்சயத்தைப் போக்கும் பொருட்டு அந்தப் பகவானுடைய கதையைச் சொல்லுகிறேன். பகவான் ராகம் த்வேஷம் முதலிய கெட்ட குணங்கள் எவையும் தீண்டப் பெறாதவன்; சாஸ்த்ரம் தவிர மற்ற ப்ரமாணங்களுக்கு விஷயமாகாதவன். கர்மத்தினால் விளையும் பிறவி முதலியவை அற்றவன்; ஷாட் குண்ய பூர்ணன்; சேதன அசேதன ரூபமான இருவகை ப்ரக்ருதியைக் காட்டிலும் விலக்ஷணமானவன். ஆயினும் தனது அம்சமாகிய ப்ருக்ருதியில் ஆவேசித்து ப்ரபஞ்சமாய் விரிந்து [1]பாத்ய பாதகவர்க்கங்களெல்லாம் தானேயாயிருக்கிறான். பாதிக்குந் தன்மை பாதிக்கப் படுந்தன்மை இரண்டும் சரீர பூதமான தேவ மனுஷ்யாதிகளைச் சேர்ந்தவைகளே யன்றி ஈஶ்வரனைச் சேர்ந்தவைகளன்று. ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்கள் ப்ரக்ருதியின் குணங்களேயன்றிப் பரமாத்மாவின் குணங்களன்று. அக்குணங்கள் ஒருவனுக்கு ஒரே ஸமயத்தில் தலையெடுக்கவும் மாட்டா. ஒரே ஸமயத்தில் அடங்கவும் மாட்டா. ஒரு ஸமயத்தில் ஒருவனுக்கு ஒரு குணமே தலையெடுத்திருக்கும். அப்பொழுது மற்ற இரண்டு குணங்களும் தலை சாய்ந்திருக்கும். அதற்குக் காரணம் அவரவர்க

1. பாதிக்கத் தகுந்தது—பாத்யம். ப்ரதிக்குமது—பாதகம்.

ளுடைய கர்மபரிபாகமேயொழிய வேறில்லை. தேவர்களும் ரிஷிகளும் பெரும்பாலும் புண்யகர்மமே செய்பவர்களாகையால் அவர்களுக்குப் பெரும்பாலும் ஸத்வகுணமே தலையெடுத்திருக்கும். அஸுரர்கள் பாபமே செய்பவர்களாகையால் அவர்களுக்கு ரஜோகுணம் தலையெடுத்திருக்கும். யக்ஷர்களும் ராக்ஷஸர்களும் மிகவும் பாபிஷ்டர்களாகையால் அவர்களுக்குத் தமோகுணம் தலையெடுத்திருக்கும். தேவாதிகளுக்கு ஸத்வகுணம் தலையெடுத்திருக்கும் பொழுதும் அஸுரர்களுக்கு ரஜோகுணம் தலையெடுத்திருக்கும்பொழுதும் யக்ஷ ராக்ஷஸர்களுக்குத் தமோகுணம் தலையெடுத்திருக்கும் பொழுதும் அவர்களிடத்தில் ஈஶ்வரன் நுழைந்து அந்தந்த குணங்களுக்குரிய கார்யங்களைச் செய்விக்கிறான். ஸத்வகுணம் தலையெடுக்கப் பெற்ற தேவர்களை அனுக்ரஹித்து அவர்களுக்கு ஜயத்தை விளைவிக்கிறான். ரஜஸ்தமஸ்ஸுக்கள் தலையெடுத்த அஸுரர்கள் யக்ஷர்கள் ராக்ஷஸர்கள் இவர்களுக்கு அபஜயத்தைக் கொடுக்கிறான். ஸர்வர்க்கும் அந்தராத்மாவாகிய ஸர்வேஶ்வரன் ஒருவனுக்கு ஜயத்தையேயாவது அபஜயத்தையேயாவது கொடுக்கிறதில்லை. அவரவர்கள் செய்த கர்மங்கள் பரிபாக தசையை அடையும்பொழுது அவரவர்கள் கர்மங்களுக்குத் தகுந்தபடி ஸத்வாதிகுணங்கள் தலை யெடுக்கின்றன. ஈஶ்வரன் ஸத்வகுணம் தலையெடுத்தவர்களுக்கு ஜயத்தையும் ரஜஸ்தமோ குணங்கள் தலையெடுத்தவர்களுக்கு அபஜயத்தையும் கொடுக்கிறான். ஸத்வாதி குணங்களின் தோற்றமும் அவற்றின் மறைவும் கர்மாதீனமாகையால் அவற்றை அனுஸரித்து ஜய அபஜயங்களைக் கொடுக்கிற ஈஶ்வரனுக்குப் பக்ஷபாதாதிகள் கிடையாது. தேவாதிகளுக்குப் பெரும்

பாலும் ஸத்வகுணமே தலையெடுத்திருக்குமாகையால் அவர்களுக்குப் பெரும்பாலும் ஐயமே உண்டாகின்றது. ஒருகால் அபஜயமும் உண்டாகலாம், பாபிகளான அஸுராதிகளுக்குப் பெரும்பாலும் ரஜஸ் தமோ குணங்களே தலையெடுத்திருக்குமாகையால் அபஜயமே உண்டாகின்றது. ஒருகால் ஜயமும் உண்டாகும். காஷ்டம் முதலியவற்றில் அக்னி முதலிய வஸ்துக்கள் போல், ஈஶ்வரன் தேவாதி பூதங்களில் புகுந்திருப்பினும் அவற்றின் தோஷங்கள் தீண்டப்பெறுமல் விளக்கமுற்றிருப்பான். காஷ்டாதிகளைக் காட்டிலும் அக்னி முதலியவை வேறு பட்டுத் தோற்றுகிறதுபோல், ஈஶ்வரன் தேவாதி பூதங்களில் உட்புகுந்திருப்பினும் ப்ரக்ருதி புருஷ ஈஶ்வரர்களின் உண்மையை அறியாதவர்களுக்கு அவற்றைக் காட்டிலும் வேறாகத் தோற்றமாட்டான். ப்ரக்ருதி புருஷன் ஈஶ்வரன் ஆகிய இம்மூன்று தத்வங்களின் ஸ்வரூபத்தை அறிந்தவர்கள் பல ஜன்மங்களில் விவேகத்துடன் பக்தியோகத்தை அப்யஸித்து ஆத்மாவுக்கு அந்தராத்மாவான பரமாத்மாவைக் கடைசியில் ஸாக்ஷாத் கரிப்பார்கள். இந்தப் பரமபுருஷன் தன் ஸங்கல்பத்தினுல் ஜீவாத்மாக்களுக்குத் தேவ மனுஷ்யாதி சரீரங்களைப் படைக்க விரும்பி ரஜோகுணத்தையும், அவற்றைக் காக்க விரும்பி ஸத்வகுணத்தையும், ஸம்ஹரிக்க விரும்பித் தமோகுணத்தையும் தூண்டுகிறுன். ஓ மன்னவனே! பரமாத்மாவான ஸர்வேஶ்வரன் தனக்குச் சரீரமான காலத்தை நிமிஷம் முதலிய பல கூறுகளாகப் பிரித்து ப்ரக்ருதி புருஷர்களைக் கொண்டு சேதனு சேதன ரூபமான ப்ரபஞ்சத்தையெல்லாம் படைக்கிறுன். ஆகையால் ஜீவாத்மாக்களின் கர்ம பரிபாகத்திற்குரிய காலத்தைத் தூண்டுகிறவனும் அந்த ஸர்வேஶ்வரனே. ராஜனே!

ஆகையால் ஸத்வாதி குணங்களைத் தூண்டுகிறவனும் காலத்தைச் சரீரமாகவுடையவனுமான ஸர்வேஸ்வரன் ஸத்வகுணம் தலையெடுத்த தேவஸைன்யத்தில் ஆவேசித்து வலிவைக் கொடுத்து அதற்கே ஜயங்கொடுக்கிருன். அந்தத் தேவதைகளுக்குச் சத்ருக்களும் ரஜஸ் தமோகுணங்கள் தலையெடுத்தவர்களுமான அஸுராதிகளை அழிக்கிருன். தேவதைகள் ஸத்வ குணம் தலையெடுத்தவர்களாகையல் அவனுக்கு ப்ரியமாயிருப் பார்கள். அவரவர் கர்மங்களுக்குரியபடி பலாபலங்களை விளைத்து ஜய அபஜயங்களை விளைவிக்கிருனுகையால் அது அவனுக்குக் கீர்த்தியை விளைக்கின்றதேயன்றி அபகீர்த்தியை விளைக்கிறதில்லை. ராஜஸூய யாகத்தில் யுதிஷ்டிரன் இந்த விஷயத்தைப் பற்றி நாரதரைக் குறித்து மிக்க ஆவலுடன் வினவ, அந்தத்தேவரிஷி அவருக்கு இவ்விஷயத்தில் புண்யமான ஒரு இதிஹாஸத்தை மொழிந்தார். ராஜஸூய மஹாயாகத்தை யுதிஷ்டிரன் அநுஷ்டிக்கும்பொழுது ஶிஶுபாலன் ஸ்ரீக்ருஷ்ண பகவானிடத்தில் ஸாயுஜ்யம் அடைந்த மஹத்தான அற்புதத்தைக் கண்டு வியப்புற்று முனிவர்கள் அனைவரும் அருகில் இருந்து கேட்டுக்கொண்டிருக்கையில் அங்கு உட்கார்ந்திருக்கின்ற நாரத மஹர்ஷியைக் குறித்து யுதிஷ்டிரன் இங்ஙனம் வினவினன். 'இது மிகவும் ஆச்சர்யமாயிருக்கிறது. வேறு ப்ரயோஜனங்களை விரும்பாமல் பகவானிடத்தில் பக்தி செய்கிற பெரியோர்களுக்கும் இது கிடைப்பதரிது. ஸ்ரீக்ருஷ்ணன் வேதாந்தங்களால் ஓதப்படும் பரதத்வம். அவன் இந்த ப்ரபஞ்சத்தில் எங்கும் நிறைந்தவன். இந்த ப்ரபஞ்சமெல்லாம் அவனிடத்தில் நிலை நின்றிருக்கிறது. ஆயினும் அவன் அதன் தோஷங்கள் தன் மேல் தீண்டப்பெருமல் பரிசுத்த

ளுகவே விளங்குந் தன்மையன். ஆனதுபற்றியே அவன் வாஸுதேவனென்று புகழப்படுகிறான். அத்தகைய பகவானைப் பற்பல முனிவர்களும் பெறமுடியாமல் தேடிக்கொண்டிருக்கிறார்களே; அப்படியிருக்க, த்வேஷியான சிசுபாலன் அவனைப் பெற்றானே. இஃதென்ன ஆச்சர்யம்? நாரதமுனிவரே! நாங்களெல்லாரும் இதை அறிய விரும்புகிறோம். ப்ருதுவின் தந்தையான வேனன் பகவானைப் பழித்த மாத்ரத்தைக்கொண்டு அந்தணர்களால் நரகத்தில் தள்ளுண்டான். இந்தச் சிசுபாலனோவென்றால் மழலைச்சொற்களுக்கிடமான பால்யம்முதல் இதுவரையில் ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் கோபமுடையவன். இவன் மிகவும் பாபிஷ்டன். தந்தவக்த்ரனும் இவனோடொத்த துர்ப்புத்திகொள்பவன். இந்தச் சிசுபால தந்தவக்த்ரர்கள் பரப்ரஹ்மமும் நிர்விகாரனுமான ஸ்ரீக்ருஷ்ணனை ஓயாமல் வைதுகொண்டேயிருப்பினும், இவர்கள் நாக்கில் வெண்குஷ்டமும் உண்டாகவில்லை; நரகத்தையும் அடையவில்லை. ஸமஸ்தலோகங்களும் பார்த்துக்கொண்டிருக்கையில், நிரூபித்தறியமுடியாத பரஞ்சோதியான பகவானுடைய ஸாயுஜ்யத்தை இவர்கள் அநாயாஸமாகவே அடைந்துவிட்டார்கள். இது எப்படி? விளக்கின் ஒளி காற்றினால் அலைவதுபோல், என்புத்தி இவ்விஷயத்தில் ப்ரமிக்கின்றது. மஹானுபாவரே! இது மிகவும் ஆச்சர்யமாயிருக்கின்றது. ஆகையால் இதன் காரணத்தை எனக்குச் சொல்வீராக' என்றான். இங்ஙனம் யுதிஷ்டிரன் வினவினதைக்கேட்ட நாரதமுனிவர் ஸந்தோஷம் அடைந்து ஸபையிலுள்ளவர்கள் அனைவரும் கேட்டுக்கொண்டிருக்கையில் அவனுடைய கேள்வியின் பரிஹாரம் உள்ளடங்கப்பெற்ற கதையை மொழிந்தார்.

நாரதர் சொல்லுகிறார்:—யுதிஷ்டிர மன்னவனே!

நிந்தை ஸ்தோத்ரம் ஸத்காரம் திரஸ்காரம் இவற்றிற்கு தேஹம் விஷயமென்று நினைப்பது, தேஹம் ஆத்மா இவைகளின் ஸ்வரூபத்தை உள்ளபடி அறியாமையாகிற அவிவேகத்தினால் ஏற்பட்டதேயன்றி உண்மையில் தேஹம் அவற்றிற்கு விஷயமன்று. கட்டைக்குச் சந்தனம் பூசி அலங்கரிக்கை முதலிய ஸத்காரம் செய்தால் அதற்கு அறிவை நினைக்குந்தன்மை இல்லையென்பதில் விவாதமில்லையல்லவா? மன்னவனே! இந்தஸம்ஸாரத்திலுள்ள தேவமனுஷ்யாதி ப்ராணிகள் தேஹத்தை நானென்றும் அதைத் தொடர்ந்தவைகளை என்னுடையதென்றும் அபிமானித்து, பிறர் அடிக்கினும் நிந்திக்கினும், 'நான் அடியுண்டேன்; நான் நிந்திக்கப்பட்டேன்' என்று ப்ரமித்து, அடித்தவர்களையும் நிந்தித்தவர்களையும் ஹிம்ஸிக்கிறார்கள். தேஹாத்மாபிமான ரூபமான அஜ்ஞானத்தினால் 'நான் அடியுண்டேன். நான் நிந்திக்கப்பட்டேன்' என்று நினைக்கிறார்கள். அந்தத் தேஹம் வதிக்கப்படும்பொழுது அவ்வஜ்ஞானத்தினாலேயே 'நான் வதிக்கப்பட்டேன்' என்று நினைக்கிறார்கள். வதம் முதலியவையெல்லாம் தேஹத்தைச் சேர்ந்தவைகளையன்றி ஆத்மாவைச் சேர்ந்தவைகளல்ல. ஆகையால் ஸம்ஸாரிகள் நினைக்கிற நிந்தை ஸ்தோத்ரம் முதலியவை அனைத்தும் தேஹாத்மாபிமானத்தினால் ஏற்பட்டவைகளே. ஈச்வரனுக்கு இவையெல்லாம் கிடையாது. அவனுக்கு அந்த அஜ்ஞானமும் கிடையாது. அவனுக்கு ஜகத்தெல்லாம் சரீரமே. ஆயினும் அதில் அவனுக்கு ஆத்மாபிமானம் கிடையாது. அவன் தோஷங்களெவையும் தீண்டப்பெறாத பரிசுத்தன். அவனுக்கு 'நான் அடியுண்டேன். நிந்திக்கப்பட்டேன்' என்கிற அபிமானமே கிடையாது. ஆதலால் அவன் ஹிம்ஸிக்கிறானென்று எந்தக் காரணத்தைக்கொண்டு கற்பிக்கமுடியும்? அவன்

தன்னை நிந்தித்த சிசுபாலாதிகளைத் தண்டித்தானாயி னும், அது அவர்களுடைய ஹ்ருதத்துறகாகம்வயனறித் தேஹாத்மாபிமானத்தினாலன்று. ஹீனமான அஸுர ஜன்மத்தைப் போக்கிப் பரம புருஷார்த்த ரூபமான தன்னை அடையும்படி செய்தானென்பது நமக்குத் தெரி ந்த விஷயமேயல்லவா? ஆகையால் அவன் ஸம்ஸாரி களைப்போல் ஸ்துதி நிந்தாதிகளை அபிமானிக்கிறவனல் லன். ஆனது பற்றியே சிசுபாலனுக்கு மோக்ஷங்கொடுத் தமை பொருந்துகின்றது. 'ஆனால் பகவானை நிந்திக்கை தோஷமாகாது. துதிக்கையும் குணமாகாது. மற்றும், வேனனுக்கும் சிசுபாலனுக்கும் பேதமென்? சிசுபாலனுக்கு மோக்ஷம் உண்டானாற்போல் வேனனுக்கும் மோக்ஷம் உண்டாகவேண்டுமல்லவா?' என்றால் சொல்லுகிறேன் கேள். பகவான் ஸம்ஸாரிகளைப்போல் நிந்தாதிகளை அபி மானிக்கமாட்டானாகையால், இடைவிடாத த்வேஷத்தி னாலாவது பக்தியினாலாவது பயத்தினாலாவது ஸ்நேஹத் தினாலாவது காமத்தினாலாவது பகவானிடத்தில் அவ னைக் காட்டிலும் வேறொரு வஸ்துவும் தோற்றாதபடி மனத்தை நிலை நிறுத்தவேண்டும். ஸம்ஸாரியான ஜீவன் பகவானிடத்தில் த்வேஷத்தினால் சீக்ரத்தில் எப்பொழு தும் அவனையே சிந்தித்துக் கொண்டிருக்குந் தன்மை யைப் பெறுவதுபோல், பக்தி யோகாதிகளாலும் அத்தன் மையைப் பெறமாட்டானென்பது என்னுடைய நிச்சயம். புழு குளவியால் சுவற்றில் தன் பாழியில் அடைப்புண்டு அத னிடத்தில் கோபத்தினாலும் பயத்தினாலும் அதையே நினைத்துக் கொண்டிருந்து அதன் ஸ்வரூபத்தைப் பெ றுகின்றது. அங்ஙனமே, தன் ஸங்கல்பத்தினால் மனுஷ்ய னாக அவதரித்த ஸாக்ஷாதீச்வரனான ஸ்ரீக்ருஷ்ணனிடத் தில் த்வேஷங்கொண்டு அவனையே எப்பொழுதும் த்யா

னித்துக் கொண்டிருப்பவர்கள், பாபங்களெல்லாம் தொலையப் பெற்று ஸ்ரீ க்ருஷ்ணனையே அடைவார்கள். பக்தியினால் பகவானிடத்தில் மனத்தை நிலைநிறுத்தி அவனுடைய கதியைப் பெறுவதுபோலக், காமம் த்வேஷம் பயம் இவைகளாலும் பலர் அவனிடத்தில் மனத்தை நிறுத்தி அவனுடைய கதியைப் பெற்றார்கள். பகவானை அடைவதற்கு ப்ரீதியுடன் மாறாமல் அவனையே நினைக்கையாகிற பக்திதான் காரணம். ஆயினும், பகவானிடத்தில் த்வேஷம் பயம் காமம் இவை தலையெடுத்து அவனை இடைவிடாமல் நினைக்கப்பெற்று அந்நினைவின் மிகுதியால் அதற்குக் காரணமான த்வேஷாதிகளையும் மறக்கின்றார்கள். அந்நினைவு மஹாநந்த ஸ்வரூபனான பரம புருஷனைப் பற்றினதாகையால் பக்தியைப்போல் அதுவும் அவனை அடைவதற்குக் காரணமாகின்றது. வேனாதிகள் பகவானைப் பழித்தார்களேயன்றி த்வேஷத்தின் மிகுதியால் அவனையொழிய மற்றொன்றையும் அறியாமல் அவனையே நினைக்குந் தன்மையைப் பெறவில்லை. ஆகையால் அவர்களுக்கு நரகமேயன்றி மோக்ஷம் உண்டாகவில்லை. ஆகையால் நிந்தை தோஷமாகாதென்றும் ஸ்துதி குணமாகாதென்றும் நினைக்கலாகாது. பாவனையின் மிகுதியால் தாம் செய்யும் நிந்தாதிகளை மறக்கிறவர்களுக்கே அவை தோஷமாகமாட்டாவன்றி மற்றவர்களுக்கு அவைதோஷமாகும். இடைப்பெண்கள் பகவானிடத்தில்காமத்தினாலும்கம்ஸன் பயத்தினாலும், சிசுபாலன் முதலிய ராஜாக்கள் த்வேஷத்தினாலும் அவனுடைய கதியைப் பெற்றார்கள். வ்ருஷ்ணிகளும் நீங்களும் தேஹ ஸம்பந்தத்தைப் பற்றின ஸ்நேஹத்தினால் அவனுடைய கதியைப்பெற்றீர்கள். நாங்கள் பக்தியினால் அவனுடைய கதியைப் பெற்றோம். வேனன், காமுகர் த்வேஷிகள் பயந்தவர் ஸ்நேஹிதர் பக்தர் என்கிற

கிழ்ச்சொன்ன ஐந்துவகைப்பட்டவர்களில ஒருவகையிலு ம் சேர்ந்தவனல்லன். வேனன் பரம புருஷனைப்பழித்தாலு மினும் சிசுபாலனைப்போல் த்வேஷம் செய்யவில்லை. ஆகை யால், அவன் சிந்தித்தலைப்பற்றி நரகத்தையே அடைந் தான. மற்றொன்றும் தோன்றாதபடி நிலைநின்ற பாவனையை விளைவிக்கவல்ல த்வேஷாதிகளே மோக்ஷத்தைக் கொடுக் குமன்றி மற்ற த்வேஷாதிகள் நரகத்தையே விளைவிக்கும். ஆகையால், கிழ்ச்சொன்ன ஐந்து உபாயங்களில் ஏதேனு மொன்றால் ஸ்ரீ க்ருஷ்ணனிடத்தில் மனத்தை நிறுத்த வேண்டும். பாண்டுவின் புதல்வனே! யுதிஷ்டிரா! உங்கள் சிறியதாயின பிள்ளையாகிய சிசுபாலனும் தந்தவக்த்ரனு மாகிய இவவிருவரும முனபு ஸ்ரீமஹாவிஷ்ணுவின் த்வார பாலகர்களா யிருந்தவர்கள ; ப்ராஹ்மண சாபத்தினால் தங்கள் ஸ்தானத்தினின்றும் நழுவினார்கள். முனபு பகவா னுக்கு மிகவும் அனுகூலர்களா யிருந்தமையாலும இப் பொழுது ஏற்பட்ட த்வேஷத்தின மிகுதியாலும பகவா னையே இடைவிடாமல் நினைக்கையாகிற பாவனாதிசயத் தைப் பெற்று அதனால் மோக்ஷத்தை அடைந்தார்கள்.

யுதிஷ்டிரன சொல்லுகிறான —சாபம் எப்படிபபட் டது? விஷ்ணுவின் பக்தர்களான அவர்களை அவமதித் துச் சாபங்கொடுத்தவர் யார்? பகவானிடத்தில் மாறாத பக்தியுடைய மஹான்களுக்கு ஜன்மம் உண்டாயிற்றென் பது நம்பக்கூடாதது. கர்மத்தினால் விளையக்கூடிய ப்ராக்ருதமான தேஹம் இந்த்ரியம் ப்ராணன் இவை அற்றவர்களும் வைகுண்டவாஸிகளுமான நித்ய ஸித்தர் களுக்கு ப்ராக்ருதமான தேஹஸம்பந்தமும் அதைத் தொடர்ந்து வரக்கூடிய ராக த்வேஷாதி [illegible] எங்ஙனம் சேருமென்று எனக்குப் பெரிய [illegible] உண்டாகின்றது. இதை விவரித்துச் [illegible]



1527. ஸனக ஸனந்தனாதிகள் ஜய விஜயர்களுக்குச்
சாபங் கொடுத்தல்

நாரதர் சொல்லுகிறார்.—ப்ரஹ்மாவின் புதல்வர்களான ஸனந்தனாதிகள் மூன்று லோகங்களிலும் ஸஞ்சரித்துக் கொண்டு ஒருகால் தெய்வாதீனமாய் விஷ்ணுலோகம் சென்றார்கள். அவர்கள் ஐந்தாறு வயதுள்ள சிறுவர்கள் போன்றிருப்பார்கள். ருத்ரன் முதலியவர்களுக்கும் முன்னே பிறந்தவர்கள். தேஹத்தில் ஆடையின்றித் திகம்பரர்களாயிருப்பவர்கள். விஷ்ணுவின் த்வாரபாலகர்கள் அவர்கள் வருவதைக் கண்டு குழந்தைகளென்று நினைத்துத் தடுத்தார்கள். அவர்கள் கோபித்து த்வாரபாலர்களை நோக்கி 'ரஜஸ் தமோ குணங்கள் தீண்டப்பெறாத ஸ்ரீவிஷ்ணுவின் பாத மூலத்தில் நீங்கள் வாஸம் செய்யத் தகுந்தவரல்ல., மூர்க்கர்களே! ஆகையால் நீங்கள் சீக்ரத்தில் பாபிஷ்டமான அஸுர ஜன்மத்தைப் பெறுவீர்களாக' என்று சபித்தார்கள். இங்ஙனம் சபிக்கப்பட்ட அந்த த்வாரபாலகர்கள் தங்கள் ஸ்தானத்தினின்றும் நழுவுவதைக்கண்டு மன இரக்கமுடைய அந்த ஸனந்தனாதிகள் 'நீங்கள் மூன்று ஜன்மங்களில் சாபம் தீரப்பெற்று மீளவும் இவ்வுலகத்தைப் பெறுவீர்களாக' என்றுமொழிந்தார்கள். அங்ஙனம்அந்தணர்களால் சபிக்கப்பெற்ற விஷ்ணுவின் த்வார பாலகர்களே பின்பு திதியின் பிள்ளைகளாகப் பிறந்தார்கள். அவர்களில் முதல்வன் ஹிரண்யகசிபு. அவன் தம்பி ஹிரண்யாக்ஷன். அவ்விருவரும் தைத்ய தானவர்களால் துதிக்கப் பெற்றிருந்தார்கள். அவர்களில் முதல்வனாகிய ஹிரண்யகசிபு ந்ருஸிம்ஹாவதாரம் செய்தபகவானால் வதிக்கப்பட்டான். ஹிரண்யாக்ஷன் மஹாஜலத்தில் முழுகின பூமியை எடுக்கும் பொருட்டு வராஹ வுருவங்கொண்ட பகவானால் வதிக்கப்பட்டான். ஹிரண்யகசிபு பகவானுக்கு மிகவும் ப்ரியனான ப்ரஹ்லாதன் என்னும் தன் புதல்வனை வதிக்கும்

பொருட்டு அவனைப் பலவாறு ஹிம்ஸித்தான். அந்த ப்ரஹ்லாதன் பகவானுடைய தேஜஸ்ஸினால் பாதுகாக்கப்பட்டிருந்தான். அவன் பசி தாஹம் முதலிய விகாரங்கள் தீண்டப் பெறாதவன்; ஸுகம் துக்கம் முதலியவற்றையெல்லாம் ஸமமாகப் பார்க்குந் தன்மையுடையவன். அவன் ஸகலமானவர்களுக்கும் அந்தராத்மாவான பரமாத்மாவாகவே தன்னைப் பாவித்துக்கொண்டிருந்தான். ஆகையால் ஹிரண்யகசிபு அவனை எவ்வகை உபாயங்களாலும் வதிக்க முடியாதிருந்தான். அந்த ஹிரண்யாக்ஷ ஹிரண்யகசிபுக்கள் தான் இரண்டாவது ஜன்மத்தில் விஸ்ரவஸுக்குக் கேகஸியினிடத்தில் ராவண கும்பகர்ணர்களாகப் பிறந்தார்கள். அவர்களிருவரும் உலகங்களையெல்லாம் பீடித்துக்கொண்டிருந்தார்கள். அந்த ஜன்மத்திலும் பகவான் ஸ்ரீராமனாக அவதரித்துச் சாபம் நீங்கும்பொருட்டு அவர்களை வதித்தான். அந்த ராமாவதாரத்தின் மஹிமைகளையெல்லாம் நீ மார்க்கண்டேயரிடத்தில் கேட்கப்போகின்றனை. ஆகையால் நான் அதை இப்பொழுது விவரிக்கவேண்டிய அவஸ்யமில்லை. அந்த ராவண கும்ப கர்ணர்கள் இப்பொழுது மூன்றாம் ஜன்மத்தில் உன் தாய்க்கு உடன் பிறந்தவளிடத்தில் சிசுபால தந்தவக்த்ரர்களென்கிற இரண்டு க்ஷத்ரியர்களாகப் பிறந்தார்கள். அவர்கள் இப்பொழுது சாபத்தினின்றும் விடுபட்டு ஸ்ரீக்ருஷ்ணனுடைய சக்ரத்தினால் பாபங்கள் யாவும் தொலையப்பெற்றார்கள். அவர்கள் ஓயாத வைரத்தினால் பகவானை இடைவிடாமல் த்யானித்துக் கொண்டிருந்தார்கள். அந்த த்யானத்தின் மஹிமையினால் அவர்கள் பகவானுடைய ஸாரூப்யத்தை அடைந்து த்வாரபாலகர்களாகி முன்போலவே ஸ்ரீமஹாவிஷ்ணுவின் பார்ஸ்வத்தைச் சேர்ந்தார்கள்.

யுதிஷ்டிரன் சொல்லுகிறான்:—மிகவும் ப்ரீதிசெய்யத்

தருந்த புதல்வனும் நற்குணங்கள் அமைந்த மஹானுபா வனுமான ப்ரஹ்லாதனிடத்தில் ஹிரண்யகசிபுவுக்கு ஏன் த்வேஷம் உண்டாயிற்று? ப்ரஹ்லாதனுக்குத் தன்னைப் பரமாத்மாவாகவே பாவிக்கும்படியான நிலைமை எப்படி உண்டாயிற்று? இதை எனக்கு விவரித்துச் சொல்வீராக.

முதல் அத்யாயம் முற்றிற்று.

## ஹிரண்யகசிபுவின் வ்ருத்தாந்தத்தைக் கூறுதல்.

நாரதர் சொல்லுகிறார்:—தேவதைகளிடத்தில் பக்ஷ பாதமுடைய பகவான் வராஹ உருவங்கொண்டு தன் ப்ரா தாவான ஹிரண்யாக்ஷனை வதிக்கையில் ஹிரண்யகசிபு கோபத்தினாலும் சோகத்தினாலும் பரிதபித்தான். அவன் கோபத்தினால் உதட்டைக் கடித்துக் கண்கள் மிகவும் ஜ்வலிக்கப் பெற்றுக் கோபாக்னியின் புகையால் அழுக் கடைந்த ஆகாயத்தைப் பார்த்துப் பயங்கரமான கோ ரைப் பற்களாலும் கொடிய கண்ணோக்கத்தினாலும் பார்க்க முடியாமல் புருவநெரிப்புடன் கூடின முகமுடைய வனாகி ஸபையில் சூலத்தை உயரத் தூக்கிக்கொண்டு தானவர்களைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தான். 'ஓ தானவர்களே! தைத்யர்களே! த்ரிமூர்த்தனே! த்ரி யக்ஷனே! சம்பரா! சதபாஹோ! ஹயக்ரீவா! நமுசி! பாக னே! இல்வலா! விப்ரசித்தீ! புலோமா! மற்றும், சகு னிகளே! நீங்கள் எல்லோரும் என் வார்த்தையைக் கேட்பீர்களாக. உடனே நான் சொன்னபடியும் செய்வீர் களாக. காலதாமதம் செய்யவேண்டாம். ஸ்ரீ மஹா விஷ்ணு தேவர் கூட்டத்திலும் அஸுரர் கூட்டத்திலும் ஸமனுயிருப்பவன். ஆயினும், நமது சத்ருக்களான தே வதைகள் அவனை அநுவர்த்தித்துத் தங்களுக்கு ஸஹா

யமாக ஏற்படுத்திக்கொண்டு தாங்கள் பலத்தில் அற்பர்களாயினும் அவனைக்கொண்டு எனது நண்பனும் அன்புள்ள சகோதரனுமாகிய ஹிரண்யாக்ஷனைக் கொல்வித்தார்கள். ஸூர்யன்போல் தேஜோமயமான உருவமுடையவனாயினும் மாயையினால் வராஹ உருவங்கொண்டு தனக்கு இயற்கையான தேவதாரூபத்தைத் துறந்து தன்னைத் தொடர்கிறவனைத் தொடர்ந்து பாலன்போல் மனநிலைமையின்றி என் ப்ராதாவைக் கொன்ற அவ்விஷ்ணுவின் கழுத்தை என் சூலத்தினால் முரித்து நான் மனவருத்தம் தீர்ந்து அந்த ரக்த ப்ரபாவஹத்தினால் ரக்தத்தில் ப்ரீதியுடைய என் ப்ராதாவை த்ருப்தி அடையச் செய்யும் வரையில், நீங்கள் ப்ராஹ்மணர்களும் க்ஷத்ரியர்களும் நிறைந்த பூமியில் சென்று தவம் யாகம் வேதமோது தல் வ்ரதம் தானம் முதலிய தர்மங்களைச் செய்யுந்தன்மையுடையவர்களனைவரையும் வதித்துக் கொண்டிருப்பீர்களாக. நமது சத்ருவும் தேவதைகளுக்கு ஆதாரபூதனுமாகிய அவ்விஷ்ணு முடிந்துபோவானாயின், வ்ருக்ஷத்தின் வேரைக் களைந்தால் அதன் கிளைகள் தாமே உலர்ந்து வாடுவதுபோல, அவ்விஷ்ணுவையே ப்ராணனாகவுடைய தேவதைகள் தாமே நசித்துப் போவார்கள். ஸ்ரீமஹாவிஷ்ணு ப்ராஹ்மணர்கள் செய்யும் ஸந்த்யாவந்தனாதி கர்மங்களையே வேராகவுடையவன்; யஜ்ஞ தர்ம ஸ்வரூபன். அவன் ஸ்ருதிகளிலும் ஸ்ம்ருதிகளிலும் சொல்லப்பட்ட தர்மங்களையே சரீரமாகவுடையவன், தேவதைகளையும் ரிஷிகளையும் பித்ருக்களையும் மற்ற பூதங்களையும் குறித்துச் செய்கிற தர்மங்களையெல்லாம் அவனே நிறைவேற்றுகிறான். ஆகையால் ப்ராஹ்மணர்களையும் யஜ்ஞதானாதி தர்மங்களையும் அழித்தால் அவற்றைச் சரீரமாகவுடைய விஷ்ணுவும் அழிந்துபோவான். விஷ்ணுவின்

நாசத்தினுலும் யஜ்ஞங்களில் கொடுக்கிற சரு புரோடா சம் முதலிய ஹவிர்ப்பாகமாகிற ஜீவனமில்லாமையாலும் தேவதைகள் தாமே அழிந்து போவார்கள். ஆகையால் எவ்வெவ்விடங்களில் ப்ராஹ்மணர்கள் வாஸம் செய்கின் ருர்களோ, பசுக்கள் இருக்கின்றனவோ, வேதங்களும் வர்ணுஸ்ரம தர்மங்களும் நடக்கின்றனவோ, அந்தந்த தேசங்களுக்குச் சென்று அவற்றைக் கொளுத்துங்கள். வேருடன் பிடுங்கிப் பாழ்செய்யுங்கள்' என்ருன். அவர்க ளும் தம் ப்ரபுவின் கட்டளையை ப்ரீதியுடன் தலையால் தரி த்து ப்ராணிஹிம்ஸையில் ப்ரீதியுடையவர்களாகையால் ப்ரஜைகளை ஹிம்ஸித்தார்கள். கடைத்தெருவுள்ள பெரிய க்ராமங்களையும், அஃதில்லாத ஸாதாரண க்ராமங்களை யும், பசுக்களிருக்கு மிடங்களையும், வைத்து வளர்த்த உத் யானங்களையும், கழனிகளையும், வைத்து வளர்க்காத தோ ட்டங்களையும், ஆஸ்ரமங்களையும், ரத்னங்கள் விளையுமிடங் களையும், பயிர்செய்பவர் வஸிக்கும் க்ராமங்களையும், மலைச் செறிவுகளிலுள்ள க்ராமங்களையும், இடைச்சேரிகளையும், பட்டணங்களையும், சிலர் கொளுத்தினார்கள். சிலர் மண் வெட்டி முதலியவற்ருல் அணைக்கட்டுகளையும், மதில்களை யும், கோபுரங்களையும் இடித்தார்கள். சிலர் கோடாலி களைக் கையில் ஏந்திக் காய் பழம் முதலியவற்ருல் ப்ராணி களுக்கு உபயோகப்படுகிற வ்ருக்ஷங்களை வெட்டித்தள்ளி னுர்கள். சிலர் வீடுகளைக் கொளுத்தினுர்கள். மற்றுஞ் சிலர் கொள்ளிக்கட்டைகளால் ஜனங்களை எரித்தார்கள். இங்ஙனம் ஹிரண்ய கசிபுவின் ப்ருத்யர்கள் மூன்று லோ கங்களையும் பீடித்துக்கொண்டிருக்கையில் தேவதைகள் அனைவரும் ஸ்வர்க்கத்தைத் துறந்து அஸுரர்களுக்குத் தெரியாதபடி பூமியில் ஆங்காங்கு ஸஞ்சரித்துக் கொண் டிருந்தார்கள். பிறகு தேசகாலங்களை அறிந்த அஸுர

ஶ்ரேஷ்டனான ஹிரண்யகஶிபு மனவருத்தத்துடன் மரணம் அடைந்த தன் ப்ராதாவான ஹிரண்யாக்ஷனுக்குச் செய்யவேண்டிய தர்ப்பணம் முதலிய கார்யங்களைச் செய்துமுடித்து, சகுனி சம்பரன் த்ருஷ்டன் பூதஸந்தாபனன் வ்ருகன் காலநாபன் மஹாநாபன் ஹரிஶ்மஶ்ரு மதோத்கசன் என்கிற அவன் பிள்ளைகளையும். தன் தம்பியின் பார்யையாகிய ருஷத்பானுவையும், தன் தாயான திதியையும் இனிய உரைகளால் இங்ஙனம் ஸமாதானப் படுத்தினான்.

ஹிரண்ய கஶிபு சொல்லுகிறான்:—ஓ அம்ம! அம்ம! ஓ நாட்டுப்பெண்ணே! ஓ புதல்வர்களே! நீங்கள் வீரனான ஹிரண்யாக்ஷனைப் பற்றிச் சோகிக்கலாகாது. வீரர்களுக்குச் சத்ருவின் எதிரில் மாள்வது புகழத்தக்கது. ஆகையால் அவர்கள் அதை விரும்புவார்கள். தண்ணீர்ப் பந்தலில் வழிப்போக்கர்கள் சேர்ந்து பிரிவதுபோல், இவ்வுலகத்தில் ப்ராணிகள் தமது கர்மங்களுக்குத் தகுந்தபடி ஈஶ்வரனால் ஓரிடத்தில் சேர்க்கப்படுவதும் பிரிக்கப்படுவது மாயிருக்கிறார்கள். நல்ல வ்ரதமுடையவர்களே! அவர்கள் ஓரிடத்தில் சேர்ந்திருப்பது நிலையற்றதேயாகையால் அதைப்பற்றி வருந்தலாகாது. ஆத்மா நித்யன். அவனுக்கு அழிவு முதலிய அவஸ்தைகள் கிடையாது. அவன் ப்ரக்ருதியின் பரிணாமங்களுக் கிடமல்லாத பரிசுத்தன்; தேஹத்தைக் காட்டிலும் விலக்ஷணன்; தேஹம் இந்த்ரியம் மனம் ப்ராணம் இவற்றை உணர்ந்தவன்; ஜ்ஞானத்தினால் எங்கும் நிறைந்திருப்பவன். அவன் இத்தகையனாயினும் தன்னுடைய புண்யபாபரூப கர்மத்தின்படி ஸத்வ ரஜஸ் தமோகுணங்கள் பரிணமிக்கப்பெற்றுக் கர்மபலன்களை அனுபவிக்கும் பொருட்டு ஸத்வாதி குணங்களின் பரிணாமரூபமான சரீரத்தை

ஏற்றுக்கொள்கின்றான். ஆகையால் ஆத்மாக்கள் ஒரு சரீரத்தில் சிலரோடு சேர்ந்து அந்தச் சரீரம் அழிந்த பின்பு வேறு சரீரம் பெற்று வேறு சிலரோடு சேருகிறார்கள். ஜலம் அசையும் பொழுது வ்ருக்ஷங்களும் அசைவதுபோல் தோற்றுகின்றன. கண் சுழலும்பொழுது பூமியும் சுழல்வதுபோல் தோற்றுகிறது. மங்கள ஸ்வபாவமுடையவளே! அங்ஙனமே ஜீவன் அவயவங்களற்றவனாயினும் ஸத்வாதி குணங்களின் பரிணாமமான தேஹஇந்த்ரியாதிகளுடன் மனம் கலக்கப்பெற்றுத் தன்னைத் தேஹமாகவே நினைத்துக் கொள்கிறான். தேஹமே ஆத்மாவாயிருப்பது உண்மையாயின், 'என்னுடைய தேஹம்' என்று தன்னைக் காட்டிலும் தேஹத்தை வேறாக நினைப்பது ப்ராந்தியாகவேண்டும். அது ப்ராந்தியாகமாட்டாது. சரீரம் தோற்றும்பொழுதும் அது தோற்றாத உறக்கம் முதலிய அவஸ்தைகளிலும் நானென்று ஆத்மா தனியே தோற்றுகிறானாகையால் சரீரத்தைக் காட்டிலும் ஆத்மா வேறுபட்டவனென்பது உண்மையே. ஆத்மாவைக் காட்டிலும் வேறுபட்ட சரீரத்தை ஆத்மாவாக நினைப்பது ப்ரமம். இதுவே கர்மத்தினால் விளையும் ஸம்ஸாரம். இஷ்டமான வஸ்துக்களோடும் அநிஷ்டமான வஸ்துக்களோடும் சேருகையும் பிரிகையுமாகிற ஸுகதுக்கங்களும் இப்படியே. கர்மத்தினால் விளையும் ஸம்ஸாரமாம். மற்றும் பிறவி, சாதல், பலவகையான சோகம், சேதன அசேதன ஈஶ்வரர்களின் உண்மையை ஆராயாமை, சப்தாதி விஷயங்களை விரும்பிச் சிந்திக்கை, ஒருகால் ஆப்தர்களின் உபதேசத்தினால் நேர்ந்த விவேகத்தை மேன்மேலும் தொடரும்படி அநுஸந்திக்காமை ஆகிய இவையெல்லாம் கர்மத்தினால் விளையும் ஸம்ஸாரமே. உண்மையை உணர்ந்த பெரியோர்கள் இவ்விஷயத்தில் யமனுக்கும்

ப்ரேதபந்துக்களுக்கும் நேர்ந்தஸம்வாத ரூபமான பழைய இதிஹாஸத்தைச் சொல்லுகிறார்கள். உசீநரதசத்தில் ஸுயஜ்ஞனென்று ஒரு மன்னவன் இருந்தான். அவன் யுத்தத்தில் சத்ருக்களால் அடியுண்டு மரணம் அடைந்தான். அப்பொழுது அவன் ரத்னமயமான கவசம்முறிந்து ஆபரணங்களும் பூமாலையும் நழுவிப் பாணங்களால் ஹ்ருதயம் பிளவுண்டு உடம்பெல்லாம் ரக்தம் பெருகி நனைந்து விழுந்திருந்தான். மற்றும், அவன் தலைமயிர்கள் விரிந்து கண்கள் ஆணியிட்டுக் கோபத்தினால் உதட்டைக் கடித்துக்கொண்டு தாமரைமலர்போன்ற முகமெல்லாம் துகள் படியப்பெற்று ஆயுதமும் புஜமும்அறுப்புண்டு படுத்திருந்தான். அப்பொழுது அவனுடைய பந்துக்கள் அவனைச் சுற்றிச் சூழ்ந்துவந்து உட்கார்ந்தார்கள். அவ்வுசீநரதேசத்தரசனது பட்டமஹிஷிகள் தங்கள் கணவன்தெய்வச் செயலால் அங்ஙனம் அடியுண்டுவிழுந்திருப்பதைக் கண்டு வருந்தி 'ஓ நாதா! நாங்கள் பாழானோமே' என்று கைகளால் மார்பில் அடித்துக்கொண்டு அடிக்கடி அவன் பாதங்களில் விழுந்து புரண்டார்கள். அழுகின்ற அம்மடந்தையர் மணிகளின் கொங்கைகளில் அணிந்த குங்குமக் குழம்பில் பட்டுச் சிவந்து வழிகின்ற கண்ணீரினால் தங்கள் கணவனது பாதாரவிந்தங்களை நனைத்துத் தங்கள்கூக்குரல்களால் பிறர்க்கும் சோகத்தை விளைத்துக்கொண்டு தலைமயிர்கள் விரிந்து ஆபரணங்கள் கலைந்து விழப்பெற்றுப் புலம்பினார்கள். 'எங்கள் ப்ரபுவே! தேவன் மனஇரக்கமின்றி உன்னை எங்கள் கண்ணுக்குப் புலப்படாதபடி கொண்டுபோனான். அத்தேவன் முன்பு உசீநரதேசத்திலுள்ளவர் அனைவர்க்கும் ஜீவனத்தைக்கொடுக்கும்படி உன்னைப்படைத்தான். அவனே இப்பொழுது அனைவர்க்கும் சோகத்தை வளர்க்கும்படி உன்னைக்கொண்டு

போனான். மன்னவனே! நீ எங்களுக்கு நண்பனாயிருந்தனை. நீ பிறர்செய்த நன்றியைமறவாதுணரும் தன்மையுடையவன். அத்தகைய உன் ப்ரஜைகளாகிய நாங்கள் உன்னைவிட்டு எங்ஙனம் ஜீவிப்போம்? ஓ வீரசிகாமணீ! நீ எங்குப்போகின்றனையோ அவ்விடத்திலேயே உன் பாதங்களுக்குப் பணிவிடை செய்ய விரும்புகிற எங்களையும் அழைத்துக் கொண்டு போகவேண்டும்' என்று அம்மன்னவன் பத்னிகள் மரணம் அடைந்த கணவனைச் சுற்றிச் சூழ்ந்து அவனை எடுத்துக்கொண்டு போகவொட்டாமல் பிடித்துப் புலம்பிக் கொண்டிருக்கையில் ஸூர்யன் அஸ்தமிக்கலானான். அப்பொழுது யமன் மரணம் அடைந்த அம்மன்னவன் பந்துக்களின் அழுகுரலைக் கேட்டுத் தானே ஒரு சிறுவனாகி அவ்விடம் வந்து அவர்களை நோக்கி இங்ஙனம் மொழிந்தான்.

யமன் சொல்லுகிறான்:—ஆ! இதென்ன ஆச்சர்யம்? இவர்கள் என்னைவிட வயதில் பெரியவர்கள்; உலகில் ப்ராணிகள் பிறப்பதையும் சாவதையும் பலவாறு பார்த்திருப்பவர்கள். ஆயினும்இவர்கள் மதியின்றி வருந்துகிறார்களே. எவ்விடத்தினின்று பிறந்தானோ அதே இடத்தில் மறைகின்ற மனுஷ்யனைப்பற்றித் தாங்களும் அப்படியே ஜன்மமரணாதிகளை அனுபவிப்பவர்களாயினும் வீணாகச்சோகிக்கின்றார்கள். வயதில் சிறியவனாயினும் நானே பாக்யசாலி. நான் தாய்தந்தைகளால் துறக்கப்பெற்றும் அதைப் பற்றிச் சிந்திக்காமலேயிருக்கிறேன். நம்மைக் கர்ப்பத்தில் காத்தவன் இப்பொழுதும் காத்துவருகிறான். ஆகையால், நான் துர்ப்பலனாயினும் அவனால் பாதுகாக்கப் பெற்றுச் செந்நாய் முதலிய துஷ்ட ஜந்துக்களால் பக்ஷிக்கப்படாதிருக்கிறேன். ஈஶ்வரன் தன் ஸங்கல்பத்தினால் தானே இந்த ஜகத்தைப் படைக்கின்றான். அவன்

அழிவு முதலிய விகாரங்களற்றவன். அவனே தான் படைத்த ஜகத்தைக் காக்கிறான். அவனே அதை அழிக்கிறான். ஓ துர்ப்பலர்களே! ஜகத்தைப் படைத்து அதற்கு அந்தராத்மாவாகி நியமித்துக் கொண்டிருக்கிற அந்த ஸர்வேஸ்வரனுக்கு இந்த ஜகத்தெல்லாம் விளையாட்டின் கருவி. அவன் ஜகத்தைப் படைப்பதும் காப்பதும் அழிப்பதும் விளையாட்டிற்காகவே. அவன் ஜகத்தை நிக்ரஹிக்கவும் அநுக்ரஹிக்கவும் வல்லவன். வழியில் கைசோர்ந்த வஸ்துவும் தெய்வத்தினால் காக்கப்பட்டு மீளவும் நமக்குக் கிடைக்கின்றது. நாம் ஒரு வஸ்துவை வீட்டில் மிகவும் பத்ரமாய் வைத்துப் பாதுகாத்து வந்தாலும், அவன் அதை அழிக்கப் பார்ப்பானாயின் அது காணாமற்போய்விடும். இங்ஙனமே அரண்யத்தில் நாதனற்றிருப்பவனும் அவனுடைய ஸங்கல்பத்திற்கு விஷயமாகி ஸுகமாக ஜீவிப்பான்; ஒருவன் வீட்டில் பத்ரமாய்ப் பாதுகாக்கப்பட்டிருப்பானாயினும் அவன் உபேக்ஷிப்பானாயின், ஜீவிக்கமாட்டான். ப்ராணிகள் தாம் செய்த புண்யபாப கர்மங்கள் பலிக்கும்படியான காலம் நேரப்பெற்று அவற்றிற்குரியபடி பற்பல யோனிகளில் பிறக்கின்றன. அக்கர்மங்களின் முடிவில் அச்சரீரங்களைத் துறக்கின்றன. ஈஸ்வரன் ஜீவாத்மாக்களுடைய கர்மங்களுக்குத் தகுந்தபடி ஜன்ம மரணங்களை விளைக்கின்றானாகையால் அவனுக்குப் பக்ஷபாதம் கிடையாது. அந்தர்யாமியாய் அமைந்திருப்பினும் தேஹாத்மப்ரமாதிகளாலும் சப்தாதி விஷயபோகத்தினாலும் ஸம்ஸார பந்தத்தை அடைகிறதில்லை. ஒரே சரீரத்திலிருக்கிற இருவரில் ஒருவன் ஸம்ஸார பந்தத்தை அடைகிறான். ஒருவன் அடைகிறதில்லை. இதென்ன ஆச்சர்யம்? இதோ புலப்படுகிற சரீரங்களெல்லாம்

ஜீவாத்மாக்கள் அஜ்ஞானத்தினால் செய்கிற கர்மங்களால் ஏற்பட்டவை. க்ருஹத்தில் வஸிக்கும் புருஷனைக் காட்டிலும் க்ருஹம் வேறுபட்டிருப்பதுபோல, பஞ்ச பூதங்களின் பரிணாமரூபமான இச்சரீரமும் இதிலிருக்கிற ஜீவனைக்காட்டிலும் வேறுபட்டது. மண் கல் கட்டை முதலியவற்றால் கட்டப்பட்ட க்ருஹம் சிலகாலம் கழிந்த பின்பு இடிந்து பாழாவதுபோல, ஜீவாத்மாவின் கர்ம பரிபாகத்தினால் ஒன்று சேர்ந்த பூமி ஜலம் தேஜஸ்ஸு காற்று ஆகாயம் ஆகிய இவ்வைந்து பூதங்களின் ஸமுதாய ரூபமான தேஹம் உண்டாகிப் பேதை பாலகன் முதலிய அவஸ்தைகளால் பல விகாரங்களை அடைந்து தனக்குக் காரணமான கர்மத்தின் முடிவில் நசிக்கின்றது. கட்டைகளில் பற்றியெரிகிற அக்னி அவற்றைக் காட்டிலும் வேறுபட்டிருப்பதுபோலவும், தேஹத்திலிருக்கிற வாயு அதைக்காட்டிலும் வேறுபட்டிருப்பது போலவும், ஆகாயம் எங்கும் நிறைந்திருப்பினும் அவ்வவற்றின் தர்மங்கள் தீண்டப்பெறாதிருப்பது போலவும், தேஹத்திலிருக்கும் ஜீவன் அதைக்காட்டிலும் வேறுபட்டு அதன் தர்மங்களான ஜன்ம ஜரா மரணாதிகள் தீண்டப்பெறாமல் விலக்ஷணனாயிருப்பான். ஓ மூடர்களே! உங்கள் அபிப்ராயத்தின்படி தேஹமே ஆத்மாவாயிருக்குமாயின், நீங்கள் எவனைப் பற்றிச் சோகிக்கின்றீர்களோ, அந்த ஸுயஜ்ஞன் படுத்துக்கொண்டேயிருக்கிறான். உங்கள் புலம்பலை எவன் கேட்பானோ, எவன் உங்களுக்கு மறுமொழி கூற வல்லவனோ, அவன் இந்தத் தேஹத்தில் எவ்வளவு நேரம் ஸூக்ஷ்மமாக ஆராய்ந்து பார்த்தாலும் புலப்படமாட்டான். இத்தேஹத்திலுள்ள முக்ய ப்ராணவாயுவும் உங்கள் புலம்பலைக் கேட்கவாவது மறுமொழி கூறவாவது வல்லதன்று. இனி தேஹத்திற்கு அச்சக்தி இல்லையென்

பதைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? எவன் காது வாய் முதலிய இந்த்ரியங்களால் கேட்கை மறுமொழி கூறுகை முதலியன செய்ய வல்லவனோ, அத்தகைய ஆத்மா இச்சரீரத்தில் சரீரம் ப்ராணன் இவற்றைக் காட்டிலும் வேறுபட்டவனாகவே இருந்தான். ஆத்மா ஜ்ஞானத்துடன் கூடிப், பூமி ஜலம் முதலிய ஐந்து பூதங்கள் கர்மேந்த்ரிய ஜ்ஞானேந்த்ரியங்கள் மனம் இவை அடங்கப்பெற்றவைகளும் மேன்மை தாழ்மைகளுக்கிடமுமாகிய பலவகைச் சரீரங்களைப் பெறுவதும் விடுவதுமாயிருப்பான். அத்தகையனான ஆத்மா படுத்திருக்கின்ற சரீரத்தைத் துறந்து போனமையால் அவனும் சோகிக்கத் தகுந்தவனல்லன்; ஜீவனுக்குத் தேஹ ஸம்பந்தத்தை விளைக்கும்படியான கர்மம் எதுவரையில் இருக்கின்றதோ அது வரையில் அவன் தேஹத்துடன் கூடியிருப்பான். அத்தேஹ ஸம்பந்தத்தினால் தேஹாத்ம ப்ரமமும் அதனால் வருத்தங்களுமாகிற ப்ரக்ருதி ஸம்பந்த ரூபமான ஸம்ஸாரம் தொடர்ந்துவரும். இச்சரீரத்திலிருந்த ஆத்மா இச்சரீர ஸம்பந்தத்திற்குக் காரணமான கர்மம் முடியப்பெற்று இதைத்துறந்து போய்விட்டான். ஆகையால் அவனைப்பற்றிச் சோகிப்பது வீண். ஸத்வ ரஜஸ் தமோகுணங்களின் பரிணாமரூபமான தேஹாதிகளையும் சப்தாதிவிஷயங்களையும் போக்யமென்று நினைப்பதும் வழங்குவதும் வீண் அபிநிவேசத்தினாலன்றி, உண்மையை ஆராய்ந்தால் அவற்றில் ஒருப்ரயோஜனமும் இல்லை. ஸ்வப்னத்தில்காண்கிற ஆசைப்பட்ட வஸ்துக்களெல்லாம் எங்ஙனம் நிலையற்றவைகளோ, அங்ஙனமே விழித்துக் கொண்டிருக்கும் பொழுது நாம் அனுபவிப்பவைகளும் அனுபவிக்கவிரும்புகிற வைகளுமான சப்தாதி விஷயங்களும் தேஹாதிகளும் நிலையற்றவைகளே! நித்யனான ஆத்மாவைப்பற்றி

யாவது அநித்யமான தேஹத்தைப் பற்றியாவது அவற்றின் உண்மையை உணர்ந்த பெரியோர்கள் சோகிக்க மாட்டார்கள். எவ்வளவு சோகித்தாலும் வஸ்துக்களின் இயற்கையை மாற்றமுடியாது. ஒரு வேடன் பக்ஷிகளுக்கு ம்ருத்யுவாக ஏற்படுத்தப்பட்டிருந்தான். அவன் அரண்யத்தில் வலையைப் பரப்பிப் பக்ஷிகளை வஞ்சித்தான். அவ்வரண்யத்தில் குலிங்கப் பறவைகள் இரண்டு ஆணும் பெண்ணுமாய் உலாவிக்கொண்டிருந்தன. அவற்றை அவ்வேடன் கண்டான். அவன் அப்பறவைகளில் பெண் பறவையை விரைவில் வஞ்சித்தான். அங்ஙனம் வஞ்சிக்கப்பட்ட அப்பெண்பறவை வலையில் அகப்பட்டுக்கொண்டது. அப்பொழுது ஆண்குலிங்கப்பறவை தன்பார்யையான பெண்குலிங்கம் வலையில் அகப்பட்டிருப்பதைக் கண்டு ஸ்நேஹத்தினால் மிகவும் வருந்தி அதை விடுவிக்க முடியாமல் மீளவும் மேன்மேலும் வருந்திப் புலம்பிற்று. 'ஆ! தேவனுக்கு மன இரக்கமில்லை. மன இரக்கத்திற்கிடமாகி மிகவும் மன இரக்கத்திற்கிடமான என்னைக் குறித்துச் சோகிக்கின்ற என் பார்யையான இப்பெண் குலிங்கப் பறவையால் அவனுக்கு என்ன ப்ரயோஜனம்? ஒரு ப்ரயோஜனமும் இல்லை. என்னிடத்தில் மன இரக்கமின்றி இப்பெண்ணை என்னைவிட்டுப் பிரித்துக்கொண்டு போனானன்றி வேறில்லை. அங்ஙனம் மன இரக்கமில்லாத தேவன் என்னையும் இஷ்டப்படி கொண்டுபோவானாக. என்னுடைய பாதியாகிய என் பார்யையைக் கொண்டு போனான். மிகுந்த இப்பாதியால் எனக்கு என்ன ப்ரயோஜனம்? ப்ரயோஜனமற்ற வாழ்நாளுடன் நான் ப்ராணனைத் தரித்துக்கொண்டிருந்து என்ன செய்யவேண்டும்? இறகு முளைக்கப் பெறாதவைகளும் தாயற்றவைகளுமான இக்குட்டிகளை நான் எப்படி வளர்ப்பேன்.? மற்றும், என்

குட்டிகள் கூட்டிலிருந்துகொண்டு தமது தாயை எதிர் பார்க்கின்றனவே' என்று தன் அன்பிற்கிடமான பேடையைப்பிரிந்து வருந்திக் கண்ணீர் நிறைந்த கண்டத்துடன் புலம்புகின்ற அவ்வாண்குலிங்கப்பறவையையும் அவ்வேடனே காலத்தினால் தூண்டப்பட்டு அருகிலிருந்துகொண்டு மறைந்து பாணத்தினால் அடித்தான். இங்ஙனமே நீங்களும் உங்களுக்கு நேரப்போகிற மரணத்தை ஆலோசிக்காமல் விவேகமின்றிப் பல நூற்றாண்டுகள் சோகிக்கினும் உங்கள் கணவனை இவனைப் பெறமாட்டீர்கள்.

ஹிரண்ய கசிபு சொல்லுகிறான்:—அச்சிறுவன் இங்ஙனம் சொல்லிக் கொண்டிருக்கையில், ஸுயஜ்ஞனுடைய பந்துக்கள் அனைவரும் வியப்புற்று, விபரீதமாய்த்தோற்றுகிற தேஹாதிகளையெல்லாம் அநித்யமென்றே நினைத்தார்கள். சிறுவனாய் வந்த யமன் இவ்வளவு மொழிந்து அவ்விடத்திலேயே மறைந்தான். பிறகு ஸுயஜ்ஞனுடைய பந்துக்கள் அவனுக்குச் செய்யவேண்டிய ப்ரேத கார்யங்களை நடத்தினார்கள். தேஹம் ஆத்மா இவைகளின் ஸ்வபாவம் இத்தகையதாகையால் நீங்கள் ஹிரண்யாக்ஷன் முதலிய வேறு ஆத்மாக்களைப் பற்றியாவது உங்களைப்பற்றியாவது சோகிக்கவேண்டியதில்லை. தானென்றும் பிறனென்றும் அபிமானத்தை விளைக்கிற அஜ்ஞானத்தையொழிய, ஜீவாத்மாக்களுக்குத் தாமார்? பிறரார்? தம்மைச் சேர்ந்தவரார்? பிறரைச் சேர்ந்தவரார்? இவையெல்லாம் அனாதியான அஜ்ஞானத்தினால் விளையும் புண்ய பாப கர்மங்களின் பலனான தேஹஸம்பந்தத்தைப் பற்றி வருகிற தேஹாத்மாபிமானத்தின் கார்யங்களே. ஆத்மாக்களுக்கு ஒருவரைப் பற்றி யொருவர் சோகிக்கும்படியான ஸம்பந்தம் எதுவுமே இல்லை. ஆகையால் நீங்கள் சோகிக்கவேண்டாம்.

நாரதர் சொல்லுகிறார்:—இங்ஙனம் தைத்யர்களுக்கு ப்ரபுவாகிய ஹிரண்யகசிபு மொழிந்த வார்த்தைகளைக் கேட்டு நாட்டுப்பெண்ணுடன்கூடின திதி க்ஷணத்திற்குள் புத்ரசோகத்தைத் துறந்து தேஹம் ஆத்மா இவைகளின் உண்மையான நிலைமையை ஆராய்ந்து அதில் மனத்தை நிலைநிறுத்தினாள். இரண்டாவது அத்யாயம் முற்றிற்று.

## ஹிரண்ய கசிபு தவம் செய்து ப்ரஹ்ம தேவனிடம் வரம் பெறுதல்.

நாரதர் சொல்லுகிறார்:—ஓ யுதிஷ்டிர மன்னவனே! ஹிரண்யகசிபு தன்னைப் பிறரால் வெல்ல முடியாதவனாகவும்மூப்புமரணம் அற்றவனாகவும் சத்ருக்கள் எவருமின்றி ஒரே மன்னவனாகவும் செய்துகொள்ள விரும்பினான். அவன் மந்தர மலைச்செறிவில் கால்கட்டை விரலால் பூமியில் நின்று கைகளை உயரத்தூக்கிக் கண்களை ஆகாயத்தில் நிறுத்தி மிகவும் கொடுமையான தவம் செய்தான். அவ்வஸுரன் ஜடைகளின் காந்தியால் கிரணங்களோடு கூடின ப்ரளயகாலத்து ஸூர்யன்போல ப்ரகாசித்தான். இங்ஙனம்அவன் தவம்செய்துகொண்டிருக்கையில்,முன்பு ராக்ஷஸர்களால் உபத்ரவிக்கப்பட்டு மறைந்து திரிந்து கொண்டிருந்த தேவதைகள் தங்கள் தங்கள் ஸ்தானங்களை அடைந்தார்கள். அவ்வஸுரனுடைய சிரஸ்ஸினின்றும் தவப்பெருக்கினாலுண்டான புகையுடன் கூடின அக்னி கீழும் மேலும் குறுக்குமாக நாற்புறங்களிலும் பரவி லோகங்களையெல்லாம் எரித்தது. நதிகளும் ஸமுத்ரங்களும் கலங்கின. த்வீபங்களோடும் பர்வதங்களோடும் கூடின பூமண்டலமெல்லாம் நடுங்கின. ஸூர்யாதி க்ரஹங்களும் மற்ற நக்ஷத்ரங்களும் விழுந்தன. திசைகளெல்

லாம் எரிந்தன. தேவதைகள் அந்தத் தவநெருப்பினால் ஸ்வர்க்கலோகத்தை விட்டு ஸத்யலோகம் போய்ச்சேர்ந்து ப்ரஹ்மாவை நோக்கித் 'தேவதேவனே! ஜகத்திற்கெல்லாம் ப்ரபூ! நாங்கள் ஹிரண்யகசிபுவின் தவத்தினால் தஹிக்கப்பட்டு ஸ்வர்க்கத்தில் வாஸம் செய்ய முடியாதிருக்கிறோம். உனக்குப் பூஜைசெய்கின்ற உலகங்களெல்லாம் அவனுடைய தவக்கொதிப்பினால் பாழாவதற்குமுன்னமே உனக்குத் தோற்றுமாயின் அவனுடைய தவநெருப்பை அணைப்பாயாக. நீ எல்லோரையும் பரிபாலிக்கவல்லவனல்லவா? பிறரால் செய்யமுடியாத தவத்தைச்செய்கின்ற அவ்வஸுரனுடைய அபிப்ராயம் இது வல்லவா? ஆனால் உமக்குத் தெரியாதது ஒன்றும்இல்லை. ஆயினும்சொல்லுகிறோம், கேட்பீராக. 'ப்ரஹ்மதேவன் இந்த்ராதிகளுக்கு மேலான ஸ்தானத்தில் இருக்கிறான்; தவத்தின் கரைகண்டவன். அவன் இந்த உலகங்களையெல்லாம்படைத்து ஸத்யலோகத்தில் தன் ஆஸனத்தில் வீற்றிருக்கிறான். காலமும் நித்யம். ஆத்மாவும் நித்யன். ஆகையால் நான் எத்தனை காலமாயினும் தவம் செய்து அத்தவமஹிமையால் அதே ஆஸனத்தைப் பெறவேண்டும். தவமஹிமையால் இந்த ஜகத்தையெல்லாம் தலைகீழாகச் செய்து விடுகிறேன். இப்பொழுது ஏற்பட்டிருக்கின்ற தேவாஸுராதி நிலைமைகளை யெல்லாம் மாற்றி விடுகிறேன். காலத்தின் பிரிவான ப்ரளயங்கள்தோறும் நாசம் அடையும்படியான [1]வைகுண்டாதி லோகங்களைப் பெறுவதால் என்ன ப்ரயோஜனம்?

1. வைகுண்ட லோகத்தை நிலையற்றதாகவும் ப்ரஹ்மலோகத்தை நிலைநின்றதாகவும் நினைக்கிற இவ்வஸுரனுடைய தாமஸபுத்தி இதனால் வெளியாகிறது. 'ஸர்வார்த்தாந் விபரீதாம்ஶ்ச ஸா புத்திஸ் ஸா பார்த்த தாமஸீ' என்று கீதையில் எல்லாவற்றையும் விபரீதமாக நினைக்கும் புத்தியே தாமஸபுத்தியென்று கூறப்பட்டது.

என்று அவன் எவ்வகையிலாவது உமது ஸ்தானத்தைப் பெறவேண்டுமென்று நிர்ப்பந்தமான அபிப்ராயங் கொண்டிருப்பதைக் கேள்விப்பட்டோம். அதற்காகவே அவன் தவம் புரிகிறான். மூன்று லோகங்களுக்கும் ப்ரபுவே! ஆகையால் இவ்விஷயத்தில் எது யுக்தமோ அதைச் சீக்ரத்தில் செய்வீராக. ஜகத்பதீ! எல்லாவற்றிலும் மேற்பட்டதான இந்த உம்முடைய ஸ்தானம் ப்ராஹ்மணர்களுக்கும் பசுக்களுக்கும் யோகம் க்ஷேமம் தர்மாதிபுருஷார்த்தம் ஐஶ்வர்யம் மேன்மை இவைகளை விளக்கும்பொருட்டு ஏற்பட்டிருக்கின்றது. இது மாறினால் அவர்களுக்கு எவ்வகை நன்மையும் கிடைக்காது' என்று முறையிட்டார்கள். மன்னவனே! இவ்வாறு தேவதைகளால் விண்ணப்பஞ்செய்யப்பெற்ற ப்ரஹ்மதேவனும் ப்ருகு தக்ஷர் முதலிய முனிவர்களால் சூழப்பட்டு ஹிரண்யகசிபுவின் ஆஶ்ரமத்திற்குச்சென்றான். அவ்வன்னலூர்தி புற்றுக்களாலும் புற்களாலும் மூங்கில்களாலும் மறைக்கப்பட்டிருக்கின்ற அவ்வஸுரனைக் காணவில்லை. பிறகு உற்றுப்பார்த்து எறும்புகளால் தோல் ரக்தம் மாம்ஸம் மேதஸ்ஸு இவையெல்லாம் பக்ஷிக்கப்பெற்றும் அதைப் பொருள் செய்யாமல் தவத்தினால் உலகங்களை யெல்லாம் எரிக்கின்றவனும் மேகங்களால் மறைக்கப்பட்ட ஸூர்யன் போன்றவனுமாகிய அவ்வஸுரனைக் கண்டு பிடித்து வியப்புற்றுச்சிரித்து 'ஓ கஶ்யபர் புதல்வனே! எழுந்திரு! எழுந்திரு! உனக்கு க்ஷேமம் உண்டாகும். நீ தவத்தில் ஸித்தி பெற்றனை. நான், நீவிரும்பும் வரத்தைக்கொடுக்கவந்திருக்கிறேன்; ஆகையால் உனக்கிஷ்டமான வரத்தை விரும்புவாயாக. மிகவும் ஆச்சர்யமான தைர்யம் உன்னொருவனுக்கே கண்டேன். இப்படிப்பட்ட தைர்யம் மற்றெவர்க்கும் கிடையாது. கொசு எறும்பு முதலியவை உன் தேஹத்தைப்

பக்ஷித்துவிட்டன. உன் ப்ராணன்கள் எலும்புகளில் இருக்கின்றன. முன்புள்ள ப்ருகு முதலிய மஹர்ஷிகளும் இப்படிப்பட்ட தவம் செய்யவில்லை. பின்புள்ளவர்கள் இப்படி தவம் செய்யப் போகிறதில்லையென்று சொல்லவேண்டுமா ? எவன் தான் தேவமானத்தினால் நூறாண்டுகள் வரையில் தண்ணீருமின்றி ப்ராணன்களைத் தரித்துக்கொண்டிருப்பான்? திதியின் புதல்வனே! யோகிகளுக்கும் நேரமுடியாத உன் மன உறுதியாலே நான் வெல்லப்பட்டேன். உன் தவநிலைமையால் வெல்லப்பட்டேனென்பதைப் பற்றிச் சொல்ல வேண்டியதே யில்லை. ஓ அஸுரஸ்ரேஷ்டனே! நான் மிரம்பவும் ஸந்தோஷம் அடைந்தேனாகையால் நீ விரும்புகிற வரங்களையெல்லாம் கொடுக்கிறேன். மரணம் அடையுந்தன்மையுள்ள உனக்கு நேர்ந்த மரணம் அற்ற என் காட்சி வீணாகாது'' என்று மொழிந்து வீணாகாத மஹிமையுடைய தன் கமண்டலுவின் திவ்யஜலத்தை எறும்புகளால் பக்ஷிக்கப்பட்ட அவ்வஸுரனுடைய அங்கத்தில் ப்ரோக்ஷித்தான். பிறகு அவ்வஸுரன் கட்டையினின்று அக்னிகிளம்புவதுபோலப் புற்றினின்று ப்ராணபலம் இந்த்ரிய பலம் தேஹபலம் இவை யெல்லாம் அமைந்து கை கால் முதலிய அவயவங்களெல்லாம் நிறைந்து வஜ்ரம்போல் உறுதியான அங்கங்களுடையவனாகி உருக்கின ஸுவர்ணம்போல் ஜ்வலித்துக்கொண்டு யௌவன வயதுடன் கிளம்பி ஆகாயத்தில் ஹம்ஸவாஹனத்தின் மேலிருக்கின்ற ப்ரஹ்மதேவனைக் கண்டு மஹாநந்தத்துடன் பூமியில் தலையைச் சாய்த்து நமஸ்கரித்து எழுந்து வணக்கத்துடன் கைகூப்பி ப்ரபுவான ப்ரஹ்மதேவனைப் பார்த்து உடம்பெல்லாம் மயிர்க்கூச்சம் உண்டாகப் பெற்று ஆநந்தநீர் பெருக்கித் தழதழத்த உரையுடன் ஸ்தோத்ரம் செய்தான்.

ஹிரண்ய கசிபு சொல்லுகிருன்:—கல்பத்தின்முடிவில் இந்த ஜகத் தெல்லாம் காலத்திஞ லேற்பட்ட பெரிய அந்தகாரம் சூழப்பெற்றிருக்க ஸ்வயம் ப்ரகாசஞனை நீ உன் தேஜஸ்ஸிஞல் அதை விளங்கச் செய்தனே. ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களென்கிற மூன்று சக்திகளையுடைய நீயே ஸத்வ ரஜஸ் தமோ குணங்களைக் கொண்டு இந்த ஜகத்தைப்படைப்பதும் காப்பதும் அழிப்பதும் செய்கின்றனே. நீ எல்லாரிலும் மேற்பட்டவன். மஹா குணங்களுடையவன். உனக்கு நமஸ்காரம். நீ ஜகத்காரணபூதன். ஜ்ஞானவிஜ்ஞான மூர்த்தி; ப்ராணன்கள், இந்த்ரியங்கள், மனம், புத்தி, பூமி முதலிய பஞ்ச பூதங்கள் இவற்ருல் நீ இந்த ப்ரபஞ்சரூபமாய்ப் பிரிந்து விளங்குகின்றனே. உனக்கு நமஸ்காரம். நீ ஜங்கம ஸ்தாவர ரூபமான இந்த ப்ரபஞ்சத்திற்குள் புகுந்து முக்ய ப்ராணரூபியாய் இதைத் தரிக்கின்றனே. நீயே இவ்வுலகத்திலுள்ள ப்ரஜைகளுக்கெல்லாம் ப்ரபு. புத்தி மனம் இந்த்ரியங்கள் இவற்றையெல்லாம் நீயே நிர்வஹிக்கின்றனே. நீ பூமி முதலிய பஞ்ச பூதங்களுக்கும் சப்தாதி விஷயங்களை க்ரஹிக்கின்ற இந்த்ரியங்களுக்கும் மனத்திற்கும் உள்ளே புகுந்து அவற்றைத் தரிக்கின்றனே. சதுர்ஹோத்ருகம் முதலிய மந்த்ர வித்யைகளோடுகூடினவேதங்களால் நீயே யஜ்ஞாதிகர்மங்களை நடத்துகின்றனே. நீயே மன உறுதியுடைய யோகிகளுக்கு அந்தராத்மாவாயிருந்து யோகத்தை நடத்துகின்றனே. நீ தேசகால வஸ்து பரிச்சேதமற்றவன்; எல்லாம் அறிந்தவன். நீயே எல்லாவற்றிலும் உட்புகுந்து நியமிக்கின்றனே. இமை கொட்டாமல் விழித்துக் கொண்டிருக்கின்றகாலமும் நீயே. நீயே லவம் க்ஷணம் முதலிய காலாவயவங்களால் ப்ராணிகளின் ஆயுளை க்ஷீணிக்கச்செய்கின்றனே. நீயே நிர்விகாரஞன பரமாத்மா. நீ சிறந்த ஸ்தா

னத்தில் இருப்பவன். கர்மத்தினால் விளையும் பிறவிமுதலிய விகாரங்களற்றவன். ஸமஸ்த ஜீவலோகத்தையும் பிழைப்பிக்கிற ஆத்மா நீயே. ஜங்கமஸ்தாவர ரூபமான இந்த ப்ரபஞ்சத்தில் உனக்கு மேற்பட்டதாவது நிகராவது எதுவுமே இல்லை. உனக்கு வேறுபட்டதும் இல்லை. வேதங்களும் உபவேதங்களும், மற்றஸமஸ்தமான சப்த ப்ரபஞ்சங்களும் உன் சரீரங்களே. நீ ஸ்வர்ணம்போல் அழகிய நிறத்துடன் விளங்குகின்ற இந்த ப்ரஹ்மாண்டத்திற்குள் கர்ப்பம் போன்றிருக்கிறாய். நீ அளவிட முடியாத ஸ்வரூபமும் குணங்களுமுடையவன். நீ மூன்று லோகங்களுக்கு வெளிப்பட்ட பரமபதத்தில் வஸிப்பவன். ஓ தேவனே! ஸ்தூல சேதனு சேதன ரூபமான இந்த ஜகத்தெல்லாம் உன்னுடைய ஸ்தூலசரீரம். எந்தச் சரீரத்தினால் ஜீவாத்மாக்களுக்கு இந்த்ரியங்கள் ப்ராணன்கள் மனம் இவற்றைப் படைத்து அவற்றிற்கு விஷயங்களான சப்தாதி குணங்களை லீலைக்காக அனுபவிக்கின்றனையோ அதுவே உன்னுடைய ஸூக்ஷ்ம சரீரம். நீ மேலான ஸ்தானத்தில் வஸிப்பவன்; ப்ராக்ருதமான இந்த்ரியங்களால் உன்னை அறிய முடியாது.நீ அனைவர்க்கும் அந்தராத்மா; புராண புருஷன். தேச கால வஸ்து பரிச்சேதங்களற்றதும் இந்த்ரியங்களுக்கு விஷயமாகாததுமான உன் ஸ்வரூபத்தினால் இந்த ப்ரபஞ்சம்முழுவதும்நிறைந்திருக்கின்றனை. சேதனு சேதனங்களெல்லாம் உன் சக்திகள்போல உன்னைவிட்டுப் பிரியாதவை. நீஷாட்குண்யபூர்ணன். இத்தகைய உனக்கு நமஸ்காரம். ஓ வரதராஜனே! எனக்கு இஷ்டமான வரங்களைக்கொடுப்பாயாயின், நீ படைத்தஸமஸ்தபூதங்களிடத்தினின்றும் எனக்கு மரணம் உண்டாகாதிருக்கும்படி அனுக்ரஹம் செய்வாயாக. மற்றும், க்ருஹம் முதலியவற்றின் உள்ளேயாவதுவெளியிலாவது பகலிலாவதுராத்ரியி

லாவது எனக்குமரணம் நேராதிருக்கவேண்டும். நீ படைத்த வஸ்துக்களில் உட்படாத உன்னிடத்தினின்றும் எனக்கு மரணம் கூடாது. பூமியிலாவது ஆகாயத்திலாவது எத்தகைய ஆயுதங்களாலும் எனக்கு மரணம் கூடாது. ம்ருகங்களாலாவது மனுஷ்யர்களாலாவது ப்ராணனில்லாத வஸ்துக்களாலாவது ப்ராணனுள்ள பூதங்களாலாவது தேவதைகளாலாவது அஸுரர்களாலாவது மஹாஸர்ப்பங்களாலாவது எனக்கு மரணம் கூடாது. யுத்தங்களில் நான் இணையெதிரில்லாதிருக்க வேண்டும். ப்ரஜைகளுக்கெல்லாம் நானொருவனே ப்ரபுவாயிருக்கவேண்டும். இந்த்ரன் முதலிய ஸமஸ்த லோகபாலர்களுடைய மஹிமையையும் யோகிகளுக்குள்ள அழியாத அணிமாதி ஐச்வர்யத்தையும் எனக்குக் கொடுப்பாயாக. மூன்றாவது அத்யாயம் முற்றிற்று.

ஹிரண்ய கசிபு வரங்களைப்பெற்று லோக பாலர்களை யெல்லாம் வென்று விஷ்ணு த்வேஷத்தினால் அவர்களைப் பீடித்தல்.

நாரதர் சொல்லுகிறார்:—இங்ஙனம் ஹிரண்யகசிபுவால் வேண்டப்பெற்ற ப்ரஹ்மதேவன் அவனுடைய தவத்தினால் ஸந்தோஷித்து எவர்க்கும் கிடைக்க முடியாத அவ்வரங்களையெல்லாம் அவனுக்குக் கொடுத்தான். மற்றும், அவ்வன்னவாஹனன் அவ்வஸுரனை நோக்கி 'அப்பனே! நீ என்னிடத்தில் வேண்டுகிற இவ்வரங்கள் எப்படிப்பட்ட புருஷர்களுக்கும் கிடைக்கக் கூடாதவை. ஆயினும் இவ்வரங்களை உனக்குக் கொடுக்கிறேன்' என்று மொழிந்து அஸுரச்ரேஷ்டனாகிய அவனால்

பூஜிக்கப்பட்டு ப்ருகு தக்ஷர் முதலிய ப்ராஜாபதிகள் துதித்துக்கொண்டு பின்ருெடரப் போய்ச் சேர்ந்தான், ஹிரண்யகசிபு இங்ஙனம் ப்ரஹ்ம தேவனிடம் வரம் பெற்று ஸ்வர்ணம்போன்ற தேஹமுடையவனுகித் தன் ப்ராதாவான ஹிரண்யாக்ஷனைக் கொன்றதை நினைத்துப் பகவானிடத்தில் த்வேஷம் செய்தான். அம்மஹாஸுரன் மூன்று லோகங்களேயும் எல்லாத்திக்குகளேயும் தேவர் அஸுரர் மனுஷ்யஸ்ரேஷ்டர்கள் கந்தர்வர் கருடர் உரகர் ஸித்தர் சாரணர் வித்யாதரர் ரிஷிகள் பிதருக்கள் முனிவர் யக்ஷர் ராக்ஷஸர் பிசாசர் ப்ரேதர் பூதபதிகள் இவர்களேயும்,மற்றும் பூதங்களில் எவ்வெவை சிறப்புடையவைகளோ அவற்றையும் ஜயித்து வசப்படுத்திக் கொண்டு ஜகத்தையெல்லாம் வென்றவனுனன். அவன் இந்த்ரன் முதலியலோகபாலர்களின் தேஜஸ்ஸையும் அவர்களது ஸ்தானங்களேயும் பறித்தான். நந்தன தேவோத்யானத்தையும் கைப்பற்றினுன். எல்லா ஸம்ருத்திகளும் அமைந்த ஸ்வர்க்கலோகத்தில் விஸ்வகர்மாவால் நேரே நிர்மிக்கப்பட்டதும் மூன்று லோகத்து ஐஸ்வர்யங்களும் அமைந்திருப்பதுமான இந்த்ரனுடைய பவனத்தில் வாஸம் செய்தான். அவ்விந்த்ர பவனத்தில் படிக்கட்டுகள் பவழங்களால் இயற்றப் பெற்றிருக்கும். தரை யெல்லாம் இந்த்ர நீல ரத்னங்கள் பதித்திருக்கும். சுவர்கள் ஸ்படிக ரத்னமயமா யிருக்கும். கம்பங்களெல்லாம் வைடூர்ய மணிகளால் ஏற்பட்டிருக்கும். மற்றும் அவ்விடத்தில் அற்புதமான மேற் கட்டுகளும், பத்மராக ரத்னமயமான ஆஸனங்களும்,பால் நுரைபோல் வெளுத்து முத்துச்சரங்கள் தொங்கவிடப்பெற்ற மெத்தென்னும் பஞ்சசயனங்களும் அமைந்திருக்கும். அங்கு அழகான பற்களுடைய தெய்வமடந்தையர்கள் ஒலிக்கின்ற சிலம்புதண்டைகளால்

ஆங்காங்குச் சப்தம் செய்துகொண்டு உலாவி ரத்னமய மான ஸ்தம்பங்களில் அழகிய தங்கள் முகங்களைப் பார்த் துக் கொள்வார்கள். மஹாபலிஷ்டனும் நினைத்தபடி நடத்தும்படியான மன உறுதியுடையவனும் உலகங்களை யெல்லாம் ஜயித்துத் தானொருவனே அரசனாயிருப்பவ னும் எவராலும் கடக்க முடியாத ஆஜ்ஞையுடையவனு மாகிய அந்த ஹிரண்யகசிபு தன்னால் பீடிக்கப்பட்ட தேவாதிகளால் வந்தனம் செய்யப்பெற்ற பாதங்களு டையவனாகித் தேவேந்த்ரபவனத்தில் வாஸம் செய்து கொண்டு மனக்களிப்புற்றிருந்தான். ஓ யுதிஷ்டிரனே! கொடிய நாற்றமுடைய மத்யத்தினால் மதித்துக் கண்கள் சிவந்து சுழலப்பெற்றுத் தவமஹிமை தேஹபலம் இந்த் ரிய பலம் இவை அமைந்த அவ்வஸுரஸ்ரேஷ்டனை ப்ர ஹ்ம விஷ்ணு ருத்ரர்களாகிய மூவர் தவிர மற்ற அனைவரும் கையில் உபஹாரங்களைக் கொண்டு பணிந்தார்கள். பா ண்டுவின் புதல்வனே! தன் பலத்தினால் மஹேந்த்ரனுடைய ஸிம்ஹாஸனத்தைக் கைப்பற்றி அதன்மேல் உட்கார்ந் திருக்கின்ற அவ்வஸுரனை விஸ்வாவஸுவும் தும்புருவும் என்னை முதலாகவுடைய மற்றவர்களும் கந்தர்வர்களும் ஸித்தர்களும் ரிஷிகளும் வித்யாதரர்களும் அப்ஸரஸ்த்ரீ களும் அடிக்கடி பாடிக்கொண்டிருந்தார்கள். வர்ணாஸ்ரம தர்மங்களில் நிலைநின்றிருக்கின்ற ப்ராஹ்மணர் முதலிய அனைவரும் தக்ஷிணைகள் ஸம்ருத்தமாயிருக்கப் பெற்ற யாகங்களால் அவனையே ஆராதித்தார்கள். அவனும் தன்னுடைய தேஜஸ்ஸினால் ஹவிர்ப்பாகங்களைப் பெற் றான். அவனால் ஆளப்பெற்ற ஏழு தீவுகளோடு கூடின இப்பூமண்டலம் முழுவதும் உழுது பயிரிடாமல் தானே பலன்களை விளைத்துக்கொண்டிருந்தது. ஸ்வர்க்கமும் அவன் விரும்பினதை யெல்லாம் கறந்தது. ஆகாயமும்

பல வகை ஆச்சர்யமான வஸ்துக்களைக் கொடுத்தது. லவணஸமுத்ரம் ஸுராஸமுத்ரம் க்ருதஸமுத்ரம் இக்ஷுஸமுத்ரம் ததிஸமுத்ரம் க்ஷீரஸமுத்ரம் சுத்தஸமுத்ரம் ஆகிய ஏழு ஸமுத்ரங்களும் அவற்றின் பத்னிகளான கங்காதி நதிகளும் அலைகளால் ரத்னங்களைக் கொழித்தன. பர்வதங்களெல்லாம் அவன் விளையாடுவதற்குரிதா யிருக்குமாறு குஹைகளில் எல்லா ருதுக்களிலும் உள்ள பூ காய் பழம் முதலியவை அமைந்த வ்ருக்ஷங்களைத் தரித்தன. இந்த்ராதி லோகபாலர்கள் ஆண்டபொழுது அந்தந்த ருதுக்களுக்குரிய குணங்களையே தரித்தன. இவன் ஆளும்பொழுது அந்த நியதியே இல்லாமற் போயிற்று. இந்த்ரன் முதலிய ஸமஸ்த லோகபாலர்களுடைய அதிகாரத்தை அவனொருவனே நடத்திக்கொண்டு வந்தான். இவ்வாறு திசைகளை யெல்லாம் வென்ற அவ்வஸுரன் தானொருவனே ராஜனுகி ப்ரீதியின்படி இஷ்டமான விஷயங்களை அனுபவித்துக்கொண்டிருந்தும் இந்த்ரியங்களை வெல்ல முடியாமல் த்ருப்தி அடையாதிருந்தான். ஸனகாதிகளின் சாபத்தினுல் அஸுரஜன்மம் பெற்ற அந்த ஹிரண்யகசிபு இங்ஙனம் ஐச்வர்யத்தினுல் மதித்துக் கொழுத்துச் சாஸ்த்ரமார்க்கத்தைக் கடந்து நடந்து கொண்டிருக்கையில் வெகு காலம் கழிந்தது. அவ்வஸுரனுடைய கொடிய தண்டனைக்குப் பயந்த லோகபாலர்கள் அனைவரும் வேறு சரணம் நேரப்பெறுமல் பகவானையே சரணம் அடைந்தார்கள். 'ஸர்வநியாமகனும் தன்னைப் பற்றினுருடைய வ்ருத்தங்களைப் போக்குந் தன்மையுடையனுமாகிய பகவான் எந்தத் திசையில் இருக்கிறுனே. ராகாதி தோஷங்களற்றுப் பரிசுத்தமான மனமுடைய ஸந்யாஸிகள் எந்தத் திசையில் சென்று மீளவும் திரும்பி வருகிறதில்லையோ, அத்தகைய திக்குக்கு நமஸ்காரம்'



1551. தேவதைகள் ஹிரண்யகசிபுவினிடம் பயந்து பகவானைச் சரணம் அடைதலும், அவன் அவர்களுக்கு அபயங் கொடுத்தலும்

என்று அத்தேவர்கள் பகவான் பாதுகாப்பானென்னும் விஶ்வாஸமுடையவராகிப் புத்திஸமாதானம் பெற்று வாயுவையே ஆஹாரமாகக்கொண்டு உறக்கமின்றி 'ஓம். நீ ஷாட்குண்ய பூர்ணன்; ஸர்வாந்தராத்மா; மிகுந்த மன இரக்கமுடையவன்; பரிசுத்த ஜ்ஞானாநந்த ஸ்வரூபன். உன்னை அடைந்தவர்களுக்கு ஸம்ஸாரபயம் நீங்கி நிர்ப்பயமான மோக்ஷம் உண்டாகின்றது. உனக்கு நமஸ்காரம்' என்று ஹ்ருஷீகேசனை ஸ்தோத்ரம் செய்தார்கள். அப்பொழுது மேகத்வனிபோலத் திசைகளை யெல்லாம் ஒலிப்பித்துக்கொண்டு ஸாதுக்களுக்கு அபயத்தை விளைப்பதான ஒரு அசரீரவாக்கு உண்டாயிற்று. 'ஓ தேவஶ்ரேஷ்டர்களே! நீங்கள் பயப்பட வேண்டாம். உங்களெல்லோர்க்கும் க்ஷேமமே உண்டாகும். என் காட்சி ப்ராணிகளுக்கு நன்மையை விளைக்குமேயன்றி வீணாகாது. அஸுராதமனான அந்த ஹிரண்யகசிபுவின் துஷ்டத்தனம் எனக்குத் தெரியும். அவனை நான் வதிக்கப்போகிறேன். சிலகாலம் பொறுத்துக்கொண்டிருப்பீர்களாக; எப்பொழுது அவனுக்குத் தேவதைகளிடத்திலும் வேதங்களிடத்திலும் பசுக்களிடத்திலும் ஸாதுக்களான ப்ராஹ்மணர்களிடத்திலும் தர்மத்திலும் என்னிடத்திலும் த்வேஷம் உண்டாயிற்றோ அப்பொழுதே அவன் சீக்ரத்தில் நசித்துப் போகவேண்டியது நிச்சயமாய் விட்டது. அவன் தன் பிள்ளையான ப்ரஹ்லாதனுக்கு எப்பொழுது த்ரோஹம் செய்வானோ அப்பொழுது ப்ரஹ்மாவின் வரங்களால் உறுதிபெற்றவனாயினும் அவனை நான் வதிக்கப் போகிறேன். அந்த ப்ரஹ்லாதன் அந்தராத்மாவான என்னிடத்தில் நிலைநின்ற மதியுடையவன்; ஸமஸ்த ப்ராணிகளிடத்திலும் நட்புடையவன்; ராகம் த்வேஷம் முதலிய தோஷங்களற்றவன். ஆகையால் அத்தகைய ப்ரஹ்லாதனிடத்

தில் த்ரோஹம் செய்வானாயின் அவனை நான் பொறுக்க மாட்டேன். உடனே வதிக்கப்போகிறேன்'. இங்ஙனம் தேவதைகள் பகவானால் மொழியப்பெற்று அவனுக்கு நமஸ்காரம் செய்து மனக்கவலை தீர்ந்து இனி அஸுரன் முடிந்தானென்று நினைத்துத் திரும்பிப்போனார்கள். பின்பு தைத்ய ராஜனான அந்த ஹிரண்யகசிபுவுக்கு மிகவும் அற்புதமான நான்கு பிள்ளைகள் பிறந்தார்கள். ப்ரஹ்லாதன் அனுஹ்லாதன் ஸம்ஹ்லாதன் ஆஹ்லாதனென்று அவர்களுக்குப் பெயர். அவர்களில் ப்ரஹ்லாதன் கோபமில்லாமை முதலிய நற்குணங்களால் சிறந்திருந்தான். அவன் பெரியோர்களைப் பணியுந் தன்மையுடையவன்; ப்ராஹ்மண குலத்திற்கு அனுகூலன்; சீலமுடையவன்; ஸத்யஸந்தன்; ஜிதேந்த்ரியன்; ஸமஸ்த ப்ராணிகளையும் தன்னைப்போல் மிகுந்த ப்ரீதியோடு பாராட்டுந் தன்மையன்; அவர்களுக்கு ஹிதத்தையே தேடுந் தன்மையன். அவன் பெரியோர்களின் பாதங்களைத் தாஸன்போலப் பணிவான். தீனர்களிடத்தில் தந்தையைப்போல வாத்ஸல்யமுடையவன். தன்னோடொத்தவர்களிடத்தில் ப்ராதாவைப்போல ஸ்நேஹமுடையவன். குருக்களை ஈச்வரனைப்போலப் பாவிப்பான். கல்வி பணம் அழகு நற்குலப் பிறவி இவைகளாலும் மற்றும் பல காரணங்களாலும் உண்டாகக்கூடிய கர்வம் தம்பம் இவை தீண்டப்பெறாதவன். துக்கநிமித்தங்கள் பல உண்டாயிருப்பினும் அவற்றைப் பற்றிச் சிறிதும் பயப்படமாட்டான். இஹ பர லோகங்களிலுள்ள எல்லா விஷயங்களும் அநித்யமென்று நினைத்து அவற்றில் விருப்பமற்றவன். இந்த்ரியங்கள் ப்ராணன்கள் சரீரம் புத்தி இவற்றை எப்பொழுதும் அடக்கிக் கொண்டிருப்பவன்; காமமற்றவன்; தான் அஸுரகுலத்தில் பிறந்தவனாயினும் அஸுர ஸ்வபாவங்கள் எவையும்

நீண்டப் பெற்றவன். ராஜனே! ப்ரஹ்லாதனிடத்தில் நான் சொன்ன இக்குணங்களும் மற்றும் பல நற்குணங்களும் இருந்ததாகப் பண்டிதர்களால் அடிக்கடி கொண்டாடப் படுகின்றன. இப்பொழுதும் பண்டிதர்கள் பகவானுடைய குணங்களைப் போல அவன் குணங்களை மறவாதிருக்கிறார்கள். மன்னவனே! ஸாதுக்களின் ப்ரஸ்தாபமுள்ள ஸபையில் சத்ருக்களுங்கூட இந்த ப்ரஹ்லாதனை உபமானமாக எடுத்துக் கொள்கிறார்கள். உன்னைப் போன்றவர்களைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? நான் அவனுடைய குணங்கள் கணக்கிட முடியாதவை யென்று அவன் மஹிமையை மாத்ரம் சொல்லுகிறேனேயன்றி அவன் குணங்களை யெல்லாம் என்னால் சொல்ல முடியாது. அவன் வாஸுதேவனிடத்தில் ஜன்மஸித்தமான பக்தியுடையவன். இவன் பால்யம் முதற்கொண்டே பகவானிடத்தில் நிலைநின்ற மனமுடையவனாகையால் சிறுவர்களுக்கு இயற்கையில் ஏற்பட்ட விளையாடல்களைத் துறந்து க்ரஹத்தினால் பிடியுண்டவன்போல் ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் பக்தியால் மனங்கலங்கி உலக வ்ருத்தாந்தத்தைப் பற்றின சிந்தை சிறிதுமில்லாதிருந்தான். இவன் பகவானுடைய சிந்தையால் தேஹதர்மங்களை மறந்து இருத்தல் திரிதல் புசித்தல் படுத்தல் பருகுதல் பேசுதல் முதலிய செயல்களைச் செய்து கொண்டிருப்பினும் அவற்றை நினையாமலே யிருந்தான். பகவானைப்பற்றின சிந்தையால் மனங்கலங்கி ஒருகால் பகவானுடைய சிந்தையால் ஆநந்தம் அடைந்து அவன் குணங்களை உரக்கப் பாடுவதும், ஒருகால் ஸந்தோஷத்தின் மிகுதியால் கர்ஜிப்பதும், ஒருகால் வெட்கமின்றிக் கூத்தாடுவதும், ஒருகால் தன்னைப் பகவானாகவே பாவித்து அவனுடைய செயல்களை அபிநயிப்பதுமாயிருந்தான். ஒருகால் இடைவிடாத த்யானத்தினால் ஸந்தோ

ஷம் அடைந்து நிலைநின்ற ஸ்நேஹத்தினால் ஆநந்த நீர்களைப் பெருக்கிக் கண்களை மூடிக்கொண்டு உடம்பெல்லாம் மயிர்க்கூச்சம் உண்டாகப்பெற்றுப் பேசாதிருந்தான். அந்த ப்ரஹ்லாதன் ஒரு ப்ரயோஜனத்தையும் எதிர்பாராத ஸ்நேஹத்தினால் பகவானுடைய பாதாரவிந்தங்களின் ஸேவை நேரப்பெற்று அதனால் அடிக்கடி மஹாநந்தத்தை அடைந்து சப்தாதி விஷயங்களின் பற்றினால் வருந்தக்கூடிய மனத்தை ராகாதி தோஷங்களின்றிப் பரிசுத்தமாயிருக்கச் செய்தான். மன்னவனே! அவன் பாகவதர்களில் சிறந்து மஹா விவேகியாயிருந்தான். அவனுடைய மஹிமைகளைச் சொல்லிமுடியாது. ஹிரண்யகசிபு இத்தகையனான தன் பிள்ளையினிடத்தில் த்ரோஹம் செய்தான்.

யுதிஷ்டிரன் சொல்லுகிறான் :—ஓ தேவரிஷீ ! நிரபராதியும் ஸாதுவுமான தன் பிள்ளைக்குத் தந்தையான ஹிரண்யகசிபு த்ரோஹம் செய்தானென்றீர். அதை அறிய விரும்புகிறோம். பிள்ளைகள் சொன்னபடி கேளாமல் ப்ரதிகூலர்களாயிருந்தாலும் தந்தைகள் அவர்களிடத்தில் வாத்ஸல்யமுடையவராகி நல்வழியில் படிவதற்காகவிரட்டுவார்களேயன்றிச் சத்ருக்களைப் போல த்ரோஹம் செய்யமாட்டார்கள். இன்னும் அனுகூலர்களும் ஸாதுக்களுமாகித் தந்தையே தெய்வமென்று பாவித்திருப்பார்களாயின், அவர்களிடத்தில் தந்தைகள் த்ரோஹம் செய்யமாட்டார்களென்பதைப் பற்றி சொல்ல வேண்டுமோ? ப்ரஹ்மரிஷீ! தந்தை பிள்ளையிடத்தில் வைத்த த்வேஷம் தன் மரணத்திற்கு எப்படிக் காரணமாயிற்றென்பதைக் கேட்கவேண்டுமென்று எங்களுக்குப் பெரிய குதூஹலமாயிருக்கின்றது. அதைப் போக்குவீராக. நான்காவது அத்யாயம் முற்றிற்று.

ஹிரண்யகசிபு தன் பிள்ளையான ப்ரஹ்லாதனுடைய விஷ்ணுபக்தியைக் கண்டு அவனை வதிக்கப் பார்த்தல்.

நாரதர் சொல்லுகிறார் :—அஸுரர்கள் ஜ்ஞானாதி குணங்கள் நிறைந்த சுக்ராசார்யரைத் தமக்குப் புரோஹிதத்தொழில் செய்யும்படி ஏற்படுத்திக்கொண்டிருப்பது யாவர்க்கும் தெரிந்தவிஷயம். அந்தப்படிக்கு அச்சுக்ராசார்யருடைய பிள்ளைகளான சண்டன் அமர்க்கனென்ற இருவர்கள் அஸுரராஜனான ஹிரண்ய கசிபுவின் க்ருஹத்தில் புரோஹிதத்தொழில் செய்து கொண்டிருந்தார்கள். அவ்வஸுரராஜன் தங்களிடம் படிக்கும்படி கொண்டுவிட்ட ப்ரஹ்லாதனுக்கும் மற்ற அஸுரப் பிள்ளைகளுக்கும் அவர்கள் நீதி முதலியவற்றைப் படிப்பித்துக்கொண்டு வந்தார்கள். அப்படியிருக்கையில், அந்த ப்ரஹ்லாதன் குரு சொன்னதைக் கேட்டு அப்படியே வாசித்தானேயன்றித் தன்னுடையவனென்றும் பிறனென்றும் வீணபிமானத்தை விளைக்கும்படியான அவன் சொல்லை மனத்தில் நன்மையென்று நினைக்கவில்லை. பாண்டுவின் புதல்வனே! ஒருகால் அவ்வஸுரராஜன் தன் பிள்ளையை மடிமேல் உட்காரவைத்துக்கொண்டு 'அப்பா! குழந்தாய்! உனக்குக் குரு சொல்லிக் கொடுத்தவைகளில் எது நன்றென்று தோன்றுகிறதோ அதைச் சொல்வாக' என்று வினவினான். இங்ஙனம் வினவப்பெற்ற ப்ரஹ்லாதன் 'ஓ அஸுரஸ்ரேஷ்டனே! இவ்வுலகத்தில் ப்ராணிகள் தேஹத்தை ஆத்மாவாகவும் தம்மை ஸ்வதந்த்ரராகவும் நினைத்துச் சப்தாதி விஷயங்களில் விருப்பமுற்று அந்த வீண்பிடிவாதத்தினால் ஸர்வகாலமும் மனம் கலங்கப் பெற்றிருக்கிறார்கள். நரகத்தில் கொண்டு தள்ளுவதும் பாழ்ங்கிணறு போன்றதுமான இல்லறவாழ்க்கையைத் துறந்து வனத்திற்குச் சென்று

தன்னைப் பற்றினருடைய ஸம்ஸார பந்தத்தைப் போக்குந் திறமையுள்ள பகவானைப் பற்றுவார்களாயின், அதுவே நன்மையென்று நான் நினைக்கிறேன்' என்றான். ஹிரண்யக்சிபு, தனக்குச் சத்ருவான விஷ்ணுவின் பக்ஷத்தில் நிலைநின்றிருக்கிற பிள்ளையின் வார்த்தையைக் கேட்டுச் சிரித்து என் சத்ருவாகிய விஷ்ணுவினிடத்தில் மனம் சென்றவர் பாலர்களின் புத்தியைக் கலக்கிறார்கள். குருவின் க்ருஹத்தில் விஷ்ணு பக்தர்களான ப்ராஹ்மணர்கள் மறைந்திருந்து சிறுவனுடைய புத்தியைக் கலக்கின்றார்கள். இது நிச்சயம். ஆகையால் இவன் புத்தி மாறாதிருக்குமாறு நன்கு விசாரித்துக் கொள்ளுங்கள்' என்றான். பிறகு தைத்ய புரோஹிதர்கள் ராஜபடர்களால் தங்கள் க்ருஹத்தில் கொண்டு விடப்பட்ட ப்ரஹ்லாதனை அழைத்து அவனை நல்வார்த்தைகளால் புகழ்ந்து இனிய உரையுடன் இங்ஙனம் வினவினார்கள். 'குழந்தாய்! ப்ரஹ்லாதா! உனக்கு க்ஷேமம் உண்டாகட்டும். பொய்சொல்லாமல் உண்மையைச் சொல்வாயாக. உன்னோடுகூடப் படிக்கிற பிள்ளைகளில் ஒருவனுக்கும் இல்லாத இந்த விபரீத புத்தி உனக்கு மாத்ரம் எங்கிருந்து உண்டாயிற்று? இப் புத்தியின் மாறுபாடு உனக்குப் பிறரால் உண்டாயிற்றா? அல்லது உனக்கே இயற்கையில் ஏற்பட்டிருக்கின்றதா? தைத்யவம்ச சூடாமணீ! உன் குருக்களாகிய நாங்கள் இதைக் கேட்க விரும்புகிறோம். இதை எங்களுக்குச் சொல்' என்றார்கள். அதைக் கேட்ட ப்ரஹ்லாதன் அந்தக் குருக்களை நோக்கி 'ப்ராணிகள் எவனுடைய மாயையால் மதி மயங்கித் தன்னுடையவனென்றும் பிறனென்றும் வீணான பேதம் பாராட்டுகின்றார்களோ, அப்படிப்பட்ட பகவானுக்கு நமஸ்காரம். புருஷர்கள் அந்தப் பகவானை அனுஸரிப்பார்களாயின், அவர்களுக்குத் தேஹாத்



1556. ஹிரண்யகசிபு விஷ்ணுபக்தியுடைய ப்ரஹ்லாதன்மேல் கோபித்துக் குருபுத்ரர்களான சண்டாமர்க்கர்களை வெறுத்தல்

மாபிமானத்தினுலுண்டாகிற 'நான் வேறு. இவன் வேறு' என்னும் துர்ப்புத்தி பறந்து போய்விடும். அப்புத்தியைப் பசு புத்தியென்று சொல்வார்கள். இது ஸம்ஸாரமாகிற மஹாநர்த்தத்தை ஓயாமல் விளைக்கும். இத்தகைய து்ஷ்டபுத்தி அப்பகவானைப் பணிகிறவர்களுக்கு உண்டாகாது. பரமாத்மாவான அப்பரமபுருஷனுக்குத் தன்னுடையவனென்றும் பிறனென்றும் பேதபுத்தி கிடையாது. பிறரால் வருந்தியும் செய்யமுடியாத எல்லாக்காரியங்களையும் அவன் அவலீலையாகச் செய்வான். அங்ஙனம் வேதங்களாலும் வைதிகர்களாலும் அவன் நிரூபிக்கப்படுகிறான். வேதவாதிகளான ப்ராஹ்மாதிகளும் எவன் ஸ்வரூபத்தை நிரூபிக்கப் புகுந்துமதிமயங்கப்பெறுகிறார்களோ, அவனே என் புத்தியைக் கலக்கின்றான். அயஸ்காந்தத்தினருகில் இரும்பு சுழல்வதுபோல, என் மனமும் பகவானுடைய ஸந்நிதியில் பேதிக்கின்றது. அவன அனுக்ரஹம் செய்து என் மனத்தில் ஸந்நிதானம் செய்து எனக்கு இத்தகைய சித்த வ்ருத்தியை விளைக்கின்றான்' என்றான். ஆழ்ந்த மதியுடைய ப்ரஹ்லாதன் தைத்ய புரோஹிதர்களான அவ்வந்தணர்களுக்கு இவ்வளவு மாத்ரமே மொழிந்து பேசாதிருந்தான். பிறகு வேறு உபாயத்தினுல் அவனை ஸ்வாதீனப்படுத்திக்கொள்ளவல்லமையற்ற குருக்கள் அவனை விரட்டிக் கோபித்து ராஜஸேவகனைப் பார்த்து 'அடா! ராஜஸேவகனே! பிரம்பைக் கொண்டுவா. இவன் நமக்கு அபகீர்த்தியை விளைக்கவந்தவன். தைத்யகுலத்தைக் கொள்ளிபோல் பாழ்செய்கிறான். துர்ப்புத்தியான இவன் விஷயத்தில் நான்காவதான தண்டோபாயத்தையே உபயோகப் படுத்தவேண்டும். தைத்யர்களாகிற சந்தனக் காட்டில் இவன் கண்டக வ்ருக்ஷம்போல் பிறந்தான். தைத்யர்களாகிற சந்தன மரங்களின் வேர்களை அறுக்கும் கோ

டாலிபோன்ற விஷ்ணுவுக்கு இச்சிறுவன் காம்புபோன் றிருக்கிறான்' என்றுரைத்து அந்த ப்ரஹ்லாதனை விரட்டுதல் முதலிய பல உபாயங்களால் பயப்படுத்தி, அவனுக்குத் தர்மார்த்த காமங்களை விவரிக்கின்ற சாஸ்த்ரங்களைக் கற்பித்தார்கள். பிறகு அவர்கள் ஸாம தான பேத தண்டங்களென்கிற நான்கு உபாயங்களையும் ப்ரஹ்லாதன் நன்றாக உணர்ந்திருப்பதை அறிந்து மாதாவால் தேய்த்துக் குளிப்பித்து அலங்காரம் செய்யப்பெற்ற அச்சிறுவனை ஹிரண்யகசிபுவினிடம் அழைத்துக்கொண்டுபோனார்கள். பிறகு ஹிரண்யகசிபு தன் பாதங்களில் விழுந்து நமஸ்கரிக்கின்ற ப்ரஹ்லாதனுக்கு ஆசீர்வாதம் செய்து அபிநந்தித்துப் புஜங்களால் பிள்ளையின் தலையை அணைத்துப் பெரிய ஆநந்தம் அடைந்தான். ஓ யுதிஷ்டிரனே! அநந்தரம் பிள்ளையை மடிமேல் உட்காரவைத்துக் கொண்டு உச்சி முகந்து ஸந்தோஷத்தினால் முகம் மலரப்பெற்றுக் கண்ணீர்களால் நனைத்து இங்ஙனம் மொழிந்தான். 'அப்பா! வளர்ந்த வாழ்நாளுடையவனே! ப்ரஹ்லாதா! நீ இத்தனை காலமாய்க் குருவினிடத்தில் ஏதேது கற்றனையோ, அவற்றில் உனக்கு நன்றாக வந்ததும் சிறந்ததுமான ஒன்றைச் சொல்வாயாக' என்றான். அதைக் கேட்ட ப்ரஹ்லாதனும் 'ஸ்ரீமஹா விஷ்ணுவின் குணங்களைக் கேட்பது, அவன் நாமங்களை வாயாரப்பேசுவது, அவனை நெஞ்சார நினைப்பது, அவன் பாதங்களைப் பணிவது, அவனைப் பூஜிப்பது. அவனை நமஸ்கரிப்பது, அவனுக்குத் தாஸனாயிருப்பது, அவனிடத்தில் நட்பு செய்வது, அவனிடத்தில் ஆத்மஸமர்ப்பணம் செய்வது ஆகிய ஒன்பது லக்ஷணங்கள் அமைந்த பக்தியோகத்தை அறிவிக்கும் சாஸ்த்ரத்தைக் கற்பானாயின், அது கல்விப்பயிற்சிகளில் சிறந்ததாமென்று எனக்குத் தோற்றுகின்றது. சாஸ்த்

ரத்தில் சொல்லப்பட்ட பக்தியோகத்தை மனத்தூய்மையுடன் பகவானிடத்தில் செய்து, அங்ஙனம் செய்த பக்தியோகத்தை அப்பகவானிடத்தில் அர்ப்பணமும் செய்வானாயின், அதுவே சிறப்புடையதாம்' என்றான். அப்பொழுது ஹிரண்யகசிபு இங்ஙனம் மொழிந்த பிள்ளையின் வசனத்தைக் கேட்டுக் கோபத்தினால் உதடு துடிக்கப் பெற்றுக் குருபுத்ரனைப் பார்த்து 'ஏ! ப்ராஹ்மணாதமா! இதென்ன இப்படிச் செய்தாய்? என்னைப் பொருள்செய்யாமல் என் சத்ருபக்ஷத்தில் புகுந்து எனக்குக் கெடுதியைச் செய்ய முயன்றால், துர்ப்புத்தி! என் குழந்தைக்கு அஸாரமான அம்சத்தைக் கற்பித்தனையே. இவ்வுலகத்தில் சிலர் நண்பர்போலிருந்து மனத்தில் கெட்ட எண்ணங்கொண்டிருப்பதுண்டு. அவர்கள் தாங்கள் அஸாதுக்களாயினும் அதுவெளியாகாதபடி ஸாதுக்களின் வேஷம் தரித்திருப்பார்கள். பாபிஷ்டர்களின் பாபம் ரோகமாய் வெளியாவதுபோல, அவர்கள் செய்யும் த்ரோஹமும் ஒரு காலத்தில் வெளியாகும்' என்றான். குருபுத்ரர்கள் அதைக் கேட்டு 'ஓ இந்த்ரசத்ரு! உன் பிள்ளைக்கு இது நாங்கள் கற்பித்ததன்று. பிறரும் கற்பிக்கவில்லை. இவனே இங்ஙனம் சொல்லுகிறான். ராஜனே! இவனுக்கு இப்புத்தி ஜன்மத்திலேயே உண்டானது. பிறரால் கற்பிக்கப்பட்டதன்று. ஆகையால் கோபத்தை அடக்குவாயாக. எங்கள்மேல் குற்றத்தை ஏற்றவேண்டாம்' என்றார்கள். குருபுத்ரரால் இவ்வாறு மறுமொழி கூறப்பெற்ற அவ்வஸுரன் மீளவும் பிள்ளையைப் பார்த்து 'அட அமங்களனே! இப்புத்தி உனக்குக் குருவின் உபதேசத்தினால் விளையாததாயின், துர்ப்புத்தி உனக்குப் பின்னை எப்படி உண்டாயிற்று?' என்றான். அதற்கு ப்ரஹ்லாதன் 'இல்லறவாழ்க்கையில் மனம் செல்லப்பெற்றவர்களுக்குத் தன்னு

லாவது பிறராலாவது ஒருவர்க்கொருவராலாவது ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் பக்திரூபமான மதி உண்டாகாது. அவர்கள் இந்த்ரியங்களை அடக்கமுடியாமல் ஸம்ஸாரமாகிற நரகத்தில் புகுந்து நேற்று அனுபவித்த விஷயங்களையே மற்றை நாளும் அனுபவித்துக் கொண்டிருப்பார்கள். இப்படி சப்தாதி விஷயங்களில் ஆழ்ந்த மனமுடையவர்களுக்கு ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் பக்தி எப்படி உண்டாகும்? அவர்கள் தங்களுக்குப் புருஷார்த்தமும் அதை நிறைவேற்றிக்கொடுக்கும் உபாயமுமாகிய ஸ்ரீக்ருஷ்ணனை அறியமாட்டார்கள். அவர்கள் சப்தாதி விஷயங்களையே புருஷார்த்தமாக நினைந்திருப்பவர்கள்; துர்ப்புத்திகள்; குருடர்களால் வழி நடக்கப்பெற்ற குருடர்கள் வழிதெரியாமல் பள்ளத்தில் விழுவதுபோல, அவர்கள் வர்ணாஸ்ரம தர்மங்களாகிற பல பூட்டுக்கயிறுகள் நிரம்பின வேதமாகிற தாமணியில் ஈஸ்வரனால் கட்டுண்டு கேவலகாம்ய கர்மங்களில் மனம் செல்லப்பெற்ற மூடர்களால் வஞ்சிக்கப்பட்டு அக்கர்மங்களிலேயே கால்தாழ்ந்து அடிக்கடி ஜன்ம ஜரா மரணாதி துக்கங்களை அனுபவிக்கிறார்கள். அவர்களுடைய புத்தி மஹாநுபாவனான பகவானுடைய பாதாரவிந்தங்களை ஒருகாலும் தீண்டுகிறதில்லை. அவனுடைய பாதாரவிந்தங்களை நினைப்பார்களாயின், அவர்களுக்கு இந்த ஸம்ஸார துக்கம் தானே பறந்துபோம். ஒரு ப்ரயோஜனத்தையும் விரும்பாதபெரியோர்களின் பாதாரவிந்தங்களில் படிந்த பராகத்தைப் பணியாத வரையில் ஸம்ஸாரிகளின் புத்தி பகவானுடைய பாதங்களைத் தீண்டாது' என்று மொழிந்து பேசாதிருந்தான். ஹிரண்யகசிபு அதைக் கேட்டுக் கோபத்தினால் விவேகம் கெட்டுப் பிள்ளையை மடியினின்றும் கீழே தள்ளி அவன் சொன்னதை நினைத்துப் பொறுக்கமுடியாமல் கோபம் தலை

யெடுத்துக் கண்கள் சிவந்து, 'ஓ ராக்ஷஸர்களே! இவனை அப்புறப் படுத்துவீர்களாக. இச்சிறுவன் வதிக்கத்தகுந்தவன். ஆகையால் இவனைச் சீக்ரத்தில் வதிப்பீர்களாக. இவன் தன்னுடைய நண்பர்களான நம்மைத் துறந்து தனது சிற்றப்பனை வதித்த விஷ்ணுவின் பாதங்களைத் தாஸன்போலப் பூஜிக்கிறான். ஆகையால் இவன் என்ப்ராதாவைக் கொன்ற விஷ்ணுதான். இவனை வதிப்பீர்களாக. மனநிலைமையில்லாத இச்சிறுவன் விஷ்ணுவுக்குக்கூட அனுகூலனாயிருப்பானென்று எனக்குத் தோற்றவில்லை. அவனிடத்திலும் இவன் நல்ல எண்ணத்தோடிருக்கமாட்டான். இவன் ஐந்து வயதிலேயே துறக்கமுடியாத தாய் தந்தைகளிடத்திலுள்ள ஸ்நேஹத்தைத் துறந்தானல்லவா? சத்ருபக்ஷத்தில் பிறந்தவனாயினும் ஔஷதம்போல ஹிதம் செய்வானாயின் அவனைப் பிள்ளையாகக் கொள்ளலாம். நமது தேஹத்தில் பிறந்தவனாயினும் ரோகம்போலக் கெடுதியை விளைப்பானாயின் அவனைத் துறக்க வேண்டும். தன் தேஹத்தில் கை கால் முதலிய ஏதேனுமொரு அங்கம் பாம்புவிஷம் முதலியவற்றால் தீண்டப்படுமாயின், அதை அப்பொழுதே அறுத்துவிடவேண்டும். அதனால் மற்ற அங்கங்கள் ஸுகமாயிருக்குமல்லவா? இந்த்ரியங்களை வெல்லவிரும்பும் முனிவனுக்கு ராகாதி தோஷத்திற்கிடமான இந்த்ரியம் சத்ருவாயிருப்பதுபோலப், பிள்ளையின் வேஷம் பூண்ட இவன் எனக்குச் சத்ரு. ஆகையால் இவனை விஷம் கலந்த ஆஹாரம் படுக்கை ஆஸனம் முதலிய எல்லா உபாயங்களாலும் வதிக்கப் பார்க்கவேண்டும்' என்றான். கையில் சூலாயுதமேந்தினவர்களும் கூரான கோரைப் பற்களும் பயங்கரமான முகமும் சிவந்த தாடி மீசைகளும் தலைமயிர்களுமுடைய அவ்வஸுரர்கள் இங்ஙனம் ப்ரபுவால் கட்டளையிடப்பெற்றுப் பயங்கரமான ஸிம்

ஹநாதங்களைச் செய்து 'வெட்டு. குத்து' என்று மொழிந்துகொண்டு உட்கார்ந்திருக்கிற ப்ரஹ்லாதனை எல்லா மர்மஸ்தானங்களிலும் சூலங்களால் ஹிம்ஸித்தார்கள். சேதநாசேதன விலக்ஷணனாகையால் இத்தகையனென்று நிரூபிக்கமுடியாதவனும்ஸர்வாந்தர்யாமியும் ஷாட்குண்ய பூர்ணனுமாகிய பரமபுருஷனிடத்தில் நிலைநின்ற மனமுடைய அந்த ப்ரஹ்லாதனிடத்தில் அவ்வரக்கர்கள்செய்த மாரணோபாயங்களெல்லாம்அவனுக்கு மரணத்தையாவது வருத்தத்தையாவது விளைக்காமல், பாபிஷ்டன் செய்யும் ஸந்த்யாவந்தனாதி ஸத்கர்மங்கள்போலப் பயனற்றவையாயின. இங்ஙனம் அவர்களுடைய ப்ரயத்னங்களெல்லாம் வீணாகையினால் தைத்யேந்த்ரனாகிய ஹிரண்யகசிபு 'இதென்ன! இவன் ஆயுதங்களால் அடிக்கப்பட்டும் மரணம் அடையவில்லையே. இவனால் தான் நமக்கு ம்ருத்யுவோ?' என்று சங்கித்து இவனை எப்படியாவது வதிக்கவேண்டுமென்னும் நிர்ப்பந்தத்துடன் அவனுடைய வதத்திற்குரிய உபாயங்களை ஆலோசித்து, திக்கஜங்களைக் கொண்டு மிதிக்கவிடுவது, மேலான ஸர்ப்பங்களைக்கொண்டு கடிக்கவிடுவது, மரணத்தை விளைக்கும்படியான ஹோமங்களைச் செய்வது, மலைச்சிகரங்களினின்று கீழ் விழத் தள்ளுவது திடீரென்று இடிவிழுவது முதலிய மாயைகளை ப்ரயோகிப்பது, மூச்சு வெளிவரவொட்டாமல் நவத்வாரங்களையும் தடுப்பது, விஷங்களைக் கொடுப்பது, ஆஹாரங்கொடாமல் உபவாஸம் வைப்பது,பனிகாற்று அக்னி ஜலம் இவற்றில் தள்ளுவது, பர்வதங்களைக் கொண்டு வந்து மேலெறிவது இவைமுதலிய பல உபாயங்களால் அஸுரர்களைக் கொண்டு வதிக்கப்பார்த்தும் அவனை வதிக்கமுடியாமல் வேறு உபாயமும் தோற்றாமல் மிகப் பெருஞ்சிந்தையில் அழுந்தினான். 'நான் இச்சிறுவனைப் பலவாறு விரட்டி

னேன். இவனை வருத்தப் பல உபாயங்களைச் செய்தேன். மாரணஹோமம் முதலிய கெட்ட தர்மங்களையும் சூலத்தினால் குத்துவது முதலிய பல த்ரோஹங்களையும் செய்தேன். இவன் தன் தேஜஸ்ஸினாலேயே பாதுகாக்கப் பெற்று அவற்றாலும் மரணம் அடையவில்லை. இவ்விளைஞன் நான் செய்த மரணோபாயங்களுக்கெல்லாம் எட்டாதிருக்கிறான். இவன் பாலனாயினும், இவன் புத்தி நல்ல திறமையமைந்திருக்கிறது. தாய் தந்தைகளால் ஹரிச்சந்திரனுக்கு நரபசுவாக விக்ரயம் செய்யப்பட்ட சுனச்சேபன்போல, இவன் நான்செய்த த்ரோஹங்களைச் சிறிதும் நினைக்காமலே யிருக்கிறான். இவன் இந்த்ரியங்களை வென்றவன். இவனுடைய ப்ரபாவம் அளவிடக்கூடாததாயிருக்கின்றது. இவனுக்கு எதனாலும் பயம் உண்டாகவில்லை. இவன் எதனாலும் மரணம் அடையாதிருக்கிறான். இவனோடு விரோதித்துக் கொள்வதனால் எனக்கே ம்ருத்யு நேரிடும். இவனால் எனக்கு ம்ருத்யு நேராதாயின், மற்ற எதனாலும் எனக்கு ம்ருத்யு உண்டாகாது' என்று அப்புதல்வனைப் பற்றின சிந்தையால் சிறிது ஒளிமழுங்கி முகம் தொங்கப்பெற்றிருக்கின்ற ஹிரண்யகசிபுவைப் பார்த்து குரு புத்ரர்களான சண்டாமர்க்கர்கள் ஏகாந்தத்தில் இங்ஙனம் மொழிந்தார்கள். 'உன் புருவ நெறிப்பு மாத்ரத்தினால் ஸமஸ்த லோக பாலர்களும் பயந்தார்கள் நீ யொருவனே மூன்று லோகங்களையும் ஜயித்தனை. ப்ரபூ! அப்படிப்பட்ட உனக்குச் சிந்திக்கத்தக்கது எதுவாயினும் இருப்பதாக எங்களுக்குத் தெரியவில்லை. அறியாக்குழந்தைகளின் நடத்தை குணத்திற்காவது தோஷத்திற்காவது இடமன்று. ஆகையால் குருவான பார்க்கவர் வரும் வரையில் இப்பாலன் பயந்தோடாதபடி இவனை வருண பாசங்களால் கட்டிவைப்பாயாக. பெரியோர்களின் ஸே

22481

வையால் புத்தி உண்டாகக்கூடும். அதுவுமன்றி வயது சென்றால் தானே நற்புத்தி உண்டாகும்' என்றார்கள். அதைக் கேட்ட ஹிரண்யகசிபுவும் அப்படியே ஆகட்டுமென்று குரு புத்ரர்கள் மொழிந்ததை அங்கீகரித்துக் 'குருபுத்ரர்களே! இவனுக்கு இல்லறவாழ்க்கையிலிருக்கின்ற மன்னவர்களின் தர்மத்தை உபதேசிப்பீர்களாக' என்றான். அவர்களும் அப்படியே வணக்கமுள்ள ப்ரஹ்லாதனுக்குத் தர்மம் அர்த்தம் காமம் இவற்றின் ஸ்வரூபத்தை உபதேசித்தார்கள். ராகத்வேஷாதிகளால் சப்தாதி விஷயங்களில் மனம் சென்ற அக்குருபுத்ரர்கள் உபதேசித்த தர்மார்த்த காமங்களையும் அவர்களுடைய உபதேசங்களையும் அவன் ஹிதமாக நினைக்கவில்லை. குரு இல்லற வாழ்க்கைக்கு வேண்டிய காரியங்களைச் செய்யும்பொருட்டு வெளியில் போகும்பொழுது அவனோடொத்த வயதுள்ள படிக்கும் பிள்ளைகள் அவகாசம் நேரப்பெற்று ப்ரஹ்லாதனையும் விளையாட அழைப்பார்கள். மஹா விவேகியாகிய ப்ரஹ்லாதன் அப்பிள்ளைகளை இனிய உரைகளால் அழைத்து மன இரக்கத்துடன் சிரித்துக்கொண்டே ஜ்ஞான மார்க்க நிஷ்டையை அவர்களுக்கு உபதேசிப்பான். அப்பிள்ளைகளும் அவனிடத்தில் கௌரவத்தினால் விளையாட்டுக்கருவிகளையெல்லாம் துறந்து ராகத்வேஷாதிகளையுடைய ஸம்ஸாரிகளுக்கு நேரக்கூடிய மனவிகற்பங்களால் தீண்டப்பெறாத மதியுடையவர்களாகி மனத்தையும் கண்ணையும் அவனிடத்திலேயே வைத்து அவனைச் சுற்றி உட்காருவார்கள். ப்ராணிகளிடத்தில் கருணையும் நட்புமுடையவனும் மஹாபாகவதனுமாகிய அவ்வஸுரகுமாரன் அவர்களை நோக்கி இங்ஙனம் சொல்லத்தொடங்குவான். ஐந்தாவது அத்யாயம் முற்றிற்று.

## ப்ரஹ்லாதன் பிள்ளைகளுக்குத் தத்வோபதேசம் செய்தல்.

ப்ரஹ்லாதன் சொல்லுகிறான்:—அறிவுள்ள புருஷன் இந்த மனுஷ்யஜன்மத்திலேயே பால்யம் முதற்கொண்டு பகவானை அடைவதற்குரிய தர்மங்களை அனுஷ்டிக்க வேண்டும். ஜன்மாந்தரத்தில் பார்த்துக்கொள்வோமென்று வெறுமனேயிருக்கலாகாது. மனுஷ்ய ஜன்மம் கிடைப்பது அரிது. மேல் மனுஷ்ய ஜன்மத்தையே பெறுவோமென்கிற நிச்சயமில்லை. ஆகையால் இப்பொழுது கிடைத்திருக்கிற இம்மனுஷ்ய ஜன்மத்திலேயே பகவத் தர்மங்களை அனுஷ்டிப்பீர்களாக. சப்தாதிவிஷயங்களை அனுபவித்துக் கடைசியில் தர்மங்களை அனுஷ்டிக்கலாமேயென்று நினைக்கவேண்டாம். அதுவரையில் இந்தச் சரீரம் நிலைநின்றிருப்பது நிச்சயமில்லை. ஆகையால் பால்யம் முதற்கொண்டே பகவானை அடைவதற்கு யத்னம் செய்யவேண்டும். நிலையற்றதாயினும் இந்த மனுஷ்ய ஜன்மமே புருஷார்த்தத்தை நிறைவேற்றிக் கொடுக்கும். பகவத் தர்மங்களைச் சிறிது செய்வானாயினும், அவன் மோக்ஷத்தை அடைவான். பகவத் தர்மங்களைச் செய்ய ஆரம்பித்து நடுவில் சரீரம் அழிந்து போமாயினும், கெடுதி உண்டாகாது. இந்த மனுஷ்ய ஜன்மத்தில் பகவானுடைய பாதங்களைப் பணிகையே உரியதாம். இப்பகவான் ஸமஸ்த ப்ராணிகளுக்கும் உள்ளே இருந்து நியமித்துப் பாதுகாக்கிறான். ஆத்மாக்கள் அனைவர்க்கும் ப்ரீதிக்கிடமானவன் அவனே. மற்றும், அவன் ப்ராணிகளிடத்தில் நல்ல மன இரக்கமுடையவன். நாம் அவனை அனுஸரிப்போமாயின், அவன் நமக்கு ஹிதத்தையே செய்வான். ஓ அஸுர குமாரர்களே! ப்ராணிகளுக்குத் தேஹ ஸம்பந்தம் நேர்ந்தமாத்ரத்தில்

பசு ஜன்மம் முதலிய எல்லா ஜன்மங்களிலும் இந்த்ரிய ஸுகங்கள் அவரவர் ப்ரயத்னமில்லாமல் பூர்வ கர்மங்களுக்குத் தகுந்தபடி தாமே உண்டாகின்றன. துக்கம் வேண்டுமென்று ஒருவரும் ப்ரயத்னம் செய்கிறதில்லை. ஆயினும் கர்மானுகுணமாக ப்ராணிகளுக்குத் துக்கங்கள் தாமே உண்டாகின்றனவல்லவா? அங்ஙனமே ஸுகங்களும் கர்மானுகுணமாகத் தாமே உண்டாகுமென்பதில் ஸந்தேஹமில்லை. அந்த ஸுகங்கள் மனுஷ்ய ஜன்மத்தில் போல மற்ற பசு பக்ஷி முதலிய ஜன்மங்களிலும் உண்டாகும். பகவத்தர்மங்களோவென்றால் மனுஷ்ய ஜன்மத்திற்கே அஸாதாரணமானவை. மற்ற ஜன்மங்களில் அவை நேரமாட்டா. ஆகையால் நாம் சப்தாதி விஷய ஸுகங்களுக்காக ப்ரயத்னம் செய்யவேண்டியதில்லை. இதை அறியாமல் ப்ரயத்னம் செய்வோமாகில், வாழ்நாளை வீணாக அழித்துக்கொள்வது மாத்ரமேயன்றி மற்றொரு ப்ரயோஜனமும் உண்டாகாது. ஜன்மாந்தரத்தில் ஸுகத்தை அனுபவிப்பதற்காக யத்னம் செய்யவேண்டுமேயென்றால், வாஸ்தவமே. ஆயினும், போகமோக்ஷங்களைக் கொடுக்கவல்ல பகவானுடைய பாதாரவிந்தங்களைப் பணிவோமாகில், ஜன்மாந்தரத்திற்கு அடியான கர்மங்களற்றுத் துக்கங்களெல்லாம் அடியோடு தொலையப்பெற்று ப்ரஹ்மாநந்தத்தை அனுபவிக்கையாகிற பெரியக்ஷேமத்தைப் பெறுவோம். விஷயஸுகங்களுக்காக யத்னம் செய்பவன் அத்தகைய க்ஷேமத்தை அடையமாட்டான். ஆகையால் ஸம்ஸாரத்திலிருக்கும் புருஷன் நன்மை தீமைகளை அறிந்து தன் சரீரம் திறமையோடிருக்கும் பொழுதே மோக்ஷமாகிற க்ஷேமத்திற்காக யத்னம் செய்யவேண்டும். மனுஷ்யனுக்கு வாழ்நாள் நூறு வர்ஷங்கள். இந்த்ரியங்களை வெல்ல முடியாத அம்மனுஷ்

யனுடைய வாழ்நாளில் பாதி வீணாகவே போகின்றது. மனுஷ்யன் ராத்ரியில் உறக்கமாகிற இருட்டில் தன்னுண்டு வெறுமனே படுக்கின்றானல்லவா? பால்யத்தில் ஒன்றும் தெரியாத மூடனாகவே பத்து வர்ஷங்களைக் கழிக்கிறான். கௌமாரவயதில் விளையாடிக்கொண்டே பத்து வர்ஷங்களைக் கழிக்கிறான். இங்ஙனம் இருபது வர்ஷங்கள் வீணாகவே போகின்றன. கடைசியில் கிழத்தனம் மூடித் தேஹம் தளர்ந்து ஒன்றும் செய்ய முடியாமல் இருபது வர்ஷங்கள் கழிகின்றன. இவ்வாறு விழித்துக் கொண்டிருக்கிற ஐம்பது வர்ஷங்களில் நாற்பது வர்ஷங்கள் போயின. மிகுந்த பத்து வர்ஷங்களை வருந்தியும் நிறைக்க முடியாத காமத்தினாலும் அதைத் தொடர்ந்த மோஹம் முதலியவைகளாலும் இல்லற வாழ்க்கையில் ஆழ்ந்து ஹிதத்தை மறந்து வீணாகவே கழிக்கின்றான். இந்த்ரியங்களை வென்றவன் பால்யம் முதற்கொண்டே பகவத் தர்மங்களை அனுஷ்டித்து வாழ்நாளைப் பயன்பெறச் செய்கின்றான். ராத்ரியிலுங்கூட நடுவில் இரண்டு யாமங்களை மாத்ரம் நித்ரைக்கு உபயோகப்படுத்தி முன் பின் யாமங்களில் பகவத் தர்மங்களை அனுஷ்டிப்பான். இந்த்ரியங்களை வெல்ல முடியாத எவன் தான் க்ருஹத்தில் என்னுடையதென்னும் அபிமானத்துடன் ஆழ்ந்து அறுக்க முடியாத ஸ்நேஹங்களாகிற பாசங்களால் கட்டுண்ட தன்னை விடுவித்துக் கொள்ள முயற்சி செய்வான்? ப்ராணனைக் காட்டிலும் மேற்பட்ட பணத்தாசையை எவன் துறக்க வல்லனாவான்? திருடன் ஸேவகன் வர்த்தகன் இவர்கள் மிகவும் ப்ரீதிக்கிடமான ப்ராணனை இழந்தாயினும் பணத்தைத் தேடுகிறார்களல்லவா? மன இரக்கமுடைய காதலியின் ரஹஸ்யப் புணர்ச்சிகளையும் இனிய உரைகளையும் நண்பர்களின் ஸஹவாஸத்தையும்

அவர்களுடைய ஸ்நேஹத்தினால் கட்டுண்டவன் எங்ஙனம் துறப்பான்? ஒவ்வொரு எழுத்தும் அம்ருதம்போல் இனி தாயிருக்கப்பெற்ற இளஞ்சொற்களைச் சொல்லும் சிசுக்களிடத்தில் மனம் சுழிக்கப்பெற்றவன் அவற்றின் ஸஹவாஸத்தை எங்ஙனம் துறக்கவல்லவனுவான்? மனத்தில் இனிய பிள்ளைகளையும் பெண்களையும் ப்ராதாக்களையும் [1]பகினிகளையும் மனஇரக்கத்திற்கிடமான தாய் தந்தைகளையும் பலவகையான போகக் கருவிகளையும் அழகிய வீடுகளையும் குலபரம்பரையாக ஏற்பட்ட ஜீவனங்களையும் பசுக்களையும் வேலைக்காரர்களையும நினைப்பானுயின் அவர்களை எங்ஙனம் துறப்பான்? எப்படித் தான் அவற்றினின்று மனத்தை மீட்டுக்கொள்ள வல்லவனுவான்? கோசகாரமென்னும் புழுப் போல் கர்மங்களைச் செய்துகொண்டு காமங்களை எவ்வளவு அனுபவிக்கினும் லோபத்தினுல் த்ருப்தி உண்டாகப்பெருமல் உபஸ்தம் நாக்கு இவற்றின் ஸுகத்தை வெகுமதித்துப் பெரிய மோஹத்தில் ஆழ்ந்தவன் அதில் எங்ஙனம் விரக்தி உண்டாகப்பெறுவான்? இங்ஙனம் ஜீவர்கள் மதிமயங்கிக் குடும்பபோஷணத்திற்காக வாழ்நாளெல்லாம் வீணுகக் கழித்துக்கொண்டு தமக்கு ஹிதமான புருஷார்த்தத்தை அறிகிறதில்லை. ஸர்வதேச ஸர்வகாலங்களிலும் மூன்றுவகையான தாபங்களால் மனவருத்த முற்றிருந்தும் குடும்பத்தில் மனம் தாழ்ந்து ஸம்ஸாரத்தில் வெறுப்பு உண்டாகப் பெறுகிறதில்லை. பரத்ரவ்யத்தைப் பறிக்கும் புருஷனுக்குப் பரலோகத்தில் வரும் நரகானுபவ ரூபமான தோஷத்தையும் இஹலோகத்தில் ராஜதண்டனுதி ரூபமான தோஷத்தையும் அறிந்தவனுயினும் க்ஷணந்தோறும் பணத்தில் பேராசை வளரப்பெற்று இந்த்ரியங்களை வெல்லாமையால் காமம்

1 பகினி - உடன் பிறந்தவள்.

அடங்கப்பெறுமல் பெருங் குடும்பியாகிப் பிறர் த்ரவ்யத்தைப் பறிக்கிறுன். ஓ தைத்யகுமாரர்களே! இங்ஙனம் ஸம்ஸாரத்தின் தோஷத்தை அறிந்தும் குடும்பத்தைப் போஷிக்கமுயன்று ஆத்மஸ்வரூபத்தை ஆராய்வதில் இழியாமல் 'இது நம்முடையது. இது பிறருடையது' என்னும் பேத புத்தியைப் பாராட்டிக் கொண்டிருப்பவன் நரகத்தையே அடைவான். ப்ரக்ருதி புருஷ ஈச்வரர்களின் உண்மையை அறிந்தவனுயினும் தன்னுடையதென்றும் பிறனுடையதென்றும் பேதபுத்தி நீங்கப்பெறுமல் கேவலம் குடும்பத்தையே போஷித்துக் கொண்டிருப்பானுயின் ஒன்றும் தெரியாத மூடனைப்போல நரகத்தையே அடைவானன்றி மோக்ஷத்தை அடையமாட்டான். அறிந்தவன் கதியே இதுவானுல் அறியாதவனுடைய கதியைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? எவனேனும் இல்லறவாழ்க்கையில் அபிநிவேசமுற்றிருப்பானுயின், அவன் சப்தாதி விஷயங்களில் பெரு விருப்பங்கொண்டு மனக்களிப்பற்றுக் கண்ணழகிகளான மடந்தையர்களுக்கு விளையாட்டு ம்ருகம்போன்று மேன்மேலும் விலங்குபோன்ற ஸம்ஸார பந்தம் நீங்கப்பெறுமல் வருந்துவானேயன்றி எக்காலத்திலும் எவ்விடத்திலும் தன்னை அதினின்று விடுவித்துக் கொள்ள வல்லவனுகமாட்டான். தைத்யகுமாரர்களே! ஆகையால் கேவலம் சப்தாதி விஷயங்களில் மனம் செல்லப்பெற்ற அஸத்துக்களான தைத்யர்களின் ஸஹவாஸத்தை வெகுதூரத்தில் துறந்து ப்ரபஞ்சத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களே விளையாடலாகப் பெற்றவனும் தன் தேஜஸ்ஸினுல் திகழ்கின்றவனும் ஸ்ரீமந்நாராயணனென்று பெயர் பெற்றவனுமாகிய பகவானைச் சரணம் அடைவீர்களாக. பற்றற்றவர்கள் அந்தப் பரமபுருஷனையே பரம புருஷார்த்தமான மோக்ஷத்திற்குக் காரண

மென்று சொல்லுகிறார்கள். ஓ அஸுரகுமாரர்களே! தன்னைப் பற்றினவர்களைக் கைவிடாத அப்பரமபுருஷனை ஆராதிக்க விரும்புகிறவர்களுக்கு அதிக வருத்தமில்லை. அவன் ஸமஸ்த ப்ராணிகளுக்கும் அந்தராத்மாவாகையால் உங்கள் ஹ்ருதயத்திலும் நிறைந்திருக்கிறான். நீங்கள் அவனைத் தேடிக்கொண்டுபோக வேண்டிய அவஶ்யமில்லை. ஸ்வர்க்காதி பலன்களைப்போல அவனை நாம் ஸாதிக்க வேண்டியதில்லை. அனைவர்க்கும் அவன் ஸ்வயமாகவே ஸித்தமாயிருக்கிறான். அவன் ஹ்ருதயத்திலிருப்பதையும் அவனுடைய ஸ்வாமித்வம் சேஷித்வம் முதலிய ஸம்பந்தங்களையும் அறியவேண்டுமேயன்றி மற்றொன்றும் செய்யவேண்டியதில்லை. ஸ்தாவரம் முதல் ப்ரஹ்மதேவன் வரையிலுள்ள மேன்மையும் தாழ்மையுமான ஸமஸ்த பூதங்களிலும் பூமி முதலிய பஞ்சபூதங்களிலும் பூமி முதலிய பஞ்சபூதங்களின் பரிணமங்களான [1] கடபடாதி வஸ்துக்களிலும் ஸத்வாதி குணங்களின் வைஷம்யத்திற்கிடமான மஹத்து அஹங்காரம் முதலியவற்றிலும் பரமபுருஷன் தானொருவனே சேதனர்களையும் அசேதனங்களையும் சரீரமாகக்கொண்டு நிறைந்திருக்கிறான். அவன் இணையெதிரில்லாதவன்; சேதனசேதனங்களில் உள் புகுந்திருப்பினும் அவற்றின் தோஷங்கள் தன்மேல் தீண்டப் பெறாதவன்; ஷாட்குண்யபூர்ணன்; ஜீவாத்மாக்களை அவரவர் கர்மங்களுக்குத் தகுந்தபடி நியமிப்பவன். வ்யாப்யவஸ்துக்களில் வ்யாபகனென்று நிரூபிக்கத் தகுந்தவன். இவ்வளவென்று நிரூபிக்க முடியாதவன்; ஜாதி குணம் முதலிய விகற்பங்களற்றவன்; கேவலாநந்தஸ்வரூபன்; தன்னையொழிய வேறு ஈஶ்வரனில்லாதவன்; மோஹாதி குணங்களை

1 கடம - குடம - படம் - துணி.

விளக்கின்ற தன் மாயையால் ஸம்ஸாரிகளுக்கு வெளியாகாத மஹிமையுடையவன்; ஸதாசார்யர்களுடைய உபதேசத்தினால் அறியத்தகுந்தவன். இத்தகையனான அந்தப் பகவானுடைய ஸ்வரூபத்தை அறிந்து அவனைப் பணிவார்களானால், அவன் அவர்களிடத்தில் ப்ரீதி செய்வான். ஆகையால் நீங்கள் ப்ராணிகளுக்கு த்ரோஹம் செய்கை முதலிய அஸுர ஸ்வபாவத்தை அடியோடு துறந்து பரமாத்மாவின் சரீரங்களாகிய ஸமஸ்த ப்ராணிகளிடத்திலும் அவ்வவற்றின் மேன்மை தாழ்மைகளுக்குரியபடி தயையையும் ஸ்நேஹத்தையும் செய்வீர்களாக. அதனால் பரமபுருஷன் ஸந்தோஷம் அடைவான். ஜகத்காரணனும் அளவற்றவனுமாகிய அந்தப்பகவான் ஸந்தோஷம் அடைவானாயின், பிறகு எதுதான் துர்லபம்? எதுவும் துர்லபமன்று' பகவானுடைய பாதாரவிந்தங்களின் ஸாரத்தை மனத்தினால் அனுபவித்துக் கொண்டு அவன் குணங்களைப்பாடுகிற எங்களுக்கு ஜன்மாந்தர கர்மானுகுணமாகப் பரிணமிக்கின்ற ஸத்வாதி குணங்களால் நம்ப்ரயத்னமில்லாமல் ஸ்வயமாகவே ஏற்படுகின்ற தர்மார்த்த காமங்களால் என்ன ப்ரயோஜனம்? அனைவரும் ஆசைப்படுவதும் ஸத்வாதி குணங்களின் ஸம்பந்தமற்றதுமான கைவல்யமென்கிற மோக்ஷத்தினாலாவது எங்களுக்கு என்ன ப்ரயோஜனம்? அதுவும் எங்களுக்குப் புருஷார்த்தமன்று. நமது ஆசார்யர்கள் கூறுகிற தர்மம் அர்த்தம் காமம் என்னும் இம்மூன்று புருஷார்த்தங்களும் அவற்றைக் கூறுகிற தர்க்கவித்யை வேதத்தின் பூர்வபாகம் நீதிசாஸ்த்ரம் தண்டசாஸ்த்ரம் க்ருஷி முதலிய ஜீவனங்களை அறிவிக்கும் சாஸ்த்ரங்கள் ஆகிய இவையெல்லாம் எனக்குத் தெரியும். ஆயினும் ஸமஸ்த ப்ராணிகளுக்கும் நண்பனாகிய பரமபுருஷனுடைய பாதாரவிந்தங்களில் ஆத்ம

ஸமர்ப்பணம் செய்கையே வேதாந்தபாகங்களில் கூறப்படும்பொருள். அதுவே அழிவில்லாதபுருஷார்த்தமென்று நான் நினைக்கிறேன். இந்த ஜ்ஞானம் துர்லபம். நரனுக்கு நண்பனும் பதரிகாஸ்ரம வாஸியுமான நாராயணபகவான் இந்த ஜ்ஞானத்தை நாரதருக்கு உபதேசித்தான். இப்படிப்பட்ட ஜ்ஞானத்தில் நமக்கு எப்படி அதிகாரமென்று நீங்கள் மயங்கவேண்டாம். ஒரு ப்ரயோஜனத்தையும் எதிர் பாராமல் பக்தி செய்பவர்களும் பகவானுடைய பாதாரவிந்தங்களில் படிந்த பராகத்தினால் அபிஷேகம் பெற்றவர்களுமான ப்ராணிகள் அனைவர்க்கும் அந்த ஜ்ஞானம் உண்டாகக்கூடியது. நாரதரைப்போன்ற மஹான்களுக்கே யென்கிற நிர்ப்பந்தமில்லை. நான் இந்த ஜ்ஞானத்தையும் விவேகாதிகளால் விளையும் விஜ்ஞானத்தையும் பகவானுடைய உண்மையை அறிந்த நாரதரிடத்தில் கேட்டேன். இதுவே பகவத்தர்மமென்று கூறப்படுகின்றது. இது பரிசுத்தமானது.

தைத்யகுமாரர்கள் சொல்லுகிறார்கள்:— ஓ ப்ரஹ்லாதா! நீயும் நாங்களும் இந்தக குருபுத்ரர்களைத் தவிர மற்றொரு குருவை அறியமாட்டோமல்லவா? பால்யம் முதற் கொண்டு இவர்களே நம்மை நியமித்துக்கொண்டிருக்கிறார்கள். மற்றும், நீ இதுவரையில் எங்களை விட்டு வேறு எவ்விடத்திற்கும் போகவில்லை. நீ அந்தப் புரத்திலேயே இருக்கின்றனை. உனக்கு நாரதரோடு ஸஹவாஸம் எப்படி நேர்ந்தது? நேருவதற்கு ப்ரஸக்தியே இல்லை. அவரிடத்தில் கேட்டேனென்கிறாயே. நல்லியற்கையுடையவனே! எங்களுக்குப் பெரிய ஸம்சயமாயிருக்கின்றது. இதைப் போக்குவாயாக. நாங்கள் அதை நம்பும்படியான காரணம் உளதாயின் அதை எங்களுக்குச் சொல். ஆறுவது அத்யாயம் முற்றிற்று.

ப்ரஹ்லாதன் தான் மாத்ருகர்ப்பத்தில் நாரதரிடம் தத்வோபதேசம் கேட்டதை அஸுரகுமாரர்களுக்குக் கூறுதல்.

ஸ்ரீநாரதர் சொல்லுகிறார்:—இங்ஙனம் அஸுரகுமாரர்களால் வினவப்பெற்ற மஹாபாகவதனான ப்ரஹ்லாதன் என்னிடத்தில் கேட்டதை நினைத்துச் சிரித்துக்கொண்டே அவர்களை நோக்கி இங்ஙனம் மொழிந்தான்.

ப்ரஹ்லாதன் சொல்லுகிறான்:—எங்கள் தந்தையாகிய ஹிரண்யகசிபு தவஞ்செய்வதற்காக மந்தரபர்வதத்திற்குப் போயிருக்கும்பொழுது இந்த்ரன் முதலிய தேவதைகள் 'உலகங்களை வருத்துகிற பாபிஷ்டனான இவ்வஸுரன் எறும்புகளால் கடியுண்ட ஸர்ப்பம்போலத் தன் பாபத்தினாலேயே பக்ஷிக்கப்பட்டான்' என்று சொல்லிக்கொண்டு அஸுரர்களோடு யுத்தம் செய்ய முயற்சிகொண்டார்கள். இந்த்ரன் முதலிய அத்தேவர்கள் பலத்தினால் யுத்தத்திற்கு முயன்றிருப்பதைக் கண்டு அஸுரத்தலைவர்கள் அவர்களால் பீடிக்கப்பட்டுப் பயந்து மனைவி பிள்ளை பணம் நண்பர் பசுக்கள் மற்ற வஸ்துக்கள் ஆகிய இவற்றையெல்லாம் துறந்து ப்ராணனைப் பாதுகாக்க முயன்று அனைவரும் ஒவ்வொருவராக எல்லாத் திசைகளையும் பற்றி விரைவுடன் ஓடிப்போனார்கள். ஜயசீலர்களான தேவதைகள் ராஜாவான ஹிரண்யகசிபுவின் க்ருஹத்திலுள்ள ஸமஸ்தமான ஸொத்துக்களையும் பறித்துக்கொண்டு அதைப் பாழ் செய்தார்கள். இந்த்ரன் ராஜமஹிஷியான என் மாதாவைப் பிடித்துக்கொண்டு போனான். அங்ஙனம் இந்த்ரன் கொண்டு போகும்பொழுது தேவர்ஷியான நாரதர் திடீரென்று வழியில் வந்து, பயந்து நடுங்கி அழுகுரல் பக்ஷிபோலக் கதறுகின்ற என்

தாயைக் கண்டு இந்த்ரனைப் பார்த்துத் 'தேவேந்த்ர னே! நிரபராதையான இவளைக் கொண்டுபோவது யுக்த மன்று. மிகுந்த மதியுடையவனே! பிறனுடைய பார்யை யை விட்டுவிடு. இவள் பதிவ்ரதை. இவளைக்கொண்டுபோ காதே' என்றார். தேவேந்த்ரனும் அதைக் கேட்டு 'இவ ளுடைய வயிற்றில் பிறரால் பொறுக்க முடியாத ஹிரண்ய கசிபுவின் வீர்யம் கர்ப்பமாயிருக்கின்றது. ஆகையால் இவள் ப்ரஸவிக்கும் வரையில் என் வசத்தில் இருக்கட்டும். பிறகு பிறந்த பிள்ளையை வதித்து என் ப்ரயோஜனத்தை முடித்துக்கொண்டு இவளை விட்டு விடுகிறேன்' என்றான். நாரதரும் அதைக்கேட்டு 'இவளுடைய கர்ப்பத்திலிருக் கும் சிசு உன்னால் மரணம் அடையக் கூடியதன்று. அது பாபமற்றது; மஹாபாகவத லக்ஷணமமைந்தது; சிறந்த குணங்களுடையது; பகவானுடைய பரிவாரங்களிற் சேர்ந் தது; மஹாபலமுடையது' என்றார். தேவேந்த்ரன் தேவர் ஷியின் வார்த்தையைக் கேட்டு வெகுமதித்து அப்படியே அவளைத் துறந்து அவளுடைய கர்ப்பத்திலிருக்கிற பகவத் பக்தனாகிய என்னிடத்தில் கௌரவத்தினால் அவளை ப்ர தக்ஷிணம் பண்ணி ஸ்வர்க்கலோகம் போய்ச் சேர்ந்தான். அப்பால் தேவர்ஷி என் மாதாவைத் தனது ஆஸ்ரமத் திற்கு அழைத்துக்கொண்டுபோய் ஸமாதானப்படுத்திக் 'குழந்தாய்! உன் பர்த்தா வரும் வரையில் நீ இவ்வாஸ்ர மத்தில் இருப்பாயாக' என்றார். அவளும் அப்படியே ஆகட்டுமென்று அத்தேவர்ஷியின் ஆஸ்ரமத்தில் நிர்ப்பய மாக வஸித்திருந்தாள். அஸுர ஸ்ரேஷ்டனாகிய ஹிரண்ய கசிபு பயங்கரமான தவத்தில் இழிந்து அதினின்றுமீண்டு வராதிருந்தவரையில் பதிவ்ரதையும் கர்ப்பிணியுமான என்தாய், தன் கர்ப்பத்தின் க்ஷேமத்திற்காகவும் தான் நினைத்தபொழுது தன் கணவன் வந்தபின்பு ப்ரஸவம

வதற்காகவும் மிகுந்த பக்தியுடன் நாரத மஹர்ஷிக்குச் சுஸ்ரூஷை செய்து வந்தாள். ஸமர்த்தராகிய அம்மஹர்ஷி கருணையுடையவராகையால் அங்ஙனம் சுஸ்ரூஷை செய்துகொண்டிருக்கிற என் மாதாவுக்கு என்னை உத்தேசித்துப் பகவத்பக்தியோகமாகிற தர்மத்தின் ஸ்வரூபத்தையும் தேஹத்தைக் காட்டிலும் விலக்ஷணனான ஆத்மாவின் ஸ்வரூபத்தையும் உபதேசித்தார். அப்பொழுது அம்மஹர்ஷி உபதேசித்த அவ்வுணர்வு, என் தாய் பெண்ணாகையாலும் நெடுங்காலமானமையாலும் அவளுக்கு மறந்துபோயிற்று. மஹானுபாவராகிய அந்நாரத மஹர்ஷியால் அனுக்ரஹம் செய்யப்பெற்ற எனக்கு அவ்வுபதேசம் இப்பொழுதும் மறக்கவில்லை. ஓ தைத்யகுமாரர்களே! உங்களுக்கு என்வார்த்தையில் நம்பிக்கை உள்ளதானால் உங்களுக்கும் அவ்விரண்டு ஜ்ஞானமும் உண்டாகும். ஸ்த்ரீகளுக்கும் பாலர்களுக்கும் தத்வவிஷயத்தில் திறமையுள்ள புத்தி உண்டாகவேண்டுமென்றால் ஸ்ரத்தையினால் தான் உண்டாகவேண்டும். ஸ்ரத்தை இல்லாத பக்ஷத்தில் எவ்வளவு வருந்தினாலும் அது உண்டாகாது. எனக்கு இந்த ஜ்ஞானம் ஸ்ரத்தையினால் தான் உண்டாயிற்று. நான் உங்களுக்கு அதை உபதேசிக்கிறேன். அதை ஸ்ரத்தையுடன் கேட்டுத் தரிப்பீர்களாக. ஸத்வாதி குணங்களுக்குப் பரிணாமத்தை விளக்க வல்லதும் பரமபுருஷனுக்குச் சரீரமுமாகிய காலத்தினால் விளைகிற பிறவி முதலிய அறுவகை விகாரங்கள் தேஹத்தின் தர்மங்களேயன்றி ஆத்மாவின் தர்மங்களன்று. வ்ருக்ஷம் ஒருவாறுயிருக்கும் பொழுதே அதில் பூ பூத்துக் காய்த்து வளர்ந்து பழுத்து விழுந்து மறைந்து போகின்றது. அங்ஙனமே, ஆத்மா ஒருவாறு யிருக்கையில், தேஹத்திற்குப் பிறவி முதலிய விகாரங்கள் உண்டாகின்றன. ஆத்மா பிறவி நாசம் அப

க்ஷயம் வ்ருத்தி பரிணாமம் முதலிய விகாரங்களற்றவன்; ராகம் த்வேஷம் முதலிய ப்ரக்ருதியின் குணங்கள் தீண்டப் பெறாத பரிசுத்தன்; ஜ்ஞானத்தையே வடிவாகவுடையவனாகையால் எல்லாச் சரீரங்களிலும் ஒருவாறாயிருப்பவன்; சரீரத்தை என்னுடையதென்று நினைக்குந் தன்மையுடையவன்; ஸ்வயம்ப்ரகாசன்; தேஹம் இந்த்ரியம் முதலியவற்றிற்கு ஆதாரமாயிருப்பவன்; அவற்றின் வ்யாபாரங்களுக்குக் காரணமாயிருப்பவன்; தன்னைப்போன்ற மற்றொரு ஜீவனோடு ஸம்பந்தமற்றவன்; மறைவற்றவன். தேஹம் அநித்யம்; ராகாதி தோஷங்களுக்கிடம்; தேவன் மனுஷ்யன் முதலிய பல பிரிவுகளையுடையது; ஜ்ஞானமற்றது; பிறர்க்கு ஆதாரமாயிராது; தந்தை பிள்ளை முதலிய பல ஸம்பந்தங்களுக்கிடமாயிருக்கும். இங்ஙனம் ஆத்மாவுக்குப் பன்னிரண்டு தர்மங்கள் சொன்னோம். இவை ஆத்மாவுக்குத் தேஹத்தைக் காட்டிலும் மேன்மையை அறிவிக்கின்றன. அறிவுடையவன், இந்த லக்ஷணங்கள் அமைந்த ஆத்மாவின் ஸ்வரூபத்தை அறிந்து தேஹத்திலும் அதைத் தொடர்ந்த மற்றவைகளிலும் அஜ்ஞானத்தினாலுண்டான 'நான் என்னுடையது' என்னும் அபிமானத்தைத் துறந்து ஆத்மஸ்வரூபத்தை ஆராய்வதில் ஊக்கமுற்றிருக்கவேண்டும். பொன்விளையுங் கற்களின் நிலைமை தெரிந்த பொன்வேலைக்காரன் அத்தகைய கற்கள் இருக்குமிடந் தேடியறிந்து அக்கற்களை யெடுத்து அவற்றை உருக்குவது முதலிய உபாயங்களால் அவற்றினின்று பொன்னை யெடுப்பது போலத், தேஹங்களாகிற இடங்களில் அத்தேஹங்களைக் காட்டிலும் வேறுபட்ட ஆத்மாவின் உண்மையை உணர்தற்குரிய உபாயங்களால் அவ்வாத்மஸ்வரூபத்தை உணர்ந்தவன் பிறகு ஸ்வரூபத்தினாலும் குணங்களாலும் அள

விடமுடியாத பரம புருஷனுடைய ஸாக்ஷாத்காரத்தைப் பெறுவான். பூமி ஜலம் அக்னி வாயு ஆகாசம் மனம் புத்தி அஹங்காரம் என்று எட்டு ப்ரக்ருதிகள். ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்கள் அவற்றின் குணங்கள். ஜ்ஞானேந்த்ரியங்கள் கர்மேந்த்ரியங்கள் பஞ்சப்ராணன் சித்தம் என்று பதினாறு விக்ருதிகள். ஒவ்வொரு சரீரத்தில் ஒவ்வொரு ஜீவன் உளன். இப்படியானால்தான் சாஸ்த்ரங்களுக்கும் அனுபவத்திற்கும் இணங்கிவருமென்று கீதாசார்யன் முதலியவர்களால் கூறப்பட்டுள்ளது. எட்டு ப்ரக்ருதிகள் பதினாறு விக்ருதிகள் இவற்றின் ஸமுதாயமே தேஹம். அது ஜங்கமமென்றும் ஸ்தாவரமென்றும் இருவகைப் பட்டிருக்கும். அத்தேஹத்தில் ஜீவாத்மாவை ஆராய்ந்தறியவேண்டும். அத்தேஹத்திலுள்ள ஆத்மாவைக் காட்டிலும் வேறுபட்ட பூமி ஜலம் முதலியவற்றையெல்லாம் 'கந்தமுடையது ஆத்மாவன்று, ரஸமுடையதும் ஆத்மாவன்று. ஸ்பர்சமுடையதும் ஆத்மாவன்று' என்று துறந்து அவற்றைக் காட்டிலும் விலக்ஷணனான ஆத்மாவைத் தேடி அறியவேண்டும். 'நான் அறிகிறேன். நான் இச்சிக்கிறேன். நான் த்வேஷிக்கிறேன்' என்று ஜ்ஞானம் இச்சை த்வேஷம் முதலிய குணங்கள் ஜ்ஞானஸ்வரூபனான ஆத்மாவினிடத்தில் அமைகின்றமையாலும் 'என் தலை, என் கை, என் கால்' என்று எல்லா அவயவங்களைக் காட்டிலும் ஆத்மா வேறுபட்டுத் தோற்றுகையாலும், ஆத்மா நானென்று தோற்றுகையாலும், தேஹம் அப்படி தோற்றாமையாலும், ஸ்ருஷ்டி ஸ்திதி முதலியவற்றை எடுத்துரைக்கிற வேதாந்தவாக்யங்களின் ஆராய்ச்சியாலும் உணர்ந்துணர்ந்து ஆத்மா தேஹாதிகளைக் காட்டிலும் வேறுபட்டவனென்று அறியவேண்டும். புத்திக்கு விழித்தல் ஸ்வப்னங் காணுதல் ஒன்றுந் தெரியா

மல் உறங்குதல் ஆகிய மூன்று வ்யாபாரங்கள் உண்டு. அவற்றை எவன் அனுபவிக்கிருனே, அவனே தேஹம் இந்த்ரியம் முதலியவற்றைக் காட்டிலும் விலக்ஷணனான ஆத்மா. அவன் தேஹாதிகளைக் காண்கிருன்; அவற்றிற்கு ஆதாரமாயிருக்கிருன். அவனே புருஷனென்றும் ப்ரத்யகாத்மாவென்றும் கூறப்படுகிருன். ஜாகர ஸ்வப்ன ஸுஷுப்திகளென்கிற மூன்று வகையான புத்தியின் வ்யாபாரங்கள் ஆத்மாவுக்கு இயற்கையில் ஏற்பட்டவையன்று; நிலையற்றவை; ஸத்வ ரஜஸ் தமோகுணங்களால் உண்டாகின்றன. ஜீவனுடைய புண்யபாபரூப கர்மங்களே அவற்றிற்குக் காரணம். காற்று, புஷ்பம் முதலியவற்றில் பட்டு வீசும்பொழுது அவற்றின் மணத்தோடு வீசுகின்றது. அவற்றில் படாது வீசும்பொழுது மணமில்லாமலே வீசுகின்றது. ஆகையால் அந்த மணம் காற்றுக்கு இயற்கையில் ஏற்பட்டதன்றல்லவா? அங்ஙனமே ஜீவாத்மாவுக்கு இவை கர்மாதீனமாய் விளைந்த புத்தி ஸம்பந்தத்தினால் ஏற்பட்டவை. இங்ஙனம் ஆத்மாவின் ஸ்வரூபத்தை ஆராய்ந்தறியவேண்டும். இந்தப் புத்தி ஸம்பந்தமே ஜன்ம ஜரா மரணாதி ரூபமான ஸம்ஸாரத்திற்குக் காரணம். இந்த ஸம்ஸாரம் ஸ்வப்னம்போல நிலையற்றது; புருஷார்த்தமுமன்று. இத்தகைய ஸம்ஸாரம் ஜீவனுக்கு அஜ்ஞானத்தினால் உண்டாகின்றது. ஆத்மா சுத்த ஜ்ஞானஸ்வரூபனாயினும் ஸத்வாதி குணங்களின் பரிணாமத்திற்குரியதாக விளைகின்ற புண்யபாப கர்மங்களின் பரிபாகத்தினால் அவ்வஜ்ஞானம் உண்டாகின்றது. ஆகையால் ஸத்வாதி குணங்களின் பரிணாமத்தினால் விளைகின்ற புண்யபாப கர்மங்களுக்கு மூலமான தேஹாத்ம ப்ரமம் முதலிய அஜ்ஞானத்தை அடியோடு அறுத்தொழிப்பதும் புத்தியின் ப்ரவாஹமான சப்தாதி விஷய ஜ்ஞானத்

தை அழிப்பதுமாகிய யோகத்தை நீங்கள் அனுஷ்டிக்க வேண்டும். அஜ்ஞானத்தைப் போக்குவதற்குப் பலவாயிரம் உபாயங்கள் கூறப்படுகின்றன. அவற்றில் இவ்வுபாயமே மேலானது. இது பகவானால் கூறப்பட்டது. அது யாதெனில், உபாயங்களால் ஸர்வேஶ்வரனான பகவானிடத்தில் அநாயாஸமாக ப்ரீதி உண்டாகப் பெறுவதுதான். இதையே பக்தியோகமென்பார்கள். இப்பக்தியோகம் உண்டாவதற்கு உபாயங்களைச் சொல்லுகிறேன், கேட்பீர்களாக. குருக்களுக்குப் பணிவிடை செய்கை, அவர்கள் மொழியும் தத்வத்தைக் கேட்கவேண்டுமென்னும் விருப்பம், அவர்களைப் பக்தியுடன் உபாஸித்தல், தன் சக்திக்குரியபடி அவர்களுக்கு வேண்டியவற்றை நிறைவேற்றிக்கொடுத்தல், ஸாதுக்களான பகவத் பக்தர்களோடு ஸஹவாஸம் செய்தல், ஹ்ருதயத்திலிருக்கிற ஈஶ்வரனை மானஸிகமாக ஆராதித்தல், அவன் கதையைக் கேட்க வேண்டுமென்னும் விருப்பம், அவன் குணங்களையும் செயல்களையும் கீர்த்தனம் செய்தல், அவனுடைய பாதாரவிந்தங்களை த்யானித்தல், அவனுடைய அர்ச்சாவிக்ரஹங்களைக் கண்களால் காணுதல், பூஜித்தல், வணங்குதல், ப்ரதக்ஷிணம் செய்தல், ஷாட்குண்ய பூர்ணனாகிய ஸர்வேஶ்வரன் ஸமஸ்த பூதங்களிலும் அந்தராத்மாவாயிருக்கிறானாகையால் ஸமஸ்த பூதங்களும் பகவத் ஸ்வரூபங்களே என்னும் பாவனையுடன் அவ்வவற்றிற்கு வேண்டிய விருப்பங்களைக் கொடுத்து உரியபடி வெகுமதித்தல் ஆகிய இவ்வுபாயங்களால் காமம் கோபம் லோபம் மதம் மோஹம் மாத்ஸர்யம் என்கிற அறுவகைச் சத்ருக்களையும் வென்று தினந்தோறும் ப்ரீதியுடன்பகவானை த்யானிக்க வேண்டும். அதனால் சீக்ரத்தில் பகவானிடத்தில் பக்தி யோகம் உண்டாகும். இப்பக்தியோகம் வளர்ந்து வருமா

ணால், பகவானுடைய திவ்ய குணங்களையும், அவன் லீலையால் கொண்ட ராம க்ருஷ்ணாதி உருவங்களால் செய்த செயல்களையும் கேட்டுமிருந்த ஸந்தோஷம் அடைந்து உடம்பெல்லாம் மயிர்க்கூச்சம் நிறைந்து கண்களில் ஆநந்தநீர் ததும்பப்பெற்றுத் தழதழத்த குரலுடன் உரக்கப் பாடுவான்; சப்தம் செய்வான்; கூத்தாடுவான்; க்ரஹத்தினால் பிடியுண்டவன் போல ஒருகால் சிரிப்பான்; ஒருகால் அழுவான்; ஒருகால் த்யானித்துக் கொண்டிருப்பான்; ஒருகால் கண்ணில் படும் ஜனங்களைப் பகவத்ஸ்வரூபமாக நினைத்து நமஸ்கரிப்பான்; ஒருகால் அடிக்கடி மூச்செறிந்துகொண்டு வெட்கமின்றி 'ஓ நாராயணா! ஜகந்நாதா! ஹரீ!' என்று பகவானை அழைப்பான். பரமாத்ம த்யானத்தினால் பெரும்பாலும் ஸந்தோஷமுற்றிருப்பான். இத்தன்மை எப்பொழுது உண்டாகுமோ, அப்பொழுது பக்தியோகம் கைகூடிற்றென்று நினைக்கலாம். இந்நிலைமை உண்டாகப்பெற்ற புருஷன் எல்லாவற்றிலும் சிறந்த பக்தியோகத்தினால் புண்ய பாபங்களாகிற பந்தங்களெல்லாம் தீர்ந்து ஸம்ஸாரத்திற்கு மூலமான கர்மவாஸனையும் அடியோடு கழிந்து பகவானோடொத்த உருவமுடையவனாகி அப்பகவானைப் பெறுவான். இவ்வுலகத்தில் ஆத்யாத்மிகம் முதலிய தாபங்களால் மனவருத்தமுற்ற ஜீவனுக்குப் பகவத்ப்ராப்தி உண்டாகுமானால், அது சக்ரம்போலச் சுழன்று கொண்டு அனர்த்தங்களை விளைக்கின்ற ஸம்ஸாரத்தை மீளவும் உண்டாகாதபடி அடியோடு அழிக்குமென்றும், அதுவே ப்ரஹ்மாநந்தமென்றும் பண்டிதர்கள் சொல்லுகிறார்கள். ஆகையால், ஓ அஸுரகுமாரர்களே! ஹ்ருதயத்திலிருக்கிற ஜீவாத்மாவுக்கு அந்தர்யாமியாய் அவனை நியமித்துக் கொண்டிருக்கிற அந்தப் பகவானை நீங்களும் ஹ்ருதய

கமலத்தில் த்யானிப்பீர்களாக. உங்கள் ஹ்ருதய கமலத்தில் ஆகாசம் போலிருக்கின்றவனும் ஸத்யகாமத்வம் முதலிய குணங்கள் நிறைந்தவனும் ஸாதாரணமாய் ஸமஸ்த ப்ராணிகளுக்கும் நண்பனும் தன்னைப் பற்றினருடைய வருத்தங்களைப் போக்குந்தன்மையுடையவனுமாகிய பகவானை உபாஸிப்பதனால் உங்களுக்கு வருத்தம் என்ன? ஒரு வருத்தமும் இல்லையே. சப்தாதி விஷயங்களைச் சம்பாதிப்பதனால் என்ன ப்ரயோஜனம்? பணங்கள் மனைவிகள் பசுக்கள் பிள்ளை முதலியவர்கள் வீடு பூமி யானைச்சாலை மற்றுமுள்ள ஐஶ்வர்யங்கள் என்று ஜனங்கள் ஆசைப்படுகிற விஷயங்களெல்லாம் க்ஷணத்தில் அழிந்து போகுந்தன்மையுடையவை; நிலையற்றவை. மரணம் அடையுந்தன்மையுடைய புருஷனுக்கு அவை என்னஸுகத்தை விளைக்கும்? இங்ஙனமே யாகாதி கர்மங்களால் ஸம்பாதிக்கப் பட்ட ஸ்வர்க்காதி லோகங்களும் அழியுந்தன்மையுடையவைகளே; தங்களுக்கு மேற்பட்டது எதுவுமே இல்லையென்னும்படியான மேன்மைக் கிடமாகாதவை. அவ்விடத்திலும் துக்கத்தின் கலப்பில்லாமல் கேவல ஸுகத்தையே அநுபவிக்கிறோமென்கின்றதில்லை. துக்கமும் கூடத் தொடர்ந்து கொண்டேயிருக்கும். ஆகையால் நீங்கள் ஸத்தைப் பெறவேண்டுமாயின், ஶ்ருதி ஸ்ம்ருதிகளால் புகழப்படும் பெருமையுடையவனும் பக்தியாகிற ஒரு உபாயத்தினால் மாத்ரமே அடையத்தகுந்தவனுமாகிய பரமபுருஷனைப் பணிவீர்களாக. இல்லையாயின், ஸம்ஸரித்துக் கொண்டேயிருந்து கடைசியில் ஸ்தாவர ஜன்மங்களைப் பெற்று அழியப்பெறுவீர்கள். யஜ்ஞாதி கர்மங்களை அறிவிக்கிற வேதத்தின் பூர்வபாகத்தில் பயின்று அவ்வளவில், தன்னை எல்லாம் தெரிந்தவனாகப் பாவித்திருக்கும் மனிதன் சப்தாதிவிஷயஸுகங்

களை விரும்பி அவற்றைப் பெறுதற்காக இவ்வுலகத்தில் அடிக்கடி யாகாதி கர்மங்களைச் செய்வானாயின், அவன் அதனால் தான் ஆசைப்பட்டதை அடையாமல் அதற்கு நேர்விபரீதமான துக்கத்தை அவஶ்யம் பெறுவான். சப்தாதி விஷய ஸுகங்களைப் பெறுதற்காக யாகாதிகர்மங்களைச் செய்யத் தொடங்குவதற்கு முன்பு கர்மானுஷ்டான ப்ரயாஸமின்றி ஸுகமாயிருந்தவன் கர்மத்தைச் செய்யத் தொடங்கின பின்பு அதைச் செய்து முடிக்கவேண்டிய வருத்தத்தை அனுபவித்தே தீரவேண்டும். ஸ்வர்க்காதி ஸுகங்களை அனுபவிக்கும் பொழுதும் துக்கம் தொடராதிருக்காது. அப்புண்யம் கழிந்த பிறகு நரகத்தை அனுபவிக்கவேண்டும். சப்தாதி விஷயங்களில் விருப்பமின்றிப் பகவானை அடைய விரும்பிப் பக்தி யோகத்தை அனுஷ்டிப்பானாயின், ஆரம்பம் முதற்கொண்டு பகவானை அனுபவிக்கையாகிற ஆநந்தத்தைப் பெறுவான். அப்பக்தியோகம் கைகூடினபின்பு இணையெதிரில்லாத ப்ரஹ்மாநந்தமாகிற அம்ருத மஹா ஸமுத்ரத்தில்அமிழ்ந்திருப்பான். மற்றும்,ஜீவன் இவ்வுலகத்தில் தேஹத்தின ப்ரயோஜனத்திற்காக வேண்டிய உபாயங்களைச்செய்து சப்தாதி விஷயங்களைப்பெற விரும்புகிறான். அத்தேஹம் நாய் நரி முதலியவற்றால் பக்ஷிக்கத்தக்கது. அது ஒருகால் ஆத்மாவை அணைக்கின்றது; ஒருகால் துறக்கின்றது. ஆகையால் அத்தேஹம் ஆத்மாவுக்கு நிலை நின்றிருப்பதன்று; அழியுந்தன்மையுள்ளது. அத்தகைய தேஹத்திற்காக விவேகமுடையவன் எவன்தான் சப்தாதி விஷயங்களைத் தேடி வருந்துவான்? ஆத்மாவை அணைத்துக்கொண்டிருக்கிற தேஹத்தின் கதையே இதுவானால், அந்தத் தேஹத்தின் மூலமாய் ஆத்மாவோடு ஸம்பந்தமுடையவர்களாகையால் தேஹத்தைக்

காட்டிலும் ஒதுங்கினவர்களான பிள்ளை பெண்டிர் வீடு பணம் முதலியவைகளும் ராஜ்யம் கருஹலம், ஸைன்யம் மந்த்ரிகள் வேலைக்காரர்கள் நண்பர்கள் இவர்களும் என்னுடையதென்னும் அபிமானத்திற்கிடமாகி நிலையின்றி வருவதும் போவதுமா யிருப்பார்களென்பதைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? நித்யாநந்த ஸ்வரூபனை ஆத்மாவுக்குத் தேஹத்துடன் அழிபவைகளும் அற்பங்களும் அனர்த்தங்களும் அர்த்தம்போலத் தோற்றுகின்றவைகளுமான சப்தாதி விஷயங்களால் என்ன ப்ரயோஜனம்? ஸமுத்ரத்தில் திவலைபோன்றஇவற்றால் ஆத்மாவுக்கு ஒரு ப்ரயோஜனமும் இல்லை. தேஹ ஸௌக்யத்திற்காகவே அவற்றை அபேக்ஷிக்கவேண்டும். தேஹத்தின் நிலைமையைப் பற்றி முன்னமே சொன்னேன். ஆகையால் நிலையற்ற தேஹத்தின் ஸௌக்யத்திற்காகச் சப்தாதி விஷயங்களைத் தேடியோடி வருந்துந்தன்மையைத் துறந்து ஆத்மஸ்வரூபம் ஸத்தைப் பெறுமாறு பக்தியோகத்தினால் மஹாநந்தஸ்வரூபனை பரமபுருஷனைப் பெறுகையே நலம். ஓ அஸுரர்களே! இவ்வுலகத்தில் ஜன்மாந்தர கர்மங்களால் வருந்துகிற ஜீவனுக்கு ஸ்த்ரீ ஸம்போகாதி ஸமயங்களில் விளையும் ஸுகம் எவ்வளவென்பதை நிரூபித்துப் பார்ப்பீர்களாக. அந்த ஸ்த்ரீயை மணம் புரிந்து அவளைப் போஷிப்பது முதலியவற்றிற்காகப் படும் ப்ரயாஸத்தைக் காட்டிலும் அவளால் அநுபவிக்கும் ஸுகம் அற்பமாயிருக்குமேயன்றி அதைவிட மேற்பட்டிருக்கமாட்டாதென்பது திண்ணம். மற்றும், பிதாவின் ரேதஸ்ஸுமூலமாய் மாதாவின் கர்ப்பத்தில் ப்ரவேசிப்பது முதல் மரணம் வரையிலுள்ள அவஸ்தைகளில் பூர்வஜன்ம கர்மங்களால் வருந்தும் ஜீவனுக்கு இவ்வுலகத்தில் என்ன ஸுகம் இருக்கிறது? விவேகிகள் இதை ஒரு ஸுகமாக

நினைப்பார்களோ? ஜீவன் தன்னை ஆணைத்துக் கொண்டிருக்கிற தேஹத்தினால் வேறு தேஹத்தை விளைத்தே தீரும்படியான புண்ய பாப கர்மங்களைச் செய்கிறான். அக்கர்மங்களால் தேஹாந்தரத்தைப் பெறுகிறான். மீளவும் அத்தேஹத்தினால் வேறு தேஹத்தை விளைக்கும்படியான கர்மங்களைச் செய்கிறான். ஆகையால் ஜீவனுக்கு ஒருகாலும் கர்மங்கள் தீருகிறதில்லை. தேஹத்தினால் கர்மங்களைச் செய்கையும் கர்மத்தினால் தேஹத்தைப் பெறுகையுமாகிற இவ்விரண்டும் தேஹாத்மப்ரமம் முதலிய அஜ்ஞானத்தினால் உண்டாகின்றது. ஆகையால் ஸம்ஸார பந்தத்திற்கு ஹேதுவான அவ்வஜ்ஞானம் நீங்கும் பொருட்டு ஸர்வர்க்கும் அந்தராத்மாவாய் நியமித்துக்கொண்டிருக்கிற ஸர்வேஶ்வரனைப் பணிவீர்களாக. அவன் தர்மம் அர்த்தம் காமம் என்கிற மூன்று புருஷார்த்தங்களையும் விரும்புகின்றவர்களுக்குக் கொடுக்க வல்லவன். ஆயினும், நீங்கள் ஒரு ப்ரயோஜனத்தையும் விரும்பாமல் பணிகையே நலம். அவன் அவாப்த ஸமஸ்தகாமன். ஆகையால் தன் ப்ரயோஜனத்திற்காக ஒரு முயற்சியும் செய்பவனல்லன். அவனது செயல்களெல்லாம் தன் பக்தர்களின் க்ஷேமத்திற்காகவேயிருக்கும். அவனை நீங்கள் நிஸ்ஸந்தேஹமாகப் பணிந்து ஜீவிப்பீர்களாக. அஸுரஜாதியில் பிறந்த நமக்குப் பகவானைப் பணிவதில் அதிகாரம் உண்டோவென்று சங்கிக்க வேண்டாம். அவன் பூமி முதலிய மஹாபூதங்களைப் படைத்து அவற்றால் தேவமனுஷ்யாதி தேஹங்களைப் படைத்தவனாகையால் ஸமஸ்த பூதங்களுக்கும் அவனே ஆதிகாரணன்; அந்தராத்மாவாயிருக்கிறான். ப்ராணிகளுக்கு ப்ரீதிக்கிடமான வஸ்து அவனைக் காட்டிலும் மற்றொன்றும் இல்லை. அவன் உட்புகுந்து ஸமஸ்த ப்ராணிகளையும் நியமித்துக் கொண்டிருப்பவன். ஆகை

யால் அவன் அனைவர்க்கும் பொதுவானவன். தேவன் அஸுரன் மனுஷ்யன் யக்ஷன் கந்தர்வன் இவர்களில் எவனாயினும் அம்முகுந்தனுடைய சரணாரவிந்தங்களைப் பணிவானாயின், அவன் அனிஷ்டங்களெல்லாம் தொலைந்து இஷ்டங்களெல்லாம் கைகூடப் பெறுவான். நான் அஸுரஜாதியில் பிறந்தவனாயினும் பகவானுடைய பாதாரவிந்தங்களைப் பணிந்து க்ஷேமம் பெற்றேனல்லவா? இங்ஙனமே எல்லோரும் க்ஷேமம் பெறலாம். அவனைப் பணிவதற்குத் தேவாதிஜாதி நியமமில்லை. ஓ அஸுரகுமாரர்களே! ப்ராஹ்மணனாயிருக்கை, நல்லொழுக்கம் அமைந்திருக்கை, பலரிடத்தில் பல விஷயங்களைப் பலவாறு கேட்டுணர்ந்திருக்கை; தானம், தவம், யாகம், ஸ்நானாதி கர்மங்களால் வரும் சுத்தி, வ்ரதங்கள் இவையெல்லாம் பரமபுருஷனுக்கு ப்ரீதியை விளைக்க வல்லவையாகமாட்டா. ஒரு ப்ரயோஜனத்தையும் விரும்பாமற் செய்கிற பக்தியினால் மாத்ரமே அவன் ஸந்தோஷம் அடைவான். மற்ற உபாயங்களெல்லாம் அபிநய மாத்ரமே. அஸுர குமாரர்களே! ஆகையால் ஸமஸ்த ப்ராணிகளும் நம்மைப் போலவே பகவானுக்குச் சரீரமாயிருப்பவைகளென்று பாவித்து அவற்றில் தயையுடையவர்களாகி, ஸம்ஸாரபந்தத்தைப் போக்குந் தன்மையனும் ஸமஸ்த பூதங்களுக்கும் அந்தராத்மாவும் நியாமகனுமாகிய பகவானிடத்தில் ஒரு ப்ரயோஜனத்தையும் விரும்பாமல் பக்தியைச் செய்வீர்களாக. பகன் கேசி முதலிய ராக்ஷஸர்களும், யமலார்ஜுனர்களாயிருந்த யக்ஷர்களும், ஹிரண்யாக்ஷன் முதலிய அஸுரர்களும் பூதனை முதலிய ஸ்த்ரீகளும், சாணூரன் முதலிய சூத்ரர்களும், ஜடாயு முதலிய பக்ஷிகளும், மாரீசன் முதலிய ம்ருகங்களும், மற்றும் பல பாபிஷ்ட ஜீவர்களும் பகவானுடைய ஸம்பந்தத்தினால் அவனுடைய ஸாரூப்யத்தை

அடைந்தார்களல்லவா? பகவானிடத்தில் ப்ரயோஜனங்களை எதிர்பாராத பக்தி உண்டாகப் பெறுகையும், ஸமஸ்த பூதங்களையும் பகவத் ஸ்வரூபமாகப் பார்க்கையுமாகிற இவ்வளவே இவ்வுலகத்தில் புருஷர்களுக்கு மேலான புருஷார்த்தமாம். ஏழாவது அத்யாயம் முற்றிற்று.

{ ந்ருஸிம்ஹாவதாரமும், ஹிரண்யகசிபுவின் ஸம்ஹாரமும். }

நாரதர் சொல்லுகிறார்:—பிறகு அவ்வஸுர குமாரர்கள் அனைவரும் அந்த ப்ரஹ்லாதன் மொழிந்ததைக் கேட்டு அது ஒரு தோஷமுமின்றி அழகாயிருந்தமையால் அதை அப்படியே அங்கீகரித்தார்கள். அவர்கள் அது முதல் அஸுர குருக்கள் கற்பிப்பதை ஏற்றுக்கொள்ளவில்லை. அப்பால் அவ்வஸுர குருவின் பிள்ளைகள் அந்த அஸுரகுமாரர்களின் புத்தி பகவத்தர்மத்தில் மாறுத ஊக்கமுற்றிருப்பதை அடையாளங்களால் கண்டறிந்து பயந்து விரைந்தோடி ராஜனாகிய ஹிரண்யகசிபுவுக்கு உள்ளபடி அறிவித்தார்கள். அனந்தரம் குருபுத்ரன் மூலமாய்த் தன் புதல்வன் தன் வழியில் வராமல் தனக்கு அனிஷ்டமான தப்பு வழியில் போகையாகிற அநீதியைக் கேட்டுக் கோபாவேசத்தினால் உடம்பெல்லாம் நடுங்கப்பெற்று ப்ரஹ்லாதனைக் கொல்ல மனங்கொண்டான். அவ்வஸுர ஶ்ரேஷ்டன் கொடுமையான வாக்கினால் அவமதிக்கத்தகாத ப்ரஹ்லாதனை அவமதித்து விநயத்தினால் வணங்கி எவ்வளவு அவமதிக்கினும் கோபமற்றுக் கைகளைக் குவித்துக்கொண்டு அருகாமையில் நிற்கிற அப்புதல்வனைக் கோபத்தினால் பாபிஷ்டமான கண்ணைக் குறுக்கே சாய்த்துப் பார்த்து, இயற்கையில் கொடியனாகிய அவ்வஸுரன் பாதத்தினால் மிதிக்கப்பட்ட ஸர்ப்பம்போலப் பெருமூச்செறிந்து இங்ஙனம் மொழிந்தான்.

ஹிரண்யகசிபு சொல்லுகிறான்:—வீண்வணக்கமுற்றவனே! மந்த புத்தியுடையவனே! பிடிவாதங்கொண்டு என் கட்டளையைக் கடக்கின்ற உன்னை நான் இப்பொழுது யமன் வீட்டிற்கு அனுப்பி விடுகிறேன். மூடா! நான் கோபமுறுவேனாயின், லோகபாலர்களோடு கூடின மூன்று லோகங்களும் நடுங்கும். அப்படிப்பட்ட என் கட்டளையை நீ என்ன பலங்கொண்டு பயமற்றவன்போலக் கடந்தனை?

ப்ரஹ்லாதன் சொல்லுகிறான்:—ஓ மன்னவனே! அவன் எனக்கு மாத்ரமே பலமல்லன். உனக்கும் பலிஷ்டர்களான மற்றவர்களுக்கும் அவனே பலம். ப்ரஹ்மதேவன் முதலிய ஜங்கம ஸ்தாவர ரூபமான மேன்மையும் தாழ்மையுமுள்ள ஸமஸ்த ப்ராணிகளும் அவனுக்கு உட்பட்டவர்கள். அவன் ஸர்வேஸ்வரன். அவன் மூன்றடிகளால் மூன்று லோகங்களையும் அளந்தவன். அவன் அனைவர்க்கும் பலங்கொடுப்பவன். இந்த்ரியபலம் மனோபலம் தைர்யம் தேஹபலம் இந்த்ரியங்கள் இவற்றிற்கு ஆதாரமாயிருப்பவன்; இணையெதிரில்லாதவன்; தனது அம்சங்களாகிய ப்ரக்ருதி புருஷர்களாகிற சக்திகளால் ப்ரபஞ்சத்தை யெல்லாம் படைப்பதும் காப்பதும் அழிப்பதுமாயிருப்பவன். அவன் ஸத்வ ரஜஸ் தமோ குணங்களுக்கு நியாமகன். 'எனக்குச் சத்ருவாகிய அவன் எனக்கு எப்படி பலமாவான்?' என்று நினைக்கவேண்டாம். நீஉனக்குள்ள இந்த அஸுர ஸ்வபாவத்தைத் துறப்பாயாக. தன்னினம் பிறவினமென்றும் சத்ரு மித்ரனென்றும் பேதபுத்தி உண்டாகாதிருக்குமாறு உன் மனத்தை வழிப்படுத்திக்கொள்வாயாக. துர்விஷயங்களிற் செல்லும் மனத்தைக்காட்டிலும் வேறு சத்ருக்கள் எவருமே இல்லை. அத்தகைய மனத்தை வெல்லுகையே நாம் பரமபுருஷனுக்குச்

செய்யும் பெரிய ஸமாராதனமாம். அதை வென்றவனுக்கு எவரும் சத்ருக்களாகத் தோன்றமாட்டார்கள். உன்னைப் போன்ற சிலர் முதலில் ஆத்மாவின் [1] அபஹதபாப்மத்வம் முதலிய ஐஶ்வர்யத்தைப் பறிக்கின்ற இந்த்ரியங்களாகிற ஆறு சத்ருக்களை வெல்லாமல் பத்துத்திசைகளையும் தாம் வென்றதாக நினைக்கிறார்கள். அது துரபிமானம். இந்த்ரியங்களை வென்று ஆத்ம பரமாத்மாக்களின் உண்மையை அறிந்து எல்லாம் பரமாத்ம சரீரங்களேயென்று பாவித்து ஸமஸ்த ப்ராணிகளிடத்திலும் ஸமனாயிருக்கும் ஸாதுவுக்குத் தேஹாத்மப்ரமம் முதலிய அஜ்ஞானத்தினால் விளையும் சத்ருக்கள் எங்ஙனம் தலையெடுப்பார்கள்?

ஹிரண்யகசிபு சொல்லுகிறான்;—அட மந்தபுத்தீ! நீ நிச்சயமாய் மரணம் அடைய விரும்புகின்றனை. ஏனென்றால், நீ தலைக்குமேல் பிதற்றுகின்றனையல்லவா? இனி நீ எங்ஙனம் ஜீவித்திருக்க முடியும்? மரணகாலம் ஸமீபிக்கப்பெற்றவர்கள் விபரீதமான பேச்சுக்களைப் பேசுவார்களென்பது வழக்கம்? மந்த பாக்யனே! என்னைக்காட்டிலும் வேறொருவனை ஜகதீஶ்வரனென்று நீ சொல்லுகின்றனையே; அவன் எங்கே இருக்கிறான்? நீ நினைத்துக் கொண்டிருக்கிற ஜகதீஶ்வரன் எல்லா இடங்களிலும் அந்தராத்மாவாயிருப்பானானால், இதோ எதிரிலிருக்கிற ஸ்தம்பத்தில் ஏன் புலப்படவில்லை? ஸமஸ்த லோகங்களுக்கும் ப்ரபுவாகிய நான் இங்ஙனம் பிதற்றுகிற உன் சரீரத்தினின்று உன் தலையை அறுத்து விடுகிறேன். ரக்ஷகனென்று உன்னால் பாவிக்கப்பட்ட அந்த ஸர்வேஶ்வரன் இப்பொழுது உன்னைப் பாதுகாப்பானாக.

---

1. பாபமற்றிருக்கை.

நாரதர் சொல்லுகிறார்.—இங்ஙனம் மஹத்தான கோபாவேசங்கொண்டு பரமபாகவதனை தன் புதல்வனை அடிக்கடி கொடிய சொற்களால் பீடித்துக்கொண்டிருக்கிற அவ்வஸுர ப்ரபு கத்தியை எடுத்துக்கொண்டு மேன்மையையுடைய ஸிம்ஹாஸனத்தினின்று எழுந்து மிகுந்த பலமுடைய தன்முஷ்டியினால் ஸ்தம்பத்தை அடித்தான். உடனே அந்த ஸ்தம்பத்தில் மிகவும் பயங்கரமான ஒரு த்வனி உண்டாயிற்று. அதனால் ப்ரஹ்மாண்டம் முழுவதும் வெடித்தாற்போலாய்விட்டது. ஓ யுதிஷ்டிரா! தங்கள் தங்கள் இடங்களிலிருக்கின்ற ப்ரஹ்மாதிகள் அனைவரும் அந்த த்வனியைக் கேட்டு ப்ரளயகாலம் வந்ததோவென்று ப்ரமித்துத் தங்கள் ஸ்தானங்களெல்லாம் அழிந்து போய் விடுமென்று நினைத்தார்கள். பிள்ளையை வதிக்க விரும்பித் தன் பலமுள்ளளவும் முயற்சி செய்கின்ற அவ்வஸுர ராஜன் தான் ஒரு நாளும் கேளாததும் அற்புதமுமாகிய அந்த த்வனியைக் கேட்டு அதற்குக் காரணமான வஸ்து எதுவென்று ஸபையின் இடையில் முழுவதும் எவ்வளவுஉற்றுப்பார்த்தும் காணப்பெறாதிருந்தான். அந்தச் சப்தத்தினால் அங்குள்ள அஸுரக்கூட்டத் தலைவர்கள் அனைவரும் பெரும்பயம் அடைந்தார்கள். அப்பொழுது பகவான் தன் ப்ருத்யனாகிய ப்ரஹ்லாதனுடைய வாக்கையும் ஜங்கமஸ்தாவரரூபமான ஸமஸ்த பூதங்களிலும் தான் நிறைந்திருப்பதையும் ஸத்யம் செய்ய விரும்பி ம்ருகமுமன்றி மனுஷ்யனுமன்றி இரண்டு உருவங்களும் அமைந்த அற்புதமான ஓர் உருவத்தைக்கொண்டு அச்சபையிலுள்ள அதே ஸ்தம்பத்தில் அவ்வஸுரனுக்குப் புலப்பட்டான். அந்தத் தைத்யராஜன் ஸ்தம்பத்தினிடையினின்று இங்ஙனம் வெளிக்கிளம்புகின்ற ஒரு ப்ராணிவிசேஷத்தைக் கண்டு 'ஆ! இஃதென்ன! ம்ருகமு

மன்று. மனுஷ்யனுமன்று. மனுஷ்ய உருவமும் ஸிம்ஹத்தின் உருவமும் கலந்திருக்கின்றது. இஃதென்ன ஆச்சர்யம்?' என்று ஆலோசித்துக்கொண்டிருந்தான். அப்பொழுது ந்ருஸிம்ஹரூபியானபகவான் அங்ஙனம் பயங்கரமான அவ்வுருவத்தைச் சிந்தித்துக் கொண்டிருக்கிற அவ்வஸுரனுடைய எதிரில் கிளம்பினான். அந்தப்பகவானுடைய கண்கள் உருக்கின பொன்னின் நிறம் அமைந்து மிகவும் பயங்கரமாயிருந்தன. அவனுடைய முகம் ஜ்வலிக்கின்ற ஜடைகள் தொங்கப்பெற்றுப் பெரிய ஆடம்பரம் அமைந்திருந்தது. கோரைப் பற்கள் பயங்கரமாயிருந்தன. நாக்கு பெரிய கத்திபோலச் சலித்துக்கொண்டு சிறிய கத்தியின் நுனிபோலக் கூராய் இருந்தது. அவ்வுருவம் புருவநெரிப்போடு கூடின முகத்தினால் பயங்கரமாயிருந்தது. காதுகள் மேலே நெரித்துக் கொண்டிருந்தன. வாயும் மூக்கும் திறந்து பர்வத குஹைபோலப் பரந்து அற்புதமாயிருந்தன. கன்னத்தின் ஓரங்கள் பிளந்திருந்தமையால் பயங்கரமாயிருந்தன. அவ்வுருவம் ஆகாயத்தை அளாவியிருந்தது. கழுத்து நீளமின்றிப் பருத்து மார்பு அகன்று இடை சிறுத்திருந்தது. உடம்பெல்லாம் சந்த்ரகிரணம்போல வெளுத்த மயிர்கள் நிறைந்திருந்தன. புஜங்கள் நாற்புறத்திலும் நீண்டு ஸைன்யங்கள் போலக் கூட்டங் கூட்டமாயிருந்தன. அப்பரம புருஷன் நகங்களையே ஆயுதமாகக் கொண்டு எவர்க்கும் அணுக முடியாதவனாயிருந்தான். சக்ரம் வஜ்ரம், முதலிய மற்ற மேலான ஆயுதங்களை யெல்லாம் தரித்துத் தைத்யர்களையும் தானவர்களையும் துரத்திக்கொண்டிருந்தான். யானை போல மதித்திருக்கின்ற அவ்வஸுரன் 'மஹாமாயாவியாகிய விஷ்ணு பெரும்பாலும் என்னை வதிப்பதற்காக இங்ஙனம் ஒரு உபாயம் சிந்தித்தான். ஆயினும் இந்த

முயற்சியால் என்ன உபயோகம்? ஒன்றும் பலிக்காது’ என்று மொழிந்து கதையை ஆயுதமாகத் தரித்துக் கர்ஜித்துக்கொண்டு ந்ருஸிம்ஹரூபியான பகவான்மேல் எதிர்த்தான். அப்பொழுது அவ்வஸுரன் ‘ந்ருஸிம்ஹனுடைய தேஜஸ்ஸில் மறைந்து அக்னியில் விழுந்த விட்டில்போலப் புலப்படாமலேயிருந்தான். சுத்தஸ்வ ஸத்வரூபனுகிய அந்தப் பகவானிடத்தில் விழுந்த தமோகுண வஸ்பாவனுன அவ்வஸுரன் மறைந்தது ஆச்சர்யமன்று. அவன் முன்பு ஸ்ருஷ்டியின் ஆதியில் ப்ரளய காலத்திலுண்டான தமஸ்ஸை யெல்லாம் தன் தேஜஸ்ஸினுல் அப்படியே விழுங்கினுனல்லவா? அனந்தரம் அம்மஹாஸுரன் எதிர்த்தோடிவந்து கோபத்தினுல் பெருவேகமுள்ள கதையைச் சுழற்றி அதனுல் ந்ருஸிம்ஹனை அடிக்க முயன்றுன். அங்ஙனம் முயன்ற தைத்யேந்த்ரனைக் கதையைத் தரித்த ந்ருஸிம்ஹபகவான் கருடன் ஸர்ப்பத்தைப் பிடிப்பதுபோலக், கதையோடு கூடின அவ்வஸுரனைப் பிடித்துக்கொண்டான். கருடன் அவலீலையாயிருக்கையில் பிடியுண்ட ஸர்ப்பம் மெல்லமெல்லத் திமிர்த்துக்கொண்டு நழுவுவதுபோலப், பிடியுண்ட அவ்வஸுரன் விளையாடலுற்ற அந்த ந்ருஸிம்ஹனுடைய ஹஸ்தத்தினின்று திமிர்த்துக்கொண்டு நழுவினுன். அவ்வஸுரனுல் தமது பதவிகள் பறிக்கப்பெற்ற இந்த்ரன் முதலிய ஸமஸ்த லோகபாலர்களும் மற்ற தேவதைகளும் அவனிடத்தில் பயந்து மேகத்தில் மறைந்து பார்த்துக்கொண்டிருந்தார்கள். அவர்கள் அதைக் கண்டு பகவான் அவனை விளையாட்டிற்காக நழுவவிட்டதை அறியாமல் பகவானைக்காட்டிலும் அவன் பலிஷ்டனுயிருக்கிறுன். அவனுல் இப்பகவானுக்கு என்ன நேருமோ?’’ என்று விபரீதமாக நினைத்தார்கள். அம்மஹாஸுரன் அந்த ந்ருஸிம்ஹனு

டைய ஹஸ்தத்னின்று விடுபட்டு அந்தப் பகவானைத் தன் வீர்யத்திற்குப் பயந்திருப்பதாகத் தானே நினைத்துக் கொண்டு அவனைக் காட்டிலும் தன்னைப் பலிஷ்டனாக அபிமானித்து யுத்தத்தில் இளைப்பின்றிக் கத்திகேடயங் களை ஏந்தி மீளவும் அந்த ந்ருஸிம்ஹன்மேல் எதிர்த்தான். அவ்வஸுரன் பருந்தின் வேகமுடையவனுகிக் கத்தியை யும் கேடயத்தையும் ஏந்திக் கீழும் மேலும் இடையிடின் றிப் பலவாறு சுழற்றிக்கொண்டு பல வழிகளில் ஸஞ் சரிக்கையில் ந்ருஸிம்ஹன் அட்டஹாஸமும் கடினகர்ஜ னையும் செய்து பயங்கரமான வேகத்தை ஏற்றுக்கொ ண்டு அட்டஹாஸத்தையும் கர்ஜனத்தையும் பொறுக்க முடியாமல் கண்மூடிக் கொண்டிருக்கிற அவ்வஸுரனைப் பிடித்துக் கொண்டான். அப்பால் பிடிக்கப்பெற்று ஸ்வா தீனமற்றுத் தன்னை விடுவித்துக்கொள்ள நாற்புறத்தி லும் திமிர்த்து அவயவங்களை அசைத்துத் துடிக்கின்றவ னும் இந்த்ரனேடு யுத்தம் செய்யும்பொழுது அவனு டைய வஜ்ராயுதத்தினுலுங்கூட அழியாத தோலுடை யவனுமாகிய அவ்வஸுரனை வாசற்படியில் இருந்து மடியில் தள்ளி, ஸர்ப்பம் எலியைப் பிடிப்பது போலப் பிடித்துக் கருடன் ஸர்ப்பத்தைப் பிளப்பது போல நகங்க ளால் அவலீலையாகப் பிளந்தான். கோபாவேசத் தினுல் பார்க்கமுடியாமல் பயங்கரமான கண்களும் ரக்த பிந்துக்களால் நனைந்து சிவந்திருக்கிற ஜடைகளும் முக மும் அமைந்த அந்த ந்ருஸிம்ஹன் திறந்த வாயின் ஓரங் களை நாக்கினுல் நக்கிக்கொண்டு அவ்வஸுரன் குடலைப் பிடு ங்கி மாலையாக அணிந்து யானையைக் கொன்ற ஸிம்ஹம் போன்று நகங்களின் நுனிகளால் பிளக்கப்பட்ட ஹ்ருத யகமலத்தையுடைய அவ்வஸுரனது சரீரத்தை அப்புறம் எறிந்து, மேலான ஆயுதங்களை ஏந்தி அவனைத் தொடர்



1592. பகவான் ந்ருஸிம்ஹாவதாரஞ் செய்து
ஹிரண்யகசிபுவை ஸம்ஹரித்தல்.

க்துவந்த அவன்ப்ருத்யர்களை எதிர்த்தான். காடுகள்போல் அடர்ந்த பல புஜங்களையுடைய அந்தப்பகவான் நகங்களை ஆயுதமாகப்பெற்ற தன்புஜங்களால் நாற்புறத்திலும் தூரத்தி ஆயிரமாயிரமாகவதித்தான். மேகங்கள் அந்த ந்ருஸிம்ஹ பகவானுடைய ஜடைகளால் அசைக்கப்பட்டுச் சிதறின. ஸூர்யன்முதலிய க்ரஹங்களெல்லாம் அவனுடைய கண்ணோக்கத்தினால் ஒளி பறிக்கப்பெற்றன. ஸமுத்ரங்கள் அவனுடைய மூச்சுக்காற்றினால் அடியுண்டு கலங்கின. திக்கஜங்கள் அவனுடைய கர்ஜனத்தைக் கேட்டுக் களிப்பற்று வீறிட்டன. ஆகாயத்தில் அடர்ந்த விமானங்களெல்லாம் அவனுடைய ஜடைகளால் தள்ளுண்டன. பூமி அவன் பாதங்களால் பீடிக்கப்பட்டு நடுங்கிற்று. பர்வதங்கள் அவனுடைய வேகத்தைப் பொறுக்க முடியாமல் கிளம்பின. ஆகாயமும திசைகளும் அவனுடைய தேஜஸ்ஸினால் தோற்றிருந்தன. மிகுந்த கோபாவேசமுடையவனும் பயங்கரமான முகமுடையவனுமாகிய அந்த ந்ருஸிம்ஹரூபியான பகவான தைத்யர்களையெல்லாம் அங்ஙனம் கொன்றபின்பு எதிர்த்துச் சண்டைசெய்யத் தகுந்த வீரனைக் காணாமல பேரொளிப் பெருக்குடன் தானே ஸர்வேச்வரனென்பதை உலகத்தாருக்கு வெளியிட முயன்று அச்சபையில் அமைத்திருக்கின்ற மேன்மைபொருந்திய ராஜஸிம்ஹாஸனத்தில் உட்கார்ந்தான். அப்பொழுது ப்ரபுவாகிய அம்மஹா புருஷனை எவனும் பயத்தினால் அணுகவில்லை. மூன்று லோகங்களுக்கும் தலைநோய் போலப் பொறுக்கமுடியாத ஆதிதைத்யனாகிய அந்தஹிரண்யகசிபு ந்ருஸிம்ஹ பகவானால் யுத்தத்தில் முடிந்ததைக் கண்டு தெய்வமடந்தையர்கள் ஸந்தோஷத்தின் மிகுதியால் முகம் மலரப்பெற்று அந்த ந்ருஸிம்ஹன்மேல் அடிக்கடி புஷ்பவர்ஷங்களைப் பொழிந்தார்கள். அப்பொழுது

அவ்வாச்சர்யத்தைப் பார்க்க வந்த தேவதைகளின் விமானங்கள் வரிசைவரிசையாக ஆகாயம் முழுவதும் நிறைந்திருந்தன. தேவதுந்துபி வாத்யங்களும் தம்பட்டங்களும் முழங்கின. கந்தர்வ ஸ்ரேஷ்டர்களும் அப்ஸரஸ்த்ரீகளும் ஆடல் பாடல்களைச் செய்தார்கள். அப்பா! யுதிஷ்டிரா! ப்ரஹ்மதேவன் ருத்ரன் இந்த்ரன் முதலிய தேவதைகளும் ரிஷிகளும் பித்ருக்களும் ஸித்தர்களும் வித்யாதரர்களும் உரகர்களும் மனுக்களும் ப்ரஜாபதிகளும் கந்தர்வர்களும் அப்ஸரஸ்த்ரீகளும் சாரணர்களும் யக்ஷர்களும் கிம்புருஷர்களும் வேதாளர்களும் கின்னரர்களும் ஸுநந்தர் குமுதர் முதலிய விஷ்ணுவின் பரிசாரகர்களும் சிறிது ஸமீபத்தில் வந்து சிரஸ்ஸில் அஞ்சலித்துப், பேரொளியுடன் ஸிம்ஹாஸனத்தில் உட்கார்ந்திருக்கின்ற அந்த ந்ருஸிம்ஹ பகவானைத் தனித்தனியே ஸ்தோத்ரம் செய்தார்கள்.

ப்ரஹ்மதேவன் சொல்லுகிறான்:—ந்ருஸிம்ஹனே! உனக்கு நமஸ்காரம். நீ தேச கால வஸ்து பரிச்சேதமற்றவன். உன் சக்திக்கு எல்லையே கிடையாது. உன்னுடைய வீர்யம் அற்புதமாயிருக்கின்றது. உன் செயல்கள் பரிசுத்தமானவை. உன் செயல்களைக் கேட்பவர்களும் பாபங்களற்றுப் பரிசுத்தராவார்கள். ஜ்ஞானம் சக்தி முதலிய குணங்கள் அமைந்த நீ ஸத்வாதிகுணங்களால் இந்த ப்ரபஞ்சத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை லீலையாக நடத்துகின்றனை. ஆயினும் நீ விகாரமற்றவன். அத்தகைய உனக்கு நமஸ்காரம்.

ருத்ரன் சொல்லுகிறான்:—நாதா! நீ கோபிக்குங் காலம் ப்ரளயகாலமேயன்றி இதுவன்று, அல்பனாகிய இவ்வஸுரன் மாண்டான். இனிக் கோபத்திற்குக் காரியம் இல்லை. பக்தவத்ஸலனே! இவ்வஸுரனுடைய புதல்

வனும் உன் பக்தனுமாகிய ப்ரஹ்லாதன் உன்னருகாமையில் வர அவனைப் பாதுகாப்பாயாக.

இந்த்ரன் சொல்லுகிறான் :—பரமனே! நீ எங்களைப் பாதுகாக்கமுயன்று இவ்வஸுரனால் பறிக்கப்பட்ட எங்கள் யஜ்ஞபாகங்களையெல்லாம் திருப்பிக் கொடுத்தனை. உனக்கு வாஸஸ்தானமும் நிர்மலமுமான எங்கள் ஹ்ருதயம் முன்பு அஸுரபயத்தினால் மூடிக்கொண்டிருந்தது இப்பொழுது அந்தப் பயத்தைப் போக்கி அதை மலரச் செய்தனை. ஓ நாதனே! உன்னைப் பணிகின்றவர்களுக்குக் காலக்ரமத்தில் அழியுந்தன்மையதான இவ்வுலகத்தி லுள்ள புருஷார்த்தங்கள் எவ்வளவு? அவர்கள் மோக்ஷத்தையுங்கூட வெகுமதிக்க மாட்டார்கள். நாரஸிம்ஹனே! அவர்கள் மிகவும் அற்பமான மற்ற புருஷார்த்தங்களை எங்ஙனம் விரும்புவார்கள்?

ரிஷிகள் சொல்லுகிறார்கள் :—ஜகதீச! உன் த்யானமாகிற பெருமையுடைய தவத்தை எங்களுக்கு நீ உபதேசித்தனை. அத்தவமே எங்களுக்கு உன் ஸ்வரூபத்தை வெளியிடுகின்றது. ஆதிபுருஷனாகிய ப்ரஹ்மதேவன் அந்தத் தவத்தினாலல்லவோ அந்தராத்மாவான உன்னால் வ்யாபிக்கப்பட்ட ப்ரபஞ்சத்தையெல்லாம் ஸ்ருஷ்டித்தான். அத்தகைய தவத்தை இவ்வஸுரன் அடியோடு பாழ்செய்தான். ரக்ஷிக்கவல்லவனே! எங்களைப் பாதுகாக்க வந்தவனே! ஸாதுக்களின் ரக்ஷணத்திற்காகக் கொண்ட இந்த நரசிங்க உருவத்தினால் மீளவும் நாங்கள் தவம் செய்யும்படி எங்களை அனுக்ரஹித்தனை.

பித்ருக்கள் சொல்லுகிறார்கள் :—நாதா! எங்கள் பிள்ளை பேரன் முதலியவர்களால் எங்களை உத்தேசித்துக் கொடுக்கப்பட்ட ஶ்ராத்தபிண்டங்களை இவ்வஸுரன் பலாத்காரமாகத் தடுத்துத் தானே புஜித்துக் கொண்டு

வந்தான். அங்ஙனமே புண்ய தீர்த்தங்களில் ஸ்நானம் செய்யும்பொழுது அவர்கள் எங்களுக்காகக் கொடுக்கும் திலோதகத்தையும் தானே பலாத்காரமாகப் பருகிக் கொண்டு வந்தான். நீ நரசிங்க உருவங்கொண்டு இவ் வஸுரனுடைய குடலைப் பிடுங்கி இவன் உதரத்தினின் றும் அந்தப் பிண்டத்தையும் திலோதகத்தையும் எங் களுக்கு மீட்டுக்கொடுத்தனை. ஸமஸ்த தர்மங்களையும் பாதுகாப்பவனும் நரஸிம்ஹரூபியுமான அத்தகைய உனக்கு நமஸ்காரம்.

ஸித்தர்கள் சொல்லுகிறார்கள் :—ந்ருஸிம்ஹனே! துஷ்ட ஸ்வபாவனான இவ்வஸுரன் யோகஸித்தமான எங்கள் கதியைத் தன்யோக பலத்தினாலும் தவமஹிமை யாலும் பறித்தான். பலவகைகளாலும் கொழுத்த அத்த கைய இவ்வஸுரனை நீ உனது நகங்களால் பிளந்தனை. இங்ஙனம் மஹோபகாரம் செய்த உனக்கு நமஸ்காரம் செய்கிறோம்.

வித்யாதரர்கள் சொல்லுகிறார்கள் :—ஒன்றும் தெரி யாத மூடனாகிய இவ்வஸுரன் பலத்தினாலும் வீர்யத்தி னாலும் கர்வமுற்று, மனோதாரணையால் ஏற்பட்ட அந்தர் த்தானம் முதலிய எங்கள் வித்யையைத் தடுத்துக்கொண் டிருந்தான். அப்படிப்பட்ட இவ்வஸுரனைப் பசுவைப் போல நீ யுத்தத்தில் அவலீலையாக வதித்தனை. உன் ஸங் கல்பத்தினால் ந்ருஸிம்ஹ உருவங்கொண்ட உன்னை நாங் கள் எப்பொழுதும் வணங்குகிறோம்.

நாகர்கள் சொல்லுகிறார்கள் :—பாபிஷ்டனாகிய இவ் வஸுரன் எங்கள் ரத்னங்களையும் சிறப்புடைய மடந்தை யர்மணிகளையும் பறித்துக்கொண்டு போனான். அவனு டைய மார்பைப் பிளந்து எங்கள் மடந்தையர்களுக்கு மனக்களிப்பை விளைவித்தனை! உனக்கு நமஸ்காரம்.

மனுக்கள் சொல்லுகிறார்கள் :—மனுக்களென்று பெயர்பெற்ற நாங்கள் உன்கட்டளைப்படி நடக்குங் கிங்கரர்கள். உன்னால் ஏற்படுத்தப்பட்ட வர்ணாஸ்ரம மர்யாதைகளை அனுஷ்டிக்க வொட்டாதபடி எங்களை எவன் அவமதித்துக் கொண்டிருந்தானே, அப்படிப்பட்ட துஷ்டனான அஸுரனை நீ இப்பொழுது வதித்தனை. ப்ரபூ! நாங்கள் உன் கிங்கரர்கள். உனக்கு என்ன பணிவிடை செய்ய வேண்டுமோ அதை எங்களுக்கு நியமிப்பாயாக.

ப்ரஜாபதிகள் சொல்கிறார்கள் :—மேன்மையையுடைய ப்ரஹ்மாதி தேவதைகளுக்கும் மேலான பரம புருஷனே! நாங்கள் வ்யஷ்டி ஸ்ருஷ்டியை நடத்தும்பொருட்டு உன்னால் ஸ்ருஷ்டிக்கப் பட்டவர்கள்; ப்ரஜாபதிகளென்று பெயர்பெற்றவர்கள். நாங்கள் இதுவரையில் இவ்வஸுரனால் தடுக்கப்பட்டு ப்ரஜைகளைப் படைக்காமலே யிருந்தோம். அப்படிப்பட்ட இவ்வஸுரன் உன்னால் மார்பு முறிக்கப் பட்டுப் படுத்திருக்கிறான். இனி நாங்கள் உன் கட்டளைப்படி ப்ரஜைகளைப் படைப்போம்; ஸத்வமூர்த்தீ ! உன்னுடைய அவதாரம் ஜகத்திற்கெல்லாம் மங்களத்தை விளைவிக்கின்றது.

கந்தர்வர்கள் சொல்கிறார்கள் :—ப்ரபூ! நாங்கள் உனக்கு ஆடல் பாடல்களைச் செய்பவர்கள். வீர்யத்தினாலும் பலத்தினாலும் பெருமை அமைந்த இவ்வஸுரன் எங்களை இதுவரையில் தன் வசமாக்கிக் கொண்டிருந்தான். அப்படிப்பட்ட மஹா துஷ்டனாகிய இவ்வஸுரன் உன்னால் மரணம் அடைந்து பூமியிற் புரளும்படியான இத்தசையை அடைந்தான். இது அவனுக்கு யுக்தமானதுதான். தப்பு வழியிற் சல்கின்ற எவன்தான் க்ஷேமம் பெறுவான் ?

சாரணர்கள் சொல்கிறார்கள் :—தன்னைப் பற்றினவர்களுடைய மனவருத்தங்களைப் போக்குந்தன்மையுள்

ளவனே! ஐஹிக ஸுகங்களையும் ஆமுஷ்மிக ஸுகங்களையும் கொடுக்கவல்ல உன் பாதாரவிந்தங்களைப் பணியுந் தொழிலையுடைய நாங்கள் இதுவரையில் இவ்வஸுரனால் தடைபட்டிருந்தோம். ஸாதுக்களுக்கு ஹ்ருதயரோகம் போன்ற இவ்வஸுரன் இப்பொழுது உன்னால் முடிக்கப் பட்டான்.

யக்ஷர்கள் சொல்லுகிறார்கள் :—நாதனே! உன் மனத்திற்கினிய பணிவிடைகளைச் செய்யும் பரிசாரகர்களில் முக்யர்களான நாங்கள் இதுவரையில் இவ்வஸுரனால் பல்லக்கு முதலியன தூக்கும்படி நியமிக்கப்பட்டிருந்தோம். நரஸிம்ஹனே! உன்பக்தர்களுக்குஇவ்வஸுரன் மனவருத்தம் விளைத்ததை அறிந்த நீ அஸுரசரீரம்பெற்ற இந்த ஜீவனுக்குச் சரீரவியோகமாகிற மரணத்தைவிளைத்தாய்.

கிம்புருஷர்கள் சொல்லுகிறார்கள் :—நாதா! நாங்கள் கிம்புருஷர்கள். அதாவது குத்ஸித புருஷர்கள். நீ மஹாபுருஷன்; பிறர்க்கு நேரமுடியாத மஹாகுணங்கள் அமைந்தவன்; அனைவர்க்கும் அந்தராத்மாவாய் நியமித்துக் கொண்டிருக்கும் ஸர்வேஶ்வரன். இவ்வஸுரன் எங்களுக்கு மேற்பட்டவனேயன்றி உனக்கு இவன் ஒரு சிறுதுரும்புதான். இவன் எப்பொழுது ஸாதுக்களால் திரஸ்கரிக்கப்பட்டானோ, அப்பொழுதே நாசம் அடைந்தான். இவனை வதிப்பது உன் மஹிமைக்கு ஒரு பெருமையன்று.

வைதாளிகர்கள் சொல்லுகிறார்கள் :—நாங்கள் ஸபைகளிலும் ஸத்ரம் முதலிய யாகங்களிலும் நிர்மலமான உன் புகழைப்பாடிப் பெரிய பூஜையைப் பெற்றுக் கொண்டு வந்தோம். அப்படிப்பட்ட எங்களைத் துஷ்டனாகிய இவ்வஸுரன் தன் வசமாக்கி வைத்துக் கொண்டிருந்தான். பகவானே! அங்ஙனம் துர்ப்புத்தியாகிய இவ்வஸுரன் தலைநோய் முதலிய ரோகம்போல ஜகத்திற்கெல்

லாம் வருத்தத்தை விளைத்துக் கொண்டிருந்தான். தெய்வாதீனமாய் இவன் இப்பொழுது உன்னால் முடிக்கப்பட்டான்.

கின்னரர்கள் சொல்கிறார்கள்:—ஓ ஜகதீச! நாங்கள் கின்னர கணங்களென்று ப்ரஸித்தி பெற்றவர்கள்; உன்னுடைய ப்ருத்யர்கள். இவ்வஸுரன் எங்களை இதுவரையில் வெட்டிக்கு வேலை செய்யும்படி ஓயாமல் பிடித்து வைத்துக் கொண்டிருந்தான். பக்தர்களின் மனவருத்தத்தைப் போக்குந் தன்மையுள்ளவனே! பாபிஷ்டனாகிய இவ்வஸுரன் உன்னால் மரணமடைந்தான். நரஸிம்ஹா! நாதனே! எங்களுக்கு மேன்மேலும் க்ஷேமத்தை விளைப்பாயாக.

விஷ்ணுபரிசாரகர்கள் சொல்கிறார்கள்:—உன் பக்தர்களாகிய எங்களுக்குச் சரணங் கொடுப்பவனே! ஸமஸ்த லோகங்களுக்கும் ஸுகத்தை விளைப்பதும் அற்புதமுமாகிய இவ்வுருவத்தை நாங்கள் இப்பொழுதுதான் கண்டோம். இது வரையில் கண்டதில்லை. ஜகதீசனே! இவ்வஸுரன் உன்னுடைய கட்டளைப்படி நடக்கத்தகுந்த உன் ப்ருத்யன்தான். இவன் அந்தணர்களில் சிறந்த ஸனகாதிகளால் சபிக்கப்பட்டு இதுவரையில் உன் கைங்கர்யத்தை இழந்திருந்தான். அப்படிப்பட்ட இவ்வஸுரனை நீ வதித்தது அனுக்ரஹத்திற்காகவேயென்று நாங்கள் அறிகிறோம். என்று இங்ஙனம் ஸ்தோத்ரம் செய்தார்கள். எட்டாவது அத்யாயம் முற்றிற்று.

## ப்ராஹ்லாதன் ந்ருஸிம்ஹனை ஸ்தோத்ரம் செய்தல்.

ஸ்ரீநாரதர் சொல்லுகிறார்:—இங்ஙனம் ப்ரஹ்மதேவன் ருத்ரன் முதலிய ஸமஸ்த தேவதைகளும் மற்றவர்களும் தனித்தனியே ஸ்தோத்ரம் செய்யினும் அந்த ந்ரு

ஸிம்ஹபகவான் கோபவேகம் அடங்கப் பெருமல் ஒரு வர்க்கும் அணுக முடியாதவனுயிருந்தான், ஆகையால் அவர்களில் ஒருவனுவது அவனைக் கிட்டுவதற்கு வல்லனுக வில்லை. அவன் கோபம் தணியாதிருப்பதைக் கண்டு தேவதைகள் அவனுக்கு மிகவும அன்பிற்கிடமான ஸ்ரீமஹாலக்ஷ்மியை அனுப்பினூர்கள். அவளும் அற்புதமான அந்த ந்ருஸிம்ஹ உருவத்தைக் கண்டு 'இது வரையில் நாம் இவ்வுருவத்தைக் கண்டதில்லை; கேட்டதுமில்லை. இஃதென்ன உருவம்?' என்று சங்கித்து அருகில் செல்ல முடியாமலே யிருந்தாள். இப்படி யிருக்கையில், ப்ரஹ்ம தேவன் அருகிலிருக்கின்ற ப்ரஹ்லாதனைப் பார்த்து 'அப்பா! உன் தந்தையின் மேல் கோபித்துக் கொண்டிருக்கிற பகவானை அருள் புரியச் செய்வாயாக. நீ தான் அவனருகில் செல்லவேண்டும்' என்று சொல்லி அனுப்பினன்.மன்னவனே! யுதிஷ்டிரா!பகவத் பக்தர்களிற் சிறந்த குழந்தையாகிய ப்ரஹ்லாதன் அப்படியே செய்கிறேன் என்று ஒப்புக்கொண்டு அருகில் சென்று கைகளைக் குவித்துச் சரீரத்தைப் பூமியில் தண்டம்போலச் சாய்த்து நமஸ்கரித்தான். ந்ருஸிம்ஹபகவான் தன் பாதங்களின் அடியில் விழுந்திருக்கின்ற பாலனுகிய ப்ரஹ்லாதனைப் பார்த்துக் கருணை தலையெழப்பெற்று அவனை எழுந்திருக்கச் செய்து, காலமாகிற ஸர்ப்பத்தினின்றும் பயந்த மதியுடையவர்களுக்கு அபயங்கொடுப்பதும் தாமரை மலர்போன்றதுமாகிய தன்கையை அவன் தலைமேல் வைத்தான். அவனும் அந்த ஸ்ரீந்ருஸிம்ஹ பகவானுடைய கரம் பட்டமாத்திரத்தில் ஸமஸ்த பாபங்களும் தொலைந்து அந்த க்ஷணமே ஆத்ம பரமாத்மாக்களின் ஸ்வரூப ஸாக்ஷாத்காரம் உண்டாகப்பெற்று ஸந்தோஷம் அடைந்து உடம்பெல்லாம் மயிர்க்கூச்சம் நிறைந்து ப்ரீதி

யினால் நெஞ்சுருகிக் கண்ணீர் ததும்ப நின்று அந்தப் பகவானுடைய பாதாரவிந்தங்களை மனத்தில் த்யானித்தான். பின்பு ப்ரஹ்லாதன் ப்ரீதியினால் வாய் தழுதழுக்கப்பெற்று மனத்தையும் கண்களையும் பகவானிடத்திலேயே நிலைநிறுத்தி மனவூக்கத்துடன் அவனை ஸ்தோத்ரம் செய்யத் தொடங்கினான்.

ப்ரஹ்லாதன் சொல்கிறான்:—கேவலம் ஸத்வகுணம் தலையெடுத்த மதியுடையவர்களான ப்ரஹ்மாதி தேவகணங்களும் முனிவர்களும் ஸித்தர்களும் தங்கள் வாக்கு வெள்ளங்களால் பலகுணங்களைச் சொல்லி ஸ்தோத்ரம் செய்தும் எவனை இன்னும் ஆராதிக்க வல்லவராகவில்லையோ அப்படிப்பட்ட ஸர்வேஶ்வரன் கொடுந்தன்மையுடைய அஸுரஜாதியிற் பிறந்த என் ஸ்தோத்ரத்தினால் எங்ஙனம் ஸந்தோஷம் அடைவன்? பணம், நற்குலப் பிறப்பு தேஹஸௌந்தர்யம், தவம், [1] பாண்டித்யம், இந்த்ரியபலம், தேஹகாந்தி, ப்ரதாபம், தேஹபலம், பௌருஷம், புத்திபலம், யோகம் இவையெல்லாம் பரமபுருஷனுக்கு ஸந்தோஷத்தை விளைக்கும்படியான ஆராதனத்திற்கு உபயோகப்படமாட்டாவென்று எனக்குத் தோற்றுகிறது. ஏனென்றால் இவற்றில் எதுவுமில்லாத கஜேந்த்ரன் விஷயத்தில் பக்தியினால் மாத்ரமே ஸந்தோஷம் அடைந்தானல்லவா? ப்ராஹ்மணன் தர்மம், ஸத்யம், தமம், சாஸ்த்ரஜ்ஞானம் பிறருடைய மேன்மையைக்கண்டு பொறாமையாகிற மாத்ஸர்யமில்லாமை, வெட்கம், பொறுமை, அஸூயையில்லாமை, தானம், யஜ்ஞம், ஸந்தோஷம், சமம் என்கிற இப்பன்னிரண்டு குணங்கள் அமைந்தவனாயினும் பத்மநாபனுடைய பாதாரவிந்தங்களில் பக்தியற்றிருப்பானாயின், பயன்படமாட்டான். மனம் வாக்கு மற்ற

1. பண்டிதனாயிருத்தல்.

இஷ்டமான பொருள்கள் ப்ராணன் ஆத்மஸ்வரூபம் ஆகிய இவற்றை யெல்லாம் அந்தப் பத்மநாபனிடத்தில் அர்ப்பணம் செய்த சண்டாளனே அவனைக் காட்டிலும் மேன்மையுடையவனென்று நான் நினைக்கிறேன். அச்சண்டாளன் தன்குலத்தைப் புனிதம் செய்வான். பகவானிடத்தில் பக்தியில்லாமல் 'நாம் தவம்முதலிய குணங்கள் அமைந்திருக்கிறோம்' என்று பெரும் கர்வமுற்றிருக்கிற அவ்வந்தணன் தன்னையுங்கூடப் புனிதம் செய்யவல்லவனாக மாட்டான். ஈஸ்வரன் இயற்கையாகவே அவாப்த ஸமஸ்தகாமன். அவன் தன்னுடைய ஆராதனரூபமான கர்மத்தைத் தன்ப்ரயோஜனத்திற்காக உபதேசிக்கவில்லை. பின்னை எதுக்காகவென்றால், அவன் கருணையுடையவனாகையால் ஸம்ஸாரத்தில் உழல்கின்ற ஜந்துக்கள் தன் ஸ்வரூபாதிகளை அறிந்து உஜ்ஜீவிக்க விரும்புவார்களாயின், 'இவர்கள் நம்மை ஆராதித்து அதனால் பாபங்கள் தீர்ந்து நம் ஸ்வரூபாதிகளை அறிந்து உஜ்ஜீவிக்கட்டும்' என்னும் கருணையால் அதை உபதேசித்தானேயன்றி வேறில்லை. ப்ரீதியுடன் ஆராதிப்பவர்களை அங்கீகரிப்பதற்காகவே அவன் அவர்களுடைய ஆராதனத்தைப் பெற்றுக் கொள்கிறான். ப்ராணிகள் பகவானுக்கு எவ்வெந்த ஆராதனங்களைச் செய்கின்றார்களோ, அவையெல்லாம் அவர்களின் ப்ரயோஜனத்திற்காகவேயன்றி வேறில்லை. அவனைப்பூஜிக்கும் ப்ராணிகள் தாமும் பூஜிக்கத் தகுந்த மேன்மையைப் பெறுகின்றார்கள். முகத்தின் ப்ரதிபிம்பத்தில் அம்முகத்தின் காந்தி புலப்படுவது போலப் பகவானைப் பணிகிறவர்களுக்கு அவனுடைய மேன்மை உண்டாகின்றது. ஆகையால் அவனிடத்தில் பக்தியையுடைய நான் நீசனாயினும் சங்கையின்றி மூன்றுயிரணங்களும் ஒன்று சேரப்பெற்று ஸர்வேஸ்வரனை

அந்தப்பகவானுடைய மஹிமையை என் புத்திக்கு எட்டினவளவு ஸ்தோத்ரம் செய்கிறேன். ப்ராக்ருதியினால் ஸத்வாதி குணங்களின் கார்யமான சரீரத்தில் புகுந்திருக்கும் ஜீவன் அந்த ஸர்வேஶ்வரனை ஸ்தோத்ரம் செய்வதனால் பரிசுத்தனாவான். ஜகதீசனே! என்னைப்போல இதோ இருக்கின்ற ப்ரஹ்மாதி தேவதைகளும் சுத்த ஸத்வ ஸ்வரூபனான உனக்குக் கிங்கரர்கள். இவர்கள் உன் கோபத்திற்குப் பயந்து உன்னை அணுகமுடியாமல் ஒதுங்கியிருக்கிறார்கள். ஆகையால் அவர்களிடத்தில் அருள்புரிந்து உன்கோபத்தை அடக்கிக் கொள்வாயாக. ஷாட்குண்ய பூர்ணனாகிய நீ இந்த ஜகத்தின் யோக க்ஷேமங்களுக்காகவும் உன் ஸ்வரூபத்தை அனுபவிக்கையாலுண்டாகும் மோக்ஷமாகிற மஹாநந்தத்தை விளைப்பதற்காகவும் அழகிய ந்ருஸிம்ஹாதி அவதாரங்களால் விளையாடுகின்றனை. ஆகையால் கோபத்தை அடக்குவாயாக. இப்பொழுது என் தந்தையாகிய இவ்வஸுரன் உன்னால் வதிக்கப்பட்டான். உலகங்களெல்லாம் ஸந்தோஷத்தை அடைந்தன. ஸாதுக்களும், உலகங்களுக்கு உபத்ரவம் செய்கின்ற தேள்ஸர்ப்பம் முதலிய விஷஜந்துக்களைக் கொல்வதனால் ஸந்தோஷம் அடைவார்களல்லவா? அங்ஙனமே உலகங்களுக்கெல்லாம் உபத்ரவத்தை விளைத்துக்கொண்டிருந்த என் தந்தையைக் கொன்றதனால் ஸாதுக்களும் ஸந்தோஷம் அடைந்தார்கள். இனி ப்ரஹ்மாதிகள் அனைவரும் பயமற்றுத் தத்தம் இடங்களுக்குப் போய்ச் சேருவார்களாக. ந்ருஸிம்ஹ! இனி இந்த உன்னுருவத்தை ஜனங்கள் அபயத்தின் பொருட்டு த்யானிப்பார்களாக. ஒருவராலும் வெல்லமுடியாதவனே! உன் வாயும் நாக்கும் கண்களும் புருவநெரிப்பும் கோரைப் பற்களும் பயங்கரமாயிருக்கின்றன. குடல்களை மாலையா

கத்தரித்திருக்கின்றனை. உன் ஜடைகள் ரக்தத்தினால் நனைந்திருக்கின்றன. உன் காதுகள் ஆணிகள்போல உயர்ந்து தெரித்துக்கொண்டிருக்கின்றன. உன் கர்ஜனத்தைக் கேட்டுத் திக்கஜங்களும்பயப்படுகின்றன. நகங்களின் நுனிகளாலேயே சத்ருக்களையெல்லாம் பிளந்தனை. இத்தகைய தான உன்னுருவத்தைக் கண்டு ப்ரஹ்மாதிகள் பயந்தார்களேயன்றி நான் பயப்படவில்லை. தீனவத்ஸலா! அஹங்கார மமகாராதிகளால் ஸம்ஸாரத்தில் தள்ளுண்டு புண்ய பாப கர்மங்களால் கட்டுண்டிருக்கிற நான் பொறுக்க முடியாத ஸம்ஸார துக்கத்திற்குப் பயப்படுகிறேன். அழகிய சிங்கமே! அங்ஙனம் பயப்படுகின்ற என்னை மோக்ஷத்தைக் கொடுக்கவல்ல உன் பாதமூலத்தில் எப்பொழுது சேர்க்கப்போகின்றனையோ? நான் என்னுடைய கர்மத்தினால் ஜன்மங்கள் தோறும் இஷ்டமான விஷயங்கள் நேராமையாலும் அநிஷ்டமான விஷயங்கள் பல நேருகையாலும் கிளர்ந்தெழுகின்ற சோகமாகிற அக்னியால் தஹிக்கப்பெற்றுச் சுழன்று கொண்டிருக்கிறேன். அந்த ஸம்ஸாரதுக்கத்தை ஒழிப்பதற்காக ஏற்பட்ட உபாயங்களெல்லாம் துக்கரூபங்களாகவே யிருக்கின்றன. ஆகையால் அவை ஹிதமாகமாட்டா. பெருமையுடையவனே! ஆகையால் நான் என்றும் உனக்கே தாஸனாயிருக்கும்படி அருள் புரிவாயாக. நீ ஜகத்திற்கெல்லாம் ஹிதம் செய்பவன்; ப்ரீதிக்கிடமானவன், பரதேவதை. நீ லீலைக்காக்க ராமக்ருஷ்ணாதி அவதாரங்களில் செய்யும் செயல்களை ப்ரஹ்மாதிகள் பாடுகிறார்கள். உனக்கு உட்டப்பட்டிருக்கையே ஸ்வரூபமென்பதை அறிந்த நானும் அத்தகைய உன் கதைகளைச் சொல்லி ஸத்வாதிகுணங்கள் மூலமாக ஏற்பட்ட கர்மபந்தங்களினின்று விடுபட்டு உன் பாதாரவிந்தங்களைப் பற்றின உன்பக்தர்களாகிற ஹம்ஸங்களோடு ஸஹ

வாஸம் நேரப்பெற்று ஸம்ஸார துக்கங்களையெல்லாம்கடப் பேனுக. ஓ ந்ருஸிம்ஹ! பாலனுயினும், நீ உபேக்ஷிப்பாயாயின், அவனுக்குத் தாய் தந்தைகள் ரக்ஷகராகமாட்டார்கள். பாலனைத் தாய் தந்தைகள் மூலமாய் நீயே ரக்ஷிக்கின்றனை. ரோகத்திஞல் பீடிக்கப்பட்டவன் உன்னுல் உபேக்ஷிக்கப்பட்டிருப்பாஞயின், அவனுக்கு எப்படிப்பட்ட வீர்யமுடைய ஔஷதமும் பயன்படமாட்டாது. ஸமுத்ரத்தில் மூழ்குகிறவன் உன்னுல் உபேக்ஷிக்கப்பட்டிருப்பாஞயின் அவனுக்கு ஓடமும் பயன்படாது. ப்ரபூ! ஆகையால், துக்கித்தவர்களுடைய துக்கங்களைப்போக்குவதற்கு ஏற்பட்ட உபாயங்கள் எவ்வெவை உண்டோ அவையெல்லாம் அவர்களை நீ உபேக்ஷிப்பாயாயின், உபயோகப்படமாட்டா. தாய் தந்தைகள் பாலர்களின் துக்கத்தையுங்கூடப் போக்க வல்லராகமாட்டார்கள் விவேகமுடையவன் ஸம்ஸார துக்கத்தினின்று விடுபட வேண்டுமென்றுல், அவனுடைய ஸம்ஸார துக்கத்தை அவர்கள் எங்ஙனம்போக்க வல்லவராவார்கள். ஆகையால் இந்த ஸம்ஸார துக்கம் உன்னுடைய அனுக்ரஹத்திஞல் தான் நிவ்ருத்தியாகவேண்டுமேயன்றி வேறு கதியில்லை. ப்ரயோஜகன் ப்ரயோஜ்யன் என்று இருவகையான கர்த்ருகாரகம் கர்மகாரகம் கரணகாரகம் ஸம்ப்ரதானகாரகம் அபாதானகாரகம் அதிகரணகாரகம் ஆகிய காரகங்களென்று சொல்லப்பட்ட அறுவகைப் பொருள்களும் ஸம்பந்தி வஸ்துக்கள் ஹேது காலம் இவைகளும் வெவ்வேறுன அவற்றின் ஸ்வபாவங்களும் பிறத்தல் அழிதல் இவற்றிற்கிடமான வஸ்துக்களும் உன்சரீரங்கள் தான். ஆகையால் அவற்றின் செயல்களெல்லாம் உன் செயல்களே. நீயே எனக்கு நாரதர் மூலமாய்த் தத்வோபதேசம் செய்து உன்னைச் சரணம் அடையும்படி செய்தனை. உன்னைப் பணியாதவன் எவன் தான் சக்ரம்

போல் சுழல்கின்ற இந்த ஸம்ஸாரத்தைக் கடக்கவல்லனு வான்? இந்த ஸம்ஸாரமாகிற சக்ரத்திற்கு மனமே நாபி; பகவானுடைய மாயையால் ஏற்பட்ட ஜ்ஞானேந்த்ரியங் கள் கர்மேந்த்ரியங்கள் பஞ்சப்ராணன்கள் புத்தி ஆகிய பதினாறு தத்வங்களே பதினாறு இலைகள். இவை மனமா கிற நாபியில் அமைக்கப்பட்டிருக்கின்றன. பகவானுடைய மாயையென்னும் ப்ரக்ருதி காலத்தையும் அதனால் கலக்க முற்ற ஸத்வாதி குணங்களையும் உதவியாகக் கொண்டு புண்ய பாப கர்மங்களில் இயற்கையாகச்செல்லுந்தன்மை யுடையதும் தடுக்கமுடியாத வலிவுடையதுமான மனத் தைப் படைக்கின்றது. அந்த மனமே ஸத்வகுணம் தலை யெடுத்துச் சாஸ்த்ரஜ்ஞானத்திற்குக் காரணமாகின்றது. உன்னைப் பணியாதவன் அத்தகைய மனத்தின் தோஷத் தினால் ஸம்ஸாரத்தை மேன்மேலும் வளர்த்திக் கொள்வா னேயன்றி அதினின்றும் கரையேற வல்லனாகமாட்டான். ப்ரபூ! உன் மாயையால் பதினாறு இலைகளையுடைய ஸம் ஸாரமாகிற சக்ரத்தில் தள்ளுண்டு மிகவும் பீடிக்கப்பட் டிருக்கிற நான் உன்னைச் சரணம் அடைந்தேன். நீ என் னை இந்த ஸம்ஸார சக்ரத்தினின்று வெளிப்படுத்துவா யாக. கட்டினவனன்றோ அவிழ்க்க வல்லனாவான்? உனக் குச் சரீரமாகிய ப்ரக்ருதியின் குணங்களை நீ என்றும் வென்றவன். ஜீவாத்மாக்களுக்குப் பலவகைச் சரீரங்களை விளைக்கின்ற அந்த ப்ரக்ருதியை நீ உன் ஸ்வரூபத்தினால் வசப்படுத்திக் கொண்டிருக்கின்றனை. நீ காலத்தைச் சரீரமாகவுடையவன். நீ ப்ரக்ருதியின் பரிணாமமாகிய ஸம் ஸாரத்தினின்றும் ஜீவாத்மாக்களை விடுவிக்கவல்லவன். விபூ! இந்த ஸாம்ஸாரிக ஜனங்கள் எவற்றை ஆசைப்படு கின்றார்களோ அப்படிப்பட்ட இந்த்ரன் முதலிய ஸமஸ்த லோகபாலர்களின் ஆயுள் ஸம்பத்து ஐச்வர்யம் ஆகிய

இவை யெல்லாவற்றையும் நான் நிரூபித்துப் பார்த்தேன். அவை அற்பங்கள். அவற்றை விவேகமுடையவன் எவன் தான் ஆசைப்படுவான்? அவ்விந்த்ராதிகளின் ஐச்வர்யங் களெல்லாம் என் தந்தைகோபத்தினால் சிரித்துப் புருவத் தை நெரிக்கும்பொழுது அழிந்துபோனவைகள். அப்ப டிப்பட்ட என் தந்தையும் உன்னால் முடிக்கப்பட்டான். ஆகையால் ஸாம்ஸாரிக ஜனங்கள் விரும்புகிற ஆயுள்ஸம் பத்து ஐச்வர்யம் முதலிய விருப்பங்களையும் ப்ரஹ்மலோ கம் வரையிலுள்ள மற்ற இந்த்ரிய ஸுகங்களையும் மிகுந்த வலிவுடையகாலத்தினால் அழியத்தகுந்த அணிமாதி ஸித் திகளையும் நான் விரும்பவில்லை. ஆகையால் என்னை உன் ப்ருத்யர்களின் பார்ச்வத்தில் சேர்த்துக்கொள்வாயாக. செவியில் படும்பொழுது ஸுகமாயிருப்பவைகளும் அனு பவிக்கும் பொழுது கானலோடொத்தவைகளுமான ஆயுள்ஸம்பத்து முதலிய விருப்பங்கள் எங்கே? ஸமஸ்த ரோகங்களுக்கும் விளைநிலமான இந்தச் சரீரம் எங்கே? இச்சரீரத்தினால் ஸுகத்தை அனுபவிப்பது ஒருகாலும் முடியாது. 'விஷயஸுகம் கானல்போன்றது. இதில் ப்ர யோஜனம் இல்லை' என்பதை அறிந்தவனும் வருந்தியும் பெறமுடியாத விஷயஸுகங்களாகிற தேன்துளிகளால் காமமாகிற அக்னியை அணைக்கமுயன்று அவற்றைப்பெ றுகு உரிய ப்ரயத்னங்களைச் செய்கின்றானன்றி அவற்றில் மனவெறுப்புங்கூட உண்டாகப்பெறுவதில்லை. ஜகதீசா! ரஜஸ்ஸும் தமஸ்ஸும் தலையெடுக்கப்பெற்ற அஸுர குலத்தில் பிறந்த எனக்கு உன்கருணை நேருவதற்கு ஒரு காலும் இடமில்லை. தாமரையிதழ்போல் தாபங்களைப் போக்கவல்ல உன் கரத்தை ப்ரஹ்மாவின் தலையிலாவது ருத்ரன் தலையிலாவது ஸ்ரீ மஹாலக்ஷ்மியின் தலையிலா வது நீ வைக்கவில்லை. அதை என் தலையில் வைத்தாய்.

இதுநீஎன்னிடத்தில்கருணைகூர்ந்தாயென்பதற்குஅடை யாளமல்லவா? எவ்விதத்திலும் நேரக்கூடாத இது எனக்கு நேர்ந்தபடியினால் நான் தன்யனானேன். 'இவன் மேன்மையுடையவன். இவன் தாழ்மையுடையவன்' என் னும் புத்தி ப்ராக்ருத ஜனங்களுக்கு உண்டேயல்லாமல் உனக்குக் கிடையாது. நீ ஜகத்திற்கெல்லாம் அந்தராத்மா வாய் நண்பனுமாயிருப்பவன். ஆயினும் நீ உன்னைப் பணி கின்றவர்களின் மனோபாவத்தை அனுஸரித்துஅவர்களை அனுக்ரஹிக்கின்றனை. அவரவர்கள் செய்யும் பணிவி டைக்குத் தகுந்தபடி தர்மாதி புருஷார்த்தங்களும் உண் டாகின்றன. கல்பவ்ருக்ஷம் தன்னை அடுத்து விரும்புகிற வர்களுக்கு விருப்பங்களை நிறைவேற்றிக்கொடுக்கின்றது. பணியாதவர்களுக்குக் கொடுக்கிறதில்லை. பணிகிறவர் களிலும் அவரவர் செய்யும் பணிவிடையின் தாரதம்யங் களுக்குத் தகுந்தபடி பலத்திலும் தாரதம்யம் உண்டா கின்றது. அவ்வளவால் அதற்குப் பக்ஷபாதம் உண்டெ ன்று சொல்லமுடியாதல்லவா? அங்ஙனமே நீ உன்னைப் பணிகின்றவர்களின் பாவனைக்குத்தகுந்தபடி அருள்செய் கிறாயாகையால் உனக்குப் பக்ஷபாதம் கிடையாது. மேன் மை தாழ்மையென்கிற புத்தியும் கிடையாது. பகவானே! ஸம்ஸாரமாகிற ஸர்ப்பங்கள் நிறைந்த பாழ்ங்கிணற்றில் விழுந்து சப்தாதி விஷயங்களை விரும்புவோர்களின் ஸஹ வாஸத்தினால் அக்கிணற்றில் விழுகின்ற என்னை நீ தேவர் ஷியாகியநாரதர் மூலமாய்த் தத்வோபதேசம்செய்து உன் வசமாக்கி அங்கீகரித்தனை. அப்படிப்பட்ட நான் இப்பொ ழுது உன் தாஸர்களுக்குத் தாஸனாயிருக்கையாகிற பெரு மையை எங்ஙனம் துறப்பேன்? அனந்தனே! என் ப்રா ணன்களைப் பாதுகாத்ததும் என் தந்தையை வதித்ததும் உன் பக்தர்களாகிய ரிஷிகளின் வார்த்தையை ஸத்யம்

செய்வதற்காகவும், என் தந்தை என்னைவதிக்கவிரும்பிக் கத்தியைஏந்திக்கொண்டு 'என்னைக்காட்டிலும்வேறொரு ஈஶ்வரன் இருப்பானாயின், அவன் இப்பொழுது உன்னைக் காப்பானாக. நான் உன் தலையை அறுக்கப்போகிறேன்' என்ற வார்த்தையைப் பொய்செய்வதற்காகவுமேயென்று நான் நினைக்கிறேன். நாரதர் மூலமாய் எனக்குத் தத்வோபதேசம் செய்ததுமாத்ரம் என்னை அனுக்ரஹிப்பதற்காகவே. இதோ புலப்படுகிற சேதனா சேதனரூபமான ப்ரபஞ்சமெல்லாம் நீ யொருவனே. இந்த ஜகத்தினுடைய ஸ்ருஷ்டிக்கு முன்பும் ப்ரளயத்திலும் நீயொருவனே மிகுந்திருக்கின்றனை. ஆகையால் இந்த ஜகத்தின் மத்யாவஸ்தையிலும் நீயொருவனே உள்ளவன். நீ ஸத்வாதி குணங்களின் பரிணமமான இந்த ஜகத்தை உன் ஸங்கல்பஜ்ஞானத்தினால் படைத்து அதற்குள் அந்தராத்மாவாய் ப்ரவேசித்துச்சேதனாசேதனரூபியான அந்தத்தேவமனுஷ்யாதி சரீரங்களால் வேறுவேறு போலத் தோற்றுகின்றனை. உண்மையில் இந்த ப்ரபஞ்சமெல்லாம் நீயே யன்றிவேறில்லை. ஜகதீசனே! ஜகத்திற்கெல்லாம் காரணனும் ஜகத்ஸ்வரூபனுமாகிய ஈஶ்வரன் நீயே. ஜீவாத்மாக்களில் ஒருவனை ஈஶ்வரனாக நினைப்பது பொய். அது அஜ்ஞானத்தின் கார்யம் தேஹத்தை ஆத்மாவாக நினைப்பதுபோல இதுவும் ப்ராந்திதான். நீ ஜீவாத்மாக்களைக்காட்டிலும் வேறுபட்டவன். கர்மவஶ்யனான ஜீவனுக்கு இத்தகைய ஜகத்தைப்படைக்குந்திறமை எவ்விதத்திலும் நேரமாட்டாது. ஆகையால் நீயே ஜகத்காரணன். ஜகத்தும் நீயே. எந்தவஸ்துவின் உத்பத்தி ஸ்திதி நாசம் ப்ரகாசம் இவற்றிற்கு எந்தவஸ்து காரணமாயிருக்கின்றதோ, அந்த வஸ்து அதைக்காட்டிலும் வேறுபட்டதன்று. பூமியினின்று வ்ருக்ஷம் உண்டாகின்றது; அது

பூமியிலேயே இருக்கின்றது; அதிலேயே வளர்ந்து ப்ரகாசிக்கின்றது; பின்பு அதிலேயே அழிந்துபோகின்றது; ஆகையால் வ்ருக்ஷம்பூமியைக் காட்டிலும் வேறுபட்டதன்று. விடியற்காலம் முதலிய சிறிய காலங்கள்மஹாகாலத்தைக்காட்டிலும் வேறுபட்டவையல்லாதது போல இந்த ப்ரபஞ்சத்திற்கும் உத்பத்தி முதலியவை உன்னிடத்தினின்றே உண்டாகின்றன வாகையால் இந்த ப்ரபஞ்சம் உன்னைக் காட்டிலும் வேறு பட்டதன்று. இதோ புலப்படுகின்ற சேதநு சேதன ரூபமான ஜகத்தையெல்லாம் தன்னிடத்தில் மறையச்செய்து நிருபாதிக மஹாநந்தரூபனான தன்னைத் தானே அனுபவித்துக்கொண்டு வேறொரு விருப்பமு மின்றிச் செயலற்று அவ்வாநந்தத்தினால் கண்களை மூடிக்கொண்டு உறக்கமின்றி ஜாகரம் ஸ்வப்னம் முதலிய மூன்று அவஸ்தைகளையும் கடந்திருக்கின்ற தன்னையே ஆதாரமாகக் கொண்டு ஸூக்ஷ்ம தசையை அடைந்த ப்ரக்ருதியின் ஸம்பந்தமும் அதன் குணங்களான ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களின் ஸம்பந்தமுமின்றி ப்ரளய ஜலத்தில் சயனித்துக்கொள்கின்றனை. அத்தகைய நீ உனது அம்சமாகிய காலசக்தியினால் உன்னிடத்தில் மறைந்திருக்கிற ப்ரக்ருதியின் குணங்களைக் கலக்கி அந்த ப்ரளய ஜலத்தின்மேல் பரந்திருக்கிற ஆதிசேஷனாகிற படுக்கையினின்றும் எழுந்து யோகநித்ரையைத் துறந்து ஸ்ருஷ்டிக்க முயன்றிருக்கையில், தன் விதையினின்று ஆலஞ்செடி உண்டாவது போல, உன்னுடைய நாபியினின்று உன் சரீரமும் உன்னிடத்தில் மறைந்து ஸூக்ஷ்ம தசையை அடைந்திருப்பதுமாகிய ஜகத்ரூபமான பெரிய தாமரைமலர் உண்டாயிற்று. அந்தத் தாமரைமலரினின்றும் ப்ரஹ்மதேவன் உண்டாயினன். அவன் தனக்கு உத்பத்தி ஸ்தானமாகிய அந்தத்

தாமரை மலரைத் தவிர மற்றொன்றையும் காணாமல், தனக்கு அந்தராத்மாவாகித் தன்னிடத்தில் நிறைந்திருப்பவனும் தனக்கு ஆதாரமான தாமரை மலருக்குக் காரணனுமாகிய உன்னைத் தனக்கு வெளியில் ஜலத்திற்குள் சென்று வெகுதூரம் தேடியும் கண்டு பிடிக்கவில்லை. ஒரு விதையைப் பூமியில் நட்டோமானால் அதினின்றும் முளை கிளம்பின பின்பு அவ்விதையை எவ்வளவு தூரம் தேடினும் காணமுடியாதல்லவா? அங்ஙனமே,என் கார்யமான ஜகத்தாகிற தாமரை என்னைக்காட்டிலும் வேறுபட்டதன்று' என்பதை அறிவிக்கும் பொருட்டு ப்ரஹ்மதேவன் உன்னைப் பலவாறு தேடினும் நீ அவனுக்குப்புலப்படவில்லை; அங்ஙனம்தேடினப்ரஹ்மதேவன் 'இவ்வளவு தூரம் தேடியும் இந்தத் தாமரை மலர்க்குக் காரணம் எதுவோ அவ்வஸ்து எனக்குப் புலப்படவில்லையே. இஃதென்ன ஆச்சர்யம்' என்று மிகவும் வியப்புற்று ஜலத்தினின்று திரும்பி மேலேறி வந்து அந்தத் தாமரை மலரைச் சேர்ந்து தீவ்ரமான தவம் செய்து அதனால் தூயமனத்தனாகிப் பூமியில் மணம்போலத் தன்னைக் காட்டிலும் பிரித்தறிய முடியாமல் தன்னிடத்தில் நிறைந்திருப்பவனும் மிகவும் ஸூக்ஷ்மமான ஆகாசம் முதலியபஞ்ச பூதங்களும் இந்த்ரியங்களும் மனமும்ஆகிய இவை அமையப் பெற்றவனுமாகிய உன்னைக் கண்டான். அப்பால் அந்த ப்ரஹ்மதேவன் பலமுகங்களும் பல கால்களும் பலதலைகளும் பலகைகளும் பல துடைகளும் பல மூக்குகளும் பல வாய்களும் பல காதுகளும் பல கண்களும் பல ஆபரணங்களும் பல ஆயுதங்களும் அமைந்து ஆச்சர்யமான உருவமுடையவனும் அந்த அவயவங்களின் ஸந்நிவேசம் என்றும் மாறாமல் நித்ய மாயிருக்கப் பெற்றவனும் மஹாபுருஷனுமாகிய உன்னைக் கண்டு ஸந்தோஷம்

அடைந்தான். அப்பொழுது நீ வேதங்களைப் பறித்துக் கொண்டுபோன ரஜஸ் தம ஸ்வரூபர்களும்மஹாபலிஷ்டர்களுமான மது கைடபர்களென்னும் அஸுரர்களை ஹயக்ரீவரூபியாய் அவதரித்துக் கொன்று வேதங்களைக் கொண்டு வந்து அந்த ப்ரஹ்மதேவனுக்குக் கொடுத்தாய். பெரியோர்கள் அந்த ஹயக்ரீவாவதாரத்தை உனக்கு மிகவும் ப்ரியமானதென்றும் சுத்தஸத்வமயமென்றும் சொல்கிறார்கள். இங்ஙனம் உரிய காலங்களில் மனுஷ்யர் திர்யக்கு ரிஷிகள் மத்ஸ்யம் முதலிய ஜாதிகளில் கேவலம் தன்னுடைய ஸங்கல்பத்தினால் சுத்தஸத்வமயமான திருவுருவங்களைக் கொண்டு அவதரித்து நீ உலகங்களைப் பாதுகாக்கின்றனை. அவ்வுலகங்களுக்கு விரோதிகளான ராவணாதிகளை வதிக்கின்றனை. மஹாபுருஷனே! க்ருத யுகம் முதலிய யுகங்களில் தொடர்ந்து வருகின்ற வர்ணாச்ரம மர்யாதை முதலிய தர்மங்களை அவற்றின் விரோதிகளை அழித்துப் பாதுகாக்கின்றனை. க்ருதம்முதலிய மூன்று யுகங்களில் மாத்ரம் அவதரித்துக் கண்ணுக்குப் புலப்படுகின்றனை. கலியுகத்தில் கண்ணுக்குப் படாமல் மறைந்தே யிருக்கின்றனை. ஆகையால் உன்னை த்ரியுகனென்று சொல்லுகிறார்கள். வைகுண்டநாதா! பாபங்களால் தோஷங்களுக்கிடமாகி நன்முயற்சியற்று விஷயங்களில் திரிந்து இஷ்டமானவிஷயங்கள் நேர்ந்தால் ஸந்தோஷிப்பதும் அநிஷ்ட விஷயங்கள் நேர்ந்தால் வருந்துவதும் பயத்தினாலும் பிள்ளை பெண்டிர் பணம் முதலிய வற்றில் ஆசையாலும் ஆயாஸமுற்றிருப்பதுமாகிய என் மனம் உன் கதைகளைக் கேட்டுப் பொழுது போக்கும்படியான நிலைமையை அடையவில்லை. மனம் இங்ஙனம் ப்ரதிகூலமாயிருக்கையால் சப்தாதி விஷயங்களில் ஊக்கமுற்று வருந்துகிற நான் உனது உண்மையை எங்ஙனம்

ஆராய்ந்தறிவேன்? அச்சுதனே! நாக்கு மதுரம் முதலிய ரஸங்களை எவ்வளவு அநுபவிக்கினும் த்ருப்தியடையாமல் என்னை ஒரு மூலையில் இழுக்கின்றது. அங்ஙனமே உபஸ்தேந்த்ரியமும் த்ருப்தி அடையாமல் மற்றொரு மூலையில் இழுக்கின்றது. த்வகிந்த்ரியம் ஒரு மூலைக்கும், வயிறு ஒரு மூலைக்கும், காது ஒரு மூலைக்கும், மூக்கு ஒரு மூலைக்கும், சபலமுடைய கண்கள் ஒரு மூலைக்கும், கைகால்கள் ஒரு மூலைக்கும் இழுக்கின்றன. இல்லற வாழ்க்கையிலிருக்கின்ற ஒருவனைப் பலமடந்தையர்கள் வருத்துவதுபோல, இந்த்ரியங்கள் என்னை வருத்துகின்றன. ஸம்ஸாரத்திற்கு வெளியிலுள்ள பரமபதத்தில் ஸஞ்சரிப்பவனே! நான் மாத்ரமே இங்ஙனம் ஸம்ஸாரத்தில் வருந்துகிறேனென்பதில்லை. என்னைச் சேர்ந்த மற்றவர்களும் தமது புண்ய பாப கர்மங்களால் ஸம்ஸாரமாகிற வைதரணியில் விழுந்து ஒருவர்க்கொருவர் ஜன்ம மரணங்களைப் பற்றியும் தம்முடைய ஸொத்துக்களைப் பிறர் பறித்துப் புசிப்பதைப் பற்றியும் மிகவும் பயந்து தம்முடைய தேஹங்களில் ப்ரீதியும் சத்ருக்களின் தேஹங்களில் த்வேஷமும் கொண்டு இன்னமும் மதி உண்டாகப் பெறாமல் வருந்துகிறார்கள். அவர்களைப் பார்த்துக்கொண்டு நீ வெறுமனேயிருப்பது யுக்தமன்று. அவர்களை இந்த ஸம்ஸாரத்தினின்று கரையேற்றிப் பாதுகாப்பாயாக. ஸமஸ்த லோகங்களுக்கும் ஹிதம் உபதேசிக்குங் குருவே! ஜ்ஞானம் சக்தி முதலிய ஷாட்குண்யம் நிறைந்தவனே! என்னையும் என்னைச் சேர்ந்தவர்களையும் ஸம்ஸாரத்தினின்று கரையேற்றுகையாகிற இவ்விஷயத்தில் உனக்கு என்ன ப்ரயாஸம்? ஒரு ப்ரயாஸமும் இல்லை. நீ சேதநாசேதனரூபமான இந்த ப்ரபஞ்சத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை அவலீலையாக நடத்துகின்றனை. ஆகை

யால் உனக்கு இது ஒரு வருத்தமன்று. பெரியோர்கள் ஒன்றும் தெரியாத மூடர்களிடத்தில் அனுக்ரஹம் செய்வார்களல்லவா? வருந்தினவர்களுக்குப் பந்துவே! நாங்கள் உன்னைப் பணியாதிருப்பினும் நீ எங்களை அனுக்ரஹிக்க வேண்டும். இல்லாத பக்ஷத்தில் ஆர்த்த பந்துவென்கிற உன் பெயர் நிறைவேறாது. மற்றும் நாங்கள் உன் பக்தர்களைப் பணிந்து வருகிறோம். ஆகையால் நீ எங்களுக்கு அருள்புரியவேண்டும். பரமனே! எவர்க்கும் தாண்டமுடியாததாகிய ஸம்ஸாரமாகிற வைதரணிக்கு நான் பயப்படவில்லை. உன் வீர்யங்களை வெளியிடுகிற உனது நாமங்களைப் பாடுகையாகிற அம்ருத வெள்ளத்தில் ஆழ்ந்த மனமுடைய நான் என்னைப்பற்றியும் வருந்தவில்லை. அத்தகைய உன் வீர்யங்களைப் பாடுகையில் மனம் செல்லப் பெறுமல் சப்தாதி விஷயங்களால் விளையும் அற்பஸுகத்திற்காகக் குடும்பமாகிற பெரியபாரத்தை ஏற்றுக்கொண்டு ஒன்றுமறியாத பெருமூடர்களாயிருக்கிற என்னுடையவர்களைப் பற்றியே நான் வருந்துகிறேன். தேவனே! முனிவர்கள் பெரும்பாலும் தமக்கு மோக்ஷத்தையே விரும்பி ஜனஸஞ்சாரமற்ற அரண்யம் முதலிய இடங்களில் உன்னுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தை த்யானம் செய்கிறார்கள். பிறர் ப்ரயோஜனத்தில் கண்வைக்கிறதில்லை. ஆகையால் என்னுடையவர்கள் அத்தகைய முனிவர்களின் அனுக்ரஹத்தினால் என்னைப்போல உன் குணங்களைப்பாடி ஸம்ஸாரதுக்கங்களைக் கடக்கும் நிலைமையைப் பெறமுடியாது. அவர்களை விட்டு நானொருவன் மாத்ரம் இந்த ஸம்ஸாரத்தினின்றும் மோக்ஷத்தைப் பெறுவது எனக்கு ஸம்மதமன்று. ஆகையால் அவர்களையும் நீயே உன்கருணையால் ஸம்ஸாரத்தினின்றும் விடுவிக்கவேண்டும். இந்த ஸம்ஸாரத்தில்

உழல்கின்ற ஜந்துவுக்கு உன்னையொழிய வேறொரு ரக்ஷகன் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. இல்லறவாழ்க்கையிலிருப்பவர்கள் அனுபவிக்கிற ஸ்த்ரீஸம்போகம்முதலிய ஸுகம் கைகளில் தினவெடுத்து ஒன்றோடொன்றை உறைத்துத் தேய்த்துக்கொள்வதனாலுண்டாகும் துக்கம் போலத்தற்காலத்தில் துக்கமாயிருப்பது மாத்ரமேயன்றி மேன்மேலும் துக்கத்திற்கிடமாயிருக்கும். அதை ஸுகமாக ப்ரமித்தாலும் அது அற்பமே. சப்தாதி விஷயங்களை அனுபவிக்கவேண்டு மென்னும் பேராசையுடையவர்கள் பலவருத்தங்களை அனுபவித்துக்கொண்டிருந்த போதிலும் இந்த இல்லற வாழ்க்கையினால் விளையும் ஸுகத்தில் த்ருப்தி உண்டாகப்பெறுகிறதில்லை. உலகத்தில் சிலர் புண்பட்டகையில் தினவெடுத்தாலும் சொரிந்தால் கெடுதியென்று அந்தத் தினவைப் பொறுத்துக்கொண்டிருப்பார்கள். அங்ஙனமே இந்த்ரியங்களை வென்றவர்கள் சப்தாதி விஷயங்களின் கொடுமையை அறிந்து காமத்தைப் பெறாத்திருப்பார்களேயன்றி மற்றவர்கள் பொறுக்கமாட்டார்கள். ஓ பரமபுருஷா! பேசாது மௌனமாயிருத்தல், உபவாஸம்முதலிய வ்ரதங்களை அனுஷ்டித்தல், வேதசாஸ்த்ரங்களைக ஓதுதல், தவம்புரிதல், வேதார்த்தங்களை ஆராய்ந்து பண்டிதனாயிருத்தல், தமது வர்ணாஶ்ரம தர்மங்களை அனுஷ்டித்தல், பிறர்க்கு வேதசாஸ்த்ரங்களை ஓதுவித்தல், ஜனஸஞ்சாரமில்லாத ஏகாந்தமான இடத்தில் வாஸம் செய்தல், மந்த்ரங்களை ஜபித்தல், த்யானித்தல் ஆகிய இவையெல்லாம் மோக்ஷத்திற்கு உபாயங்களென்பது உண்மை. ஆயினும் அவை இந்த்ரியங்களை வென்றவனுக்கேயன்றி மற்றவனுக்குப் பயன்படமாட்டா. உன்னுடைய அனுக்ரஹமில்லாமல் இந்த்ரியங்களை வெல்ல முடியாது. இந்த்ரியங்களை வெல்லாதவர்களுக்கு அவை

கேவலம் ஜீவனோபாயங்களேயாம். டம்பத்தில் ஆசை யுள்ளவர்களுக்கு அவை ஜீவனோபாயங்களும் ஆகமாட்டாவென்றால், மோக்ஷத்தை விளைக்கமாட்டாவென்பதைச் சொல்லவேண்டுமோ? சேதனாசேதனங்களென்கிற இரண்டு வஸ்துக்களும் விதையும் முளையும் போன்றவை. அவையிரண்டும் உன் சரீரங்களென்றும், நீ கர்மத்தினால் விளையும் சரீர மற்றவனென்றும் வேதங்கள் அறிவிக்கின்றன. சேதனா சேதனங்கள் ஒருகால் காரணாவஸ்தையில் விதைபோலும் ஒருகால் கார்யாவஸ்தையில் முளைபோலும் இருக்கும். இருவகையான அச்சேதனா சேதனங்களும் உன் சரீரங்கள் தான். அங்ஙனம் அவற்றைச் சரீரமாகக் கொண்டிருப்பது. கர்மத்தினாலன்று. அதுவே உனக்கு இயற்கை. ஆகையால் சேதனாசேதன ரூபமான ப்ரபஞ்சமெல்லாம் நீயே. உன்னைக்காட்டிலும் வேறுபட்ட வஸ்து எதுவுமேயில்லை. உன்னை உபாஸிக்கிற முனிவர்கள் கட்டைகளில் அக்னியைக் கடைந்து காண்பதுபோலச் சேதனாசேதனரூபமான அவ்விருவகைச் சரீரங்களிலும் உன்னைக் காண்கிறார்கள். அங்ஙனம் காண்கைக்கு உன்னுடைய உபாஸனத்தை யொழிய மற்றொரு உபாயமுமில்லை. காற்று அக்னி பூமி ஆகாசம் ஜலம் தன்மாத்ரைகள் இந்த்ரியங்கள் ஜ்ஞானம் உண்டாவதற்குக்காரணமான மனம் புத்தி இவையெல்லாம் நீயே. பலபடச் சொல்லியென்ன? மஹானுபாவனே! ஸத்வாதி குணங்களுக்கிடமாகி ப்ரக்ருதியின் பரிணாமங்களான ஸகலபதார்த்தங்களும், ஸத்வாதி குணங்களுக்கிடமாகாமல் ப்ரக்ருதியின் பரிணாமமல்லாத ஜீவவர்க்கங்களும் ஆகிய மனத்திற்கும் வாக்குக்கும் விஷயமானவை யெல்லாம் நீயே; ஸத்வாதி குணங்களும் அக்குணங்களுக்கிடமாகி ப்ரக்ருதியின் பரிணாமங்களுமான மஹத்து அஹங்காரம் தன்மாத்ரங்கள் ஆகாயம்

முதலிய பஞ்சபூதங்ககள் இவைளும் தேவதைகளும் மனு ஷ்யர்களும் மனம் முதலிய ஸமஸ்த இந்த்ரியங்களும் ஸர் வாந்தராத்மாவான உன்னை அறியமாட்டார்கள். அவர் கள் அனைவரும் கர்மத்தினால் பிறப்பதும் சாவதுமாயிருப் பவர்கள். ஆகையால் அவர்களுடைய ஜ்ஞானம் கர்மத்தி னால் குறுகியிருக்கின்றது. ஆதலால் அவர்கள் அறியவல்ல ரல்லர். பெரும்புகழனே! ஸர்வர்க்கும் அந்தராத்மாவா கிய உன் ஸ்வரூபத்தை மனனம் செய்யுந் தன்மையுடைய முனிவர்கள் பக்தியோகத்தினால் கர்மத்தை ஒழித்து உன்னை ஆராய்ந்தறிந்து சப்தாதி விஷயங்களினின்று மீளுகிறார்கள். தன்னைப் பற்றினாருடைய ஸம்ஸாரபந் தத்தைப் போக்குந் தன்மையனே! உன்னை நமஸ்கரிப்பது, உன்னைத் துதிப்பது, அர்க்யம் பாத்யம் ஆசமனம் முத லியன கொடுத்து உன்னைப் பூஜிப்பது, உன் பாதங்களை த்யானிப்பது, உன் கதைகளைக் கேட்பது ஆகிய இவ்வாறு அங்கங்களோடு கூடிய உன் ஸேவையைத் தவிர மற்ற எதனாலும் ஜனங்கள் உன்னிடத்தில் பக்தி உண்டாகப் பெறமாட்டார்கள். பரமஹம்ஸர்கள் இங்ஙனமே உன் ஸேவையால் உன்னிடத்தில் பக்தி உண்டாகப்பெற்று அந் தப் பக்தியால் உன்னைப் பெறுகிறார்கள்.

ஸ்ரீநாரதர் சொல்லுகிறார்:—கெட்டகுணங்கள் எவை யும் தீண்டப்பெறாத அந்த ஸ்ரீந்ருஸிம்ஹபகவான் தன் பக்தனாகிய ப்ரஹ்லாதனால் பக்தியின் மிகுதியால் தன் குணங்கள் வர்ணிக்கப் பெற்றுக் கோபத்தை அடக்கிக் கொண்டு ஸந்தோஷம் அடைந்து வணங்கியிருக்கிற அந்த ப்ரஹ்லாதனை நோக்கி இங்ஙனம் மொழிந்தான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—குழந்தாய்! ப்ரஹ்லா தனே! உனக்கு நன்மை உண்டாகுக. அஸுரஸ்ரேஷ் டனே! நான் உன் விஷயத்தில் ஸந்தோஷம் அடைந்

தேன். உனக்கு இஷ்டமான வரத்தை வேண்டுவாயாக. நான் ப்ராணிகளின் விருப்பங்களை நிறைவேற்றிக் கொடுக்கும் தன்மையுடையவன். நீண்ட வாழ்நாளையுடையவனே! என்னை ஸந்தோஷப்படுத்தாத புருஷனுக்கு என் காட்சி கிடைப்பது அரிது. எந்த ப்ராணியும் என்னைக் கண்டபின்பு நம்விருப்பம் நிறைவேற வில்லையேயென்று தன்னைப் பற்றிச் சோகிக்க உரியவனல்லன். ஆகையால் மிகுந்த விவேகமுடைய ஸாதுக்கள் நன்மையை விரும்பி இந்த்ரியங்களை வென்று மனோ வாக் காயங்களென்கிற மூன்று கரணங்களும் ஒத்திருக்கப் பெற்று ஸமஸ்த புருஷார்த்தங்களையுங் கொடுக்குந் திறமையுடைய என்னை ஸந்தோஷப் படுத்துகிறார்கள்.

ஸ்ரீநாரதர் சொல்லுகிறார்:—பகவான் சப்தாதிவிஷயங்களில் விருப்பமுடைய உலகங்களையெல்லாம் மதிமயக்கும்படியான பலவரங்களைக் காட்டி வஞ்சிக்கப் பார்க்கினும், அஸுரஸ்ரேஷ்டனான ப்ரஹ்லாதன் ப்ரயோஜனங்களை விரும்பாமல் பகவானிடத்தில் மிகுந்த பக்தியுடையவனாகையால் அவ்வரங்களைச் சிறிதும் விரும்பவில்லை. ஒன்பதாவது அத்யாயம் முற்றிற்று.

பகவான் ப்ரஹ்லாதனை அனுக்ரஹித்து அந்தர்த்தானம் அடைதலும், ருத்ரன் த்ரிபுரஸம்ஹாரம் செய்த வ்ருத்தாந்தமும்.

ஸ்ரீநாரதர் சொல்லுகிறார்:—சிறுவனாகிய ப்ரஹ்லாதன், பகவான் கொடுக்கிறேனென்ற அந்த வரங்களெல்லாம் பக்தியோகத்திற்கு விக்னமென்று நினைத்து 'எனக்கு அந்தராத்மாவாயிருந்து என் அபிப்ராயத்தை அறிந்தும் என்னை இங்ஙனம் வஞ்சிக்கிறானே' என்று சிரித்

துக்கொண்டு அந்தப் பகவானைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தான்.

ப்ரஹ்லாதன் சொல்லுகிறான் :—நாதனே! நான் இயற்கையாகவே பிறந்தநாள் முதல் காமங்களில் விருப்ப முற்றிருக்கிறேன். அப்படிப்பட்ட என்னை அவ்வரங்களைக் கொடுக்கிறேனென்று மேன்மேலும் அவற்றில் ஆசை மூட்டி வஞ்சிக்கவேண்டாம். நான், அவற்றில் மனப்பற்று செய்தால் அநர்த்தம் வருமென்று பயந்து அவற்றில் வெறுப்புற்று ஸம்ஸார பந்தத்தினின்று விடுபடவிரும்பி உன்னைச் சரணம் அடைந்தேன். வேறு ப்ரயோஜனங்களை விரும்பாமையாகிற பக்தலக்ஷணம் என்னிடத்தில் இருக்கிறதா என்பதை என்வாயால் பரீக்ஷிக்கவிரும்பி ஸம்ஸாரமாகிற வ்ருக்ஷத்திற்கு விதைபோன்றவைகளும் ஹ்ருதயத்தின் முடிச்சுபோல அறுக்கமுடியாமல் தொடர்ந்திருப்பவைகளுமான காமங்களில் என்னைத் தூண்டுகின்றனை. இப்படியில்லையாயின், காருண்ய மூர்த்தியும் ஸமஸ்த லோகங்களுக்கும் ஹிதம் உபதேசிப்பவனுமாகிய நீ என்னை அநர்த்தங்களுக்கிடமான காமங்களில் தூண்டுவது நன்றாயிராது. ஸம்ஸாரமாகிற இருள்மூடின பெரிய நரகத்தில் கண்கெட்டு ஆத்ம பரமாத்மாக்களின் உண்மையை அறியாமல் உழல்கின்ற ஜீவாத்மாவுக்கு நீயொருவனே அந்நரகத்தினின்று கரையேறும் உபாயத்தை அறிவிப்பவன். ஆகையால் நீ அந்நரகத்தில் மேன்மேலும் அழுத்தவல்ல காமங்களில் என்னைத் தூண்டுவது எங்ஙனம் பொருந்தும்? பரம புருஷார்த்த ஸ்வரூபனான உன்னைப் பணிந்து உன்னிடத்தினின்று எவன் காமங்களை விரும்புகிறானோ, அவன் ப்ருத்யனேயல்லன்; வர்த்தகனே. வர்த்தகர்கள் தங்கள் ப்ரயோஜனம் நிறைவேறும் வரையில் பிறரை அநுஸரித்திருப்பார்கள்; அதன் பிறகு

அனுஸரிக்கமாட்டார்கள். அங்ஙனமே ப்ரயோஜனத்தை விரும்பி அது நிறைவேறும் வரையில் உன்னைப் பணிகிற வன் வர்த்தகனேயன்றி ப்ருத்யனுகமாட்டான். ஸ்வாமி யினிடத்தில் ப்ரயோஜனத்திற்காக அனுஸரிக்கிறவன் ப்ருத்யனுகமாட்டாததுபோல, ப்ருத்யனிடத்தினின்று தன் ப்ரயோஜனத்தை விரும்பி அவன் விருப்பங்களைக் கொடுக்கிறவனும் ஸ்வாமியாகமாட்டான். எவர்கள் வேறு ப்ரயோஜனங்களை எதிர்பாராமல் ஒருவர்க்கொரு வர் குணங்களைக் கண்டு ப்ரீதி செய்கின்றூர்களோ, அவர் களே ஸ்வாமியும் ப்ருத்யனுமாவார்கள். மற்றவர்கள் எப்படியேனும் இருக்கட்டும். நானேவென்றால் வேறு ப்ர யோஜனங்களை விரும்பாத உன் பக்தனுயிருக்கின்றேன். நீயும் ஒரு ப்ரயோஜனத்தை எதிர்பாராத ஸ்வாமியாயி ருக்கின்றனை. நீ ஸ்வாமியாயிருக்கையும் நான் உனக்கு ப்ருத்யனுயிருக்கையுமாகிற இந்த ஸ்வஸ்வாமிபாவ ஸம் பந்தம் நமக்கு அனுதியாக இயற்கையில் ஏற்பட்டிருக்கின் றது. உலகத்தில் மன்னவன் தன் கார்யங்களுக்காக ப்ரு த்யனிடத்தில் ப்ரீதி செய்கிறுன். ப்ருத்யனும் தன் ப்ரயோஜனத்திற்காக மன்னவனைப் பணிந்து வருகிறுன். நம்மிருவர்க்குமுள்ள ஸம்பந்தத்தில் அவ்விதமாக வே றொரு ப்ரயோஜனம் கிடையாது. இதெல்லாம் ஸர்வஜ் ஞனுகிய உனக்குத் தெரிந்தவிஷயமே. ஜகதீச! வரங் கொடுப்பவர்களில் சிறந்த நீ என்க்கிஷ்டமான வரங்களைக் கொடுக்க விரும்புவாயாயின், என்மனத்தில் எவ்வகைவிருப் பங்களும் உண்டாகாதிருக்கையாகிற இவ்வரத்தையே உன்னிடத்தில்வேண்டுகிறேன். காமங்களை விரும்புகிறவன் அதற்காகப் பலவகைப் புண்ய பாப கர்மங்களைச் செய்து மேன்மேலும் பலஜன்மங்களை எடுத்துக் கடைசியில் ஸ்தா வர ஜன்மத்தை அடைந்து இந்த்ரியங்கள் மனம் ப்ரா

ணன்கள் ஜீவன் தர்மம் தைர்யம் ஆத்ம பரமாத்ம ஜ்ஞானம் பாபங்களில் வெட்கம் ஐஶ்வர்யம் தேஜஸ்ஸு நினைவு ஸத்யம் இவை முதலியன வெல்லாம் அழியப்பெற்று வருந்துகிறான். புண்டரீகாக்ஷ! மனுஷ்யன் எப்பொழுது தன் மனத்திலுள்ள விருப்பங்களையெல்லாம் துறக்கிறானோ, அப்பொழுதுதான். ஷாட்குண்ய பூர்ணனாகிய உன்னுடைய ஸாயுஜ்யத்தை அடைகிறான். நீ ஷாட்குண்ய பூர்ணன்; பரமபுருஷன், அனைவர்க்கும் அந்தராத்மா; பக்தர்களை அனுக்ரஹிக்குந் திறமையுடையவன்; உன்னைப் பற்றினருடைய வருத்தங்களைப் போக்குவதே உனக்கு இயற்கை. அற்புதமான சிங்க உருவங்கொண்டு எனக்குத் தோற்றினையல்லவா? இதனாலேயே உன்னியற்கை வெளியாகின்றது. நீ ஸ்வரூபத்தினாலும் குணங்களாலும் அளவிடமுடியாதவன்; மூன்று லோகங்களுக்கும் உட்புகுந்து தரித்துக் கொண்டிருக்கின்றனை. ப்ரணவத்தின் பொருள் நீயே. இத்தகைய உனக்கு நமஸ்காரம். எனக்கு வைராக்யத்தை யொழிய மற்ற வரங்கள் எவற்றையும் கொடுக்கவேண்டாம்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—உன்னைப்போல என்னிடத்தில் மிகுந்த பக்தியுடையவர்கள் என்னிடத்தினின்று ஒருகாலும் இஹலோக போகங்களையாவது பரலோக போகங்களையாவது விரும்பமாட்டார்கள். ஆயினும் இந்த மன்வந்தரம் வரையில் இவ்வுலகத்திலேயே தைத்யேஶ்வரர்களுக்கு ப்ரபுவாகிப் போகங்களை அனுபவித்துக் கொண்டிருப்பாயாக. எனக்கு மிகவும் அன்பனாகிய நீ இனியவைகளான என் கதைகளை அனுபவித்துக் கொண்டிருப்பாயாயின், உனக்கு மேன்மேலும் ஸம்ஸாரபந்தம் உண்டாகாது. ஸமஸ்த ப்ராணிகளிடத்திலும் அந்தராத்மாவாயிருப்பவனும் யஜ்ஞங்களுக்கு ப்ரபு

வும் ஸர்வேஶ்வரனுமாகிய என்னைப் பக்தியோகத்தினால் ஆராதித்துக்கொண்டே, என்னை அடைவதற்குத் தடையான புண்யபாப கர்மங்களை அனுபவித்துக் கழிப்பாயாக. மோக்ஷத்தில் விருப்பமுடையவனுங்கூட ப்ராரப்த கர்மத்தின் பலனான ஸுக துக்கங்களை அவஶ்யம் அனுபவித்தே தீரவேண்டுமாகையால், நீ விரும்பாதிருப்பினும் உன்னைக் காமங்களில் தூண்டுகிறேன். புண்யகர்மத்தை அதன் பலனான ஸுகானுபவத்தினால் கழிப்பதுபோலப் பாபகர்மத்தின் பலனான துக்கத்தையும் மனத்தில் விகாரமின்றித் திறமையுடன் அனுபவித்துக் காலக்ரமத்தில் சரீரத்தைத் துறந்து தேவலோகத்திலும் பாடும்படியான கீர்த்தியைப் பரப்பி ஸம்ஸார பந்தத்தினின்று விடுபட்டு என்னைப் பெறுவாய். நீ என் விஷயமாகப் பாடின இந்த ஸ்தோத்ரத்தை எவன் பாடுகிறானோ, அவன் தேஹாவஸானகாலத்தில் புண்ய பாப ரூபமான கர்மபந்தத்தினின்று விடுபடுவான்.

ப்ரஹ்லாதன் சொல்லுகிறான் :—தங்களை ஈஶ்வரர்களென்று அபிமானித்திருக்கிற ப்ரஹ்ம ருத்ராதிகளுக்கும் மேலான ஈஶ்வரனே! வரங்கொடுப்பவர்களில் சிறந்த உன்னிடத்தினின்று நான் இந்த வரம் வேண்டுகிறேன். அஃதியாதெனில், என் தந்தை ஸர்வேஶ்வரனான உன் ப்ரபாவத்தை அறியாமல் 'இவன் என் ப்ராதாவைக் கொன்றவன்' என்று உன்னிடத்தில் கெட்ட எண்ணங்கொண்டு மனத்தில் பெருங்கோபம் வளரப்பெற்று, ஸர்வலோகங்களுக்கும் ஹிதம் உபதேசிப்பவனும் ப்ரபுவுமாகிய உன்னைப் பழித்தானல்லவா ? மற்றும், உன் பக்தனாகிய என்னிடத்தில் த்ரோஹம் செய்தானல்லவா ? எவ்விதத்திலும் கடக்கமுடியாத அவ்விருவகைப் பாபத்தினின்றும் என் தந்தை விடுபட்டுப் பரிசுத்தனுவானாக. இதுவே

நான் வேண்டும் வரம். உன் கடைக் கண்களால் பார்க்கப் பட்ட என் தந்தை அப்பாபத்தினின்றும் விடுபட்டிருப்பா னென்பதில் ஸந்தேகமில்லை. தீனவத்ஸலனே! ஆயினும் நான் மனஇரக்கத்தினால் வேண்டுகிறேன்.

பகவான் சொல்லுகிறான்:—நல்லியற்கை யுடையவ னே! உன் தந்தை மாத்ரம் பரிசுத்தனானானென்பதில்லை. முன்னேழு பின்னேழு நடுவேழு ஆக இருபத்தோரு பித் ருக்களுடன் உன் தந்தை பரிசுத்தனானான். ஏனென்றால், குலத்தைப் புனிதம் செய்யவல்ல மஹா பக்தனாகிய நீ இவ னது க்ருஹத்தில் பிறந்தாயல்லவா? ஆதலால் உன் குலம் புனிதமாயிற்று. ஜகத்தெல்லாம் பரப்ரஹ்ம ஸ்வரூபமெ ன்று எல்லாவற்றையும் ஸமமாகப் பார்க்குந் தன்மையரும் ஜிதேந்த்ரியர்களும் நல்லொழுக்கம் அமைந்தவர்களும்பிற ர்க்கு உபகாரம் செய்பவர்களுமான என் பக்தர்கள் எவ் வெவ்விடங்களில் இருக்கின்றார்களோ, அத்தேசங்கள் ம்லேச்ச தேசங்களாயினும் பரிசுத்தமாகின்றன. ப்ரஹ் லாதனே! உலகத்தில் என் பக்தர்கள் அனைவரும் உன் னைப் போலிருக்கவேண்டுமென்று உன்னொழுக்கத்தை அனுஸரிக்கிறார்கள். ஆகையால் என் பக்தர்கள் அனை வர்க்கும் நீ த்ருஷ்டாந்த மாயிருக்கின்றனை. தைத்ய ஶ்ரேஷ்டனே! என் பக்தர்கள் உன் ஒழுக்கத்தைக் கண்டு நாமும் இங்ஙனம் இருக்கவேண்டுமென்று விரு ம்பி, மேன்மையும் தாழ்மையுமான தேவர் மனுஷ்யர் முதலிய ஸமஸ்த ப்ராணி ஸமூஹங்களுக்குள் மனோ வாக் காயங்களென்கிற மூன்று கரணங்களாலும் எதை யும் ஹிம்ஸிக்கிறதில்லை. எல்லாவற்றையும் என்னுடைய சரீரங்களாகப் பாவித்து அவற்றை உரியபடி வெகுமதிக் கிறார்கள். என்னிடத்தில் பக்தியால் எதையும் விரும்பு கிறதில்லை. இவ்வாறு உன்னொழுக்கங்களைக் கற்கின்

ரூர்கள். ஆதலால் எல்லா விதத்திலும் பரிசுத்தனுகிய உன் தந்தைக்கு ப்ரேத கார்யங்களைச் செய்வாயாக. ஓ ப்ரஹ்லாதனே! நற்புத்தியுள்ள உன்னைப் புதல்வனுகப் பெற்ற உன் தந்தை என் சரீரஸம்பந்தத்தினுல் புண்யலோகங்களை அடையப் போகிருன். நீ தந்தையின் ஸ்தானத்தைக் கைப்பற்றி ஆண்டு வருவாயாக. வேதங்களை ஓதியுணர்ந்த அந்தணர்களின் கட்டளைப்படி நடப்பவனுகி என்னிடத்தில் மனத்தை நிலைநிறுத்தி என்னையே பலனுகப் பாவித்து என்னுடைய ஆராதன ரூபமான கர்மங்களை அனுஷ்டித்துக் கொண்டு வருவாயாக.

ஸ்ரீநாரதர் சொல்லுகிருர்:— ஓ யுதிஷ்டிர மன்னவனே! இங்ஙனம் பகவானுல் மொழியப்பட்ட அந்த ப்ரஹ்லாதனும் அப்படியே தன் தந்தைக்கு ப்ரேதகார்யங்களையெல்லாம் செய்தான். பிறகு ப்ராஹ்மணஸ்ரேஷ்டர்களால் அபிஷேகமும் செய்யப்பெற்ருன். அனந்தரம் தேவதைகளால் சூழப்பட்ட ப்ரஹ்மதேவன் கோபம் தெளிந்து அனுக்ரஹத்தினுல் திகழ்கின்ற முகமுடைய அந்த ஸ்ரீந்ருஸிம்ஹ பகவானைக் கண்டு பரிசுத்தமான வாக்குக்களால் ஸ்தோத்ரம்செய்து இங்ஙனம் மொழிந்தான்.

ப்ரஹ்மதேவன் சொல்லுகிருன்:—தேவர்களுக்கெல்லாம் தேவனே! ப்ராணிகளையெல்லாம் படைப்பவனே! எனக்கும் முன்னவனே! உலகங்களை யெல்லாம் பீடித்துக் கொண்டிருந்த பாபிஷ்டனுகிய இவ்வஸுரன் தெய்வாதீனமாய் இப்பொழுது உன்னுல் முடிக்கப்பட்டான். இது பெரிய ஸந்தோஷம்; இவ்வஸுரன் என்னிடத்தினின்று வரம் பெற்று என்னுல் ஸ்ருஷ்டிக்கப்பட்ட எவ்வகை ப்ராணிகளாலும் வதிக்க முடியாதவனுகித் தவபலத்தினுல்

கர்வமுற்றுச் சாஸ்த்ரீய தர்மங்களை யெல்லாம் அழித்துக் கொண்டிருந்தான். இவனைத் தெய்வாதீனமாய் நீ வதித்தனை. இது எங்கள் பாக்யம். இவ்வஸுரனுடைய பிள்ளையாகிய ப்ரஹ்லாதன் சிறுவனாயினும் உன்னிடத்தில் மிகுந்த பக்தியுடையவன். இவனை அவ்வஸுரன் பலவாறு வதிக்கப் பார்த்தான். கடைசியில் தானே கத்தியால் வெட்டவந்தான். இவனை நீ அந்த ம்ருத்யுவினின்றும் விடுவித்தனை. அவ்வஸுரன் மேலுள்ள கோபத்தினால் நீ எவர்க்கும் அணுகமுடியாதிருக்கையில் இந்த ப்ரஹ்லாதனே இப்பொழுது உன்னை நன்றாகக் கிட்டினான். இவையெல்லாம் எங்களுக்கு மிகுந்த ஸந்தோஷத்திற்கிடமாயிருக்கின்றன. பகவானே! உன்னுடைய இந்த ந்ருஸிம்ஹரூபம், தன்னை மனவூக்கத்துடன் த்யானம் செய்யும் புருஷனை எல்லாப்பயங்களினின்றும் பாதுகாக்கும். ஆயிரம் சொல்லியென்ன? அவனை ம்ருத்யுவே நேரில் வதிக்க வேண்டுமென்று விருப்பங்கொண்டு வந்தாலும், அவனிடத்தினின்றும் பாதுகாக்கும். இந்த விஷயத்தை ப்ரஹ்லாதனிடத்தில் ஸ்பஷ்டமாகக் கண்டோம்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—அப்பா! ப்ரஹ்மதேவனே! இது முதலாக நீ அஸுரர்களுக்கு இவ்விதமாக வரங்கொடுக்க வேண்டாம், கொடுந்தன்மையுடைய ஸர்ப்பங்களுக்குப் பால் வார்த்து வளர்ப்பதுபோலக், கொடுந்தன்மையுடைய அஸுரர்களுக்கு இங்ஙனம் வரங்கொடுப்பது உலகங்களுக்கு மிகவும் உபத்ரவத்திற்கிடமாகும். ஆகையால் இனியாவது மனவூக்கத்துடனிருப்பாயாக.

ஸ்ரீநாரதர் சொல்லுகிறார்:— மன்னவனே! அந்த ந்ருஸிம்ஹபகவான் இங்ஙனம் மொழிந்து ப்ரஹ்மதேவனால் பூஜிக்கப்பட்டு ஸமஸ்த பூதங்களும் பார்த்துக் கொண்டிருக்கையில் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்தான்.

பிறகு ப்ரஹ்லாதன் ப்ரஹ்மதேவனையும் ருத்ரனையும் மரீசி முதலிய ப்ரஜாபதிகளையும் பகவானுடைய அம்சமென்னும் பாவனையுடன் பூஜித்துத் தலையால் வணங்கினன். அப்பால் காவ்யர் முதலிய முனிவர்களோடு கூடின ப்ரஹ்மதேவன் ப்ரஹ்லாதனைத் தைத்யர்களுக்கும் தானவர்களுக்கும் ராஜனாகச் செய்தான். யுதிஷ்டிர மன்னவனே! பிறகு ப்ரஹ்மதேவன் முதலிய தேவர்கள் அனைவரும் ப்ரஹ்லாதனைப் புகழ்ந்து அவனால் பூஜிக்கப்பட்டுத் தத்தம் இடங்களுக்குப் போய்ச் சேர்ந்தார்கள். ஸ்ரீமஹாவிஷ்ணுவின் த்வாரபாலகர்களா யிருந்தவர்கள் ஸனகாதி அந்தணர்களின் சாபத்தினால் இங்ஙனம் திதிக்குப் பிள்ளைகளாகப் பிறந்து பகவானை எப்பொழுதும் த்வேஷித்துக்கொண்டிருந்தார்களாகையால் அவர்களுடைய ஹ்ருதயத்தில் பகவான் மாறாமல் வஸித்துக்கொண்டிருந்து கடைசியில் ந்ருஸிம்ஹரூபியாய் வந்து வதித்தான். மீளவும் அவர்கள் கும்பகர்ணன் ராவணன் என்று இரண்டு ராக்ஷஸர்களாகப் பிறந்து தசரத சக்ரவர்த்தியின் குமாரனான ஸ்ரீராமனுடைய பராக்ரமங்களால் முடிந்தார்கள். அவர்கள் ஸ்ரீராமனுடைய பாணங்களால் ஹ்ருதயம் பிளவுண்டு யுத்தபூமியில் படுத்து அந்த ஸ்ரீராமனையே நினைத்துக்கொண்டு முன் ஜன்மத்திற் போலவே சரீரத்தைத் துறந்தார்கள். அவர்களே இங்குச் சிசுபாலனும் தந்தவக்த்ரனுமாகப் பிறந்து மீளவும் விஷ்ணுவால் முடிக்கப்பட்டு மாறாத வைரத்தினால் நீ பார்த்துக்கொண்டிருக்கையில் அவ்விஷ்ணுவின் ஸாயுஜ்யத்தை அடைந்தார்கள். சிசுபால தந்தவக்த்ரர்கள் மாத்ரமேயன்று; மற்றும், ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் மாறாத த்வேஷமுடைய மன்னவர்கள் அனைவரும், புழு குளவியினிடம் பயந்து அதையே நினைத்துக்கொண்டிருந்து தானும் அக்குள

வியின் உருவம் பெறுவதுபோல, த்வேஷத்தினால் எப்பொழுதும் க்ருஷ்ணனையே நினைத்துக் கொண்டிருந்து முன் செய்த பாபங்களையெல்லாம் துறந்து அவனோடு ஸாரூப்யத்தை அடைந்தார்கள். பகவானுடைய பக்தர்கள் வேறு ப்ரயோஜனங்களை விரும்பாத அந்தப் பக்தியின் மஹிமையால் அவனுடைய ஸாரூப்யத்தை அடைவதுபோலச், சிசுபாலன் முதலிய மன்னவர்களும் த்வேஷத்துடன் மாறுமல் அந்தப் பகவானைச் சிந்தித்துக் கொண்டிருந்தமையால் அவனுடைய ஸாரூப்யத்தை அடைந்தார்கள். மன்னவனே! த்வேஷிகளான சிசுபாலாதிகளுக்குப் பகவானுடைய ஸாரூப்யம் எப்படி உண்டாகக் கூடுமென்று நீ என்னை வினவினை. அதைப் பற்றிச் சொல்ல வேண்டியவெல்லாம் உனக்கு விஸ்தாரமாகச் சொன்னேன். ப்ராஹ்மண குலத்திற்கு வேண்டியவற்றை யெல்லாம் செய்பவனும் தேவதேவனும் மூன்று லோகங்களையும் உள்ளே புகுந்து தரிப்பவனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய இவ்வவதாரகதை புண்யத்தை விளைக்கும். இதில் ஆதிதைத்யர்களான ஹிரண்யாக்ஷ ஹிரண்யகசிபுக்களின் வதம் கூறப்பட்டிருக்கின்றது. மற்றும், இதில் மஹாபாகவதனை ப்ரஹ்லாதனுடைய பக்தியும் ஜ்ஞானமும் விரக்தியும் வெளியாகின்றன. மற்றும், ஜகத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களுக்குக் காரணனை பரமபுருஷனுடைய உண்மையும், ஸத்வாதி குணங்கள் புண்ய பாபகர்மங்கள் இவற்றின் ஸ்வரூபமும், மேன்மையும் தாழ்மையுமுள்ள தேவாஸுரர்களின் ஸ்தானங்களுக்குக் காலமஹிமையால் நேரிட்ட பெரிய மாறுபாடும் வர்ணிக்கப்பட்டிருக்கின்றன. இந்த உபாக்யானத்தில் பகவானை அடைவதற்குரிய உபாயமாகிய பாகவதர்களின் தர்மமும் ஆத்மஸ்வரூபத்தைப் பற்றின விசாரமும் விரி

வாக மொழியப்பட்டது. பகவானுடைய பராக்ரமம் முதலிய குணஸமூஹங்களை வர்ணிக்கையால் வளர்ந்திருக்கிற புண்யமான இந்த உபாக்யானத்தை ஶ்ரத்தையுடன்படிக்கும் புருஷன் புண்யபாபரூபமான கர்மங்களாகிற பாசங்களினின்றும் விடுபடுவான். ஸத்புருஷர்களில் சிறந்த ப்ரஹ்லாதனுடைய பரிசுத்தமான ப்ரபாவத்தைக் கேட்டு, ஸிம்ஹம் யானையைக் கொல்லுவதுபோல, ஆதிபுருஷனாகிய பகவான் ஹிரண்யகசிபுவை அவலீலையாகக் கொன்ற வ்ருத்தாந்தத்தை வெளியிடுகிற இந்த உபாக்யானத்தை மனவூக்கத்துடன் படிக்கும் புருஷன் கர்மங்களினின்றும் விடுபட்டு எவ்விதத்திலும் பயமில்லாத வைகுண்டலோகத்தைப் பெறுவான். யுதிஷ்டிர மஹாராஜனே! இந்த மனுஷ்யலோகத்திற்குள் நீங்கள் மிகுந்த பாக்யசாலிகள். பாப்ரஹ்மமென்று ஓதப்படுகிற பரமபுருஷன் ஸ்ரீக்ருஷ்ணரூபியாய் மானிட உருவம் கொண்டு மறைந்து உங்கள் க்ருஹத்தில் வஸிக்கிறான். அதைப் பற்றி, உலகங்களை யெல்லாம் புனிதம் செய்ய வல்ல முனிவர்கள் எல்லா இடங்களினின்றும் உங்கள் க்ருஹத்திற்குத் தேடிக்கொண்டு வருகின்றார்கள். 'ஸ்ரீக்ருஷ்ணன் எங்கள் அம்மான் பிள்ளையல்லவா? அவன் எப்படிப் பாமபுருஷனாவான்?' என்று சங்கிக்க வேண்டாம். அந்த ஸ்ரீக்ருஷ்ணன் பெரியோர்களால் தேடத்தக்கதும் கேவலாநந்த ஜ்ஞான ஸ்வரூபமுமாகிய பரப்ரஹ்மமே. இப்படிப்பட்ட ஸ்ரீக்ருஷ்ணன் உங்களுக்குக் கேவலம் அம்மான் பிள்ளை மாத்ரமேயல்லன்; ப்ரீதிக்கிடமுள்ள நண்பனும் அந்தராத்மாவும் பூஜிக்கத் தகுந்தவனும் கட்டளைப்படி நடக்கும் ப்ருத்யனும் ஹிதோபதேசம் செய்யும் குருவுமாயிருக்கிறான். இங்ஙனம் அவனோடு பலவாறு ஸம்பந்தமுடைய உங்கள் பாக்யத்திற்கு அளவுண்டோ? அந்தப்

பகவானுடைய ஸ்வரூபத்தை ப்ரஹ்மதேவன் ருத்ரன் முதலியவர்களும் உள்ளபடி அறியவல்லரல்லர்; கேவலம் அவனுடைய திவ்யமங்கள விக்ரஹ த்யானத்தினாலும் பக்தியினாலும் இந்த்ரியஜயம் முதலியவைகளாலும் அவனை ஆராதிக்கிறார்கள். யோகேஸ்வரர்களுக்கு ப்ரபுவாகிய அந்தப் பகவான் எனக்கு அருள் புரிவானாக. மன்னவனே! இந்த ஸ்ரீக்ருஷ்ண பகவான் முன்பு பலமாயைகளை அறிந்த மயனால் தடுக்கப்பட்ட ருத்ரனுடைய புகழைப் பரவச்செய்தான்.

யுதிஷ்டிரன் சொல்லுகிறான்:—ஜகத்திற்கு ப்ரபுவும் தேவனுமாகிய ருத்ரனுடைய புகழை மயன் எந்தக் கார்யத்தில் தடுத்ததனால் இந்த ஸ்ரீக்ருஷ்ணன் அதைப் பரவச் செய்தான்? அதைச் சொல்வீராக.

ஸ்ரீ நாரதர் சொல்லுகிறார்:—ருத்ரனால் உதவி செய்யப்பெற்ற தேவர்கள் யுத்தத்தில் அஸுரர்களை ஜயிக்க, அவ்வஸுரர்கள் மாயைகளை உணர்ந்த ஆசார்யர்களுக்கும் ஆசார்யனாகிய மயனைச் சரணம் அடைந்தார்கள். ஸமர்த்தனாகிய அந்த மயன் பொன் வெள்ளி இரும்பு இம்மூன்றுகளாலும் மூன்று பட்டணங்களை இயற்றி அவ்வஸுரர்களுக்குக் கொடுத்தான். அப்பட்டணங்கள் வருவதும் போவதும் ஒருவர்க்கும் புலப்படமாட்டா. அவற்றிலுள்ள கருவிகள் இப்படிப்பட்டவைகளென்று எவர்க்கும் ஊஹிக்கமுடியா. அவை விமானங்கள் போன்றிருந்தன. நினைத்த விடங்களுக்குக் கொண்டுபோய்ச் சேர்க்கவல்லவை. அஸுரசேனாநாயகர்கள் அப்பட்டணங்களில் இருந்து தேவர்களுக்குப் புலப்படாமல் அவைகளிடத்தில் தமக்குள்ள முன்னைத்வேஷத்தை நினைத்து லோகபாலர்களோடுகூடின மூன்று லோகங்களையும் அழிக்கத் தொடங்கினார்கள். அப்பால் அந்த இந்த்ராதி

லோகபாலர்களும் லோகங்களிலுள்ள ஜனங்களும் ருத்ர னிடம் வந்து வணங்கி 'ப்ரபூ! அஸுரர்கள் மயன் இயற் றிக்கொடுத்த மூன்று பட்டணங்களை இருப்பிடமாகக் கொண்டு தாங்கள் வருவதும் போவதும் பிறர்க்குத் தெரி யாமல் உன் ப்ரஜைகளான எங்களை அழிக்கின்றார்கள். தேவனே! எங்களைப் பாதுகாப்பாயாக' என்று முறை யிட்டார்கள். பிறகு மஹானுபாவனாகிய ருத்ரன் 'பயப் படவேண்டாம்' என்று தேவர்களை அனுக்ரஹித்துத் தனுஸ்ஸில் பாணத்தைத் தொடுத்து அதில் பாசுபதாஸ் த்ரத்தை அமைத்து அந்தப் பட்டணங்களின்மேல் ப்ர யோகித்தான். அப்பால் ஸூர்யமண்டலத்தினின்று கிர ணஸமூஹங்கள் கிளம்புவதுபோல அந்தப் பாணத்தி னின்றும் பலவகையான பாணங்கள் புறப்பட்டன. அவற் றால் அப்பட்டணங்கள் மூன்றும் மறைந்து கண்ணுக்குத் தெரியாதிருந்தன. அப்பட்டணங்களிலிருந்த அஸுரர் கள் அனைவரும் அந்தப்பாணங்களால் அடியுண்டுமாண்டு விழுந்தார்கள். மஹா யோகியாகிய மயன் அவர்களெல் லோரையும் கொண்டு வந்து செத்தவர்களைப் பிழைப் பிக்கும்படி தான் இயற்றின கிணற்றின் ஜலத்தில் போ ட்டான். அவர்கள் அக்கிணற்றிலுள்ள ஸித்தாம்ருத ரஸ த்தினால் நனைந்து வஜ்ரம்போலத் திடமான அங்கங்களு டையவர்களும் மஹா பலிஷ்டர்களுமாகி, மேகங்களின் பிளவினின்று மின்களாகிற அக்னிகள் கிளம்புவதுபோல மேலேறி வந்தார்கள். அப்பொழுது தன் நினைவு வீணா கப்பெற்று மனவருத்தமுற்றிக்கின்ற ருத்ரனைப் பார்த்து, இந்த ஸ்ரீக்ருஷ்ணன் அந்த ஸித்தாம்ருத ரஸத்தை அழி ப்பதற்கு உபாயம் செய்தான். இந்த ஸ்ரீக்ருஷ்ணரூபி யான பகவான் தான் பசுவானான். ப்ரஹ்மதேவன் கன்று ானான். பிறகு பசுவின் உருவம் தரித்த பகவான் கன்றின்

உருவம் தரித்த ப்ரஹ்மதேவனுடன், அந்த த்ரிபுரத்தின் மேல் ஏறி மத்யாஹ்னகாலத்தில் அங்குள்ள கிணற்றில் இருக்கும் ஸித்தாம்ருதரஸத்தைப் பானஞ்செய்தான். அந்த அம்ருதத்தைப் பாதுகாத்துக் கொண்டிருந்த அஸுரர்கள் அங்ஙனம் அம்ருதரஸத்தைப் பருகும் பசுவைப் பார்த்தும் பகவானுடைய மாயையால் மதிமயங்கப் பெற்று அதைத் தடுக்கவில்லை. மஹாயோகியான மயன் அங்ஙனம் பசு அம்ருதத்தைப் பருகினதை அறிந்து இது தெய்வச்செயலென்று நினைத்து வருத்தமின்றி அக்கிணற்றைப் பாதுகாக்கும் அஸுரர்கள் சோகிக்க, அவர்களை நோக்கிப் புன்னகைசெய்து 'தனக்காவது பிறர்க்காவது ஈஶ்வரன் ஏற்படுத்தின ஸுகத்தையாவது துக்கத்தையாவது மாற்றுவதற்கு இவ்வுலகத்திலுள்ள தேவன் அஸுரன் மனுஷ்யன் ஆகிய எவனாலும் முடிவதில்லை. ஆகையால் நீங்கள் இதைப் பற்றி வருந்தவேண்டாம்' என்றான். பிறகு இந்த ஸ்ரீக்ருஷ்ணன் அம்ருத ரஸத்தையெல்லாம் பருகி ஸாதுக்களை ரக்ஷிக்குந்திறமையாகிற தர்மம் ஜ்ஞானம் வைராக்யம் ஐஶ்வர்யம் தவம் வித்யை சேராதவற்றையும் சேர்ப்பிக்கையாகிற செயல் முதலிய தன் சக்திகளால் ருத்ரனுக்கு யுத்தத்திற்கு வேண்டிய தேர் தேர்ப்பாகன் த்வஜம் குதிரை தனுஸ்ஸு கவசம் பாணம் முதலிய கருவிகளையெல்லாம் ஏற்படுத்திக்கொடுத்தான். மன்னவனே! பிறகு ருத்ரன் பகவானுடைய தர்மசக்தி ரூபமான ரதத்தில் ஏறிக்கொண்டு கவசம் அணிந்து தனுஸ்ஸையும் பாணத்தையும் எடுத்துக்கொண்டான். அப்பால் தனுஸ்ஸில் பாணத்தைத் தொடுத்து அபிஜித்தென்னும் முஹூர்த்தத்தில் ஸ்ரீக்ருஷ்ணனுடைய தேஜஸ்ஸுடன் கூடிப் பாணப்ரயோகம் செய்து த்ரிபுரத்தைத் தஹித்தான்.

ருக்கு யஜுஸ்ஸாமம் முதலிய ஸகல வேதஸ்வரூபன். அந்த வேதங்களை உணர்ந்த முனிவர்களின் ஸ்ம்ருதியும் பெரியோர்களின் ஆசாரமும் தர்மத்திற்கு மூலம். தர்மமாவது அந்தப் பகவானுடைய ஆராதனமே. எதனால் அந்தப் பகவான் அருள்புரிவானோ அதுவே தர்மமாம். அத்தகைய தர்மத்தைக் கேட்டுணர்வதும் அதை அனுஷ்டிப்பதும் அவஶ்யம் செய்யவேண்டியதே. ப்ராணிகளுக்கு ஹிதம் செய்கையாகிற ஸத்யம், பிறர்துக்கம் பொறாமையாகிற தயை, உபவாஸம் முதலிய தவம், விவேகம், உள்ளிந்த்ரியமான மனத்தை அடக்குகை, வெளியிந்த்ரியங்களை அடக்குகை, மனோவாக்காயங்கள் மூன்றாலும் பிறர்க்கு உபத்ரவம் செய்யாமை, தகாத காலங்களில் ஸ்த்ரீ ஸம்போகம் செய்யாமை, லோபமில்லாமை, உரியபடி மந்த்ரஜபம் செய்தல், மனோவாக்காயங்கள் ஒத்திருக்கை, தெய்வாதீனமாய் நேரிட்ட அன்னாதிகளால் ஸந்தோஷமுற்றிருக்கை, எல்லாவற்றையும் பரப்ரஹ்ம ஸ்வரூபமென்று ஸமமாகப்பார்க்குந் தன்மையுடைய பெரியோர்களைப் பணிகை, ப்ரவ்ருத்தி கர்மங்களினின்று மீளுகை, பயனற்ற கார்யங்களைச் செய்யலாகாதென்று நிரூபித்து நிர்ணயிக்கை, வீண்பேச்சுப்பேசாமல் மிதமாகப்பேசுகை, தேஹத்தைக் காட்டிலும் விலக்ஷணனான ஆத்மாவின் ஸ்வரூபத்தை ஆராய்கை, ப்ராணிகளுக்கு உரியபடி அன்னாதிகளைக் கொடுக்கை, ஸமஸ்த பூதங்களிலும் ஆத்மாவும் பரமாத்மாவும் அமைந்திருக்கிறார்களென்கிற நினைவு, ஸமஸ்த பூதங்களும் தன்னைப்போன்றவையென்றும் பரப்ரஹ்ம ஸ்வரூபங்களென்றும் பாவிக்கை, மனுஷ்யர்களிடத்தில் அந்நினைவு எப்பொழுதும் மாறாமல் நிறைந்திருக்கை, பெரியோர்கள் 'நமக்கு இவனே கதி' என்று பாவித்து வணங்குகிற பகவானுடைய குணங்களைக் கேட்

கை, அவன் நாமங்களைக் கீர்த்தனம் செய்கை, அவன் ஸ்வரூப ரூப குண விபூதிகளை நினைக்கை, அவன் பாதங்களைப்பணிகை, அர்க்யம் பாத்யம் முதலியன கொடுத்து அவனை ஆராதிக்கை, அவனை வணங்குகை, அவனுக்கு எல்லாவிதத்திலும் அனுகூலனாயிருக்கை, அவனிடத்தில் ஆத்ம ஸமர்ப்பணம் செய்கை, ஆகிய இம்முப்பதும் மனுஷ்யர்கள் அனைவரும் ஸாதாரணமாய் அனுஷ்டிக்கவேண்டிய மேலான தர்மமென்று கூறுகிறார்கள். இதனால் அனைவர்க்கும் அந்தராத்மாவான பகவான் ஸந்தோஷம் அடைவான். கர்ப்பாதானம் முதலிய பதினாறு ஸம்ஸ்காரங்களும் எவனுக்குத் தவறாமல் நடக்கின்றனவோ, அவன் த்விஜனென்று கூறப்படுவான். ப்ராஹ்மணர் க்ஷத்ரியர் வைஶ்யர் ஆகிய மூவர்க்கும் அந்த ஸம்ஸ்காரங்கள் உண்டாகையால் அவர்களே த்விஜர்கள். சூத்ரனுக்கு விவாஹம் தவிர மற்ற ஸம்ஸ்காரங்கள் இல்லாமையாலும் உபநயனம் கூடாதென்று சாஸ்த்ரங்களில் நிஷேதித்திருக்கையாலும் அவன் த்விஜனாகமாட்டான். ப்ரஹ்மதேவன் ஶ்ருதி ஸ்ம்ருதிகள் மூலமாய் இந்தப் பதினாறு ஸம்ஸ்காரங்கள் எவனுக்கு உண்டென்று சொன்னாரோ அவனே த்விஜனாவான். மற்றவன் தானே அந்த ஸம்ஸ்காரங்களைப் பண்ணிக்கொள்ளினும் அவன் த்விஜனாகமாட்டான். குலத்தினாலும் கர்மத்தினாலும் பரிசுத்தர்களும் த்விஜர்களென்று வழங்கி வருகிறவர்களுமான ப்ராஹ்மணர் முதலிய மூன்று வர்ணத்தவர்களுக்கு யாகம் அத்யயனம் தானம் என்கிற இம்மூன்று கர்மங்கள் ஆஶ்ரமங்களுக்குரியபடி சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டிருக்கின்றன. இவற்றை அனுஷ்டிக்காத பக்ஷத்தில் அவர்கள் பதிதர்களாவார்கள். அக்னியுள்ளவர்களுக்கு மூன்று கர்மங்களும் உண்டு. அதில்லாதவர்களுக்கு

இரண்டு கர்மங்கள். ப்ராஹ்மணனுக்கு அத்யாபனம் யாஜனம் ப்ரதிக்ரஹம் என்று மூன்று கர்மங்கள் ஜீவனார்த்தமாக ஏற்பட்டிருக்கின்றன. முன் சொன்ன மூன்று கர்மங்களை அவஸ்யம் அனுஷ்டித்தே யாகவேண்டும். மற்றவை ஜீவனத்திற்காக வாகையால் அவற்றில் நிர்ப்பந்தமில்லை. ஆகையால் ப்ராஹ்மணனுக்கு ஆறு கர்மங்கள். மற்றவர்களுக்கு ப்ரதிக்ரஹம் யாஜனம் அத்யாபனம் என்கிற இம்மூன்று கர்மங்களும் கிடையாது. ப்ரஜைகளைப் பாதுகாக்கும் அதிகாரத்தில் இருக்கிற க்ஷத்ரியன் ப்ராஹ்மணன் தவிர மற்றவரிடத்தினின்று கப்பம் தண்டம் சுங்கம் இவற்றை வாங்கி ஜீவிக்கலாம். மற்ற க்ஷத்ரியனுக்கு வேறு ஜீவனம். வைஸ்யன் ப்ராஹ்மணகுலத்தை அனுவர்த்தித்துக்கொண்டு பயிர் செய்கை வர்த்தகம் முதலியவற்றால் ஜீவிக்கவேண்டும். ப்ராஹ்மண க்ஷத்ரிய வைஸ்யர்களுக்குப் பணிவிடை செய்கையே சூத்ரனுக்கு முக்ய தர்மம். அவன் அவர்கள் கொடுக்கும் அன்னாதிகளைக்கொண்டு ஜீவிக்கவேண்டும். ப்ராஹ்மணனுக்குப் பயிர் செய்கை கோரக்ஷணம் முதலியதும், யாசிக்காமல் கிடைப்பதும், தேசாந்தரங்களிற் சென்று யாசித்துப் பெறுகையும், சிந்தின நெல்லுகளையும் நெற்கதிர்களையும் பொறுக்குகையும் ஆகிய இந்நான்கும் ஜீவனங்களாம். இவற்றில் முதலிலிருந்து ஒன்றைவிட ஒன்று மேற்பட்டிருக்கும். பயிர் செய்கை கோரக்ஷணம் முதலியவற்றைக் காட்டிலும் தேசாந்தரங்களிற்சென்று யாசித்து ஜீவிப்பது மேல். அதைக்காட்டிலும் யாசிக்காமல் கிடைப்பதைக்கொண்டு ஜீவிப்பது மேல். அதைக்காட்டிலும் சிந்தின நெல்லுகளையும் நெற் கதிர்களையும் பொறுக்கி ஜீவிப்பதுமேல். கீழ்வர்ணத்திலுள்ளவன் ஆபத்தில்லாத காலத்தில் மேல் வர்ணத்திற்கு ஏற்பட்ட

ஜீவனத்தைப் பற்றலாகாது. ஆபத்காலங்களில் க்ஷத்ரிய னைத் தவிர மற்றவர் அனைவரும் நேர்ந்தபடி எல்லா ஜீவ னங்களையும் கைப்பற்றலாம். ப்ராஹ்மண க்ஷத்ரியர்களிரு வரும் எப்படிப்பட்ட ஆபத்திலும் ருதம் அம்ருதம் ம்ரு தம் ப்ரம்ருதம் ஸத்யாந்ருதம் இந்த ஜீவனங்களில் ஏதே னுமொன்றால் ஜீவிக்கலாமேயன்றி எப்படிப்பட்ட கஷ் டத்திலும் ஶ்வவ்ருத்தியால் ஜீவிக்கலாகாது. ருதமாவது சிந்தின தான்யங்களைப் பொறுக்குகை. அம்ருதமாவது தெய்வாதீனமாய் சேரும் த்ரவ்யம். ம்ருதமாவது தினந் தோறும் யாசித்துப் பெறும் த்ரவ்யம். ப்ரம்ருதமாவது பயிர் செய்கை. ஸத்யாந்ருதமாவது வர்த்தகம் செய்கை. ஶ்வவ்ருத்தியாவது நீசஸேவை. ப்ராஹ்மண க்ஷத்ரியர்க ளிருவரும் நிந்தைக்கிடமான அந்த நீசஸேவையை ஸர்வ காலத்திலும் துறக்கவேண்டும். அந்த ப்ராஹ்மண க்ஷத்ரி யர்களிருவரும் ஸமஸ்த தேவதாஸ்வரூபர்கள். ஆகையால் அவர்கள் அனைவர்க்கும் பூஜிக்கத்தகுந்தவர்கள். ஆத லால் அவர்கள் தமக்குக் கீழ்ப்பட்ட வர்ணங்களைப் பணி ந்து ஜீவிப்பது நிந்தைக்கிடமாகையால் எப்பொழுதும் அவர்கள் அதைச் செய்யலாகாது. மன அடக்கமாகிற சமம், வெளியிந்த்ரியங்களின் அடக்கமாகிற தமம், உபவா ஸம் முதலிய தவம், ஸ்நானாதி கர்மங்களால் உண்டாகும் சுத்தி, தெய்வாதீனமாய்க் கிடைத்ததைக் கொண்டு ஸந் தோஷித்திருக்கை, குளிர் வெப்பம் முதலியவற்றைப்பொ றுக்குந்தன்மை, ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களென்கிற மூன்று கு ணங்களும் ஒத்திருக்கை, ஆத்ம பரமாத்மாக்களின் உண் மையை ஆராய்ந்தறிகை, பிறர் துக்கம் பொறுமை, தன் னைப் பற்றினவர்களைக் கைவிடாத பகவானிடத்தில் மன ஆக்கமுற்றிருக்கை, ஸமஸ்த பூதங்களுக்கும் ஹிதஞ் செய்கை ஆகிய இவை யெல்லாம் ப்ராஹ்மண குலமென்

பதை அறிவிக்கும் அடையாளங்கள். தன் வீட்டில் நுழை வதுபோல யுத்த பூமியில் நுழையுந்திறமை, பிறரால் அவ மதிக்கக் கூடாதிருக்கை, எப்படிப்பட்ட ஆபத்திலும் துக்கிக்காமை, பிறரை வெல்லுந்திறமை, லோபமில்லா மை, தேஹ தர்மங்களான பசி தாஹம் பிணி முதலிய வற்றால் வருந்தாமை, பொறுமை, ப்ராஹ்மண குலத்தை அனுஸரித்திருக்கை, அனுக்ரஹம் செய்கை, ப்ரஜைக ளைப் பாதுகாக்கை ஆகிய இவையெல்லாம் க்ஷத்ரியகுல மென்பதை அறிவிக்கும் அடையாளங்கள். தேவதைகள் குருக்கள் பெரியோர்கள் பசுக்கள் இவர்களிடத்தில் பக்தி, தர்மம் அர்த்தம் காமம் இவற்றால் ஸந்தோஷ முற்றிருக்கை, பரலோகம் உண்டென்கிற நம்பிக்கை, பணம் ஸம்பாதிப்பதில் என்றும் மாறாமல் முயற்சி செய் கை, அதில் திறமை அமைந்திருக்கை ஆகிய இவையெல் லாம் வைஸ்யகுலமென்பதை அறிவிக்கும் அடையாளங் கள். தனக்குமேற்பட்ட வர்ணத்தவரிடத்தில் வணக்கம், ஸ்நானாதிகளால் வரும் சுத்தி, தன் ஸ்வாமிக்குக் கபட மில்லாமல் பணி செய்கை, மந்த்ரமில்லாமல் கேவல நமஸ் காரத்தினால் யஜ்ஞங்களை அனுஷ்டிக்கை, திருடாமை, பொய் பேசாமை, பசுக்களையும் ப்ராஹ்மணர்களையும் பாது காக்கை இவை சூத்ரனுக்கு லக்ஷணங்கள். பர்த்தாவுக் குச் சுஶ்ரூஷை செய்கை அவன் மனத்திற்கினியளாயிருக் கை, அவனுடைய தந்தை உடன் தோன்றல் முதலிய பந் துக்களிடத்தில் ப்ரீதியோடிருக்கை, அவனுக்காக நிய மங்களை அனுஷ்டிக்கை ஆகிய இந்நான்கும் பதிவ்ரதைக ளான பெண்கள் அவஶ்யமாய் அனுஷ்டிக்க வேண்டிய தர்மங்கள். இவையே அவர்களுக்கு அடையாளமாம். மற் றும், அவர்கள் வீட்டை மெழுகி விளக்கிக் கோலமிட்டு வீட்டை விட்டு வெளியில் எங்கும் போகாதிருந்து

பாத்ரங்கள் ஆடையாபரணங்கள் முதலியவற்றைச் சுத்தம் செய்து வைத்து மற்றும் வீட்டிலுள்ள கருவிகளையும் சீர்திருத்தித் தாமும் ஆடையாபரணங்களால் அலங்காரம் செய்துகொண்டு, கணவனுக்கு இஷ்டமான பலவகை இனிய பண்டங்களாலும் வணக்கத்தினாலும் மனம் முதலிய இந்த்ரியங்களின் அடக்கத்தினாலும் உண்மையும் ப்ரியமுமான பேச்சுக்களாலும் ப்ரீதியினாலும் உரிய காலங்களில் கணவனைப் பணியவேண்டும். கிடைத்தவளவில் ஸந்தோஷமுற்று, அதை அநுபவிப்பதிலும் பேராசையின்றி வேலைகளில் சோம்பாமல் பர்த்தாவுக்குச் சுஶ்ரூஷை செய்கையே பெரிய தர்மமென்றுணர்ந்து எக்காலத்திலும் எல்லாரிடத்திலும் ப்ரியமும் உண்மையுமான பேச்சையே பேசுகின்றவர்களாகி எல்லாவற்றிலும் ஊக்கமுற்று மஹாபாதகத்திற்கிடமல்லாத கணவனைப் பணியவேண்டும். மஹாபாதகம் செய்திருப்பானாயின், அத்தகைய கணவனைப் பெண்டிர்கள் பணியலாகாது. அவன் சுத்தனாகும் வரையில் எதிர் பார்த்துக் கொண்டிருக்கவேண்டும். ஸ்ரீமஹாலக்ஷ்மி பரமபுருஷனைப்பணிவதுபோலப் பர்த்தாவையே தெய்வமாகப் பாவித்து அவனைப் பணிந்து வருவாளாயின், அவள் அப்பரம புருஷனையொத்த உருவமுடைய கணவனுடன், ஸ்ரீமஹாலக்ஷ்மி பரமபுருஷனோடிருப்பதுபோல ஸ்ரீவிஷ்ணுலோகத்தில் ஸந்தோஷமுற்றிருப்பாள்; மெல்லமெல்லக் கணவனுடன் மோக்ஷத்தையும் பெறுவாள். அநுலோமஜமென்றும் ப்ரதிலோமஜமென்றும் ஸங்கரஜாதி இருவகையாயிருக்கும். கீழ் வர்ணத்தவனுக்கு மேல் வர்ணத்தவளிடத்தில் பிறந்தவர்கள் ப்ரதிலோமஜர். மேல் வர்ணத்தவனுக்குக் கீழ்வர்ணத்தவளிடத்தில் பிறந்தவர்கள் அநுலோமஜர். வண்ணான் கருமான் கட்டுவன் சண்டாளன் முதலிய ப்ரதிலோம

ஜாதியர்களுக்கும் மற்ற அனுலோமஜாதியர்களுக்கும் அவரவர்களுடைய வம்சபரம்பரையில் ஏற்பட்ட ஜீவனமேயன்றி வேறில்லை. திருடல் ஹிம்ஸை முதலிய பாபகார்யங்களை அவர்களும் செய்யலாகாது. ராஜனே! ப்ராஹ்மணர் க்ஷத்ரியர் முதலிய மனுஷ்யர்கள் அனைவர்க்கும் யுகங்கள்தோறும் பெரும்பாலும் அவரவர்கள் ஸ்வபாவங்களுக்குத் தகுந்தபடி தர்மங்கள் ஏற்பட்டிருக்கின்றன. அந்தத் தர்மமே அவர்களுக்கு இவ்வுலகத்திலும் பரலோகத்திலும் ஸுகத்தை விளைக்குமென்று வேத வித்துக்களான மனு முதலிய ரிஷிகள் நிர்ணயித்திருக்கிறார்கள். தங்கள் தங்கள் வர்ணாஸ்ரமங்களுக்கு உரியபடி ஏற்பட்ட அத்யாபனம் முதலிய வ்ருத்திகளால் ஜீவித்துக்கொண்டு யாகம் முதலிய தங்கள் கர்மத்தை அனுஷ்டித்து வருவார்களாயின் ஸத்வாதி குணங்களால் ஏற்பட்ட புண்யபாபரூப கர்மபந்தத்தைத் துறந்து க்ரமத்தில் ப்ராக்ருதி ஸம்பந்தமற்றிருக்கையாகிற மோக்ஷத்தைப் பெறுவார்கள். ஒரு நிலத்தில் அடிக்கடி விதைத்துப் பயிரிட்டுக்கொண்டிருப்பானாயின், அந்நிலம் வீர்யமற்று மீளவும் பயிர் செய்ய உபயோகப்படாது. அதில் விதைத்த விதையும் முளைக்காமல் மண்ணோடு மண்ணாக மட்கி மணங்குலைந்துபோம். அங்ஙனமே காமங்களுக்கிடமான மனம் அடிக்கடி காமங்களை வேண்டியமட்டும் அனுபவிக்கையால் அவற்றில் விருப்ப மற்றுப்போமேயன்றி, நெய்த்துளிகளால் அக்னிமென்மேலும் வளர்ந்தெரிவதுபோல, அவற்றில் மேன்மேலும் விருப்பம் வளரப்பெறாது. மற்றும், எரிகிற அக்னி நெய்யை வெள்ளம் வெள்ளமாகக் கொட்டினால் அணையுமேயன்றி நெய்யைத் துளித்துளியாகச் சொட்டவிட்டால் எங்ஙனம் அணையாதோ, அங்ஙனமே மனம் காமங்களைச் சிறுச்சிறிது அனுபவித்தால் அவற்றில் விருப்பம் தீரப்பெ-

ரு து. வேண்டியவளாவாக அடிக்கடி அனுபவித்தால் அவ் விருப்பம் தீரப்பெறும்.'இவன் இன்னவர்ணத்தவன்' என்று அறியுமாறு எவனுக்கு எந்த லக்ஷணம் சொல்லப்பட்டதோ, அந்த லக்ஷணம் வேறு வர்ணத்தவனிடத்தில் புலப்படுமாயின், அவனை அந்த அடையாளத்தைக் கொண்டு அந்தவர்ணத்தவனாகவே நிரூபிக்கலாம். ப்ராஹ்மணவர்ணத்திற்குச் சொன்ன சமதமாதி குணங்கள் மற்ற வர்ணத்தவர்களில் எவர்க்கேனும் இருக்குமாயினும், அவர்களை ப்ராஹ்மணவர்ணத்தவர்களாக நிரூபிக்கலாம். அந்தந்த வர்ணங்களுக்குச் சொன்ன அடையாளங்களே முக்யமன்றி அந்தந்த ஜாதியில் பிறப்பது முக்யமன்று. பதினொன்றாவது அத்யாயம் முற்றிற்று.

ப்ரஹ்மசாரி வானப்ரஸ்தன் இவர்களுக்குள்ள விசேஷதர்மங்களையும், ப்ரஹ்மசாரி முதலிய நான்கு ஆஸ்ரமத்தவர்களுக்குரிய ஸாதாரண தர்மங்களையுங் கூறுதல்.

ஸ்ரீ நாரதர் சொல்லுகிறார்:—ப்ரஹ்மசாரி மனத்தையும் மற்ற இந்த்ரியங்களையும் அடக்கித் தாஸன்போல வணக்கமுற்றுக் குருவுக்கு ஹிதம் செய்துகொண்டு அவனிடத்தில் மிகுந்த ப்ரேமத்துடன். அக்குருவின் க்ருஹத்தில் வாஸம் செய்யவேண்டும். மற்றும், அவன் இரண்டு ஸந்திகளிலும் மௌனத்துடன் மனவூக்கமுற்றுக் காயத்ரியை ஜபித்துக் காலை மாலைகளில் குரு அக்னி ஸூர்யன் பகவான் இவர்களை உபாஸிக்கவேண்டும். குரு அழைக்கும் பொழுது ஸித்தமாயிருந்து மனவூக்கத்துடன் அவரிடத்தில் வேதங்களை ஓதவேண்டும். தினந்தோறும் வேதமோதத் தொடங்கும் பொழுதும் முடிக்கும்பொழுதும் குருவின் பாதங்களைத் தலையால் வணங்கவேண்டும். கையில் பவித்ரம் அணிந்து

மேகலை அஜினம் வஸ்த்ரம் ஜடை தண்டம் கமண்டலு உபவீதம் இவற்றைச் சாஸ்த்ரங்களில் சொல்லியபடி தரிக்கவேண்டும். காலை மாலைகளில் பிக்ஷை யெடுக்க வேண்டும். அந்தப் பிக்ஷையில் கிடைத்த அன்னத்தைக் குருவின் எதிரில் கொண்டுவந்து வைக்கவேண்டும். குரு அனுமதி கொடுப்பாராயின் அவ்வன்னத்தைப் புசிக்கலாம். ஒருகால் அனுமதி கொடாதிருப்பாராயின், உபவாஸமிருக்கவேண்டும். அவர் மனத்தைப் பரீக்ஷிக்கும் பொருட்டு ஒருகால் அனுமதி கொடாதிருப்பதும் இருக்கலாம். மிதமாகப் புசித்து நல்லியற்கையும் நல்லொழுக்கமும் அமைந்து சோம்பலின்றிக் குரு உபதேசித்த அர்த்தங்களில் விஸ்வாஸமுற்று இந்த்ரியங்களை வென்றிருக்கவேண்டும். ஸ்த்ரீகளிடத்திலாவது ஸ்த்ரீகளுக்குட்பட்ட புருஷர்களிடத்திலாவது தனக்கு அவஸ்யமான கார்யம் எவ்வளவோ அவ்வளவு மாத்ரம் பேசலாமேயன்றி அதிகமாய்ப் பேசலாகாது. ஸ்த்ரீ விஷயமான பேச்சைத் துறக்கவேண்டும். க்ருஹஸ்தனுக்கே அது கூடுமன்றி, க்ருஹஸ்தனாகாமல் வேதமோதுகையாகிற பெரியவ்ரதத்தில் இழிந்து ஸ்த்ரீஸம்போகம் முதலியவற்றைத் துறந்திருக்கவேண்டியவனாகிய ப்ரஹ்மசாரிக்கு அது கூடாது. வாயால் பேசுவதுமாத்ரத்தில் என்ன தோஷமென்று நினைக்கலாகாது. இந்த்ரியங்கள் மிகுந்த பலமுடையவை. அவை மனவூக்கமுடைய ஸன்யாஸியின் மனத்தையும் பறித்துக் கொண்டுபோய் விடும். ஆகையால் ஸ்த்ரீ விஷயமான வார்த்தையை எப்பொழுதும் நினைக்கலாகாது. யௌவன வயதுடையவன் குருபத்னிகளைக் கொண்டாவது யௌவன வயதுடைய மற்ற ஸ்த்ரீகளைக் கொண்டாவது தனக்குத் தலை வாருதல் உடம்புதேய்த்தல் ஸ்நானம் செய்தல் எண்ணெய் தேய்த்தல் முதலிய கார்யங்களைச்

செய்வித்துக் கொள்ளலாகாது. மடந்தைகள் அக்னியைப் போன்றவர்கள். புருஷன் நெய்க்குடம் போன்றவன். ஆகையால் புருஷன் தன்வயிற்றிற் பிறந்த பெண்ணையுங் கூட ஏகாந்தத்தில் துறக்கவேண்டும். மற்ற காலங்களில் அவர்கள் இட்ட கார்யத்தை மாத்ரம் செய்யவேண்டும். தன்னையே ஆத்மாவாக நினைக்கும்படி செய்வதாகிய இச்சரீரத்தை ஈஶ்வரன் எதுவரையில் கார்யங்களைச் செய்யுந்திறமை அமைந்திருக்கும்படி செய்கிறானோ, அதுவரையில் 'நான் தேவன் மனுஷ்யன்' என்னும் பேதபுத்தி தொடர்ந்துவரும். ஜீவனுக்கு அதனால் புருஷார்த்தமான மோக்ஷம் கைகூடாது. ஆகையால் அந்தப் பேதபுத்தி மாறாதிருக்கும் வரையில் தனக்கு ஏற்பட்ட வர்ணாஶ்ரம தர்மங்களினின்று மீளலாகாது. வர்ணாஶ்ரம தர்மங்களைத் தவறாமல் அனுஷ்டித்துக்கொண்டு வருவானாயின், அதனால் பேதபுத்திக்கிடமான அஜ்ஞானம் நீங்கி ஆத்ம பரமாத்ம விவேகாதிகள் உண்டாகப் பெற்றுக் கடைசியில் மோக்ஷத்தை அடைவான். ஆகையால் தேஹத்தில் திறமையுள்ளவரையில் வர்ணாஶ்ரமதர்மங்களை அனுஷ்டிக்க வேண்டும். ப்ரஹ்மசாரிக்குச்சொன்ன நல்லியற்கை நல்லொழுக்கம் முதலிய இவற்றையெல்லாம் பரப்ரஹ்மோபாஸனமாகிற வ்ரதத்திலிருக்கிற ஸந்யாஸியும் க்ருஹஸ்தனும் அவஶ்யம் அனுஷ்டிக்கவேண்டும். க்ருஹஸ்தனுக்கு ஸ்த்ரீஸம்போகமில்லாமையாகிற ப்ரஹ்மசர்யம் ஒரு காலத்தில் உண்டு; ஒரு காலத்தில் இல்லை. க்ருஹஸ்தன் ருதுகாலத்தில் ஸ்த்ரீஸம்போகம் செய்யலாமாகையால் அக்காலத்தில் அவனுக்கு அந்த ப்ரஹ்மசர்யம் கிடையாது. இந்த ப்ரஹ்மசர்யம் அனுஷ்டிக்க முடியாதாகையால் இதைக் குருவ்ருத்தியென்று சொல்லுவார்கள். வ்ரதத்தை அனுஷ்டிக்கும்

க்ருஹஸ்தர்கள் கண்ணுக்கு மையிடுவது எண்ணெய் தேய்த்துக்கொள்வது உடம்புக்கு எண்ணெய் தடவிப் பிடித்துக்கொள்வது சுவர் முதலிய இடங்களில் ஸ்த்ரீ சித்ரம் எழுதுவது மாம்ஸ மத்யங்களை உபயோகப்படுத்துவது பூச்சூடுவது சந்தனம் பூசுவது ஆடையாபரணம் முதலியவற்றால் அலங்கரித்துக் கொள்வது ஆகிய இவற்றையெல்லாம் துறக்கவேண்டும். ப்ராஹ்மண க்ஷத்ரிய வைஸ்யர்களென்கிற மூன்று வர்ணத்தவர்களும் இங்ஙனம் குருகுலவாஸம் செய்து அங்கங்களோடும் உபநிஷத்துக்களோடுங்கூடின வேதங்களைத் தன் புத்தி பலம் உள்ளவரையில் அத்யயனம் செய்து அவற்றின் பொருள்களையும் அறிந்து வ்ரதத்தைமுடித்துக்கொண்டு சக்தி உள்ள வரையில் குருவுக்கு இஷ்டமானவற்றைக் கொடுத்துக் குருவினால் அனுமதி செய்யப்பெற்று க்ருஹஸ்தாஸ்ரமத்தையாவது ஸன்யாஸாஸ்ரமத்தையாவது கைப்பற்றவேண்டும். க்ருஹஸ்தாஸ்ரமம் பெற்றவன் அதினின்று ஸன்யாஸாஸ்ரமத்தையாவது வானப்ரஸ்தாஸ்ரமத்தையாவது கைப்பற்றலாம். அல்லது அந்த க்ருஹஸ்தாஸ்ரமத்திலே யாவது ப்ரஹ்மசர்யத்திலே யாவது இருக்கலாம். ஈஸ்வரன் அக்னியினிடத்திலும் குருவினிடத்திலும் தன்னிடத்திலும் ஸமஸ்த பூதங்களிடத்திலும் உட்புகுந்து நியமித்துக் கொண்டிருக்கிறானென்றும், ஸமஸ்த பூதங்களும் அவனிடத்தில் இருக்கின்றனவென்றும், ஆயினும் அவன் அவற்றின் தோஷங்கள் தீண்டப்பெறாத பரிசுத்தனென்றும் அவனுடைய உண்மையை ஆராய்ந்தறிய வேண்டும். ப்ரஹ்மசாரியாவது க்ருஹஸ்தனாவது ஸன்யாஸியாவது வானப்ரஸ்தனாவது இங்ஙனம் ஈஸ்வரனுடைய உண்மையை அறிந்து தனக்கு ஏற்பட்ட ஆஸ்ரம தர்மங்களை அனுஷ்டித்துவருவானாயின்

தத்வத்ரயக்ஞானம் உண்டாகப் பெற்றுப் பராப்ரஹ்மத்தை அடைவான். முனிவர்களால் புகழப்பட்டவான ப்ரஸ்தனுடைய தர்மங்களைச் சொல்லுகிறேன். இவ்வுலகத்தில் இந்தத் தர்மங்களை அனுஷ்டிக்கின்ற முனிவன் ரிஷிகள் அடையத்தகுந்த ஸ்ரீவிஷ்ணுலோகத்தைப்பெறுவான். பயிர் செய்து விளைந்த சம்பாதான்யம் முதலியவற்றின் அன்னத்தையாவது பக்வமாகாத காய் கிழங்கு முதலியவற்றையாவது அக்னியில் பக்வஞ்செய்தபச்சைக்காய் முதலியவற்றையாவது புசிக்கலாகாது. தானே முதிர்ந்து உதிர்ந்து ஸூர்யகிரணங்களால் உலர்ந்த பழம் முதலியவற்றையே கொண்டுவந்து புசிக்கலாம். காட்டில் விளையும் செந்நெல் முதலிய தான்யங்களைக் கொண்டுவந்து சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட காலங்களில் சரு புரோடாசங்களைப் பக்வஞ்செய்து ஹோமம் செய்யவேண்டும். புதிய அன்னம் முதலியவை கிடைக்குமாயின் பழைய அன்னாதிகளைத் துறக்கவேண்டும். அக்னிகளைப் பாதுகாக்கும் பொருட்டே பர்ணசாலை ஏற்படுத்திக் கொள்ளலாம். அல்லது பர்வத குஹையையாவது பற்றவேண்டும். தான் பனி காற்று அக்னி மழை வெயில் இவற்றைப் பொறுத்துக்கொண்டு வெளியிலேயே இருக்கவேண்டும், ஜடை தரித்துத் தலைமயிர் உடம்புமயிர் நகம் தாடிமீசை இவற்றையும் உடம்பழுக்கையும் கழிக்காமல் கமண்டலு மான்தோல் தண்டம் மரவுரி முதலியவற்றையும் ஸ்ருக்கு ஸ்ருவம் முதலிய கருவிகளையும் தரித்துக்கொண்டிருக்கவேண்டும். வருத்தங்களையெல்லாம் பொறுத்துக்கொண்டு இந்த நியமத்தினின்று புத்தி மாறுதபடி ஊக்கத்துடன் பன்னிரண்டு வர்ஷங்களாவது எட்டு வர்ஷங்க

1. தத்வத்ரயஜ்ஞானமாவது-சேதன அசேதன ஈஸ்வரர்களென்கிற மூன்று தத்வங்களின் உண்மையைப் பற்றின அறிவு.

ளாவது நான்கு வர்ஷங்களாவது இரண்டு வர்ஷங்களாவது ஒரு வர்ஷமாவது இந்நியமங்களை அனுஷ்டித்த பின்பு வ்யாதிகளாலாவது கிழத்தனத்தினாலாவது தன் தர்மங்களை அனுஷ்டிக்கவும் வேதாந்த விசாரம் செய்யவும் ஸந்யாஸாஶ்ரமத்தைக் கைப்பற்றி நடத்தவும் சக்தியற்றிருப்பானாயின், அப்பொழுது உபவாஸம் முதலிய வ்ரதங்களை அனுஷ்டிக்கவேண்டும். அக்னிகளை ஆத்மஸமாரோபணம் செய்து அஹங்கார மமகாரங்களைத் துறந்து பஞ்ச பூதங்களின் ஸமுதாயரூபமான சரீரம் இந்த்ரியங்கள் முதலியவற்றை அவ்வவற்றின் காரணத்தில் மறைந்ததாக அனுஸந்திக்க வேண்டும். சரீரத்திலுள்ள ரந்த்ரங்களெல்லாம் ஆகாயத்திலும், ஶ்வாஸம் முதலிய ப்ராணன்கள் வாயுவிலும், உஷ்ணம் தேஜஸ்ஸிலும், ரக்தம் ஶ்லேஷ்மம் ஶுக்ரம் முதலியவை ஜலத்திலும், எலும்பு மாம்ஸம் முதலியவை பூமியிலும், மறைந்தனவாகப் பாவிக்க வேண்டும். எது எதினின்று உண்டாயிற்றோ அது அதன் காரணமான அதில் மறைந்ததென்று பாவிக்கவேண்டும். வாகிந்த்ரியமும் அதன் கார்யமான பேச்சும் அக்னிதேவனிடத்திலும், பாணீந்த்ரியமும் அதன் வ்யாபாரமும் இந்த்ரனிடத்திலும், பாதேந்த்ரியமும் அதன் வ்யாபாரமான கதியும் கால ஸ்வரூபனான விஷ்ணுவினிடத்திலும், உபஸ்தேந்த்ரியமும் அதன் வ்யாபாரமான ஸம்போகமும் ப்ரஜாபதியிடத்திலும், பாயுவென்கிற இந்த்ரியம் தன் வ்யாபாரமான மலவிஸர்க்கத்துடன் ம்ருத்யுவிடத்திலும், ஶ்ரோத்ரேந்த்ரியம் தன் விஷயமான சப்தத்துடன் திக்கிலும், த்வகிந்த்ரியம் தன் விஷயமான ஸ்பர்சத்துடன் வாயுவிடத்திலும், சக்ஷுரிந்த்ரியம் தன் விஷயமான ரூபத்துடன் ஸூர்யனிடத்திலும், ரஸனேந்த்ரியம் தன் விஷயமான ரஸத்துடன்

வருணனிடத்திலும், க்ராணேந்த்ரியம் தன் விஷயமான கந்தத்துடன் அஶ்விதேவதைகளிடத்திலும், மனம் தன் விஷயமான மனோரதங்களுடன் சந்த்ரனிடத்திலும், புத்தி தன் விஷயங்களோடு ப்ரஹ்மதேவனிடத்திலும், அஹங்காரம் தன் கார்யமான தேஹாத்மாபிமானத்திகளுடன் ருத்ரனிடத்திலும், சித்தம் ஸத்வமென்கிற தன் வ்யாபாரத்துடன் க்ஷேத்ரஜ்ஞனிடத்திலும், ஸாத்விகாஹங்காரம் தன் கார்யமான இந்த்ரியங்களுடன் தன் காரணமான மஹத்தத்வத்திலும், பூமி ஜலத்திலும், ஜலம் தேஜஸ்ஸிலும், தேஜஸ்ஸு வாயுவிலும், வாயு ஆகாசத்திலும், ஆகாசம் தாமஸாஹங்காரத்திலும், தாமஸாஹங்காரம் மஹத்தத்வத்திலும், மஹத்தத்வம் அவ்யக்தமென்கிற ப்ரதானத்திலும், அந்த ப்ரதானம் பரமாத்மஸ்வரூபனான ஜீவாத்மாவினிடத்திலும் ஸம்பந்தித்தனவாகப் பாவிக்கவேண்டும். இங்ஙனம் யிருந்திருக்கிற ஜீவன் கேவலஜ்ஞானஸ்வரூபனென்றும் பரமாத்மாவுக்குச் சரீரமாகி அவனால் நியமிக்கப்பட்டிருப்பவனாகையால் பரமாத்மஸ்வரூபனென்றும் அறிந்து தன்னிடத்தில் ஜாதி குணம் முதலிய அபிமானமற்றுக் கட்டைகளையெல்லாம் எரித்த பின்பு அக்னி ஓய்வதுபோல, ஓய்ந்திருக்க வேண்டும். பன்னிரண்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

ஸன்யாஸியின் தர்மங்களையும், ப்ரஹ்லாதனுக்கும் அஜகர வ்ரதத்திலிருந்த முனிவருக்கும் சேர்ந்த ஸம்வாதத்தையும் கூறுதல்.

ஸ்ரீநாரதர் சொல்லுகிறார்:— வானப்ரஸ்தன் தனக்கு ஏற்பட்ட நியமங்களை அனுஷ்டித்தபின்பு வேறு ஆஸ்ரம தர்மங்களை அனுஷ்டிக்கவல்லனாயிருப்பானாயின், இங்ஙனம் அனுஸந்தித்துத் தேஹத்தை மாத்ரம் மிகுத்திக் கொண்டு தேஹத்தைத் தொடர்ந்த மற்ற எல்லாவற்றையும் துறந்து ஸந்யாஸாஸ்ரமத்தைக் கைப்பற்றி ஒரு க்ராமத்தில் ஒருநாளைக்கு மேல் தங்காமல் எதிலும் விருப்பமற்றுப் பூமியில் ஸஞ்சரிக்கவேண்டும். இந்த ஸன்யாஸி துறக்கப்பட்டவைகளில் எதையேனுமொன்றைக் கைப்பற்றுவானாயின், கௌபீனம் அரையிலுடுக்கும் வஸ்த்ரம் இவற்றை மாத்ரமே கைப்பற்றலாம். ஆபத்தில்லாத ஸமயத்தில் த்ரிதண்டம் கமண்டலு உபவீதம் அரைநாண் இவை தவிர மற்ற எதையும் கைப்பற்றலாகாது. குளிர் காற்று முதலியவற்றைப் பொறுக்க முடியாத ஆபத்காலத்தில் போர்வை முதலியவற்றை மாத்ரமே அங்கீகரிக்கலாம். எங்கும் நியதமாக வாஸஞ்செய்யாமல் பிக்ஷையெடுத்து ஜீவித்துக்கொண்டு ஆத்மானுபவத்தினால் ஸந்தோஷமுற்றுத் தனியனாகவே திரியவேண்டும். ஸமஸ்த பூதங்களுக்கும் நண்பனாகிக் கோபமின்றி ஸ்ரீமந் நாராயணனே ப்ராப்யனும் ப்ராபகனும் ஆதாரனு மேயனும் மனவுறுதியுற்றுச் சேதனா சேதனங்களைக் காட்டிலும் விலக்ஷணனும் ஸ்வரூபத்தினாலும் ஸ்வபாவத்தினாலும் விகாரமற்றவனுமாகிய பரமாத்மாவினிடத்தில் இந்த ஜகத்தெல்லாம் இருப்பதாகவும், பரப்ரஹ்மமென்று ஓதப்படுகிற அந்தப்பரமாத்மா சேதனா சேதனரூபமான இந்த ஜகத்தில் எங்கும் அந்தராத்மாவாயிருப்பதாகவும்

பாவிக்கவேண்டும். காலை மாலைகளில் தேஹத்தைக்காட்டிலும் வேறுபட்ட ஆத்மஸ்வரூபத்தை உணர்ந்த ஸந்யாஸி பரமாத்ம ஸ்வரூபத்தை ஆராயவேண்டும். ஸ்வப்நாவஸ்தையில் தேஹத்தைக் காட்டிலும் விலக்ஷணனான ஆத்மாவின் தோற்றத்தை ஆராய்ந்து அப்பொழுது பகவானே விசித்ரமான மார்க்கங்களையும் ரதங்களையும் மற்றும் பலவகையான வஸ்துக்களையும் படைத்து அநுபவிப்பிக்கிறானென்பதையும் ஆராய்ந்தறியவேண்டும். ஸம்ஸார பந்தமோக்ஷங்கள் பகவானுடைய ஸங்கல்பத்தினால் ஏற்படுகின்றனவைகளேயன்றி அவை ஜீவனுக்கு இயற்கையிலேற்பட்டவையன்றென்றும் அநுஸந்திக்கவேண்டும். ஸம்ஸாரிகள் தப்பாமல் நேரவேண்டிய மரணத்தை எங்ஙனம் விரும்பமாட்டார்களோ, அங்ஙனமே ஸந்யாஸி நிலையற்றதான ஜீவிதத்தை அபிநந்திக்கலாகாது. ப்ராணிகளின் உத்பத்தி விநாசங்களுக்குக் காரணமான காலத்தின் கதியையே எதிர்பார்க்கவேண்டும். கள்ளப் பொய் நூல்களில் மனம் செலுத்தலாகாது. ஜீவனோபாயமாக எந்த வ்ருத்தியையும் அங்கீகரிக்கலாகாது. ஜல்பம் விதண்டை முதலியவற்றிற்கிடமான தர்க்கங்களைத் துறக்கவேண்டும். ஆக்ரஹத்துடன் ஒரு பக்ஷத்தையும் மனத்தில் ஏற்றுக் கொள்ளலாகாது. க்யாதிலாபாதிகளை விரும்பிச் சிஷ்யர்களைச் சேர்த்துக் கொள்ளலாகாது. பல க்ரந்தங்களைப் படிக்கலாகாது. பிறர்க்குப் படிப்பிக்கையும் கூடாது. மடாதிபதியாயிருக்கை முதலிய ஆரம்பங்களைச் செய்யலாகாது. வெளியிந்த்ரியங்களையும் உள்ளிந்த்ரியத்தையும் அடக்கிக் கொண்டிருக்க வேண்டும். ஸந்யாஸாஸ்ரமம் பெரும்பாலும் தர்மாநுஷ்டானத்திற்காக ஏற்பட்டதன்று. அதில் ஜ்ஞானமே முக்யம். ஆகையால் தர்மங்களைச் செய்தாலும் செய்யலாம்; துறந்தாலும்

துறக்கலாம். ஸன்யாஸாஸ்ரமத்திலிருப்பவன் ஜ்ஞான ஹீனனுயிருப்பானுயின் தர்மத்தை அநுஷ்டிக்க வேண்டும். ஜ்ஞானமுடையவன் அதைத் துறக்கலாம். ஜ்ஞானமுடையவனும், ஜ்ஞானயோகத்திற்குத் தடையாகாதிருக்குமாயின், அதை அநுஷ்டிக்கலாம். தடை செய்யுமாயின், அதைத் துறக்கவேண்டும். உபவாஸம் முதலிய வ்ரதங்களை அநுஷ்டிப்பானுயின் அவை தேஹத்திற்குத் தௌர்ப்பல்யத்தை விளைத்து யோகத்தைக் கொடுக்குமாகையால் அத்தகைய தர்மங்களை ஜ்ஞானயோகத்தையே முக்யமாகக் கொண்ட ஸன்யாஸி அநுஷ்டிக்கலாகாது. மற்றும், ஸன்யாஸி தர்மங்களால் ஸாதிக்க வேண்டிய இஹபரலோகஸுகாநுபவங்களில் விருப்ப மற்றவன். அதர்மம்போல் தர்மமும் இஹபரலோக ஸுகங்கள் மூலமாய் மோக்ஷத்தைத்தடுக்குமாகையால் அவன்பெரும்பாலும் தர்மாதர்மங்களை ஸமமாக நினைத்திருக்கவேண்டும். தனக்கு ஜ்ஞானம் உண்டென்பதை அறிவிக்கும் அடையாளங்களையெல்லாம் மறைத்துக்கொண்டு தன்ப்ரயோஜனத்தையும் பிறர்க்கு அறிவிக்காமல் பகவானுடைய திவ்யமங்கள விக்ரஹத்தையே த்யானித்துக்கொண்டு பித்தம் பிடித்தவன்போலும் ஒன்றுமறியாத சிறுவன்போலுமிருக்கவேண்டும். தான் நன்றாகப் பேசவல்ல பண்டிதனுயினும் தன்னைப் பிறர் ஊமையென்று நினைக்கும்படி காண்பிக்கவேண்டும். தேஹத்தைக் காட்டிலும் விலக்ஷணனான ஆத்மாவை ஆராய்ந்து பரமாத்ம த்யானத்திலேயே ஊக்கமுற்றிருக்கவேண்டும். ஜ்ஞானியாயிருப்பவன் தன் மாஹாத்ம்யத்தை வெளியிடாதிருக்கவேண்டுமென்கிற இவ்விஷயத்தில் த்ருஷ்டாந்தமாக ப்ரஹ்லாதனுக்கும் அஜகர வ்ரதத்திலிருந்த ஒரு முனிவர்க்கும் நடந்த ஸம்வாதமாகிற பழையதான இவ்விதிஹாஸத்தைச்

சொல்லுகிறார்கள். அஜகர வ்ரதத்திலிருக்கின்ற அம்முனிவர் ஸஹ்ய பர்வதத்தின் தாழ்வரையில் காவேரியின் கரையில் வெறுந்தரையில் படுத்து உடம்பெல்லாம் புழுதி படிந்து நிர்மலமான தேஹத்தின் ஒளி மறைந்திருக்கையில், சில மந்த்ரிகளோடு கூடி உலகங்களின் உண்மையை அறிய விரும்பித் திரிகின்ற பகவத் பக்தனான ப்ரஹ்லாதன் அம்முனிவனைக் கண்டான். செயல் ஆகாரம் வாக்கு அடையாளங்கள் வர்ணாச்ரமங்கள் இவை முதலியவற்றால் இன்னவனென்றும் இன்னவனல்லனென்றும் ஜனங்கள் அவனை நிச்சயித்தறிய முடியாது. மஹாபாகவதனான ப்ரஹ்லாதன் அவருடைய பாதங்களைத் தன் சிரத்தினால் ஸ்பர்சித்து நமஸ்காரம் செய்து விதிப்படி பூஜித்து அவரது உண்மையை அறிய விரும்பி மேல் வருமாறு வினவினான்.

ப்ரஹ்லாதன் சொல்லுகிறான்:—ப்ரயத்னம் செய்து போகங்களை அனுபவித்துக்கொண்டு தேஹ போஷணம் செய்பவனுடைய தேஹம்போல் உம்முடைய தேஹம் பருத்திருக்கின்றது. இவ்வுலகத்தில் முயற்சி செய்பவர்களுக்கே பணம் கிடைக்கும். பணமுள்ளவர்களுக்கே போகங்கள் நேரும். நீர் ஒரு முயற்சியுமில்லாதிருக்கின்றீர். உமக்குப் பணம் கிடைக்க ப்ரஸக்தியில்லை. போகங்களுக்கு முதலே இடமில்லை. போகங்களை அனுபவிப்பவர்களின சரீரமே பருத்திருக்கும். போகமில்லையாயின் சரீரம் இளைத்துப்போம். உமக்குப் போகமில்லாமலே தேஹ புஷ்டி எப்படி உண்டாயிற்று? அந்தணரே! நீர் படுத்து ஒரு முயற்சியுமின்றி யிருக்கிறீராகையால் போகங்களை விளைக்கவல்ல பணம் உமக்கு இல்லையென்பது நிச்சயம். இது எல்லார்க்கும் தெரிந்தவிஷயமே. ப்ராஹ்மண ஸ்ரேஷ்டரே! போகங்களை அனுபவியாதிருக்கிற உம்முடைய

தேஹம் எந்தக் காரணத்தினால் பருத்திருக்கின்றதோ அதை எனக்குச் சொல்லக்கூடுமாயின், சொல்வீராக. மற்றும், நீர் எல்லாம் அறிந்தவர்; கார்யங்களைச் செய்ய வல்ல சரீரமுடையவர்; சாதுர்யம் அமைந்தவர்; நீர் லோக ரஞ்சகமான பல கதைகளைச் சொல்ல வல்லவர். இத்தகையராயினும், உலகமெல்லாம் வ்யாபாரத்தைச் செய்து கொண்டிருக்கையில் அதைப் பார்த்துக்கொண்டு உதாஸீனராய் வெறுமனே படுத்துக்கொண்டிருக்கிறீர். இதற்கென்ன காரணமோ அதையும் நான் கேட்கக் கூடுமாயின் சொல்வீராக.

ஸ்ரீநாரதர் சொல்லுகிறார்:—இங்ஙனம் அஸுர ஸ்ரேஷ்டனான ப்ரஹ்லாதனால் வினவப்பெற்ற மஹானுபாவராகிய அம்முனிவர் அவனுடைய அம்ருதம் போன்ற வாக்கினால் தூண்டப்பட்டுப் புன்னகை செய்து அவனைக் குறித்து மொழிந்தார்.

ப்ராஹ்மணர் சொல்லுகிறார்:—ஓ அஸுர ஸ்ரேஷ்டனே! ப்ராணிகளின் ப்ரவருத்தி நிவ்ருத்திகளுக்குக் காரணங்கள் இன்னவை யென்கிற இவ்விஷயம் உனக்கே தெரியும். ஸமஸ்த லோகங்களின் மனக்கருத்தையும் அறியுந்திறமை உனக்கு உண்டல்லவா? இந்த்ரியங்களுக்கு விஷயமாகாத வஸ்துக்களையும் காணவல்ல பெரியோர்களுக்குள் நீ மேலாயிருப்பவன். மற்றும் ஷாட்குண்ய பூர்ணனும் தன் தேஜஸ்ஸினால் ப்ரகாசிப்பவனுமாகிய ஸ்ரீமந்நாராயணன் அனன்யப்ரயோஜனமான உன் பக்தியால் ஸந்தோஷம் அடைந்து ஸர்வகாலமும் உன் ஹ்ருதயத்தில் இருந்துகொண்டு அஜ்ஞானமாகிற அந்தகாரத்தைப் போக்கிக் கொண்டிருக்கிறான். அப்படிப்பட்ட உனக்குத் தெரியாதது எதுவுமேஇல்லை. ராஜனே! ஆயினும் நான் பெரியோர்களிடத்தில் கேட்டபடி உன்

கேள்விகளுக்கு மறுமொழி சொல்லுகிறேன், கேட்பாயாக. தனக்குச் சுத்தியை விரும்புகிறவன் உன்னோடு அவஸ்யம் ஸம்பாஷணம் செய்யவேண்டுமல்லவா? நான், வருந்தித் தேடிப் பெறக்கூடிய காமபோகங்களாலும், நிறைக்கமுடியாததாகி மேன்மேலும் ஜன்மபரம்பரைகளை விளைவிப்பதுமான சப்தாதி விஷயங்களைப் பற்றின விருப்பத்தினால் தூண்டப்பட்டுப் புண்ய பாபகர்மங்களைச் செய்து முன்பு பலயோனிகளில் பிறந்தேன். அக்கர்மங்களால் திரிந்துகொண்டிருக்கிற நான் தெய்வாதீனமாய்த் தர்மத்தினால் ஸ்வர்க்கத்தையும் ஜ்ஞானத்தினால் மோக்ஷத்தையும் அதர்மத்தினால் பசு பக்ஷி முதலிய ஜன்மங்களையும் மீளவும் மனுஷ்யஜன்மத்தையும் விளைவிக்கவல்ல இந்த மனுஷ்யஜன்மத்தைப் பெற்றேன். ஸ்வர்க்க மோக்ஷங்களை விளைவிப்பதான இந்த மனுஷ்யஜன்மத்திலும் மைதுனாதி ஸுகத்திற்காகவும் துக்கங்கள் நீங்குவதற்காகவும் கர்மங்களைச் செய்கிற ப்ராணிகளுக்கு விபரீத பலனே உண்டாவதைக் கண்டு நான் கர்மங்களைச் செய்யும் முயற்சியினின்று மீண்டேன். ஜ்ஞானானந்தஸ்வரூபனான ஜீவாத்மாவுக்கு ஸுகமும் இயற்கையில் ஏற்பட்டதுதான். ஆகையால் அதற்காகப்ரயத்னம் செய்யவேண்டியதில்லை. ஆனால் ஜீவன் ஸுகரூபனாகத் தோற்றவில்லையே யென்றால், எல்லாச் செயல்களுமற்ற ஸுகமே அந்த ஜீவனுக்கு ஸ்வரூபம். ஆகையால் எல்லா முயற்சிகளும் அடங்கப்பெற்று ஆத்மஸ்வரூபத்தின் உண்மையை ஆராய்ந்தால் அப்பொழுதுதான் ஜீவன் ஸுகரூபனாகத் தோற்றுவான். சப்தாதிவிஷயபோகங்களெல்லாம் மனோரதமாத்ரத்தினால் உண்டாகின்றவை யென்பதையும் நிலையற்றவை யென்பதையும் கண்டு ஆத்மாவின் உண்மையை ஆராய்வதில் நுழைந்து ப்ராரப்த கர்மத்

தை அனுபவத்தினால் கழிக்க விரும்பிப் படுத்திருக்கி றேன். இங்ஙனம் கேவல ஸுகரூபமாயிருப்பதும் புரு ஷார்த்தமும் வருந்தி விளைவிக்க வேண்டாமல் தானே ஸித்தமாயிருப்பதுமாகிய இந்த ஆத்மஸ்வரூபத்தை மற ந்து, ஜீவாத்மாக்கள் தமக்கு இயற்கையில் ஏற்படாத தும் 'நான் தேவன், நான் மனுஷ்யன்' என்கிற துரபி மான ரூபமுமான பேதபுத்தியை ஏறிட்டுக்கொண்டு அத னால் கர்ப்ப ஜன்ம ஜரா மரணாதிகளால் விசித்ரமாயிருப்ப தும் பயங்கரமுமான ஸம்ஸாரத்தை மேன்மேலும் வளர்த் திக்கொள்கிறார்கள். தெரியாதவன், ஜலம் அதிலுள்ள புல் பாசி முதலியவற்றால் மறைந்திருக்கையில் இந்த ஜல மிருக்குமென்பதை அறியாமல் அதைத் துறந்து ஜலம் வேண்டுமென்னும் விருப்பத்தினால் ஜலம்போல் தோற் றுகின்ற கானலைக்கண்டோடுவதுபோல ப்ராணிகள் இயற் கையில் ஸுகரூபமான ஆத்மஸ்வரூபத்தை மறந்து புரு ஷார்த்தமல்லாத சப்தாதிவிஷயஸுகங்களைத் தேடியோ டுகிறார்கள். கர்மத்திற்குட்பட்டவர்களாகையால் நினைத் தபடி செய்து நிறைவேற்ற வல்லவரல்லாத ஜீவாத்மாக் கள் கர்மாதீனமாய் ஏற்பட்டிருக்கின்ற தேஹமும் இந்த்ரி யம் முதலியவற்றால் தங்களுக்கு ஸுகத்தையும் துக்கம் நீங்குவதையும் விரும்பி அடிக்கடி தொடங்கும் செயல்க ளெல்லாம் அவர்கள் விரும்பினஸுகத்தையாவது துக்கத் தின் நீங்குதலையாவது விளைக்காமல் வீணாயொழிகின்றன. ஜீவாத்மாக்கள் ஆத்யாத்மிகம் முதலிய துக்கங்களால் ஒருகாலும் விடுபடாமல் வருந்தி ப்ரயத்னம் செய்து ஸம் பாதித்த பணங்களாலாவது அவற்றால் விளையும் சபதாதி விஷயங்களாலாவது ? என்ன ஸுகம் உண்டாகும் பணம் ஸம்பாதிக்கும்பொழுது நேரிடும் வருத்தத்தைச் சொல்லி முடியாது. ஸம்பாதித்த பின்பும் இன்னம் பணம் வேண்டு

மென்கிற விருப்பம் தீராது. இந்த்ரியங்களை வெல்ல முடியாதவராகையால் அந்தப் பணத்தைக் கொண்டு காமங்களை எவ்வளவு அனுபவிக்கினும் மேன்மேலும் விருப்பம் வளர்ந்து வருந்துவார்கள். திருடர் முதலியவர் வந்து பணத்தைப் பறித்துக்கொண்டு போனால் என்செய்வோமென்னும் பயத்தினால் உறங்கமாட்டார்கள். எல்லாரிடத்திலும் 'இவர்கள் நம்பணத்தைப் பறிப்பார்களோ என்னவோ?' என்று சங்கிப்பார்கள். ஆகையால் பணத்தைச் சம்பாதித்த பின்பும் வருத்தம் நீங்காது. ப்ராணன்களையும் ப்ராணன்களைப்போன்ற பணத்தையும்பாது காக்கும் ப்ராணிகளுக்கு மன்னவன் திருடன்சத்ரு பந்து பசு பக்ஷிகள் யாசகர்கள் காலம் இவர்களிடத்தினின்றும் தன்னிடத்தினின்றும் தினந்தோறும் பயம் தொடர்ந்து கொண்டேயிருக்கும். ப்ராணன்களிடத்திலும் பணத்திலும் ப்ரீதி மாறாதிருக்குமாயின், சோகம் மோஹம் பயம் கோபம் ராகம் அதைர்யம் ச்ரமம் இவை முதலிய வருத்தங்கள் ப்ராணிகளுக்கு ஓயமாட்டா. ஆகையால் பண்டிதனாயிருப்பவன் ப்ராணன்களிலும் பணத்திலும் ப்ரீதியைத் துறக்கவேண்டும். நமக்கு இவ்வுலகத்தில் வண்டு மலைப்பாம்பு இவ்விரண்டும் மேலான ஆசார்யர்கள். நான் அவற்றின் நடத்தையை ஆலோசித்தே வைராக்யத்தையும் தெய்வாதீனமாய்க் கிடைத்தவற்றில் ஸந்தோஷத்தையும் பெற்றேன். வண்டினிடத்தினின்று ஸமஸ்த காமங்களிலும் விருப்பமில்லாமையை அப்யஸித்தேன். வண்டுகள் இங்குமங்கும் திரிந்து புஷ்பங்களினின்று கொண்டுவந்து கூடு கட்டி வைத்திருக்கும் தேனை அவ்வண்டுகளைக் கொன்று மற்றொருவன் பறித்துக்கொண்டு போகின்றான். அங்ஙனமே ஒருவன் வருந்திச் சம்பாதித்த பணத்தை அவனைக்கொன்று மற்றொருவன் பறித்

துக்கொண்டு போவானென்னும் இவ்விஷயத்தை வண்டினிடத்தினின்று தெரிந்துகொண்டேன். மலைப்பாம்பு ஓரிடத்தினின்று நகராமல் தெய்வாதீனமாய்க் கிடைத்தவற்றைப் புசித்து ஸந்தோஷமுற்றிருக்கின்றது. அங்ஙனமே நானும் ஒரு வ்யாபாரமும் செய்யாமல் தெய்வாதீனமாய்க் கிடைத்த அன்னாதிகளால் ஸந்தோஷமுற்றிருக்கிறேன். அப்படித் தெய்வாதீனமாய் ஒன்றும் கிடைக்காது போயினும் தைர்யத்துடன் பல நாளாயினும் வெறுமனே படுத்துக்கொண்டிருக்கிறேன். அன்னம் ஒருகால் அல்பமாகவும், ஒருகால் வெகுவாகவும் கிடைக்கும். ஒருகால் நன்றாயிருக்கும். ஒருகால் நன்றாயிராது. ஒருகால் வெகு ரஸமுள்ளதாயிருக்கும்; ஒருகால் ரஸமற்றிருக்கும். ஒருகால் ச்ரத்தையுடன் கொண்டுவந்து கொடுப்பார்கள். ஒருகால் பலவாறு பழித்துக்கொண்டு வந்து கொடுப்பார்கள். ஒருகால் பகல் இரவு இரண்டு வேளையும் யதேஷ்டமாய்க் கிடைக்கும். எப்படி கிடைக்கினும் கிடைத்தபடியே புசிப்பேன். அது நன்றாயிருப்பினும் நன்றாயிராமற்போயினும், ரஸமுள்ளதாயிருப்பினும், ரஸமற்றிருப்பினும், ச்ரத்தையோடு கொடுப்பினும், பழித்துக் கொடுப்பினும், அதைப் பற்றி ஸந்தோஷமாவது வருத்தமாவது எனக்குக் கிடையாது. நல்ல வஸ்த்ரமாவது வெண்பட்டாவது மான்தோலாவது கார்த்துணியாவது மரவுரியாவது வேறு எதுவாவது கிடைக்கினும் தெய்வாதீனமாய்க் கிடைத்த அதை உடுத்துக் கொள்கிறேன். இங்ஙனம் ப்ராரப்தகர்மத்தைப் புசித்துக்கொண்டு மனக்களிப்புற்றிருக்கிறேன். ஒருகால் வெறுந்தரையிலும், ஒருகால் புல்லெழுந்த பூமியிலும், ஒருகால் இலைகள் படுத்தபூமியிலும், ஒருகால் கல் தரையிலும், ஒருகால் புழுதியிலும் படுத்துக்கொள்கிறேன். ஒருகால் உப்பரிகையில் கட்டி

லிலும் மெத்தையிலும் பிறருடைய இஷ்டத்தின்படி படுத்துக் கொள்ளுகிறேன். ஒருகால் நன்றாக ஸ்நானம்செய்து சந்தனம் பூசி அழகான ஆடை உடுத்துப் பூமாலை அணிந்து ரதம் முதலிய வாஹனங்களின் மேலேறித் திரிகிறேன் பாபு! ஒருகால் அரையில் ஆடையின்றித் திகம்பரனாய்ப் பேய்பிசாசுபோலத் திரிகிறேன். ஜனங்கள் இயற்கையாகவே ஒருவரோடொருவர் பொருந்தாமல் சிலர் துதிப்பார்கள்; சிலர் பழிப்பார்கள். நான் துதிக்கிறவர்களைப் புகழ்வதுமில்லை. நிந்திக்கிறவர்களைப் பழிப்பதுமில்லை. அவர்கள் அனைவர்க்கும் தர்மம் முதலிய நன்மைகளும் மஹானுபாவனான பகவானிடத்தில் மனவூக்கமும் உண்டாகும்படி ப்ரார்த்தித்துக்கொண்டிருப்பேன். ஜாதி உருவம் முதலிய விகற்பங்களை சித்தத்தில் மறைந்ததாகவும் அந்தச் சித்தம் தேஹாத்ம ப்ரமத்திற்கிடமான மனத்தில் மறைந்ததாகவும், அந்த மனம் ஸாத்விகாஹங்காரத்தில் மறைந்ததாகவும், அந்த ஸாத்விகாஹங்காரம் மூல ப்ரக்ருதியில் மறைந்ததாகவும், அந்த மூலப்ரக்ருதி ஆத்மானுபூதியில் மறைந்ததாகவும் பாவிக்கவேண்டும். பிறகு தன்னைச் சரீரமாகவுடைய பரமாத்மாவை ஆராய்ந்து அவனை த்யானித்துக் கொண்டிருக்கும் முனிவன் செயலற்றுப் பரமாத்ம ஸ்வரூபனாகிய பரிசுத்த ஜீவஸ்வரூபத்தை அனுஸந்தித்துச் சரீரத்தினின்று மீளவேண்டும். இங்ஙனம் என்னுடைய நடத்தையை நான் மறைத்துக்கொண்டிருப்பினும் பாகவத ஶ்ரேஷ்டனாகிய உனக்கு விவரித்துச் சொன்னேன். புத்தி ஹீனர்கள் இந்த என் நடவடிக்கையை லோக மர்யாதைக்கும் சாஸ்த்ர மர்யாதைக்கும் இணங்காததென்று நினைப்பார்கள். நீ பகவானிடத்தில் மனவூக்கமுடையவனாகையாலும் தர்ம ஸூக்ஷ்மம் தெரிந்தவனாகையாலும் நீ அப்படி நினைக்க

மாட்டா யென்று உனக்கு இதை மறைக்காமல் வெளியிட்டேன்.

ஸ்ரீ நாரதர் சொல்லுகிறார்:—அஸுரச்ரேஷ்டனாகிய ப்ரஹ்லாதன் அம்முனிவரிடத்தினின்று பரமஹம்ஸர்களின் தர்மத்தைக் கேட்டு ஸந்தோஷமுற்று அவரைப் பூஜித்து விடைபெற்றுக்கொண்டு தன் க்ருஹத்திற்குப் போனான். பதின்மூன்றாவது அத்யாயம் முற்றிற்று.



க்ருஹஸ்தாஸ்ரம தர்மங்களைக் கூறுதல்

யுதிஷ்டிரன் சொல்லுகிறான்:—தேவர்ஷீ! இல்லற வாழ்க்கையில் நிலைநின்ற மனமுடைய என்னைப்போன்றவன் எவ்விதத்தில் இந்த ஸந்யாஸிகள் பெறும் பதவியாகிய மோக்ஷத்தைப் பெறலாமோ, அவ்விதத்தைச் சொல்லாக.

ஸ்ரீநாரதர் சொல்லுகிறார்:—மஹாராஜனே! நீ எல்லாம் அறிந்தவனாயினும் உலகத்தவர்களை அனுக்ரஹிக்கும் பொருட்டு நன்றாக வினவினை. நீ கேட்ட க்ருஹஸ்தாஸ்ரம தர்மத்தை உனக்கு நான் சொல்லுகிறேன். இந்தத் தர்மத்தை அனுஷ்டிப்பதனால் புண்யபாபகர்மங்கள் தொலைந்து ஜ்ஞானயோகம் கைகூடும். மன்னவனே! க்ருஹஸ்தாஸ்ரமத்திலிருப்பவன் அவ்வாஸ்ரமத்திற்குரிய ஸந்த்யாவந்தனம் பஞ்சமஹாயஜ்ஞங்கள் முதலிய அவஸ்யமான கர்மங்களை ஒன்றான வாஸுதேவனுக்கு அர்ப்பணமென்னும் புத்தியுடன் அனுஷ்டித்துக் கொண்டு அவ்வாஸுதேவபகவானுடைய குணங்களை மனத்தில் நினைந்து நைந்து உருகுந்தன்மையுள்ள பாகவதர்களை உபாஸிக்க வேண்டும். க்ருஹஸ்தாஸ்ரம தர்மங்களை அனுஷ்டிக்க வேண்டிய காலம் தவிர மற்ற காலங்களில் சாந்திமுதலிய

குணங்கள் அமைந்த ஜனங்களுடன் கூடி அப்பாகவதர்களிடத்தினின்று அம்ருதம்போன்ற பகவானுடைய அவதார கதைகளை ஶ்ரத்தையுடன் அடிக்கடி கேட்கவேண்டும். அப்பெரியோர்களின் ஸஹவாஸத்தினால் தேஹத்தில் அஹங்காரத்தையும், பெண்டிர் பிள்ளை முதலியவர்களிடத்தில் மமகாரத்தையும் மெல்லமெல்லத் துறக்கவேண்டும். ஸ்வப்னத்தினின்று எழுந்தவன் ஸ்வப்னத்தில் கண்ட வஸ்துக்களெல்லாம் நிலையற்றவையென்று நினைப்பதுபோலத் தேஹம் வீடு வாசல் பிள்ளை பெண்டிர் முதலியவற்றில் அபிமானத்தைத் துறந்து இவையெல்லாம் நிலையற்றவையென்று நினைக்கவேண்டும். அந்நிலையுடைய பண்டிதன் அத்தேஹம் முதலியவற்றில் மனப்பற்றற்றவனாயினும் பற்றுடையவன்போல ப்ராணதாரணத்திற்குவேண்டிய காரியத்தை அவற்றால் நடத்திக்கொண்டு மனுஷ்யத்வம் முதலியவை அந்தந்த தேஹங்களின் தர்மங்களேயன்றி ஆத்மாவின் தர்மமன்றென்று அனுஸந்திக்கவேண்டும். ஜ்ஞாதிகளும் தாய்தந்தைகளும் பிள்ளைகளும் உடன்பிறந்தவர்களும் நண்பர்களும் மற்றவர்களுமெதைச் சொல்லுகிறார்களோ எதை விரும்புகிறார்களோ அதைத்தான் அப்படியே மமகாரமின்றிப் புகழவேண்டும். மழை பெய்து விளைந்த தான்யம் முதலியவற்றையும் பூமியில் விளையும் ஸ்வர்ணம் முதலியவற்றையும் திடீரென்றுநேரிடுகின்றவற்றையும் பகவானுடைய அனுக்ரஹத்தினால் ஏற்பட்டவையென்று பாவித்து அவற்றில் தன் தேஹதாரணத்திற்கு வேண்டியவற்றை மாத்ரம் உபயோகப்படுத்திக் கொள்ளலாம். தம் வயிறு எவ்வளவால் நிறையுமோ அவ்வளவை மாத்ரமே ப்ராணிகள் தம்முடையதென்று அபிமானிக்கலாமேயன்றி, அதற்கு மேற்பட்டவற்றைத் தம்முடையதென்று அபிமானிப்பார்களாயின், அவர்கள்

திருடர்களே; அவர்கள் தண்டனைக்கு உட்படுவார்கள். அவர்களுக்கு எப்பொழுதும் ஸம்ஸாரம் நீங்காது. ஆகையால் அவற்றைப்பக்ஷிக்கிற நாய் பூனை முதலிய மிருகங்கள், ஒட்டகம், கழுதை, குரங்கு, எலி, நகரும ஜந்துக்கள், ஈக்கள் இவற்றையெல்லாம் தன் பிள்ளைகளைப்போலப் பார்க்க வேண்டுமேயன்றி அவற்றின்மேல் கோபங்கொண்டு ஹிம்ஸிக்கலாகாது. பிள்ளைகளுக்கும் இந்த மிருகமுதலியவற்றிற்கும் என்ன பேதம்? ஒருபேதமும் இல்லை. தான் க்ருஹஸ்தனாகிலும் மிகவும் ப்ரயாஸைப் பட்டுத்தர்மார்த்தகாமங்களைக் கைப்பற்றலாகாது. தேசகாலங்களுக்குத் தகுந்தபடி தெய்வாதீனமாய்க் கிடைப்பதைக் கொண்டு ஸந்தோஷமுற்றிருக்கவேண்டும். நாய் பாதகிகள் சண்டாளர் முதலியவர் இவர்களுக்கும் அவரவர் விரும்புகிற அன்னாதிகளைச் சக்திக்குத் தகுந்தபடி கொடுக்கவேண்டும். தன் பார்யையிடத்திலுங்கூட என்னுடையவளென்கிற அபிமானத்தைத் துறக்கவேண்டும். மனிதர்களுக்குப் பார்யையிடத்தில் 'எனக்கே இவள்' என்னும் அபிமானம் அதிகமாயிருக்கும். பார்யைக்காகத் தந்தையையும் குருவையும் வதிப்பார்கள். அவர்களிடத்தில் அபிமானத்தை எவர்க்கும் துறக்கமுடியாது. விவேகமுடையவன் அப்படிப்பட்ட பார்யையிடத்திலும் அபிமானத்தைத் துறக்கவேண்டும். இந்த அபிமானத்தைத் துறந்தவன் எவராலும் வெல்லமுடியாத பரமபுருஷனையும் வென்றவனாவான். 'புழு விஷ்டை பஸ்மம் இவற்றில் போய்முடியக்கூடிய இந்தத்தேஹம் எங்கே? அந்தத் தேஹத்தின் ஸுகத்திற்காக ஏற்பட்ட பார்யை எங்கே? ஆகாயம் போல் எங்கும் பற்றற்றிருக்குந்தன்மையுடைய ஆத்மா எங்கே? ஒன்றோடு மற்றொன்றுக்கு என்ன சேர்த்தியுண்டு?' என்னும் தத்வவிசாரத்தினால் அந்தப் பார்யையிடத்

திலுள்ள அபிமானத்தையும் துறக்கவேண்டும். தெய்வாதீனமாய்க் கிடைத்த அன்னாதிகளைக் கொண்டு பஞ்ச மஹா யஜ்ஞாதி கர்மங்களைச் செய்து அதில் மிகுந்தவற்றைக்கொண்டு தன் தேஹதாரணத்தை நடத்தவேண்டும். மற்றது தெய்வாதீனமாய்க் கிடைத்திருப்பினும் அதில் தன்னுடையதென்கிற அபிமானத்தைத் துறக்கவேண்டும். இத்தகைய அறிவுடையவன் பெரியோர்கள் அடையும் பதவியாகிய மோக்ஷத்தைப் பெறுவான். தேவர்கள் ரிஷிகள் மனுஷ்யர்கள் பூதங்கள் பித்ருக்கள் ஆகிய பஞ்ச மஹாயஜ்ஞ தேவதைகளுக்கும் தனக்கும் தனித்தனியே அந்தராத்மாவான பரமபுருஷனை யாஜனம் அத்யாபனம் முதலிய தன் வ்ருத்தியால் ஸம்பாதித்த த்ரவ்யத்தினால் தினந்தோறும் ஆராதிக்கவேண்டும். தனக்கு விருப்பம் திறமை அறிவு இவை மூன்றும் அமைந்திருக்கையாகிற அதிகாரம் உளதாயின், அதிகாரத்திற்குத் தகுந்தபடி எல்லாயாகங்களும் செய்யத் தக்கவைகளே. கல்பஸூத்ரங்களில் சொல்லிய விதியின்படி அக்னிஹோத்ரம் முதலிய கர்மத்தினால் பரமபுருஷனை ஆராதிக்கவேண்டும். ராஜனே! ஸமஸ்த யஜ்ஞங்களிலும் ஹவிர்ப்பாகங்களைப் புசிக்கிற இந்தப்பரமபுருஷன் ப்ராஹ்மணர்களின் முகத்தில் ஹோமம் செய்த அன்னாதிகளால் த்ருப்தி அடைவதுபோல, அக்னிமுகத்தில் ஹோமம் செய்த அன்னாதிகளால் த்ருப்தி அடைகிறதில்லை. பகவான் ப்ராஹ்மணர்களையே முகமாகவுடையவன். ஆகையால் ப்ராஹ்மணர்களை அவரவர் விரும்பும் காமங்களால் உன் சக்திக்கு உரியபடி ஆராதிப்பாயாயின், அதனால் அவர்களுக்கு அந்தர்யாமியான பகவான் த்ருப்தி அடைவான். அங்ஙனமே தேவதைகளையும் மனுஷ்யர் முதலிய மற்றவர்களையும் அவரவர்களுக்கு வேண்டிய காமங்களால் ஆரா

த்து அவர்களுக்கு அந்தராத்மாவான பரமபுருஷனைக் களிப்புறச் செய்வாயாக. ப்ராஹ்மண க்ஷத்ரிய வைஶ்யர்களில் எவனாயினும் பணமுடையவனாயிருப்பானாயின், புரட்டாசி மாதத்தில் க்ருஷ்ண பக்ஷத்தில் தன் பணச்செருக்குக்கு உரியபடி தாய்தந்தைகளுக்கும் அவரது பந்துக்களுக்கும் ஶ்ராத்தம் செய்யவேண்டும். அதற்கு மஹாலயமென்று பெயர். கர்க்கடகஸங்க்ராந்தி மகரஸங்க்ராந்தி இவ்வயனங்களிலும் மேஷம் துலை ஆகிற விஷுவத்திலும் வ்யதிபாதத்திலும் திநக்ஷயத்திலும் சந்த்ர க்ரஹணத்திலும் ஸூர்யக்ரஹணத்திலும த்வாதசியினன்றும் ஶ்ரவண நக்ஷத்ரத்தினன்றும் சுக்ல பக்ஷ த்ருதீயையாகிய அக்ஷத்ருதீயையினன்றும் கார்த்திக மாஸத்தில் சுக்ல பக்ஷத்து நவமியினன்றும் ஹேமந்த சிசிரருதுக்களாகிய மார்கழி, தை, மாசி, பங்குனியென்கிற நான்கு மாதங்களின் க்ருஷ்ண பக்ஷத்து அஷ்டமிகள் நான்கினன்றும் மாசி மாஸத்தில் சுக்லபக்ஷத்து ஸப்தமியினன்றும் மகா நக்ஷத்ரமும் பௌர்ணமாஸியும் கூடுந்தினத்தினன்றும் மாஸ நக்ஷத்ரங்களோடுகூடின பௌர்ணமாஸிகளினன்றும், அனுஷம், ஶ்ரவணம், உத்திரம் உத்திராடம், உத்திரட்டாதி இவற்றில் ஏதேனுமொன்று சேரப்பெற்ற த்வாதசியினன்றும், உத்திரம் உத்திராடம் உத்திரட்டாதி இவற்றில் ஏதேனுமொன்று சேரப்பெற்ற ஏகாதசியினன்றும் ஜன்ம நக்ஷத்ரத்தினன்றும் ஶ்ரவணத்தினன்றும் ஶ்ராத்தம் செய்யவேண்டும். அயனம் முதலிய இக்காலங்கள் நன்மையை விளைக்கும்படியான தர்மத்தை அனுஷ்டிப்பதற்குரிய காலங்கள். இவை நன்மையை விளைக்குங் காலங்கள். இக்காலங்களில் நன்மைக்கிடமான ஸ்நாநாதி புண்ய கர்மங்களை அனுஷ்டிக்கவேண்டும். அதுவே ஆயுளுக்குப்பயனும். இக்காலங்களில் செய்கிற ஸ்நானம் ஜபம்

ஹோமம் தவம் இவையும், தேவதைகள் ப்ராஹ்மண க்ஷத்ரியவைஶ்யர்கள் இவர்களுக்குச்செய்யும் ஆராதனம் பித்ருக்கள் தேவதைகள் மனுஷ்யர் பூதங்கள் இவற்றிற்குக் கொடுக்குந்தானம் இவையெல்லாம் அழிவற்றபலனைக் கொடுப்பவையாம். யுதிஷ்டிர மன்னவனே! மற்றும், பத்னிக்குச் செய்கிற பும்ஸவன ஸீமந்தாதி ஸம்ஸ்கார காலங்களிலும் குழந்தைகளுக்குச் செய்கிற ஜாதகர்ம நாமகரணாதி ஸம்ஸ்கார காலங்களிலும் ப்ரேதனுக்குச் செய்கிற தஹனாதி ஸம்ஸ்கார காலங்களிலும் மரணம் அடைகிற தினத்தினன்றும் மற்றும் க்ஷயதனைத விரும்பிச் செய்கிற கார்ய காலங்களிலும் நடத்துகிற ஸ்நானாதி கர்மங்கள் அழிவற்ற பலனைக் கொடுக்கும். இங்ஙனம் நன்மைக்கிடமான காலங்களைச் சொன்னேன். இனித் தர்மம் முதலிய நன்மைகளை விளைக்கவல்ல தேசங்களைச் சொல்லுகிறேன், கேட்பாயாக. எவ்விடத்தில் ஸத்பாத்ரம் கிடைக்குமோ அத்தேசம் தானாதி கர்மங்களுக்கு முக்யமான தேசம். சேதனு சேதன ஸ்வரூபனான பகவானுடைய திவ்யமங்களவிக்ரஹம் எவ்விடத்தில் இருக்கின்றதோ, தவம் வித்யை தயை இவை அமைந்த ப்ராஹ்மண குலம் எவ்விடத்தில் வஸிக்கின்றதோ, அவ்விடங்களும், எவ்வெவ்விடங்களில் பகவானுடைய பூஜை நடக்கின்றதோ அவ்விடங்களும் மிகவும் புண்யமான தேசங்கள். அவையெல்லாம் நன்மையை விளைக்கவல்ல தர்மங்களை அனுஷ்டிப்பதற்கு உரிய தேசங்களாம். மற்றும், புராணங்களில் ப்ரஸித்திபெற்ற கங்கை முதலிய நதிகள் எவ்வெவ்விடங்களில் இருக்கின்றனவோ அவ்வவ்விடங்களும் புஷ்கரம்முதலிய தடங்களும், பெரியோர்கள் நித்ய வாஸம் செய்யும் இடங்களும் தர்மானுஷ்டானத்திற்கு உரிய தேசங்கள். குருக்ஷேத்ரம் கயை ப்ரயாகம் புலஹ

ருடைய ஆஸ்ரமம் நைமிசாரண்யம் பல்குனி நதிபாயுமிடம் ராமஸேது ப்ரபாஸ தீர்த்தம் த்வாரகை காசி மதுரை பம்பாஸரஸ்ஸு பிந்துஸரஸ்ஸென்கிற கர்த்தமாஸ்ரமம் பதரிகாஸ்ரம மென்கிற நாராயணாஸ்ரமம் அலகநந்தையின் கரை சித்ரகூடம் இவை முதலிய ஸ்தலங்களும், மஹேந்த்ரம் மலயம் முதலிய ஸமஸ்தமான குலபர்வதங்களும் பகவானுடைய அர்ச்சாவிக்ரஹங்கள் இருக்கும் இடங்களும் ஆகிய இவையெல்லாம் மிகவும் புண்யமான தேசங்கள். நன்மையை விரும்பும் புருஷன் இந்த ஸ்தானங்களை அடிக்கடி பணியவேண்டும். இந்த ஸ்தலங்களில் செய்யும் தர்மம் ஒவ்வொன்றும் ஆயிரமடங்கதிகமான பலனை விளைக்கும். மன்னவனே! ஸத்பாத்ரத்தின் ஸ்வரூபத்தை அறிந்த பண்டிதர்கள் ஜங்கம ஸ்தாவர ரூபமான இந்த ப்ரபஞ்சத்திற்கெல்லாம் அந்தராத்மாவாகி எல்லாம் தானே யென்னும்படி அமைந்திருக்கிற பரமபுருஷனொருவனே ஸத்பாத்ரமென்று நிச்சயித்திருக்கிறார்கள். ராஜனே! உன்னுடைய ராஜஸூய யாகத்தில், தேவதைகளும் ரிஷிகளும் தவம் முதலியவற்றால் ஸித்தி பெற்றபெரியோர்களும் ப்ரஹ்மதேவனும் அவனது புதல்வர்களான ஸனகாதிகளும் இருக்கையில் அச்சுதனே அக்ரபூஜைக்கு உரியவனாக ஏற்பட்டானல்லவா? ஆகையால் அவனே ஸத்பாத்ரமென்பது உனக்கே தெரியுமல்லவா? ஜீவஸமூஹங்கள் நிறைந்த இந்த ப்ரஹ்மாண்டமாகிற பெரிய வ்ருக்ஷத்திற்கு அச்சுதன் வேராகையால் அவனுக்குச் செய்யும் ஆராதனம் ஸமஸ்த ஜீவஸமூஹங்களுக்கும் த்ருப்தியை விளைக்கும். மனுஷ்யர் திர்யக்கு ரிஷிகள் தேவதைகள் என்கிறபுரங்களைப்படைத்து அவற்றில் ஜீவனாகிற தன் சரீரத்துடன் சயனித்துக் கொண்டிருக்கிறானாகையால் பகவான் புருஷனென்று பெயர் பெற்

றன். அந்த மனுஷ்யாதி சரீரங்களிலுள்ள ஜீவாத்மாக்களிடத்தில் பகவான் ஜ்ஞானம் சக்தி முதலிய குணங்களின் தாரதம்யத்தோடு வர்த்திக்கிறான். ஆகையால் எவர்க்குப் பூஜை செய்யினும் பகவானுக்குச் செய்கிறோமென்கிற எண்ணத்துடனே செய்யவேண்டும். பகவானுடைய ஜ்ஞாநாதிகுணங்கள் எவ்வெவ்விடங்களில் அதிகமாய் விளங்குகின்றனவோ அவைமேலான பாத்ரங்களாம். குணங்கள் எவ்விடத்தில் குறைவாயிருக்கின்றனவோ அவை உத்தம பாத்ரங்களாகா. (பரமாத்மாவான பரமபுருஷனே ஸத்பாத்ரம். மற்றவர்கள் அந்தப் பரமாத்ம ஸ்வரூபர்களாகையால் பூஜிக்கததகுந்தவர்கள். அதுவும் குணங்களுடைய தோற்றத்தின் தாரதம்யத்தை அனுஸரித்தே நடத்தவேண்டும்). மன்னவனே! த்ரேதாதி யுகங்களில் ப்ராணிகள் எல்லாம் பகவத்ஸ்வரூபமென்பதை ஆராய்ந்து கௌரவிப்பதைத் தவிர்ந்து ஒருவரையொருவர் அவமதிப்பதில் மதிகொண்டிருப்பதைக் கண்டு பகவானுடைய ஆராதனைக்கிற்காகப் பண்டிதர்கள் அவனுடைய அர்ச்சாவிக்ரஹங்களை ஏற்படுத்தினார்கள். அதன் பிறகு சிலர் அவ்விக்ரஹங்களில் பகவான் இருக்கிறானென்பதை நம்பி ஶ்ரத்தையுடன் ஆராதிக்கிறார்கள். பகவத்ஸ்வரூபர்களான ஒருவரையொருவர் த்வேஷிக்கும் புருஷர்களுக்கு அந்த அர்ச்சாவிக்ரஹங்கள் எவ்வளவு ஶ்ரத்தையுடன் ஆராதனம் செய்யப் பெறினும் அவர்கள் விரும்பும் புருஷார்த்தங்களைக் கொடுக்கிறதில்லை. ப்ராஹ்மணர்கள் உபவாஸம் முதலிய தவம் ஆத்மாவின் உண்மையை அறிந்து பரமாத்மாவை உபாஸிக்கையாகிற வித்யை தெய்வாதீனமாய்க்கிடைத்தவற்றைக்கொண்டு ஸந்தோஷமுற்றிருக்கை இவற்றால் பகவானுடைய சரீரத்தைத் தரிக்கின்றார்களாகையால் புருஷர்

களுக்குள் ப்ராஹ்மணனே ஸத்பாத்ரமென்று பெரியோர்கள் கூறுகிறார்கள். ராஜனே! மூன்று லோகங்களையும் தன் பாததூளியால் புனிதம் செய்பவனும் ஜகத்திற்கெல்லாம் அந்தராத்மாவாயிருப்பினுமாகிய இந்த ஸ்ரீக்ருஷ்ணனுக்கும் ப்ராஹ்மணர்களே மேலான தெய்வம். இனி நம்மைப்போன்ற மற்றவர்க்கு ப்ராஹ்மணர்கள் தெய்வமென்பதில் ஸந்தேஹமென்ன? பதினான்காவது அத்யாயம் முற்றிற்று.

{ க்ருஹஸ்தாச்ரமத்தைச் சேர்ந்த சில தர்மங்களைக் கூறி மேல் மோக்ஷதர்மங்களைச் சுருக்கமாய்க் கூறுதல். }

ஸ்ரீநாரதர் சொல்லுகிறார்:—யுதிஷ்டிர மன்னவனே! ப்ராஹ்மண க்ஷத்ரிய வைஸ்யர்களில் சிலர் தங்கள் தங்கள் வர்ணாஸ்ரமதர்மங்களை ஊக்கத்துடன் அனுஷ்டிக்கிறார்கள். சிலர் உபவாஸம் முதலிய தவத்தில் ஊக்கமுற்றிருக்கிறார்கள். சிலர் வேதாத்யயனத்திலும் ஓதுவிப்பதிலும் நிலையுற்றிருக்கிறார்கள். சிலர் ஜ்ஞானயோகம் கர்மயோகம் இரண்டிலும் நிலைநின்றிருக்கிறார்கள். அழிவற்ற பலனை விரும்புகிறவன், பித்ருக்களைக் குறித்துச் செய்யும் ஸ்ராத்தங்களில் அன்னாதிகளைக், கர்மயோகத்தை உதவியாகக் கொண்டு ஜ்ஞானயோகத்தையே முக்யமாகச் செய்பவனுக்குக் கொடுக்கவேண்டும். தேவதைகளைக் குறித்துச் செய்யுங்கார்யங்களிலும் தக்ஷிணைகளை ஜ்ஞானயோக நிஷ்டனுக்கே கொடுக்கவேண்டும். ஜ்ஞானயோகநிஷ்டன் நேராத பக்ஷத்தில் கர்மயோக நிஷ்டர் முதலிய மற்றவர்களில் ஜ்ஞானாதி தாரதம்யத்தைப் பார்த்துக் கொடுக்க வேண்டும். விஸ்வதேவஸ்தானத்தில் இரண்டு ப்ராஹ்மணர்களையும் பித்ருஸ்தானத்தில் மூன்று ப்ராஹ்மணர்களையும் புஜிப்பிக்கவேண்டும். அல்லது இரண்டு ஸ்தா

னங்களிலும் ஒவ்வொரு ப்ராஹ்மணனையாவது புஜிப்பிக்கவேண்டும். பணப்பெருக்குடையவனும் இப்படியே செய்யவேண்டுமென்றி, ஸ்ராத்தத்தில் இதற்குமேல் விஸ்தரித்து ப்ராஹ்மணர்களைப் புஜிப்பிக்கலாகாது. ஸ்ராத்தத்தில் தௌஹித்ரனைப் புஜிப்பிக்கப் பார்த்தால் அவன் பிள்ளைகளை விட்டு அவனை மாத்ரம் புஜிப்பிக்கத் தோன்றுது. இங்ஙனம் பந்துக்கள் பலர் நேருவார்களாகையால் அவர்களை உபேக்ஷிக்க முடியாமல் ஸ்ராத்தத்தில் ப்ராஹ்மணர்களை அதிகமாய்ப் புஜிப்பிக்கவேண்டிவரும். அப்படி புஜிப்பிக்கின், தேசகாலங்கள் ஸ்ரத்தை த்ரவயங்கள் ஸத்பாத்ரங்கள் பூஜை ஆகிய இவையெல்லாம் குணமுள்ளவையாயினும் பந்துக்களுக்குக் கொடுப்பதனுல் குணமற்றவையாய் விடும். ஆகையால் அதிகமாய் வளர்த்தலாகாது. முன் சொன்ன புண்ய தேசத்தில் புண்ய காலத்தில் செய்யும்படியாக நேரிட்ட ஸ்ராத்தத்தில் முனிவர் புசிக்கும் செந்நெல் முதலிய தான்யங்களால் சமைத்த அன்னத்தைத ஸ்ரீமஹாவிஷ்ணுவை உத்தேசித்துஸத்பாத்ரமான ஒரு ப்ராஹ்மணனுக்குக் கொடுப்பார்களாயின், அது இவ்வுலகத்தில் விருப்பங்களையெல்லாம் கறந்து கடைசியில் அழிவற்ற பலனான மோக்ஷத்தையும் கொடுக்கும். தேவதைகளுக்கும் ரிஷிகளுக்கும் பித்ருக்களுக்கும் பூதங்களுக்கும் தனக்கும் பந்துக்களுக்கும் அன்னத்தைப் பங்கிட்டுக் கொடுக்கவேண்டும். அந்தத் தேவர் முதலிய ஸமஸ்த ப்ராணிகளையும் பரம புருஷஸ்வரூபர்களாகவே பாவிக்க வேண்டும். ஸ்ராத்தத்தில் பித்ருக்கள் முதலியவர்களை உத்தேசித்து மாம்ஸத்தைக் கொடுக்கலாகாது தானும் தர்மத்தின் உண்மையை ஆராய்ந்து புசிக்கலாகாது முனிவர்கள் புசிக்கிற செந்நெல் முதலிய தான்யங்களால் சமைத்த அன்னங்களால் பித்ருக்கள் முதலிய

வர்க்கு மேலான ப்ரீதி விளைவதுபோலப், பசுக்களை ஹிம்ஸித்து மாம்ஸம் கொடுப்பதனால் ப்ரீதி உண்டாகாது. மற்றும், மேலான தர்மத்தை விரும்பும் மனுஷ்யர்களுக்கு மனோவாக்காயங்களென்கிற மூன்று கரணங்களாலும் ப்ராணிகளுக்கு த்ரோஹம் செய்யாமையாகிற இந்தத் தர்மத்தைக் காட்டிலும் மேலான தர்மம் மற்றொன்றும் இல்லை. யஜ்ஞங்களின் உண்மையை அறிந்தவர்களும் சப்தாதிவிஷயங்களில் விருப்பமற்றவர்களும் ப்ராணிகளுக்கு த்ரோஹம் செய்யாமையே மேலான தர்மமென்பதை உணர்ந்தவர்களுமான சில பெரியோர்கள் பசு புரோடாசம் முதலியவற்றை த்ரவ்யமாகவுடைய கர்மயஜ்ஞங்களைப் பரமாத்மோபாஸன ரூபஜ்ஞானத்தினால் ஜ்வலித்துக்கொண்டிருக்கிற தமது யோகாக்னியில் ஹோமம் செய்கிறார்கள். பசு புரோடாசாதிகளை த்ரவ்யமாகவுடைய க்ரியாயஜ்ஞங்களை அனுஷ்டிக்க முயன்ற புருஷனைக் கண்டு பசு முதலிய பூதங்கள் 'இவன் யாகம் செய்யப்போகிறான். யஜ்ஞத்தின் உண்மை அறியாத மூடன். இவன் நமது ப்ராணன்களால் த்ருப்தி அடையப் பார்க்கிறான். இவன் நம்மை நிச்சயமாய் வதிப்பான்' என்று பயப்படுகின்றன. ஆகையால்தான் சிலர் கர்மயஜ்ஞங்களைத் துறந்து ஜ்ஞானயஜ்ஞங்களை அனுஷ்டிக்கிறார்கள். தர்மஸூக்ஷ்மத்தை அறிந்த புருஷன் தெய்வாதீனமாய்க் கிடைத்த முனிவர்களின் அன்னத்தினாலும் தினந்தோறும் நித்யநைமித்திக கர்மங்களை மனக்களிப்புடன் அனுஷ்டிக்கவேண்டும். விதர்மம் பரதர்மம் ஆபாஸதர்மம் உபமாதர்மம் சலதர்மம் ஆகிய இவ்வைந்து தர்மங்களும் அதர்மமாகிற வ்ருக்ஷத்தின் கிளைகள். தர்மஸ்வரூபத்தை உணர்ந்தவன் இவற்றை அதர்மங்களைப் போலத் துறக்க வேண்டும். எதைத் தர்மமென்கிற புத்தியுடன் செய்தா

லும் தன் வர்ணாஸ்ரம தர்மங்களுக்குத் தடை நேருமோ அதை விதர்மமென்பார்கள். க்ஷத்ரியாதிகளுக்கு விதித்த கர்மத்தை ப்ராஹ்மணாதிகள் செய்வார்களாயின், அது அவர்க்குப் பரதர்மமாம். வேதத்திற்கிணங்காத ஆகமங்களில் சொல்லப்பட்ட பாஷண்ட தர்மம் உபதர்மமாம். பிறரை வஞ்சிப்பதற்காகச் செய்யும் தர்மமும் உபதர்மமே. சாஸ்திரங்களிலுள்ள சப்தங்களுக்கு வேறு பொருள்கூறிச் செய்யும் தர்மம் சலதர்மம். செய்தோமென்கிற பேருக்காகச் செய்யுந்தர்மமும் அதுவே. அதாவது கோதானம் செய்தோமென்கிற பேருக்காகச் சாகப்போகிற பசுவைத் தானம் செய்கை முதலியதாம். தம்முடைய இஷ்டப்படி நான்கு ஆஸ்ரமங்களிலும் சேராமல் தனியே ஏற்படுத்திக்கொள்கிற அவதூதாஸ்ரமம் முதலிய தர்மம் ஆபாஸதர்மமாம். ப்ராஹ்மணாதிகளின் ஸ்வபாவத்திற்கு அனுகுணமாக ஏற்படுத்தப்பட்ட யாகாதி தர்மங்களே மனத்தின் சாந்தியை விளைக்கும். ஆகையால் பிறருடைய தர்மங்களை அனுஷ்டிப்பதில் ப்ரயோஜனமில்லை. பணமில்லாதவன் தன்னுடைய தர்மங்களை அனுஷ்டிப்பதற்காகவுங்கூடப் பணத்தை விரும்பலாகாது. யாத்ரைக்காகவுங்கூடப் பணத்தை விரும்பலாகாது. மலைப்பாம்புபோல் ஒரு ப்ரயத்னமும் செய்யாதிருப்பானாயின், அந்த ப்ரயத்னம் செய்யாமையே அவனுக்கு ஜீவனத்தை விளைக்கும். யத்னம் செய்யாமல் தெய்வாதீனமாய்க் கிடைத்ததைக்கொண்டு ஸந்தோஷமுற்றுத் தன்னைச் சரீரமாகவுடைய பரமாத்மாவை அனுபவித்துக் களிப்பவனுக்கு உண்டாகும் ஸுகம், சப்தாதி விஷயங்களில் விருப்பமுற்று அவற்றைப் பெறுதற்காகப் பணத்தை விரும்பி எல்லாத் திசைகளிலும் ஓடித்திரியும் புருஷனுக்கு எப்படி உண்டாகும்? எதிலும் விருப்பமின்

றீத் தெய்வாதீனமாய்க் கிடைத்ததைக்கொண்டு ஸந்தோஷமுற்றிருக்கும் புருஷனுக்குத் திசைகளெல்லாம் ஸுகமயமாயிருக்கும். பாதரக்ஷை யணிந்தவனுக்கு முள்கல் முதலியவற்றினின்று க்ஷேமமே உண்டாவதுபோல, அவனுக்கு எல்லா இடங்களிலும் ஸுகமே உண்டாகும். ராஜனே! ஸந்தோஷமுற்றிருப்பானாயின், எவன்தான் கேவல ஜலத்தினால் ஜீவிக்கமாட்டான்? ஸந்தோஷமற்றவன் உபஸ்தம் ஜிஹ்வை இவற்றின் ஸுகத்திற்காக முயன்று நாய்போல் பிறர்க்கு உழைப்பான். மற்றும், ப்ராஹ்மணன் தெய்வாதீனமாய்க் கிடைத்ததைக் கொண்டு ஸந்தோஷம் அடையாமல் மேன்மேலும் சப்தாதி விஷயங்களில் விருப்பங்கொண்டு அதற்காக முயற்சிசெய்வானாயின், அவனுடைய ப்ராஹ்மதேஜஸ்ஸும் சாஸ்த்ர ஜ்ஞானமும் உபவாஸம் முதலிய தவமும் புகழும் பாழாய் விடும். சப்தாதி விஷயங்களில் விருப்பம் மாறியிருக்குமாயின், விவேகாதிகளால் விளைந்த ஜ்ஞானமும் பறந்துபோம். காமக்ரோதலோபங்களையுடையவன் பசிதாஹங்கள் தீருமாயின், காமத்தினின்று மீளலாம். க்ரோதத்தின் பலனான பரஹிம்ஸை முதலியன கைகூடுமாயின் அதினின்றும் கரையேறலாம். அவ்வளவில் அந்தக் காமக்ரோதங்களின்பலன் கைகூடுகிறது. ஆகையால் அவற்றினின்றும் ஒருவாறு மீளலாம். திசைகளையெல்லாம் வென்று பூமண்டலத்தையெல்லாம் ஆண்டாலும் எவனும் லோபத்தினின்று கரையேறமாட்டான். மஹாராஜனே! இந்த லோபத்தைப் பற்றியே பல பண்டிதர்கள் பலவிதமான லோகந்யாயங்களையும் வைதிக ந்யாயங்களையும் உணர்ந்து ஸம்சயங்களையெல்லாம் போக்க வல்லராகிச் சபைக்கு முன்னின்ற நிர்வாஹகர்த்தர்களாயிருந்தும் தெய்வாதீனமாய்க் கிடைத்ததைக்கொண்டு ஸந்தோஷமுற்றிரு

க்க முடியாமல் நரகத்தில் விழுகிறார்கள். 'இது நம்முடைய போகத்திற்குரியது' என்னும் புத்தியைத் துறக்கையால் சப்தாதி விஷயங்களிலுண்டான ஆசையை வெல்லவேண்டும். காமத்தைத் துறக்கையால் கோபத்தை வெல்லவேண்டும். காமத்தை அனுபவிக்க வொட்டாமல் தடைசெய்பவரிடத்திலன்றோ கோபம் உண்டாகின்றது. காமத்தை வென்றால் கோபத்தையும் வெல்லலாம். பணத்தினால் பல கெடுதிகள் விளையுமென்பதை ஆராய்கையால் லோபத்தை வெல்லவேண்டும். சேதன அசேதன ஈஸ்வரர்களென்கிற தத்வங்களின் உண்மையை ஆராய்கையால் பயத்தை வெல்லவேண்டும். பிறந்தவன் சாவது மாறாதென்பதை ஆலோசித்துச் சோக மோஹங்களை வெல்லவேண்டும். ஜம்பரில்லாத பெரியோர்களின் ஸஹவாஸத்தினால் ஜம்பத்தைவெல்லவேண்டும். பரமாத்ம த்யானத்திற்கு விக்னங்களான உலகவம்பளப்பு முதலியவற்றை மௌனத்தினாலும், ப்ராணிஹிம்ஸையைத் தன் தேஹம் முதலியவற்றில் விருப்பின்மையாலும் வெல்லவேண்டும். ப்ராணிகளாலுண்டான துக்கத்தை அதற்குக் காரணமான ப்ராணிகளிடத்தில் தயையினாலும், தெய்வாதீனமாய் நேர்ந்த துக்கத்தை 'இதற்கு நாமென்ன செய்ய முடியும்?" என்கிற மனஸ்ஸமாதானத்தினாலும், தேஹத்திலுண்டான துக்கத்தை ப்ராணாயாமம் முதலிய யோக பலத்தினாலும், தூக்கத்தை ஸாத்விகமான ஆஹாரங்களை உட்கொள்ளுகையாலும் வெல்லவேண்டும். ஸாத்விகாஹாரங்களால் ஸத்வகுணத்தை வளர்த்து அதனால் ரஜஸ்தமோகுணங்களையும், மனத்தை வெறுப்பினாலும் வெல்லவேண்டும். குருவிடத்தில் உண்மையான பக்தி செய்வானாயின் இவை யெல்லாவற்றையும் அநாயாஸமாக வெல்லலாம். ஒன்றான பகவானே ஆசார்யனாகத்தோன்றி

ப்ராணிகளை அனுக்ரஹிக்கிறானென்று சாஸ்த்ரங்கள் சொல்லுகிறனவாகையால் பகவத்ஸ்வரூபனும் ஜ்ஞானமாகிற விளக்கைக் கொடுத்து மஹோபகாரம் செய்பவனுமாகிய குருவை 'இவன் நம்மைப்போன்ற ஒரு மனுஷ்யனே' என்று எவன் நினைக்கிறானோ, அவன் செய்த வேதாத்யயனம் முதலியனவும் காமாதிகளை வென்றதும் கஜஸ்நானம்போல் பயனற்றதேயாம். இந்த ஸ்ரீக்ருஷ்ணன் ப்ரக்ருதி புருஷர்களுக்கு நியாமகனும் எங்களைப் போன்ற யோகீஸ்வரர்களால் த்யானிக்கத் தகுந்த பாதாரவிந்தங்களை யுடையவனுமாகிய ஒன்றான பகவானே. இவ்விஷயத்தில் ஸந்தேஹம் இல்லை. ஆயினும் இவ்வுலகத்து ஜனங்கள் இந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய ஸ்வரூபத்தை அறியாமையால் இவனைத் தம்மைப்போலவே ஸாதாரணமான ஒரு மனுஷ்யனாக நினைக்கிறார்கள். இங்ஙனமே குருவின் உண்மையை அறியாத மூடர்கள் அவனைச் ஸாதாரணமனுஷ்யனாக நினைக்கிறார்கள். ஆறு இந்த்ரியங்களை வென்று அடக்குகையாகிற இந்த ப்ரயோஜனத்திற்காகவே ஸாஸ்த்ரங்கள் வர்ணாஸ்ரம தர்மங்களை அனுஷ்டிக்கவேண்டுமென்று விதிக்கின்றன. அவை அந்த ப்ரயோஜனத்தை விளைக்காது போமாயின் பயனற்றவைகளே. மற்றும் அவ்வர்ணாஸ்ரம தர்மங்கள் இந்த்ரிய ஜயத்தை விளைத்தும் பரமாத்ம த்யானத்தை விளைக்காது போமாயின் வீண் ஸ்ரமத்தையே விளைப்பவையாம். ஜீவனத்திற்காக ஏற்பட்ட யாஜனாதி கர்மங்கள் பரமாத்ம த்யானரூபமான யோகானுஷ்டானத்தையே முக்யமாகவுடைய ஜீவனத்தை விளைக்காதுபோமாயின், அவையும் ப்ரயோஜனமற்றவைகளேயாம். அங்ஙனம் இருக்கும் புருஷன் செய்கிற ஸ்மார்த்த கர்மங்களும் யாகாதியான வைதிககர்மங்

களும் பயனற்றவைகளே. மனத்தை அடக்கி ஆளுந்திறமையுடையவன் பிள்ளை பெண்டிர் முதலியவர்களிடத்தில் மனப்பற்றைத் துறந்து சரீரம் தவிர மற்ற பரிக்ரஹங்கள் எவையுமின்றி நான்காவது ஆச்ரமமான ஸந்யாஸாச்ரமத்தைப் பற்றவேண்டும். ஸந்யாஸியானபின்பு தானொருவனேயாகி ஜநஸஞ்சாரமில்லாத இடத்தில் இருந்துகொண்டு பிக்ஷையால் கிடைத்த அன்னத்தை மிதமாகப் புசித்துப் பரிசுத்தமாய் மேடுபள்ளமில்லாத இடத்தில் தன்னுடைய ஆஸனத்தை அசையாதபடி அமைத்து அதன்மேல் தர்ப்பாஸனத்தையும் அதன்மேல் மான்தோலையும் அதன்மேல் வஸ்த்ரத்தையும் பரப்பி அந்த ஆஸனத்தின்மேல் உட்கார்ந்து சரீரத்தை நேராக நிறுத்தி ஓமென்று அநுஸந்திக்கவேண்டும். பூரகம் கும்பகம் ரேசகம் இவைகளால் ப்ராண அபானவாயுக்களை அடக்கவேண்டும். மனம் சப்தாதி விஷயங்களில் எதுவரையில் ஓடாநிற்குமோ, அதுவரையில் கண்களை மூக்கு நுனியில் நிறுத்தி ப்ராணாயாமம் செய்யவேண்டும். மனம் சப்தாதி விஷயங்களைப் பற்றின விருப்பங்களால் இழுக்கப்பட்டுச் சுழன்றுகொண்டு எந்தெந்த விஷயத்தை நினைக்குமோ, அந்தந்த விஷயத்தினின்று அதை இழுத்து ஹ்ருதயத்திலிருக்கின்ற சுபாச்ரயமான பரமபுருஷனுடைய திவ்யமங்கள விக்ரஹத்தில் நிலைநிறுத்தவேண்டும். இப்படித் தினந்தோறும் விடாமல் அப்யஸித்து வருகிற ஸந்யாஸியின் மனம் ஸ்வல்பகாலத்திற்குள்ளாகவே வேறு விஷயங்களில் செல்லுகை தவிர்ந்து நிலைபெறும். கட்டையில்லாத நெருப்பு தானே அணைவதுபோல் அவனுடைய மனம் தானே ஓய்ந்திருக்கும். சப்தாதி விஷயங்களின் விருப்பங்களால் இழுக்கப்படாமல் மற்ற நினைவுகளெல்லாம் ஒழியப்பெற்ற அத்தகைய மனம் பரப்ரஹ்மானுபு

சரீரமாகிற இந்த ரதம் எவ்வளவு காலம் தனக்கு ஸ்வாதீனமாயிருக்கின்றதோ, அதற்குள்ளாகவே பெரியோர்களின் பாதாரவிந்தங்களைப் பணிந்து அதனால் கிடைத்த கூருள்ள அறிவாகிற கத்தியை ஏந்தி ராகம் முதலிய சத்ருக்களை அழித்துத் தன் பக்தர்களைக் கைவிடாத பகவானையே பலமாகப்பற்றி மனக்கலக்கமற்று மோக்ஷைஶ்வர்யத்தை நமக்குப் பகவான் அவஶ்யம் கொடுப்பானென்று ஸந்தோஷமுற்றுச் சரீரம் முதலியவற்றிலும் அதைத் தொடர்ந்த மற்றவைகளிடத்திலும் மமபபற்றை மாற்றிக்கொள்ளவேண்டும். இப்படிச் செய்யாராகில், மனவூக்கமற்றிருக்கிற அவனை வெளியில் திரியும் துஷ்டஸ்வபாவமுடைய இந்த்ரியங்களாகிற குதிரைகளும் புத்தியாகிற பாகனும் கெட்டவழியான ப்ரவ்ருத்தி மார்க்கத்தில் கொண்டுபோய் நுழைத்துச் சப்தாதி விஷயங்களாகிற திருடர்களிடத்தில் தள்ளி விடுவார்கள். அந்தத் திருடர்கள் குதிரைகளோடும் பாகனோடும்கூடி ஊக்கமற்றிருக்கிற அவனைப் பெரிய மரணபயமுடையதும் அந்ததாமிஸ்ரமென்கிற நரகம் போன்றதுமாகிய ஸம்ஸாரமாகிற பாழுங்கிணற்றில் தள்ளிவிடுவார்கள். வேதத்தில் விதிக்கப்பட்ட கர்மங்கள் ப்ரவ்ருத்தி கர்மமென்றும் நிவ்ருத்தி கர்மமென்றும் இருவகைப் பட்டிருக்கும். ப்ரவ்ருத்தி கர்மத்தினால் அநுபவத்திற்காக ஸ்வர்க்காதி லோகாந்தரங்களுக்குச் சென்று மீளவும் இந்தக் கர்ம பூமிக்குத் திரும்பி வருவான். நிவ்ருத்தி கர்மத்தினால் மீளுதலில்லாத மோக்ஷத்தைப் பெறுவான். அக்னிஹோத்ரம் தர்சம் பூர்ணமாஸம் சாதுர்மாஸ்யம் பசுயாகம் ஸோமயாகம் வைஶ்வதேவம் பலிஹரணம் இவை முதலிய வேதோக்தமான கர்மங்களெல்லாம் ப்ராணிஹிம்ஸைக்கிடமாகிப் புரோடாசம் முதலிய த்ரவ்யங்கள்

நிறைந்திருப்பவை. இவற்றை ஸ்வர்க்காதி பலன்களை விரும்பிச் செய்வானாயின ப்ரவ்ருத்தி கர்மங்களென்று பெயர் பெறுகின்றன. அக்கர்மங்கள் ராகம் முதலிய தோஷங்களை மேன்மேலும் வளர்க்குமன்றி அவற்றைப் போக்கமாட்டா. பலன்களை விரும்பாமல் பகவானுடைய ஆராதனமென்னும் புத்தியுடன் செய்வானாயின், அப்பொழுது நிவ்ருத்தி கர்மங்களென்று பெயர் பெறுகின்றன. அவை ராகாதி தோஷங்களைப் போக்கி மனத்தெளிவை விளைக்கும். தேவாலயங்களை நிர்மாணம் செய்கை, தோட்டங்களை வளர்க்கை, கிணறு முதலியன வெட்டுவிக்கை, ப்ராணிகளுக்கு ஜீவனம் கற்பிக்கைமுதலியவை பூர்த்த கர்மங்களாம். இவை ஸ்மார்த்த கர்மங்களென்றும் கூறப்படும். கர்ப்பாதானம் முதல் ஸ்மசானத்தில் கொண்டுபோய்ச் செய்கிற தஹனம்வரையிலுமுள்ள ஸம்ஸ்காரங்களெல்லாம் செய்யப்பெற்ற ப்ராஹ்மண க்ஷத்ரிய வைஸ்யர்களென்கிற மூன்று வர்ணத்தவர்களும் யாகம் முதலிய வைதிக கர்மங்களையும் குளம் கிணறு வெட்டுவித்தல் தேவாலயம் கட்டுவித்தல் முதலிய ஸ்மார்த்த கர்மங்களையும் அனுஷ்டித்து வருவார்களாயின், தேஹத்தைத் துறந்தபின்பு பூத ஸூக்ஷ்மங்களால் அணைக்கப்பெற்று, தூமம் ராத்ரி க்ருஷ்ணபக்ஷம் தக்ஷிணாயனம் என்னும் தேவதைகளை ஒவ்வொருத்தரையும் க்ரமமாக அடைந்து கடைசியில் சந்த்ரனிடம் சேர்ந்து அங்கு அம்ருதமயமான சரீரம் பெற்றுக் கர்மபலன்களை அனுபவித்து அச்சரீரத்தைத்துறந்து அந்தச் சந்த்ரனிடத்தினின்று க்ரமமாக செடி கொடி அன்னம் ரேதஸ்ஸு என்னுமிவைகளில் ஒவ்வொன்றிலும் சிற்சில காலம் தங்கியிருந்து கடைசியில் இவ்வுலகத்தில் பிறக்கிறார்கள். தூமம் முதல் சந்த்ரன் வரையிலுமுள்ள இம்மார்க்கம் பித்ருயாண

மென்னும் பேருடையது இவ்வழியில் சென்றவர்கள் மீண்டும் இவ்வுலகில் வந்து பிறப்பார்கள். செடிமுதல் ரேதஸ்ஸு வரையிலுமுள்ள இம்மார்க்கம புனர்ப்பவயானமென்னும் பேருடையது. இது தவிர தேவயான மென்றொரு வழி உண்டு. அவ்வழியில் போக விரும்புகிறவர்கள், கண் காது முதலிய ஜ்ஞானேந்த்ரியங்களில் கர்மேந்த்ரியங்களின் வ்யாபாரங்களையும், ஸங்கல்பமாகிற அலைகளையுடைய மனத்தில் ஜ்ஞானேந்த்ரியங்களையும் ஸத்வம் தலையெடுத்த அம்மனத்தைச் சாஸ்த்ரத்திலும் ஹோமம்செய்வார்கள். அந்தச் சாஸ்த்ரத்தை அக்ஷரமாத்ருகையிலும், அவ்வக்ஷரமாத்ருகையை ஓங்காரத்திலும், அந்த ஓங்காரத்தைப் [1] பிந்துநாதத்திலும், அந்தப் பிந்து நாதத்தை ஜீவனிடத்திலும் அடங்கினதாகப் பாவிப்பார்கள். அந்த ஜீவனையும் பரமபுருஷனிடத்தில் அர்ப்பணம் செய்வார்கள். பிறகு சரீரத்தினின்று கிளம்பி, அக்னி ஸூர்யன் திவஸம் ப்ராஹ்ணம் சுக்லபக்ஷம் பௌர்ணமாஸி உத்தராயணம் அமானவன் என்னும் இவ்வழியாகச் சென்று பரம் வ்யூஹம் முதலிய பல அவதாரங்களையுடைய பரமபுருஷனைப் பெறுகின்றார்கள். இவ்வழியைத் தேவயானமென்று வேதாந்தங்கள் சொல்லுகின்றன. பரமாத்மாவை உபாஸிக்கிறவன் அக்னி முதலிய தேவதைகளில் ஒவ்வொருவருடைய ஸ்தானத்தையும் க்ரமமாக அடைந்து கடைசியில் ப்ரக்ருதி ஸம்பந்தம் அடியோடு தீர்ந்து அபஹதபாப்மத்வம் முதலிய குணங்கள் அமைந்த ஆத்மஸ்வரூபம் தோன்றப்பெற்றுப் பரமாத்மாவை அனுபவித்துக்கொண்டிருப்பானன்றி அதினின்று மீண்டு வரமாட்டான். வேதத்தினால் விவரிக்கப்பட்ட பித்ருயான

1. பிந்துநாதமாவது நான்காம் மாத்ரை. மாத்ரையாவது வர்ணோச்சாரணகாலத்தின் அளவு.

மென்றும் தேவயானமென்றும் பேருடைய இவ்விரண்டு மார்க்கங்களையும் சாஸ்த்ரமாகிற கண்ணால் கண்டறிகிற எவனும் மதிமயங்கமாட்டான்; பக்தியோகத்தினால் பரமபுருஷனை அடைவான். அப்பரமபுருஷன் ஸ்ருஷ்டிக்கு முன்பும் ப்ரளயத்திலும் இடையிலுள்ள ஜனங்களின் உள்ளும் புறமும் அமைந்திருப்பவன். ஜ்ஞானஸ்வரூபர்களாய் மேன்மைக்கிடமான ஜீவாத்மாக்களும் அவர்களால் அறியத்தக்கதும் தாழ்மைக்கிடமுமாகிய அசேதனமும் அமைந்து நாமரூபங்களுக்கிடமாயிருப்பதும் சேதனு சேதன ரூபமுமான ஸமஸ்தவஸ்துக்களும் மூலப்ராக்ருதியும் ஸமஷ்டி ஜீவனுமாகிய இவையெல்லாம் இப்பரமபுருஷனையன்றி வேறில்லை. கண்ணுக்குப் புலப்படுகிற இத்தேஹம் அழியாமல் தொடர்ந்து கொண்டிருக்கும் பொழுதும் புருஷார்த்தமாகாதென்று பெரியோர்கள் நிரூபிக்கிறார்கள். அங்ஙனமே சப்தம் ஸ்பர்சம் ரஸம் கந்தம் ரூபமென்று பிரிந்திருப்பதும் இந்த்ரியங்களால் அனுபவிக்கப்படுவதுமாகிய மற்றவஸ்துவும் புருஷார்த்தமன்று. புருஷார்த்தமாவது புருஷர்களால் ஆசைப்படத்தகுந்தபொருள். அத்தன்மை மறைந்தஸ்வரூபனாகியபரமபுருஷனொருவனுக்கே உள்ளதன்றி மற்ற எதற்கும் கிடையாது. அஹங்காரத்திற்கிடமான சரீரம் அநித்யமாயிருப்பதுபோல மமகாரத்திற்கிடமான சப்தாதி விஷயங்களும் அநித்யங்களே. ஸ்வப்னத்தில் அனுபவிக்கப்படும் தேஹம் அப்பொழுது தொடர்ந்திருப்பினும் விழித்துக்கொண்ட பின்பு புலப்படாமையாலும் அப்பொழுதும் ஆத்மா நானென்று தோற்றுகையாலும் அது ஆத்மாவன்றென்பது வெளிச்சமே. அங்ஙனமே விழித்துக்கொண்டிருக்கும் சரீரமும் ஆத்மாவாகமாட்டாது. ஆத்மாவுக்கு இயற்கையில் ஏற்பட்ட நித்யத்வம் முதலிய

தர்மங்கள் அச்சரீரத்தில் ஸம்பவிக்கமாட்டா. பூமி முதலிய பஞ்சபூதங்களின் பரிணாமரூபங்களான வ்ருக்ஷங்களின் நிழல் அந்த வ்ருக்ஷங்களைச் சேர்ந்தவற்றில் எதிலும் உட்பட்டதன்று. வ்ருக்ஷங்களின் ஸமுதாயம் நிழலென்று சொல்லமுடியாது. வ்ருக்ஷங்களின் பரிணாமத்தினால் ஏற்பட்டதென்றும் சொல்லமுடியாது. ஆயினும் வ்ருக்ஷங்களை விட்டுப் பிரிந்திருக்கத்தக்கதுமன்று. வ்ருக்ஷங்கள் எது வரையில் இருக்குமோ அது வரையில் அவற்றை விடாமல் தொடர்ந்திருப்பதுமன்று. ஒருகால் தோன்றி ஒருகால் தோன்றாதிருக்கிறதாகையால் அநித்யம். இங்ஙனமே சரீரமும் ஆத்மாவை விட்டுப் பிரிந்திருக்கமாட்டாதாகையால் அவ்வாத்மாவின் நிழல் போன்றிருக்கும். சரீரம் ஆத்மாக்களின் ஸமுதாயமென்று சொல்லமுடியாது. ஆத்மாவின் பரிணாமமென்றும் சொல்லமுடியாது. ஆத்மாவை விட்டுப் பிரிந்திருக்கவும் மாட்டாது. அநித்யமாகையால் ஆத்மாவாகமாட்டாது. பூமி முதலிய பஞ்சபூதங்களும் தன்மாத்ரங்களாகிற அவயவங்கள் சேர்ந்த ஸமுதாயங்களாகையாலே தன்மாத்ரங்கள் அழியுமாயின் ஸமுதாயரூபங்களான அந்தப் பஞ்சபூதங்களும் அழிந்துபோம். அவயவங்களையுடைய பூதங்கள் அழிகையில் அவற்றின் அவயவங்கள் கடைசியில் இல்லாமலே போய்விடும். சரீரமும் பஞ்சபூதங்களின் ஸமுதாயரூபமாகையால் அநித்யமே. ஆகையால் அத்தகையதான சரீரத்தை நித்யனான ஆத்மாவென்று ப்ரமிக்கலாகாது. இரண்டு வஸ்துக்கள் குணங்களால் ஒன்றோடொன்று ஒத்திருக்குமாயின், அந்த ஒற்றுமையே ஒன்றை மற்றொன்றாக ப்ரமிப்பதற்குக் காரணமாகும். தேஹத்திற்கும் ஆத்மாவுக்கும் அங்ஙனம் ஒற்றுமை இல்லாமையால் தேஹத்தில் ஆத்மாவென்னும் ப்ரமம்

ஒற்றுமையைப் பற்றி வந்ததன்று. அக்னியின் ஸம்பந்த முடைய ஜலத்தை உஷ்ணமென்று ப்ரமிப்பதுபோல ஆத்மாவை விட்டுப் பிரியாதிருக்கின்ற சரீரத்தை ஆத்மாவென்று ப்ரமிக்கிறார்கள். ஒருவன் உறங்கும்பொழுது தான் உறங்குவதாகவும் விழித்துக்கொண்டிருப்பதாகவும் ஸ்வப்னங் காண்கிறான். விழித்துக்கொண்ட பின்பு ஸ்வப்னத்தில் தான் விழித்துக்கொண்டதாகக் கண்டது உண்மையன்றென்று தெரிந்து கொள்கிறான். அங்ஙனமே உண்மையான ஆத்மஸ்வரூபத்தை அறியாத ஸம்ஸாரிகள் 'எனக்குத் தெரியும்' என்றும் 'எனக்குத் தெரியவில்லை' என்றும் நினைக்கிற ஜ்ஞானத்தின் விதிநிஷேதங்கள் அஜ்ஞான கார்யங்களே. ஸம்ஸாரிகளுக்கு ஆத்மஜ்ஞானமில்லாமையால் அவர்களுக்கு மற்ற விஷயங்களைப் பற்றி உண்டாகிற அறிவுகளும் அஜ்ஞானங்களே. தேஹாத்மாக்களின் ஸ்வரூபத்தை உள்ளபடி அறிந்த ஜ்ஞானிகளுக்கு அது கிடையாது. பரமாத்மாவை உபாஸிக்கிறவன் பாவாத்வைதம் க்ரியாத்வைதம் த்ரவ்யாத்வைதமென்று மூன்று வகைப்பட்ட உண்மையான அத்வைதங்களை மனத்தில் நிச்சயித்துக்கொண்டு தேஹத்தைக் காட்டிலும் விலக்ஷணமாயிருப்பதும் பரம புருஷனுக்குட்பட்டதுமாகிய ஆத்மஸ்வரூபத்தை ஆராய்ந்து ப்ரமரூபமான மூன்று அத்வைதங்களையும் துறப்பான். கார்யகாரணங்களிரண்டும் ஒன்றேயென்று நினைக்கை பாவாத்வைதமாம். அதாவது நூல்கள் ஒன்றோடொன்று சேர்க்கப்பட்டுத் துணியாக ஏற்படுகின்றனவாகையால் நூல்களும் துணியும் ஒன்றாயிருப்பதுபோலச், சேதன அசேதன ஈச்வரர்களாகிற மூன்று வஸ்துக்கள் அமைந்த இந்த ப்ரபஞ்சமெல்லாம் ஸூக்ஷ்ம சேதனாசேதனங்களோடு கூடின பரமபுருஷனைக் காட்டிலும் வேறுபட்டதன்றெ

ன்று நினைக்கையே. இந்நினைவினால் பரமபுருஷனல்லாத வஸ்து உண்டென்கிற ப்ரமத்தைத் துறக்கவேண்டும். யுதிஷ்டிரனே! மனோ வாக் காயங்களென்கிற மூன்று காரணங்களாலும் தாம் செய்யும் கர்மங்களை யெல்லாம் பரமபுருஷனிடத்தில் அர்ப்பணம் செய்கையே க்ரியாத்வைதமாம். இதனால், கர்மங்கள் ஈஸ்வரனை எதிர் பாராமல் தாமே பலன்களை விளைக்கின்றனவென்னும் ப்ரமத்தைத் துறக்கவேண்டும். தான் ஸம்பாதித்த பணத்தையும் அதனால் ஏற்பட்ட மற்ற போக்ய வஸ்துக்களையும் வீடு வாசல் முதலிய மற்றவைகளையும், தான் தன் மனைவி புதல்வன் முதலிய ஸமஸ்த ப்ராணிகளுக்கும் பொதுவாக நினைக்கையே த்ரவ்யாத்வைதமாம். இதனால், தான் ஸம்பாதித்ததெல்லாம் தனக்கே யென்னும் ப்ரமத்தைத் துறக்கவேண்டும். ஜீவாத்மாக்கள் ஜ்ஞானத்தையே வடிவாகவுடையவராகையால் ஒருபடிப்பட்டவரென்று நினைக்கையும் தேஹம் வீடு பணம் முதலிய மற்றவையெல்லாம் ப்ரக்ருதியின் பரிணாமங்களாகையால் ஒரு படிப்பட்டவையென்று நினைக்கையும் ஆகிய இவ்விரண்டு நினைவுகளும் த்ரவ்யாத்வைதமாம். இதனால் சரீரங்கள் தோறும் ஆத்மாக்கள் வெவ்வேறென்கிற ப்ரமத்தையும் பணம் வீடு வாசல் முதலியவை ப்ரக்ருதியை யொழிந்த வேறு வஸ்துவின் பரிணாமமென்னும் ப்ரமத்தையும் துறக்கவேண்டும். மற்றும் எவ்விதத்திலும் கெடுதியில்லாத ஜ்ஞானநிஷ்டையிலிருப்பவன் சாஸ்த்ரத்தில் எந்த வஸ்துவுக்கு எந்த வஸ்துவோடு அபேதம் நிரூபிக்கப் பட்டிருக்கின்றதோ அதையும் அனுஸந்தித்துக்கொண்டே செய்யவேண்டிய கர்மங்களைச் செய்ய முயலவேண்டும். சாஸ்த்ரங்களில் நிஷேதிக்கப்பட்ட அபேதங்களை நெஞ்சிலும் நினைக்காமல் மறக்கவேண்டும். இங்ஙனம் ஸ்ருதி ஸ்ம்ருதி

இதிஹாஸம் புராணம் முதலியவற்றில் சொல்லப்பட்ட பாவாத்வைதம் முதலிய அபேதங்களையும், தேஹம் ஆத்மா ஈஸ்வரன் இவர்களுக்குள்ள பேதத்தையும் அநுஸந்தித்து வர்ணாஸ்ரமகர்மங்களை அநுஷ்டித்துக் கொண்டு பகவானிடத்தில் பக்தியை வளர்த்திக் கொண்டு வருவானாயின், க்ருஹஸ்தாஸ்ரமத்தில் இருப்பவனும் ஸ்ரீக்ருஷ்ணனுடைய கதியான மோக்ஷத்தைப் பெறுவான். மன்னவனே! ஸர்வசக்தியும் ஸர்வாந்தராத்மாவுமாகிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய அநுக்ரஹத்தினால்தான் நீங்கள் கடக்க முடியாத பற்பல ஆபத்துக்களையெல்லாம் கடந்தீர்கள். மற்றும், நீ இந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய பாதாரவிந்தங்களைப் பணிந்திருந்த மஹிமையால் திக்பாலர்களையெல்லாம் வென்று மஹர்ஷிகளுடன் யாகங்களைச் செய்தாய். அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய அநுக்ரஹத்தினாலேயே நீ மோக்ஷத்தையும் பெறுவாய். ஆகையால் நீ உன்னைப்பற்றிச் சிந்திக்கவேண்டிய ப்ரஸக்தியே இல்லை. யுதிஷ்டிரனே! நான் நடந்த ப்ரஹ்மகல்பத்தில் உபபர்ஹணனென்று பேர் பெற்ற ஒரு கந்தர்வனாயிருந்தேன். கந்தர்வர்களெல்லோரும் என் குணங்களுக்கு ஸந்தோஷப்பட்டு என்னைப் புகழ்ந்துகொண்டிருந்தார்கள். அப்பொழுது நான் ஸௌந்தர்யம் ஸௌகுமார்யம் மாதுர்யம் ஸௌகந்த்யம் முதலிய குணங்களால் பார்க்கப்படுகிறவர்கள் வேண்டும்படி இனியனாயிருந்தேன். மற்றும், மாதர் மணிகள் எப்பொழுதும் மிகுந்த அன்பு செய்யத்தகுந்த பேரழகனுகி மதித்துச் சப்தாதி விஷயங்களில் மிகுதியும் ஆவலுற்றிருந்தேன். ஒருகால் ப்ரஜாபதிகள் பகவானுடைய குணங்களை அநுபவித்துக் களிக்கையாகிற ப்ரஹ்மஸத்ரத்தை நடத்த முயன்று பகவானுடைய கதைகளைப் பாடும்பொருட்டுக்

கந்தர்வர்களையும் அப்ஸரஸ்த்ரீகளையும் வரவழைத்தார்கள். அப்பொழுது கந்தர்வர்களை அழைத்தார்களென்று தெரிந்து ஸ்த்ரீகளால் சூழப்பட்டுப் பகவானுடைய குணங்களைத் தழுவாத வேறு பாடல்களைப் பாடிக்கொண்டு அவ்விடம் சென்றேன். அந்த ப்ரஜாபதிகள் நான் செய்ததை அபராதமாக நினைத்து 'இங்ஙனம் எங்களை அவமதித்த நீ கந்தர்வசோபை அழியப்பெற்று உடனே சூத்ர ஜன்மத்தைப் பெறுவாயாக' என்று தமது தவமஹிமையால் சபித்தார்கள். அப்பொழுதே நான் ஒரு சூத்ரஸ்த்ரீக்குப் பிள்ளையாகப் பிறந்தேன். அந்தச் சூத்ரஜன்மத்திலும் பரமபுருஷனை உள்ளபடி அறிந்து பிறர்க்கும் உபதேசிக்கும் திறமையுடைய ப்ராஹ்மணச்ரேஷ்டர்களுக்குச் சுஶ்ரூஷை செய்கையாலும் அவர்களுடைய ஸஹவாஸத்தாலும் இந்தக் கல்பத்தில் ப்ரஹ்மதேவனுக்குப் புதல்வனாகப் பிறந்தேன். பகவானுடைய ஸம்பந்தமுடைய அந்தணர்களின் ஸஹவாஸத்தினால் நான் இப்படிப்பட்ட ஜ்ஞான ஜன்மத்தைப் பெற்றேன். நீ நேரே அந்தப் பகவானோடு ஸஹவாஸம் செய்தவன். நீ உன் மோக்ஷத்தைப் பற்றிச் சிந்திக்க இடமே இல்லை. மன்னவனே! கேட்ட மாத்ரத்தில் பாபத்தைப் போக்கவல்ல க்ருஹஸ்தாஶ்ரமதர்மத்தை உனக்கு மொழிந்தேன். க்ருஹஸ்தாஶ்ரமத்திலிருப்பவன் இதை அனுஷ்டிப்பானாயின் பகவானிடத்தில் ஆத்மஸமர்ப்பணம் செய்த ஞானிகள் பெறும் பதவியான மோக்ஷத்தைப் பெறுவான். பகவானுடைய அனுக்ரஹத்திற்குப் பாத்ரமாகிய நீ இந்தத் தர்மத்தை அனுஷ்டித்துப் பெறவேண்டியது ஒன்றுமில்லை. ஆ! இந்த மனுஷ்யலோகத்தில் நீங்கள் மிகுந்த பாக்யமுடையவர்கள். ஏனென்றால், ஸாக்ஷாத் பரப்ரஹ்மம் ஸ்ரீக்ருஷ்ண ரூபியாய் மானிட உருவம் பூண்டு மறைந்து

உங்கள் க்ருஹத்தில் வஸிக்கிறதென்று உலகங்களை யெல்லாம் புனிதம் செய்பவர்களான முனிவர்கள், உங்கள் க்ருஹத்திற்கு நாற்புறத்தினின்றும் வருகின்றார்கள். எங்கள் மாமனாகிய ஸ்ரீக்ருஷ்ணனைப் பரப்ரஹ்மமென்று எங்ஙனம் சொல்லலாமென்று சங்கிக்க வேண்டாம். பேரறிஞர்களான யோகிகளால் த்யானிக்கத் தகுந்ததும் கேவலஜ்ஞானாநந்த ஸ்வரூபமுமாகிய பரப்ரஹ்மம் இந்த ஸ்ரீக்ருஷ்ணனே. இவன் உங்களுக்கு மாமன்மாத்ரமேயல்லன்; ப்ரீதிக்கிடமான நண்பனும் அந்தராத்மாவும் பூஜிக்கத் தகுந்தவனும் நியாமகனும் ஹிதோபதேசம் செய்பவனும் அவனே. உங்கள் பாக்யத்தை என்னென்று சொல்லமுடியும்? ப்ரஹ்மதேவன் ருத்ரன் முதலிய எப்படிப்பட்ட ஜ்ஞானிகளும் இந்த்ரியங்களை வென்று பகவானுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தை த்யானித்துப் பக்தியுடன் ஆராதிப்பார்களேயன்றிப் புத்தியால் எவ்வளவு தூரம் த்யானித்தாலும் அவனை உள்ளபடி அறிய மாட்டார்கள். யோகேஸ்வரர்களுக்கு ப்ரபுவாகிய அந்த ஸர்வேஸ்வரன் எனக்கு அருள் புரிவானாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—பரத வம்சாலங்காரனாகிய யுதிஷ்டிரன் தேவர்ஷியாகிய நாரதர் மொழிந்ததைக் கேட்டுமிகவும் ஸந்தோஷம் அடைந்து ஸ்ரீக்ருஷ்ணனையும் அப்பொழுது பக்கத்திலிருந்த நாரதரையும் ப்ரீதியினால் தழுதழுத்துப் பூஜித்தான். நாரத முனிவரும் ஸ்ரீக்ருஷ்ணனையும் யுதிஷ்டிரனையும் பார்த்துப் போய் வருகிறேனென்று விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டுப்போனார். யுதிஷ்டிரனும் ஸ்ரீக்ருஷ்ணனே பரப்ரஹ்மமென்று நாரதர் மொழியக் கேட்டு மிகவும் வியப்புற்றான். இங்ஙனம் தக்ஷரது புதல்விகளான திதி முதலியவர்களின் வம்சங்

களைத் தனித்தனியே உனக்கு மொழிந்தேன். இந்த வம்சங்களில் தான் தேவர் அஸுரர் மனுஷ்யர் முதலிய ஜங்கமஸ்தாவரங்கள் அடங்கின இவ்வுலகங்களெல்லாம் உண்டாயின. பதினைந்தாவது அத்யாயம் முற்றிற்று.

ஸப்தம ஸ்கந்தமும் முற்றுப்பெற்றது.

ஸ்ரீக்ருஷ்ணாய நம:





ஸ்ரீக்ருஷ்ணாய நம:

# ஸ்ரீபாகவதம்.

## அஷ்டம ஸ்கந்தம்.

ஸ்வாயம்புவன் ஸ்வரோசிஷன் உத்தமன்
தாமஸன் என்னும் நான்கு
மனுக்களைக் கூறுதல்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:—அஜ்ஞானாந்தகாரத்தைப் போக்குங் குருவான ஸ்ரீசுக மஹர்ஷியே! இதுவரையில் ஸ்வாயம்புவ மனுவின் வம்சத்தை நீர் விவரித்துச் சொல்லக் கேட்டேன். அவ்வம்சத்தில் சேர்ந்த ப்ராஹ்மண க்ஷத்ரிய வைஸ்ய சூத்ரர்களென்கிற நான்கு வர்ணத்தவர்கள் அனுஷ்டிக்க வேண்டிய பற்பல வகையான அழகிய தர்மங்களையும் ப்ரஜாபதிகளான மரீசி முதலியவர்களின் ஸ்ருஷ்டிக்ரமத்தையும் நீர் சொல்லக் கேட்டேன். இனி மற்ற மனுக்களின் சரித்ரங்களையும் அவர்கள் வம்சங்களையும் சொல்வீராக. இணையெதிரில்லாத மஹானுபாவனும் தன்னைப் பற்றினருடைய பாபங்களைப் போக்குந் தன்மையனுமாகிய பகவானுடைய அவதாரங்களையும் சரித்ரங்களையும் எந்தெந்த மன்வந்தரங்களில் பண்டிதர்கள் பாடுகிறார்களோ அந்தந்த மன்வந்தர சரித்ரங்களையெல்லாம் கேட்க விரும்புகிற எனக்கு அவற்றைச் சொல்வீராக. ஜகத்ரக்ஷகனான பகவான்

நடந்த மன்வந்தரத்தில் செய்தவைகளையும் நடக்கிற மன்வந்தரத்தில் செய்கின்றவைகளையும் நடக்கப்போகிற மன்வந்தரத்தில் செய்யப்போகிறவைகளையும் எனக்குச் சொல்வீராக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இப்பொழுது நடக்கும் கல்பத்தில் ஸ்வாயம்புவன் முதலிய ஆறு மனுக்கள் கடந்தார்கள். அவர்களில் முதல்வனான ஸ்வாயம்புவ மனுவின் வம்சத்தில் தேவாதிகளான ஸமஸ்த ப்ராணிகளும் பிறந்தார்கள். அவனுடையவம்சத்தையும் சரித்ரத்தையும் உனக்கு விஸ்தரமாகச் சொன்னேன். அந்த மனுவின் பெண்களான ஆகூதி தேவஹூதி என்னும் இருவரிடத்திலும் ஷாட்குண்ய பூர்ணனான ஸர்வேஶ்வரன் கபிலனென்றும் யஜ்ஞனென்றும் இரண்டு உருவங்களால் பிள்ளையாகப் பிறந்தான். அவர்களில் மஹானுபாவரான கபிலருடைய வ்ருத்தாந்தத்தை நான் சொல்லக் கேட்டாயல்லவா? இப்பொழுது யஜ்ஞனென்னும் பகவானுடைய சரித்ரத்தைச் சொல்லுகிறேன், கேட்பாயாக. சதரூபையின்பர்த்தாவும் ப்ரபுவுமாகிய ஸ்வாயம்புவமனு சப்தாதி விஷயபோகங்களில் மனவிருப்பமற்று ராஜ்யத்தைத் துறந்து தவம் செய்ய முயன்று பார்யையுடன் வனத்திற்குச் சென்றான். அவன் ஸுநந்தையென்னும் நதியின் கரையில் ஒற்றைக்காலால் பூமியை ஸ்பர்சித்து நின்று நூறு வர்ஷங்கள் வரையில் கடுமையான தவம் செய்துகொண்டு இங்ஙனம் மொழிந்தான்.

ஸ்வாயம்புவமனு சொல்லுகிறான்:—இவ்வுலகமெல்லாம் பரமாத்மாவால் கார்யங்களில் முயற்சி கொள்கின்றன. அவனை இவ்வுலகம் கார்யங்களில்முயற்சி கொள்ளும்படி செய்யவல்லதன்று. அவன் தானாகவே கார்யங்களில் முயற்சி கொள்கிறான். இவ்வுலகமெல்லாம் ஆத்ம பர

மாத்மாக்களின் உண்மையை அறியாமல் ப்ரக்ருதி ஸம்பந்தத்தினால் மதிமயங்கித் தேஹாத்ம ப்ரமாதிகளால் படுத் துறங்கினாற் போலிருக்கையில், அப்பரமாத்மா ஸர்வகாலமும் ப்ரக்ருதிக்கு உட்படாமல் விழித்துக் கொண்டிருக்கிறான். ஆகையால் அவனே இவ்வுலகத்தை அறிகின்றான். இவ்வுலகத்திலுள்ள சேதனாசேதன ரூபமான ஸமஸ்த வஸ்துக்களையும் அவன் உட்புகுந்து நியமித்துத் தரித்துக் கொண்டிருக்கிறான். அவனுக்கு உட்படாமல் ஸ்வதந்த்ரமாயிருக்கும் வஸ்து எதுவுமே இல்லை. அத்தகைய வஸ்து உண்டென்று நினைக்கவேண்டாம், தேஹமும் அதைத் தொடர்ந்த பிள்ளை பெண்டிர் முதலியவர்களும் வீடு வாசல் பணம் நீர் நிலம் முதலிய மற்றவைகளும் அவனுக்குச் சேஷப்பட்டவைகளே. அவற்றில் எதையும் என்னுடைய தென்னும் அபிமானத்துடன் விரும்பவேண்டாம். ஜீவனுடைய ஜ்ஞானம்போல் பரமபுருஷனுடைய ஜ்ஞானம் கர்மத்தினால் ஸங்கோசத்தை அடைகிறதில்லை. அவன எல்லாவற்றையும் ஒரே தடவையில் ஸாக்ஷாத்கரிக்குந் திறமையுடையவன். ஜீவாத்மாக்கள் கர்மத்தினால் ஜ்ஞான ஸங்கோச முடையவராகையால் அவனை ஸாக்ஷாத்கரிக்க வல்லரல்லர். ஸமஸ்த பூதங்களுக்கும் ஆதாரனும் தன்னுடைய தேஜஸ்ஸினால் ப்ரகாசித்துக் கொண்டிருப்பவனும் சரீரமாகிற வ்ருக்ஷத்தில் இருக்கும் பக்ஷிபோன்ற ஜீவனுடன் தானும் ஒரு பக்ஷிபோல் அமைந்திருப்பவனுமாகிய அந்தப் பரமபுருஷனைப் பணிந்து வாழ்வீர்களாக. அவனுக்கு ஆதி அந்தம் இடை இவை கிடையாது. அவனுக்குத் தன்னுடையவனென்றும் பிறனென்றும் பக்ஷபாதம் கிடையாது. எங்கும் நிறைந்தவனாகையால் அவனுக்கு உள்புறமென்பது கிடையாது' இந்த ப்ரபஞ்சத்திற்கு ஆதி நடு அந்தம்

என்னும் இவை அவனிடத்தினின்றே உண்டாகின்றன. இந்த ப்ரபஞ்ச மெல்லாம் அவனே. ஆயினும் அவன் ஸ்வரூபத்தினாலும் ஸ்வபாவத்தினாலும் விகார மற்றவன். அளவிடக்கூடாத ஜ்ஞானம் சக்தி முதலிய குணங்களின் பெருமையுடையவன். இந்த ப்ரபஞ்சமெல்லாம் அவனுக்குச் சரீரம். தேவ மனுஷ்யாதி நாமங்களெல்லாம் அவனையே சொல்லுகின்றன. அவன் தனக்குச் சரீரமான சேதனாசேதனங்களின் தோஷங்கள் தீண்டப் பெறாதவன். ஸமஸ்த சேதனாசேதனங்களுக்கும் உள்புகுந்து நியமித்துக் கொண்டிருப்பவன்; ஸ்வயம் ப்ரகாசன்; ஜீவனைப் போல் கர்மத்தினால் பிறப்பவனல்லன்; ஜகத் காரணன். அவன் தன் சக்தியாகிய ப்ரக்ருதியால் இந்த ப்ரபஞ்சத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை நடத்துகிறான். அவன் அந்த ப்ரக்ருதியைத் தன் ஜ்ஞானத்தினால் பரிஹரித்துச் சப்தாதி விஷயங்களில் விருப்பமின்றி அதற்காகச் செய்யவேண்டிய ப்ரயத்னங்களுமின்றி உதாஸீனனாயிருக்கிறான். ஜீவாத்மாக்கள் முதலில் ஸுகங்களுக்காகக் கர்மங்களைச் செய்கின்றார்கள். செய்தும் தாம் விரும்பின ஸுகத்திற்கு நேரே விபரீதமாகப் பெறும்பாலும் துக்கமே நேருவதைக்கண்டு அக்கர்மங்களில் விருப்பத்தைத் துறந்து வைராக்யத்தைப் பெறுகிறார்கள். ஷாட்குண்ய பூர்ணனும் ஸர்வேஸ்வரனுமாகிய பரமாத்மா ஜீவாத்மாக்களை அவரவர் கர்மங்களுக்குத் தகுந்தபடி தூண்டுகிறான். ஆயினும் அவர்கள் செயலால் விளையும் பலத்தில் அவனுக்குப் பற்று கிடையாது. அவன் நித்யாநந்த ஸ்வரூபனாகிய தன்னைத் தான் அனுபவிக்கையால் ப்ரயோஜனங்களெல்லாம் கை கூடப் பெற்றிருப்பது மாத்ரமே யன்றி, அவனைத் தொடர்ந்திருக்கும் ப்ராணிகளும் கர்ம பலன்களில் மனப்பற்றுச் செய்து வருந்தமாட்

டார்கள். அப்பரமபுருஷன் ஜீவர்களின் கர்மங்களுக்குத் தகுந்தபடி அவர்களைத் தூண்டுகிறான். அஹங்காரமற்றவன்; எல்லாம் அறிந்தவன்; ஆத்மானுபவத்தினால் நிறைவாளன். அவனைத் தூண்டுகிறவர்கள் ஒருவரும் கிடையாது. அவன் தன்னைத் தொடரும் பக்தர்களுக்குத் தன்னோடொத்திருக்கும்படி அருள் செய்பவன்; தன் ஸ்வபாவத்தினின்று ஒருவாறும் மாறாதவன்; ஸர்வ சக்திகளும் அமைந்தவன். ஸமஸ்த தர்மங்களையும் பாதுகாப்பவன். அத்தகைய அப்பரம புருஷனைச் சரணம் அடைகின்றேன்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்—இவ்வாறு மனவூக்கத்துடன் மந்த்ரரூபமான உபநிஷத்தை ஜபித்துக் கொண்டிருக்கிற ஸ்வாயம்புவ மனுவைக் கண்டு அஸுரர்களும் ராக்ஷஸர்களும் பசியினால் அவனைப் பக்ஷிக்க எதிர்த்தோடினார்கள். உலகங்களைப் பாதுகாக்கும் பொருட்டு யஜ்ஞனென்னும் பேர் பூண்டு அவதரித்திருக்கிற ஸர்வாந்தராத்மாவான பகவான் யாமர்களென்னும் பேருடைய தன் புதல்வர்களுடன் கூடி அஸுரர்களும் ராக்ஷஸர்களும் அங்ஙனம் மனுவைப் பக்ஷிப்பதாக உத்தேசித்திருப்பது கண்டு அவர்களை வதித்து ஸ்வர்க்கத்தைப் பாதுகாத்துவந்தான். அக்னியின் புதல்வனான ஸ்வாரோசிஷனென்பவன் இரண்டாவது மனுவாயிருந்தான். த்யுமான் ஸுஷேணன் ரோசிஷ்மான் முதலியவர்கள் அவனுடைய பிள்ளைகள். அந்த மன்வந்தரத்தில் யஜ்ஞ பகவானுடைய பிள்ளையாகிய ரோசனன் இந்த்ரனாயிருந்தான். துஷிதர்களென்பவரும் மற்றும் பலரும் தேவர்களாயிருந்தார்கள். ஊர்ஜர் ஸ்தம்பர் முதலிய ஏழு ப்ராஹ்மண ச்ரேஷ்டர்கள் ஸப்தரிஷிகளாயிருந்தார்கள். வேதசிரஸ்ஸென்னும் ரிஷிக்குத் துஷிதை யென்னும் பார்யை இருந்தாள். பக

வான் தேவதைகளால் ப்ரார்த்திக்கப்பட்டு அந்தத் துஷிதையிடத்தில் விபுவென்னும் பெயர் பூண்டு பிறந்தான். வ்ரதங்களைத் தவறுமல் அனுஷ்டிக்குந் தன்மையுடைய எண்பத்தெண்ணுயிரம் முனிவர்கள், கௌமாராவஸ்தையில் ப்ரஹ்மசாரியாயிருந்த அந்த விபுவின் ஆசாரத்தை அப்யஸித்தார்கள். ப்ரியவ்ரதனுடைய பிள்ளையாகிய உத்தமனென்பவன் மூன்றுவது மனுவாயிருந்தான். ஸவனன் ஸ்ருஞ்சயன் யஜ்ஞன் ஹோத்ரன் முதலியவர்கள் அவ்வுத்தமனுடைய பிள்ளைகள். வஸிஷ்டருடைய பிள்ளைகளான ப்ரமதன் முதலியவர்கள் ஸப்தரிஷிகளாயிருந்தார்கள். ஸத்யர்களும் தேவஸ்ருதர்களும் பத்ரர்களும் தேவகணங்களாயிருந்தார்கள். ஸத்யஜித்தென்பவன் இந்த்ரனுயிருந்தான். தர்மனுடைய பார்யையாகிய ஸூந்ருதையிடத்தில் பகவான் ஸத்யஸேனனென்னும் பெயர் பூண்டு பிறந்தான். அவன் ஸத்யவ்ரதர் முதலிய தேவர்களுடன் இந்த்ரனுகிய ஸத்யஜித்துக்கு நண்பனுகிப் பொய் பேசுந்தன்மையரும் துர்நடத்தையுடையவரும் துஷ்டர்களும் ப்ராணிகளுக்கு த்ரோஹம் செய்பவருமான யக்ஷர்களையும் ராக்ஷஸர்களையும் பூதகணங்களையும் வதித்தான். உத்தமனுடைய உடன்தோன்றலாகிய தாமஸனென்பவன் நான்காவது மனுவாயிருந்தான். வ்ருஷன் க்யாதி நரன் கேது இவர் முதலிய பதின்மர் அம்மனுவுடைய பிள்ளைகள். ஸத்யகர்களும் ஹரிகளும் வீரர்களும் தேவகணங்களாயிருந்தார்கள். த்ரிசிகனென்பவன் இந்த்ரனுயிருந்தான். அந்தத் தாமஸமனுவின் அந்தரத்தில் ஜ்யோதிர்வ்யோமர் முதலிய அந்தணர்கள் ஸப்தரிஷிகளாயிருந்தார்கள். மன்னவனே! அந்த மன்வந்தரத்தில் விக்ருதியின் பிள்ளைகள் வைத்ருதர்களென்று பேர்பூண்டு தேவதைகளாயிருந்தார்கள். அவர்கள் காலக்ரமத்தில் அத்ய

யனம் செய்பவர்கள் இல்லாமையால் அழிந்துபோன வேதங்களைத் தங்கள் புத்திபலத்தினால் உத்தரித்தார்கள். அந்த மன்வந்தரத்திலும் ஹரிமேதருடைய பார்யையாகிய ஹரிணியென்பவளிடத்தில் பகவான் ஹரியென்னும் பெயர் பூண்டு அவதரித்தான். அவனே கஜேந்த்ராழ்வானை முதலையிடத்தினின்றும் விடுவித்தான்.

பரீக்ஷித்து சொல்லுகிறான் :—ஸ்ரீசுகமுனிவரே! ஸ்ரீ ஹரியென்னும் பகவான் முதலையால் பிடியுண்ட யானையை விடுவித்த விதத்தை நாங்கள் கேட்க விரும்புகிறோம். எங்கெந்த கதைகளில் பெரும்புகழுனும் பெரியோர்களால் புகழத்தகுந்தவனும் ஷாட்குண்ய பூர்ணனும் தன்னைப் பற்றினருடைய வருத்தங்களைப் போக்குந்தன்மையனுமாகிய பரமபுருஷன் பாடப்படுகிறானோ, அந்தந்த கதைகளெல்லாம் மிகவும் புண்யத்தை விளைக்க வல்லவை; தனத்தை விளைக்கும்; சுபங்களையெல்லாம் கொடுக்கும்; பெருங்குணங்கள் அமைந்தவை. ஆதலால் பகவானுடைய புகழை உட்கொண்ட கஜேந்த்ர மோக்ஷ வ்ருத்தாந்தத்தை நாங்கள் கேட்க விரும்புகிறோம்.

ஸூதர் சொல்லுகிறார் :—ஓ அந்தணர்களே! ப்ராயோபவேசம் செய்திருக்கிற பரீக்ஷித்து மன்னவனால் பகவானுடைய கதையைச் சொல்லும்படி தூண்டப்பட்ட ஸ்ரீசுக முனிவர் அம்மன்னவனைப் புகழ்ந்து ஸபையில் முனிவர்கள் கேட்டுக்கொண்டிருக்கையில் கஜேந்த்ர மோக்ஷ வ்ருத்தாந்தத்தை மொழியத் தொடங்கினர்.

முதல் அத்யாயம் முற்றிற்று.

## கஜேந்த்ரமோக்ஷ வ்ருத்தாந்தம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார் :—மன்னவனே! த்ரிகூட மென்று பேர்பெற்ற ஒரு பர்வதம் இருக்கிறது. அது பால் ஸமுத்ரத்தினால் சூழப்பட்டிருக்கும் ; மிகுந்த அழகுடையது. அது பதினாயிரம் யோஜனைகள் உயர்ந்திருக்கும்; நாற்புறத்திலும் அவ்வளவு விஸ்தாரமுடையது. அதற்கு வெள்ளியும் இரும்பும் பொன்னுமாகிய மூன்று சிகரங்கள் உண்டு. அப்பர்வதம் அம்மூன்று சிகரங்களால் ஸமுத்ரத்தையும் திசைகளையும் விளங்கச்செய்கின்றது. ரத்னங்களாலும் கைரிகாதிதாதுக்களாலும் விசித்ரங்களான மற்றும் பலசிகரங்களாலும் திசைகளைத் திகழச் செய்கின்றது. பலவகையான வ்ருக்ஷங்களும் கொடி செடிகளும் புதர்களும் அருவிகளின் கோஷங்களும் அதில் அமைந்திருக்கும். பால்ஸமுத்ரத்தின் அலைகள் அப்பர்வதத்தின் தாழ்வரைகள்மேல் நாற்புறத்திலும் மோதி அலம்புகின்றன. பச்சை நிறமுடைய மரகதரத்னங்களால் அப்பர்வதம் முழுவதும் பச்சை நிறமாயிருக்கும். அம்மலையின் சரிவுகளில் ஸித்தர்களும் சாரணர்களும் கந்தர்வர்களும் வித்யாதரர்களும் உரகர்களும் கின்னரர்களும் அப்ஸரஸ்த்ரீகளும் விளையாடிக் கொண்டிருப்பார்கள். மற்றும், தம் வீர்யத்தைப் புகழுந் தன்மையுடைய ஸிம்ஹங்கள் குஹைகளில் இருந்து நடத்துகிற கின்னராதிகளின் ஸங்கீத கோஷத்தைக் கேட்டு வேறு ஸிம்ஹங்கள் வந்து கர்ஜனை செய்கின்றனவென்று நினைத்து அதைப் பொறுக்கமுடியாமல் எதிர்த்துக் கர்ஜனை செய்கின்றன. அப்பர்வதம் சரிவுகளிலுள்ள பலவகை அரண்யங்களில் உலாவுகின்ற யானை குதிரை கடா முதலிய நாற்கால் ஜந்துக்களால் அழகாயிருக்கும். மற்றும், அதில் தேவதைகள் இறங்கி விளையாடுவதற்கு

உரிய பலவகை உத்யானங்கள் விளங்குகின்றன. அவற்றில் ஆச்சர்யமான வ்ருக்ஷங்கள் திகழ்கின்றன. அவற்றில் பற்பல பறவைகள் இனிய குரலுடன் குலாவிக்கொண்டிருக்கும். நிர்மலமான ஜலமுடைய நதிகளும் தடங்களும் அங்கு நிறைந்திருக்கும். அவற்றில் ரத்னங்களே மணலாகப்பெற்ற மணற்குன்றுகள் பற்பலவும் திகழ்வுற்றிருக்கும். அவ்விடத்திலுள்ள ஜலமும் காற்றும் தெய்வ மடந்தையர் ஸ்னானம் செய்யும்பொழுது உடம்பில் பூசுகிற வாஸனை வஸ்துக்களால் பரிமளித்துக்கொண்டிருக்கும். இத்தகையதான அந்த த்ரிகூட பர்வதத்தின் சாரலில் மஹானுபாவனாகிய வருணனுடைய உத்யானம் திகழ்கின்றது. அது ருதுமத்தென்னும் பேருடையது. அதில் தெய்வமடந்தையர்கள் ஸர்வகாலமும் விளையாடிக் கொண்டிருப்பார்கள். புஷ்பங்களும் பழங்களும் என்றும் மாறாதிருக்கப்பெற்ற பலவகை ஆச்சர்யமான வ்ருக்ஷங்களால் அவ்வுத்யானம் நாற்புறங்களிலும் அலங்கரிக்கப்பட்டிருக்கும். மந்தார வ்ருக்ஷங்களும் பாரிஜாத வ்ருக்ஷங்களும் பாதிரிமரங்களும் அசோக வ்ருக்ஷங்களும் சம்பக மரங்களும் மாமரங்களும் ராஜாதன வ்ருக்ஷங்களும் பலா மரங்களும் தேன் மாமரங்களும் காட்டு மாமரங்களும் பாக்கு மரங்களும் தென்னைமரங்களும் பேரீச்சைமரங்களும் மாதுளை மரங்களும் இலுப்பை மரங்களும் பனை மரங்களும் மராமரங்களும் பச்சிலை மரங்களும் வேங்கை மரங்களும் மலை மல்லி மரங்களும் அரிஷ்ட வ்ருக்ஷங்களும் அத்தி மரங்களும் கல்லால மரங்களும் ஆலமரங்களும் பலாசு மரங்களும் சந்தன மரங்களும் வேப்ப மரங்களும் கோவிதார வ்ருக்ஷங்களும் ஸரள வ்ருக்ஷங்களும் தேவதாரு வ்ருக்ஷங்களும் த்ராக்ஷைக் கொடிகளும் கரும்புகளும் வாழை மரங்களும் நாவல்

மரங்களும் இலந்தை மரங்களும் தான்றி மரங்களும் கடுக்காய் மரங்களும் நெல்லி மரங்களும் பில்வமரங்களும் விளாமரங்களும் எலுமிச்ச மரங்களும் சேராமரங்களும் அந்த உத்யானத்தில் நிறைந்திருக்கும். அவ்வுத்யானத்தில் மிகவும் பெரிய ஒரு தடாகம் இருக்கின்றது. அதில் ஸ்வர்ணமயமான தாமரை மலர்களும் ஸாதாரணமான தாமரைகளும் ஆம்பல்களும் நெய்தல்களும் செங்கழுநீர்களும் மலர்ந்து மிகவும் அழகாயிருக்கும். அந்தத் தடத்தில் வண்டுகள் மதித்து முரன்றுகொண்டிருக்கும். மற்றும் பல பறவைகளும் இனிய குரலுடன் குலாவிக்கொண்டிருக்கும். ஹம்ஸங்களும் நீர்க்காகங்களும் சக்ரவாகங்களும் ஸாரஸப் பறவைகளும் அங்கு மிகுந்திருக்கும். நீர்க்கோழிகளும் கோயஷ்டிப் பறவைகளும் கள்ளிக் காக்கைகளும் இனிதாகக் கூவிக்கொண்டிருக்கும். இங்குமங்கும் உலாவுகின்ற மீன்களாலும் ஆமைகளாலும் அசைக்கப்பட்ட தாமரை மலர்களினின்று உதிர்கின்ற தூட்களால் அத்தடத்தின் ஜலம் பரிமளித்துக் கொண்டிருக்கும். அங்கு கிலக்கடப்ப மரங்களும் நீர்வஞ்சிக் கொடிகளும் நளச் செடிகளும் நீர்க்கடப்ப மரங்களும் மகிழமரங்களும் குருந்தச் செடிகளும் மருதோன்றிச் செடிகளும் அசோக மரங்களும் காட்டுவாகை மரங்களும் மலைமல்லி மரங்களும் இங்குண மரங்களும் குப்ஜகங்களும் ஸ்வர்ணயூதிகளும் நாகவ்ருக்ஷங்களும் புன்னை மரங்களும் ஜாதிமல்லிகளும் மல்லிகளும் தாமரைகளும் குருக்கத்திகளும் மற்றும் பலவகை மரங்களும் செடிகொடிகளும் புஷ்பித்து மிகவும் அழகாயிருக்கும். அந்தத்தடத்தின் கரையில் மற்றும் பலவகை வ்ருக்ஷங்கள் தளிர் பூ காய் பழம் முதலியன என்றும் மாறுதிருக்கப்பெற்று மிகவும் மனோஹரமாயிருக்கும். ஒருகாலத்தில் அப்பர்வதத்தின் காடு

களில் ஸஞ்சரித்துக் கொண்டிருப்பதும் யானைக்கூட்டங் களில் தலைமையுள்ளதுமாகிய ஒரு யானை பெண்யானை களுடன் முட்களும் மூங்கில்களும் பரம்புகளும் நிறைந்த புதர்களையும் மரங்களையும் முறித்துக்கொண்டு தண்ணீர் குடிக்கவிரும்பி அத்தடத்தின் அருகே வந்தது. அந்தக் கஜேந்த்ரத்தினுடைய மதஜலத்தின் பரிமளத்தை மூக ந்தமாத்ரத்தில் ஸிம்ஹங்களும் மேன்மையுடைய மற்ற யானைகளும் புலிமுதலிய துஷ்ட ம்ருகங்களும் கட்கம்ரு கங்களும் மஹா ஸர்ப்பங்களும் வெள்ளைச் சரப ம்ருகங் களும் கறுப்புச் சரப ம்ருகங்களும் பயந்தோடுகின்றன. சமரம்ருகங்களும் செந்நாய்களும் பன்றிகளும் கடாய் களும் காடிகளும் முள்ளம்பன்றிகளும் கருங்குரங்கு களும் ஸாலாவ்ருக ம்ருகங்களும் குரங்குகளும் மான் களும் முயல்களும் மற்றுமுள்ள அற்ப ம்ருகங்களும் "நம்மை இன்னுஞ் செய்யாது" என்று அதன் அனுமதியி னால் நிர்ப்பயமாய் உலாவிக்கொண்டிருக்கும். மதஜலம் பெருகப்பெற்று அந்தக் கஜேந்த்ரத்தை வண்டினங்கள் மதஜலம் பருகுவதற்காக ஓயாமல் சுற்றிச்சூழ்ந்துகொ ண்டிருக்கும். அது நடக்கும் பொழுது மிகவும் பருத்தி ருக்கின்ற அதன் சரீரத்தினுடைய பாரத்தைப் பொ றுக்க முடியாமல் அப்பர்வதம் நடுங்கும். பெண்யானைக ளோடும் யானைக்குட்டிகளோடுங்கூடி நெடுந்தூரம் உலாவி வருகின்ற அக்கஜேந்த்ரம் வெயிலில் அடிபட்டு மதத்தினால் கண்கள் சுழலப்பெற்றுத் தன்னுடன் வரு கின்ற யானைக் கூட்டமும் தானும் தண்ணீர் குடிக்க விரும்பித் தாமரை மலர்களின் தூட்களை அடுத்துக் கொண்டு அத்தடத்தினின்று வீசுகிற காற்றின் வாஸனை யை வெகுதூரத்தில் மோந்து அவ்விடம் வந்து அத்தடத் தில் இழிந்து ஸ்வர்ணமயமான தாமரைமலர்களின் தூட்

களால் பரிமளித்துக் கொண்டிருப்பதும் அம்ருதம்போன்ற ருசியுடையதுமாகிய ஜலத்தைத் துதிக்கையால் எடுத்து உடம்பெல்லாம் கொட்டி நனைத்து வருத்தமெல்லாம் தீரப்பெற்று வேண்டினவளவு பானம்செய்தது. இல்லறவாழ்க்கையில் மனப்பற்றுடையவன் பெண்டிர்களோடு விளையாடுவதுபோல, அந்தயானை தன் துதிக்கையில் ஜலத்தையெடுத்துக் கொடிய மதமுடைய யானைக்குட்டிகளையும் பெண்யானைகளையும் அபிஷேகம் செய்வதும் குடிக்கச் செய்வதும் களிப்பதுமாகிப் பகவானுடைய மாயையால் தனக்குநேர்ந்த துக்கத்தைச் சிறிதும் ஆலோசிக்காமலே விளையாடிக் கொண்டிருந்தது. மன்னவனே! அக்குளத்தில் வாஸம் செய்வதாகிய வலிவுள்ள ஒரு முதலை தெய்வத்தினால் தூண்டப்பட்டு அந்தக் கஜேந்த்ரத்தைக் கோபத்துடன் பாதத்தில் பிடித்துக்கொண்டது. மிகுந்த பலமுடைய அந்தக் கஜேந்த்ரம் தெய்வாதீனமாய் வ்யஸனத்தில் அகப்பட்டு பலமுள்ளவரையில் அதினின்று தன்னை விடுவித்துக்கொள்ள ப்ரயத்னம் செய்தது. மஹாபலமுடையதான முதலையால் பலமுள்ளவளவும் இழுக்கப்பட்டு வருந்துகின்ற கஜேந்த்ரத்தைக் கண்டு பெண்யானைகள் மனஇரக்கத்துடன் பிளிறின. உதவியாயிருந்த மற்ற யானைகளும் அதை அந்த வருத்தத்தினின்றும் விடுவிக்கவல்லமை யாயிருக்கவில்லை. யானை கரைக்கும் முதலை ஜலத்திற்குமாக ஒன்றையொன்று வலிவுடன் இழுத்து 'மஹாபலமுடைய அவ்விரண்டும் சண்டையிட்டுக் கொண்டிருக்கையில் ஆயிரமாண்டுகள் சென்றன. தேவதைகள் அதைக் கண்டு வியப்புற்றார்கள். பிறகு, நெடுங்காலமாய் ஜலத்தில் முதலையால் இழுக்கப்பட்டு வருந்துகின்ற கஜேந்த்ரத்திற்கு மனோபலம் தேஹபலம் இந்த்ரியபலம் இவையெல்லாம் நெடுங்

தூரம் அழிந்துபோயின. ஜலத்தில் வாஸஞ்செய்யுந் தன்மையுடைய முதலைக்கு அவையெல்லாம் வளர்ந்தன. அக்கஜேந்த்ரம் இவ்வாறு ப்ராணஸம்சயம் நேரப் பெற்று ஸ்வாதீனமற்று எவ்வளவு ப்ரயத்னஞ் செய்தும் தன்னை விடுவித்துக் கொள்ளமுடியாமல் நெடுநேரம் ஆலோசித்துக் கொண்டிருந்தது. அப்பால் அதற்கு இவ்வாறு புத்தி உண்டாயிற்று. 'இங்ஙனம் வருந்துகின்ற என்னை என் பந்துக்களான இந்த யானைகள் விடுவிக்க வல்லமையற்றிருக்கின்றன. நான் இத்தனை காலம் ப்ரயத்னஞ்செய்தும் வல்லனாகவில்லை. இனி இப்பெண்யானைகள் எங்ஙனம் என்னை விடுவிக்கப் போகின்றன? ஆகையால் தெய்வத்தின் பாசம்போன்ற முதலையால் பிடியுண்டிருக்கிற நான் ஸர்வஸ்மாத்பரனான அந்தப் பரமபுருஷனையே சரணம் அடைகிறேன். எவனுடைய ஸங்கல்பத்தினால் நான் இந்த முதலையினிடம் அகப்பட்டு வருந்துகிறேனோ அந்த ஸர்வேஶ்வரனையே சரணம் அடைகிறேன். எவன் மஹாபலிஷ்டனான ம்ருத்யுவாகிற ஸர்ப்பத்தினின்று பயந்து தன்னைச் சரணம் அடைந்தவர்களைப் பாதுகாக்கின்றானோ, எவனிடத்தில் ம்ருத்யுவும் பயந்தோடுகின்றானோ, அப்படிப்பட்ட ஸர்வேஶ்வரனையே நான் சரணம் அடைவேனாக'. இரண்டாவது அத்யாயம் முற்றிற்று.

{ கஜேந்த்ரம் பகவானைத் துதிசெய்தலும், பகவான் வந்து அதை விடுவித்தலும். }

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அந்தக் கஜேந்த்ரம் இங்ஙனம் புத்தியால் நிச்சயித்து மனத்தை வேறு விஷயங்களினின்றும் திருப்பி ஹ்ருதயத்தில் நிறுத்திப் பூர்வஜன்மத்தில் தான் அப்யஸித்திருந்த மஹிமையுடையதான ஒரு

ஸ்தோத்ரத்தை ஜபித்து 'ஓம். சேதனா சேதன ரூபமான இந்த ப்ரபஞ்சத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களுக்கு ஆதிகாரணனும் மேன்மையுடைய ப்ரஹ்மாதிகளுக்கும் மேலாயிருப்பவனும் ஷாட்குண்யபூர்ணனுமாகிய பரம புருஷனுக்கு நமஸ்காரம். இந்த ப்ரபஞ்சமெல்லாம் எவனிடத்தில் மறைகின்றதோ, எவனிடத்தினின்று உண்டாகின்றதோ, எவன் இதைப் படைத்துப் பாதுகாக்கின்றானோ, எவன் இந்த ப்ரபஞ்சத்திற்குள் புகுந்து நியமித்துக்கொண்டு எல்லாம் தானேயென்னும்படி அமைந்திருக்கிறானோ, எவன் சேதனா சேதனங்களுக்கு அந்தர்யாமியாயிருந்தும் (ஸ்வரூபம் மாறப்பெறுகின்ற அசேதனத்தைக் காட்டிலும் ஸ்வபாவம் மாறப்பெறுகின்ற சேதனர்களைக் காட்டிலும் விலக்ஷணனாயிருக்கிறானோ,) எவன் தனக்கு மேற்பட்டவன் எவனுமின்றி ஸ்வதந்த்ரனாயிருக்கிறானோ, அத்தகைய பரமபுருஷனை நான் சரணம் அடைகிறேன். அந்தப் பரமபுருஷன் தன் ஸங்கல்பத்தினால் தன்னிடத்தில் தானே தேவமனுஷ்யாதி நாமரூபங்களுக்கிடமாயிருக்குமாறு தோற்றுவித்த இந்த ப்ரபஞ்சத்தை ஒருகால் நாமரூபங்களுக்கிடமாகாதிருக்குமாறு தன்னிடத்திலேயே மறையச் செய்கிறான். என்றும் குறுகாமல் அளவிடக்கூடாத ஜ்ஞானத்தையுடைய அப்பரம புருஷன் காரண தசையில் ஸூக்ஷ்மமாயும் கார்யதசையில் ஸ்தூலமாயுமிருக்கிற இந்த ப்ரபஞ்சத்தை இரண்டு தசைகளிலும் ஸாக்ஷாத்கரிக்கிறான். அவன் தனக்குத் தானே காரணன்; ப்ரக்ருதியைக் காட்டிலும் விலக்ஷணனான ஜீவனைக் காட்டிலும் விலக்ஷணனாயிருப்பவன். அவன் என்னைப் பாதுகாப்பானாக. இரண்டு பரார்த்தங்கள் அடங்கின கல்பத்தின் முடிவில் இந்த ஜகத்திற்கெல்லாம் கார

ணமான பூமி முதலிய ஸமஸ்த பூதங்களும் அவற்றின் கார்யமான ஸமஸ்த-லோகங்களும் அவற்றைப் பாதுகாக்கின்ற ப்ரஹ்மாதிகளும் அழிந்து போகையில், மிகவும் ஸூக்ஷ்மமாகையால் அறியமுடியாததும் அளவிடமுடியாததுமான தமஸ்ஸு ஒன்றுமாத்ரமே மிகுந்திருக்கின்றது. அப்பொழுது ஸர்வேஶ்வரன் அந்தத் தமஸ்ஸுக்கு அந்தர்யாமியாய் நியமித்துக்கொண்டு[1] ஹேயங்கள் எவையும் தீண்டப்பெறாமல் விளங்குகிறான். ஸத்வகுணம் தலையெடுக்கப் பெற்ற மஹாயோகிகளும் அந்தப் பரமபுருஷனுடைய ஸ்வரூபத்தை அறியமாட்டார்கள். இனி ஒன்றுமறியாத மூடஜந்துக்களில் எவன்தான் அவன் ஸ்வரூபத்தை அறியவாவது வாயால்சொல்லவாவது உரியனாவான்? ஸாதாரணமாய்ப் பற்பல வேஷங்களைப் பூண்டு நாட்யமாடுகிறவனுடைய ஸ்வரூபத்தையே 'இவன் இன்னவன்' என்று அறியமுடிகிறதில்லை. இப்படியிருக்கக் கண்ணுக்குப் புலப்படாத ஸர்வேஶ்வரனுடைய உண்மையை அறிவற்ற ஸம்ஸாரிகள் எங்ஙனம் அறிவார்கள்? அவனுடைய வ்யாபாரங்களை இப்படிப் பட்டவையென்று எவர்க்கும் அறியமுடியாது. அப்படிப்பட்ட ஸர்வேஶ்வரன் என்னைப் பாதுகாப்பானாக. முனிவர்கள் நித்யாநந்த ரூபமான பரமபுருஷனுடைய ஸ்வரூபத்தை ஸாக்ஷாத்கரிக்க விரும்பிப் பிள்ளை பெண்டிர் முதலிய விஷயங்களில் மனப்பற்றைத் துறந்து ஸாதுக்களின் குணங்கள் பலவும் அமையப்பெற்றுப் பற்பலவகையான பூதங்களையெல்லாம் தம்மோடொத்தவைகளாகப் பாவிக்குந்தன்மை யமைந்து நண்பர்களாகி எவ்வித கொடுமையும் இல்லாததும் மற்ற ஜனங்களால் அனுஷ்டிக்க முடியாததுமான பகவதுபாஸனமாகிற வ்ரதத்தை அரண்

1. கெட்டகுணங்கள்.

யத்தில் சென்று அனுஷ்டிக்கிறார்கள். அப்படிப்பட்ட ஸர்வேஶ்வரன் என்னையும் பாதுகாப்பானாக. | அப்பரம புருஷனுக்குக் கர்மத்தினால் விளையும் பிறவி செயல் நாமம் ரூபம் குணம் தோஷம் இவற்றில் எதுவும் கிடையாது. ஆயினும் துஷ்டர்களை அழிப்பதற்காகவும் சிஷ்டர்களைப் பாதுகாப்பதற்காகவும் உரிய காலங்களில் அந்தப் பிறவி முதலியவைகளைத் தன் ஸங்கல்பத்தினால் ஏற்றுக்கொள்கிறான். அவன் என்னைப் பாதுகாப்பானாக. அப்பரமபுருஷன் மேன்மையுடையவர்களான ப்ரஹ்மாதிகளுக்கும் ப்ரபு. ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்கள் முதலிய அவனுடைய சக்திகள் அளவற்றவை. அவனுக்குக் கர்மத்தினால் விளையும் உருவம் கிடையாது. அவன் தன் ஸங்கல்பத்தினால் பல உருவங்களைக் கொள்ளுந் தன்மையுடையவன். அவனுடைய செயல்கள் உலகத்தின் செயல்களைக்காட்டிலும் விலக்ஷணமாகையால் அற்புதமாயிருக்கும். அத்தகைய பரம புருஷனுக்கு நமஸ்காரம். அவன் ஸ்வயம்ப்ரகாசன்; எல்லாவற்றையும் ஒரே ஸமயத்தில் ஸாக்ஷாத்கரிக்குந் தன்மையுடையவன்; மூன்று லோகங்களிலும் உட்புகுந்து நியமித்துத் தரித்துக்கொண்டிருப்பவன்; வாக்குக்கும் மனத்திற்கும் ஸத்வம் தலையெடுத்த சித்தத்திற்கும் எட்டாத மஹிமையுடையவன்; எவ்வகை ப்ரயோஜனங்களையும் விரும்பாமல் அனுஷ்டிக்கின்ற ஜ்ஞானிகளின் நிவ்ருத்தி கர்மத்தினால் அடையத் தகுந்தவன்; மோக்ஷத்தைக்கொடுக்கும் ப்ரபு; துக்கமென்பது சிறிதும் தீண்டப்பெறாத ஜ்ஞானைகஸ்வரூபன்; பசி தாஹம் முதலிய ஊர்மிகளற்றவன்; ஸாதுக்களுக்கு அனுகூலன்; துஷ்டர்களுக்குக் கொடியவன்; ஸம்ஸாரிகளுக்குத் தோற்றாமல் மறைந்திருப்பவன்; ஸத்வாதி குணங்களுக்கு ஆதாரன்; ஆயினும் அவற்றிற்கு உட் படமாட்டான்;

ஹேய குணங்கள் எவையும் தீண்டப்பெறுதவன்; பக்ஷ பாத மற்றவன்; ஞானக் கட்டியாயிருப்பவன். அத் தகைய ஸர்வேச்வரனுக்கு நமஸ்காரம். ஜகதீசா! நீ, ஜீவாத்மாக்களைச் சரீரமாகவுடையவன்; ஸர்வப்ராணி களுக்கும் ப்ரபு; எல்லாவற்றையும் ஸாக்ஷாத்கரிக்குந் திறமையுடையவன்; ஸமஸ்த ப்ராணிகளிலும் உட்பு குந்து அவர்களை நியமிப்பவன்; உனக்கு நீயே காரண னன்றி உனக்கு மேற்பட்ட காரணவஸ்து ஒன்றும் கிடையாது. ஸமஸ்த லோகங்களுக்கும் நீயே உபாதான காரணன். அத்தகையனுன உனக்கு நமஸ்காரம். நீ ஸம ஸ்த இந்த்ரியங்களையும் அவற்றின் விஷயங்களான சப் தாதிகளையும் ஸர்வகாலத்திலும் ஸாக்ஷாத்கரிக்கின்றனை. ஸம்சயம் விபரீத ஜ்ஞானம் அன்யதா ஜ்ஞானம் முதலிய தர்மங்களுக்கு நீயே காரணன். ஒருவாறு நிலையுற்றிருக் குந்தன்மையற்றதும் நிழல் போல உன்னை விட்டுப் பிரியா திருப்பதுமாகிய ப்ரக்ருதி அசேதனமாகையால் அதற்கு இயற்கையில் ப்ரவ்ருத்திகள் சேராது. ஆகையால் அவை தமக்குக் காரணமான உன்னை அறிவிக்கின்றன. நீயே எல்லாவற்றையும் விளங்கச் செய்கின்றனை. நீ அப்ராக் ருதமான திவ்யமங்கள விக்ரஹமுடையவன். நீ ஸாதுக் களான யோகிகளுக்கே தோற்றுந்தன்மையன். அத் தகைய உனக்கு நமஸ்காரம். நீயே ஸமஸ்த வஸ்துக்களுக் கும் காரணன். நீ ஸமஸ்த காரகங்களையும் சரீரமாகவுடை யவன். உனக்கு நீயே காரணனன்றி வேறொரு காரணம் கிடையாது. நீ ப்ரபஞ்சமாக விரியும்பொழுது உன் சரீர மாகிய சேதனுசேதனங்களே மாறுகின்றனவன்றி நீ என்றும் ஒருவாறுகவே யிருக்கின்றனை. உருண்டையான மண் வாயும் வயிறுமுள்ள குடமாய் மாறுவதுபோல, நீ மாறுகிறதில்லை. குடத்திற்கு மண்போலச், சேதனு

சேதனங்களைச் சரீரமாகவுடைய நீயே இந்த ப்ரபஞ்சத்திற்கு உபாதானகாரணம். ஆகையால் உன்னுடைய காரணத்தன்மை அற்புதமாயிருக்கின்றது. ப்ரவாஹங்களெல்லாம் ஸமுத்ரத்தில்போய் விழுவதுபோலப், பாஞ்சராத்ரம் முதலிய ஆகமங்களும் வேதங்களும் உன்னையே முக்யமாகக் கூறுகின்றன. மோக்ஷத்தைக் கொடுக்கும் ப்ரபு நீயே. மோக்ஷம் பெறுகின்றவர்களுக்கு அடையத்தகுந்த வஸ்துவும் நீயே. அத்தகைய உனக்கு நமஸ்காரம். ஸத்வாதி குணஸ்வரூபமான ப்ரக்ருதியாகிற அரணிக்கட்டையில் மறைந்திருக்கின்ற ஜீவஸமஷ்டியாகிற அக்னியை நீ ஸம்ஹாரகாலத்தில் பானஞ் செய்கின்றனை. ஸ்ருஷ்டிகாலத்தில் உன் ஸங்கல்பத்தினால் உன் சரீரமான சேதனாசேதனங்களைக்கொண்டு ப்ரபஞ்சத்தைப் படைக்கின்றனை, நிவ்ருத்தி மார்க்கத்தை நடத்தி மோக்ஷத்தைக் கொடுப்பவன் நீயே. உன் ஸ்வரூபம் கேவலம் ஜ்ஞானானந்தமயமாயிருக்கும், அதைமனத்தினாலாவது வாக்கினாலாவது அளவிட முடியாது. மோக்ஷம் பெற்றுச் சாஸ்த்ர மர்யாதைகளைக் கடந்த முக்தர்களுக்கு நீ விளங்குகின்றனை. அத்தகைய உனக்கு நமஸ்காரம். உன்னையே சரணம் அடைந்த என்னைப் போன்ற ஸம்ஸாரிகளாகிற பசுக்களைக் கர்மபந்தமாகிற பாசத்தினின்றும் விடுவிக்கின்றனை. நீ ப்ரக்ருதிக்கு உட்பட்டவனல்லை. நீ பேரருளாளன். உன்னிடத்தில் மனப்பற்றுடையவர் சப்தாதி விஷயங்களில் விளையும் விருப்பத்தை வெல்லுவார்கள். உன்னைப் பணிகின்றவர்கள் எவ்விதத்திலும் கெடுதி யடையமாட்டார்கள். நீ உனது அம்சமாகிய ஜீவாத்மாக்களுக்கு அந்தராத்மாவாயிருக்கின்றனை யாகையால் ஜீவாத்மாக்களாகத் தோற்றுகின்றனை. நீ ஷாட்குண்ய பூர்ணன். உன் ஸ்வரூப ஸ்வபாவங்

கள் அளவிடக்கூடாதவை. அத்தகைய உனக்கு நமஸ்காரம். தேஹம் பிள்ளை நண்பன் வீடு பணம் பரிஜனங்கள் இவர்களிடத்தில் மனப்பற்றுடையவர் எவ்வளவு வருந்தியும் உன்னைப் பெறமாட்டார்கள். நீ சப்தாதி விஷயங்களில் பற்றற்றவன். ராகம் முதலிய தோஷங்களால் தீண்டப்படாத மனமுடைய பெரியோர்கள் உன்னைத் தங்கள் ஹ்ருதயங்களில் த்யானிக்கிறார்கள். நீ ஜ்ஞானஸ்வரூபன். நீ எல்லாரையும் அடக்கி ஆள்கின்றனை. ஷாட்குண்ய பூர்ணன். உனக்கு நமஸ்காரம். தர்மம் அர்த்தம் காமம் மோக்ஷம் என்கிற புருஷார்த்தங்களை விரும்புகிறவர்கள் எவனைப் பணிந்து தாங்கள் விரும்பின தர்மம் முதலிய பலன்களைப் பெறுகின்றார்களோ, எவன் அவர்களுக்கு மற்றும் பல விருப்பங்களையும் கொடுத்து அழிவில்லாத தேஹத்தையுங்கொடுக்கின்றானோ, பெருங்கருணையுடைய அந்தப் பரமபுருஷன் எனக்கு மோக்ஷத்தைக் கொடுப்பானாக. ஒரு ப்ரயோஜனத்தையும் விரும்பாமல் பகவானைச் சரணமடைந்தவர்கள் மிகவும் அற்புதமாயிருப்பதும் மிக்க மங்களமுமான அவனுடைய சரித்ரங்களைப் பாடிக் கொண்டு அவன் குணங்களை அனுபவிக்கையாலுண்டான ஆனந்தமாகிற ஸமுத்ரத்தில் மூழ்கி அவனிடத்தினின்றும் எந்தப் புருஷார்த்தத்தையும் விரும்பமாட்டார்கள். அவன் என்றும் அழியாதவன்; பரப்ரஹ்மமென்று ஓதப்படுகின்றவன்; மேன்மையுடையவர்களான ப்ரஹ்மாதிகளுக்கும் மேலாயிருப்பவன்; கண்முதலியவற்றிற்கு எட்டாதவன்; பக்தியோகத்தினால் மாத்ரமே அடையத் தகுந்தவன; வெகுதூரத்திலிருக்கும் ஸூக்ஷ்மவஸ்துபோல, இந்த்ரியங்களுக்கு விஷயமாகாதவன், ஸூக்ஷ்மமான வஸ்துவைக்காட்டிலும் ஸூக்ஷ்மமாயிருப்பவன்; பக்தியைத் தவிர மற்ற உபாயங்களுக்கு எட்டாதவனாகையால்

வெகுதூரத்திலிருப்பவன்; தேச கால வஸ்து பரிச்சேதங்கள் மூன்று மற்றவன்; ஆதிமூலன்; எல்லாவற்றிலும் உள்ளும் புறமும் நிறைந்திருப்பவன்; அவாப்தஸமஸ்த காமன். நான் அத்தகைய பரமபுருஷனைத் துதிக்கிறேன். ப்ரஹ்மதேவன் முதலிய தேவதைகளும் ஜங்கமஸ்தாவர ரூபமான ஸமஸ்தலோகங்களும் வேதங்களும் ஆகிய இவையெல்லாவற்றையும் அப்பரம புருஷன் தன்னுடைய ஸங்கல்ப சக்தியின் கோடியில் ஒருபாகத்தின் பதினாயிரத்தில் ஒரு அம்சத்தினால் நாம ரூபவிகாரங்களுக்கிடமாயிருக்குமாறு நிர்மித்துத் தரித்துக்கொண்டிருக்கிறான். அக்னியினிடத்தினின்று ஜ்வாலைகள் கிளம்பி அதினிடத்திலேயே மறைவதுபோலவும், ஸூர்யனிடத்தினின்று கிரணங்கள் கிளம்பி அவனிடத்திலேயே மறைவதுபோலவும், புத்தி மனம் இந்த்ரியங்கள் தேவமனுஷ்யாதி சரீரங்கள் இவை அடங்கியதும் ப்ரக்ருதியின் பரிணாமமுமாகிய இந்த ப்ரபஞ்சமெல்லாம் அந்தப் பரமபுருஷனிடத்தினின்றும் வெளித்தோன்றி அவனிடத்திலேயே மறைகின்றன. அத்தகையனான அந்தப்பரமபுருஷன் தேவனுமல்லன்; அஸுரனுமல்லன்; மனுஷ்யனுமல்லன்; திர்யக்குமல்லன்; ஆணுமல்லன்; பெண்ணுமல்லன்; மற்ற நபும்ஸகனுமல்லன்; எவ்வகை ப்ராணியுமல்லன்; குணமுமல்லன்; கர்மமுமல்லன்; ஆகையால் சேதன வர்க்கத்திலும் சேர்ந்தவனல்லன்; அசேதனவர்க்கத்திலும் சேர்ந்தவனல்லன். அவன் இங்ஙனம் நிஷேதிக்கப்பட்ட வஸ்துக்களைக் காட்டிலும் விலக்ஷணனாகி அவற்றில் நிறைந்து அவையெல்லாம் தானேயாயிருப்பவன். கெட்டகுணங்களைவையும் தீண்டப்பெறுதவனென்று ஃச்ருதிகள் சொல்லுகையாலும் நற்குணங்களை நிஷேதிக்காமையாலும் ஸமஸ்த கல்யாணகுணநிதியென்று அவற்றால் நிரூபிக்கப்

பட்டவன். அத்தகைய ஸர்வேஶ்வரன் என்னுடைய பாபங்களைப் போக்கி மேன்மையுடன் விளக்கமுற்றிருப்பானாக. நான் இந்த முதலையினின்று விடுபட்டுப்பிழைக்க வேண்டுமென்று விரும்பவில்லை. உள்ளும் புறமும் மறைத்துக்கொண்டு அஹங்கார மமகாரங்களை விளைக்கின்ற இந்த யானைஜன்மத்தினால் என்ன புருஷார்த்தம்? ப்ராக்ருதிஸம்பந்தத்தை விளைத்து ஆத்மஸ்வரூபத்தை மறைத்துக்கொண்டிருக்கிற கர்மத்தினின்று விடுபடுகையாகிற மோக்ஷத்தையே நான் விரும்புகிறேன். மோக்ஷத்தை யடைந்தவர்கள் எத்தனை காலம் கடந்தாலும் அதினின்று மீளாமல் மஹாநந்தத்தை அனுபவிப்பார்களல்லவா? ஆகையால் அவன் எனக்கு அந்த மோக்ஷத்தைக் கொடுப்பானாக. ஜகத்தையெல்லாம் படைக்கின்றவனும் ஜகத்தைச் சரீரமாகவுடையவனும் அந்த ஜகத்தைக்காட்டிலும் விலக்ஷணமாயிருப்பவனும் எல்லாமறிந்தவனும் ஜகத்திற்குப் புருஷார்த்தமாயிருப்பவனும் ஜகத்திற்குள் நுழைந்து தரித்துக்கொண்டிருப்பவனும் கர்மத்தினால் விளையும்பிறவியற்றவனும் குணங்கள் நிறைந்தவனும் பரம ப்ராப்யனுமாகிய அப்பரம புருஷனை நான் மோக்ஷத்தை விரும்பி வணங்குகிறேன். அவனை அருள் புரிவித்துக்கொள்வதற்கு வணக்கத்தையொழிய வேறொரு உபாயமும் எனக்குத் தெரியவில்லை. யோகத்தினால் புண்ய பாப கர்மங்களையெல்லாம் தஹித்த யோகிகள் யோகத்தினால் சுத்தி செய்யப்பட்ட தங்கள் ஹ்ருதயத்தில் அவனை ஸாக்ஷாத்கரிக்கிறார்கள். யோகேஶ்வரனை அப்பரம புருஷனை அத்தகைய சக்தியற்ற நான் வெறுமனே பணிகிறேன். ஜகதீசா! ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களென்கிற மூன்றுவகையான உன் சக்திகளின் வேகத்தை எவராலும் தடுக்கமுடியாது. நீ

சேராதவற்றையும் சேர்க்குந் திறமையுடையவன. புத்தியின குணங்களான ஸம்சயம் விபர்யயம் முதலியவையெல்லாம் உன்னிடத்தினின்றே உண்டாகின்றன. நீ உனனைச் சரணம் அடைந்தவர்களைப் பாதுகாக்குந் தன்மையன். உன்னுடைய சக்திகள் எல்லையில்லாதவை. இந்த்ரியங்களை வெல்லாதவர்கள் உன்னுடைய உண்மையை அறியமாட்டார்கள். அத்தகையனான உனக்கு அடிக்கடி நமஸ்காரம். இந்த ப்ரபஞ்சத்திலுள்ள ஜனங்கள அனைவரும எவனுடைய மாயையினால தேஹத்தையே ஆத்மாவாக ப்ரமித்து ஆத்மஸ்வரூபத்தைப பாழ்செய்து அங்ஙனம் பாழடைவதையும அறியாதிருக்கிறார்களோ, எவனுடைய மஹிமையை ஒருவராலும் கடக்கமுடியாதோ, அப்படிப்பட்ட பகவானை வணங்குகிறேன.

ஸ்ரீ சுகர் சொல்லுகிறார்:—அந்தக் கஜேந்த்ரம், ப்ரஹ்மாதிகளான தேவதைகளில எவரையும் விசேஷித்துக் குறிக்காமல்ஹேய குணங்களற்ற பரமபுருஷனுடைய ஸ்வரூபத்தை வர்ணித்துச் சரணமடைகையில ப்ரஹ்மாதி தேவதைகள ஹம்ஸவாஹனம் முதலான தம்முடைய அடையாளங்களிலும நான முகனாயிருக்கை முதலிய வேறுபாட்டிலும் அபிமானமுடையவர்களாகையால் அது அவற்றைக் குறிக்காமையால அத்தேவர்களில் ஒருவரும் அதனிடம் வரவில்லை. அப்பொழுது ஸமஸ்த தேவஸ்வரூபியான ஹரியெனனும பகவான அந்த யானை வர்ணித்த குணங்களெல்லாம் அமைந்தவனாகையால் தானே தோன்றினான். கஜேந்த்ரன் முதலையினால் பிடியுண்டு வருந்துவதைக் கண்டு அது செய்த ஸ்தோத்ரத்தைக் கேட்டு ஸமஸ்த ஜகத்திற்கும் அந்தராத்மாவான பரமபுருஷன் வேதஸ்வரூபனான கருடன்மேல் ஏறிச் சக்ராயுதத்தை ஏந்திக்கொண்டு தன்னைத் துதிசெய்தின்ற



1709. கஜேந்த்ரனுக்குப் பகவான் ப்ரத்யக்ஷமாய் முதலையினின்று விடுவித்தல்

தேவதைகளுடன் கஜேந்த்ரம் இருக்குமிடத்திற்கு விரைந்தோடிவந்தான். அங்குத் தடாகத்திற்குள் வலிவுடைய முதலையினால் பிடியுண்டு வருந்துகின்ற அந்தக் கஜேந்த்ரம், கருடன்மேல் ஏறிச் சக்ராயுதத்தை ஏந்திக்கொண்டிருக்கின்ற பகவானை ஆகாயத்தில் கண்டு தாமரைப் பூவுடன் கூடின துதிக்கையைத் தூக்கி மிக்க வருத்தத்துடன் 'நாராயணா! ஸமஸ்த லோகங்களுக்கும் குருவே! பகவானே! உனக்கு நமஸ்காரம்' என்னும் இவ்வார்த்தையைமொழிந்தது. அப்பால் ஸ்ரீஹரி வருந்துகின்ற கஜேந்த்ரத்தைப் பார்த்துக் கருணையுடன் சீக்ரமாகக் கீழே யிறங்கி முதலையோடுகூடின கஜேந்த்ரத்தை விரைவுடன் எடுத்துக் கரையேற்றி, உடனே தேவதைகள் பார்த்துக் கொண்டிருக்கையில் சக்ராயுதத்தினால் முதலையின் வாயைப் பிளந்து கஜேந்த்ரத்தை விடுவித்தான். மூன்றாவது அத்யாயம் முற்றிற்று.

---

முதலை கந்தர்வரூபம் பெறுதலும், கஜேந்த்ரம் பகவானுடைய ஸாயுஜ்யம் பெறுதலும், பகவான் ப்ராணிகளின ஹிதத்தைக் கூறுதலும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ப்ரஹ்மதேவன் ருத்ரன முதலிய தேவதைகளும் ரிஷிகளும் கந்தர்வர்களும் பகவான் செய்த கஜேந்த்ரமோக்ஷணமாகிற அந்தச்செயலைப் புகழ்ந்து அவன் மேல் ஓயாமல் பூமழை பொழிந்தார்கள். ஆகாயத்தில் தேவதுந்துபி வாத்யங்கள் முழங்கின. கந்தர்வர்கள் ஆடல் பாடல்களை நடத்தினார்கள். ரிஷிகளும் சாரணர்களும் ஸித்தர்களும் அப்பரமபுருஷனை ஸ்தோத்ரம் செய்தார்கள். கஜேந்த்ரத்தை ஹிம்ஸித்த அம்முதலை உடனே தேவரிஷியின் சாபத்தினின்று விடுபட்டு மிகவும்

ஆச்சர்யமான உருவம் பெற்று ஹூஹூவென்னும் கந்தர்வ ஶ்ரேஷ்டனாய் விளங்கிற்று. அக்கந்தர்வன் சிறந்த புகழுடையவனும் சிறப்புடைய பிரமன் முதலிய தேவர்களால் புகழத்தகுந்தவனும் அழிவற்றவனும் புகழுக்கு ஆதாரனும் புகழத்தகுந்த குணங்களும் நற்கதைகளும் அமைந்து விளங்குகின்ற ஸர்வேஶ்வரனுமாகிய அப்பரம புருஷனைத் தலையால் வணங்கி அவனைப் பாடினன். அந்தப் பாடலைக் கேட்டு ஸந்தோஷம் அடைந்த பகவானால் அக்கந்தர்வன் அருள்புரியப்பெற்று ஜகதீசனை ப்ரதக்ஷிணம் செய்து நமஸ்கரித்து ப்ரஹ்மதேவன் முதலியவர்கள் பார்த்துக்கொண்டிருக்கையில் பாபம் தீரப்பெற்றுத் தன்னுடைய லோகம் போய்ச்சேர்ந்தான். கஜேந்த்ரமோவென்றால் பகவானுடைய கரம் பட்டமையால் கர்மபந்தத்தினின்றும் விடுபட்டு அரையில் பீதாம்பரம் தரித்து நான்கு புஜங்கள் விளங்கப்பெற்றுப் பகவானுடைய ஸாரூப்யத்தை அடைந்தது. அக்கஜேந்த்ரம் பூர்வ ஜன்மத்தில் பாண்டிய தேசத்துக்கு ப்ரபுவும் த்ராமிடர்களில் சிறந்தவனுமாகிய இந்த்ரத்யும்னனென்னும் மன்னவனாயிருந்தது. அம்மன்னவன் பகவானைப் பணிகையாகிற வ்ரதத்தை மிக்க மனவூக்கத்துடன் அனுஷ்டிக்குந் தன்மையுடையவன். ஒருகால் அவன் ஜடை தரித்துத் தவத்தில் நிலைநின்று மலயமென்னும் குலபர்வதத்தில் ஆஶ்ரமத்தை ஏற்படுத்திக்கொண்டு மனவூக்கத்துடன் மௌன வ்ரதத்தை முன்னிட்டுப் பகவானை ஆராதித்துக் கொண்டிருந்தான். அப்பொழுது அகஸ்த்யமுனிவர் சிஷ்யக்குழாங்களுடன் அவ்விடம் வந்தார். அப்பொழுது இந்த்ரத்யும்னன் அவர்க்கு அர்க்யம் முதலிய பூஜையொன்றும்செய்யாமல் பேசாதிருக்கையில், அதைக் கண்டு அம்மஹர்ஷி கோபித்துக்கொண்டார். நல்லியற்கை

யுடைய அம்மன்னவனுக்கும் பெரியோர்களின் நிக்ரஹம் நேரிட்டது ஆச்சரியமல்லவா? அம்முனிவர் 'இவ்விந்த்ரத்யும்னன் மதிகெட்டிருக்கிறான். இவன் புத்தி பெரியோர்களிடத்தில் திருந்தம் பெறாமையால் இங்ஙனம் மயங்குகின்றது. அதனால் தான் இவன் ப்ராஹ்மணர்களான நம்மை இங்ஙனம் அவமதிக்கிறான். இதைப்பற்றியே இவன் அஜ்ஞானத்தை அடைவானாக. இவன் மதித்த யானை போல மதிகெட்டிருக்கிறானாகையால் அந்தயானையாகவே பிறப்பானாக' என்ற இச்சாபத்தை அம்மன்னவனுக்குக் கொடுத்தார்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்.—மன்னவனே! மஹானுபாவரான அகஸ்த்யமஹர்ஷி இங்ஙனம் சபித்துச் சிஷ்யர்களுடன் போனார். பிறகு ராஜர்ஷியாகிய இந்த்ரத்யும்னனும் அவ்வகஸ்த்ய சாபத்தை அனுபவித்தே யாகவேண்டுமென்று நிச்சயித்துக்கொண்டு உடனே பகவானைப் பற்றினநினைவை அழிக்கும்படியான யானைப் பிறவியைப் பெற்றான். ஆயினும் முன்பு பகவானை ஆராதித்த மஹிமையினால் அவனுக்கு அந்த ஜன்மத்தில் பகவானைப் பற்றின நினைவு மாறாதிருந்தது. இங்ஙனம் பகவான் கஜேந்த்ரத்தை முதலையினின்றும் விடுவித்துத் தன் பரிஜனங்களில் ஒருவனாக அங்கீகரித்து அவனுடன்கூடிக் கந்தர்வர்களும் ஸித்தர்களும் தேவதைகளும் தன்னுடைய செயலைப் பாடிக்கொண்டுவரக் கருடன் மேல் ஏறிக்கொண்டு ஆச்சர்யமான தனது லோகம் போய்ச் சேர்ந்தான். மஹாராஜனே! இந்தக் கஜேந்த்ர மோக்ஷணமாகிற பகவானுடைய ப்ரபாவத்தை உனக்கு மொழிந்தேன். இது கேட்பவர்களுக்கு ஸ்வர்க்கத்தைக் கொடுக்கும்; புகழை விளக்கும்; கலிகாலத்தினால் விளையும் பாபங்களைப் போக்கும். கௌரவஸ்ரேஷ்டனே!

கற்றும் இரு துஃஸ்வப்னங்களைப் போக்கும். ஆகையால் நன்மையை விரும்புகின்ற ப்ராஹ்மண க்ஷத்ரிய வைஸ்யர்கள் காலையில் எழுந்து ஸ்நாநாதி கர்மங்களை முடித்துப் பரிசுத்தர்களாகி, துஸ்வப்னம் முதலிய தோஷங்கள் தீரும்பொருட்டு இந்தக் கஜேந்த்ர மோக்ஷத்தைப் படிக்கிறார்கள். குருஸ்ரேஷ்டனே! ஸர்வபூதஸ்வரூபனும் ஸமர்த்தனுமாகிய பகவான் ஸந்தோஷமடைந்து ஸர்வ பூதங்களும் கேட்டுக்கொண்டிருக்கையில் அந்தக் கஜேந்த்ரத்தைக் குறித்து இங்ஙனம் மொழிந்தான்.

ஸ்ரீபகவான்சொல்லுகிறான்:—உன்னையும் என்னையும் இந்தத் தடாகத்தையும்இப்பர்வதத்தையும் பர்வதகுஹைகளையும் கானகத்தையும் பாம்பு கீசகமென்னும் மூங்கில் ஸாதாரணமான மூங்கில் இவற்றின் புதர்களையும் மந்தாரம் முதலிய கல்பவ்ருக்ஷங்களையும், ப்ரஹ்மாவுக்கும் எனக்கும் சிவனுக்கும் வாஸஸ்தானங்களான இந்த த்ரிகூட பர்வதத்தின் மூன்று சிகரங்களையும் க்ஷீரஸமுத்ரத்தையும் எனக்கு ப்ரியமான வாஸஸ்தானமும் ப்ரகாசித்துக்கொண்டிருப்பதுமாகிய ஶ்வேதத்வீபத்தையும், என்னுடைய ஸ்ரீவத்ஸத்தையும் கௌஸ்துபத்தையும் வனமாலையையும் கௌமோதகி யென்கிற கதையையும், பக்ஷிகளுக்கு ப்ரபுவானகருடனையும் என்னுடைய ஸூக்ஷ்மாம்சமான ஆதிசேஷனையும் என்னை விட்டுப் பிரியாத ஸ்ரீ மஹாலக்ஷ்மியையும் ப்ரஹ்மாவையும் நாரதமஹர்ஷியையும் ருத்ரனையும் ப்ரஹ்லாதனையும், நான் மத்ஸ்யகூர்ம வராஹாதி அவதாரங்களால் செய்த புண்ய சரித்ரங்களையும், ஸூர்யன் சந்த்ரன் அக்னி இவர்களையும், ப்ரணவத்தையும், ப்ராணிகளுக்கு ஹிதம் செய்கையாகிற தர்மத்தையும் ப்ரக்ருதியையும், பகவத் பக்தியாகிற அழிவற்ற தர்மத்தையும், தக்ஷருடைய புத்ரிகளையும், தர்மர் ஸோ

மர் கஶ்யபர் இவர்கள் பத்னிகளேயும், கங்கை ஸாஸ்வதி அலகநந்தை யமுனை இந்நதிகளேயும், ஐராவதமென்கிற யானேயையும், த்ருவனேயும், ஸப்தரிஷிகளேயும் தர்மம் செய்து புகழ்பெற்ற மானிடர்களேயும் பின்மாலேயில் எழுந்து எவர்கள் மனவூக்கத்துடன் பரிசுத்தர்களாயிருந்து என்னுடைய உருவங்களாகப் பாவித்து நினைக்கின்ருர்களோ, அவர்கள் ஸமஸ்த பாபங்களினின்றும் விடுபடுவார்கள். ஓ கஜேந்த்ரனே! விடியற்காலத்தில் எழுந்து இந்த ஸ்தோத்ரத்தினுல் என்னைத் துதிக்கிறவர்களுக்கு நான் மரணகாலத்திலும் மாருத ஆழ்ந்த மதியைக் கொடுக்கிறேன்.

ஸ்ரீசுகர் சொல்லுகிருர்.—பகவான் இங்ஙனம் மொழிந்து சங்கராஜமான பாஞ்சஜன்யத்தை ஊதி ப்ரஹ்மா முதலிய தேவர் கூட்டத்தைக் களிக்கச் செய்துகொண்டு கருடன் மேல் ஏறிச் சென்ருன். நான்காவது அத்யாயம் முற்றிற்று.

ஐந்தாவது மனு ஆருவது மனு இவர்களேயும் துர்வாஸருடைய சாபத்தினுல் ஐஸ்வர்யத்தை இழந்த தேவதைகள் பகவானே ஸ்தோத்ரம் செய்ததையும் கூறுதல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிருர்:—மன்னவனே! இந்தக் கஜேந்த்ர மோக்ஷணமென்னும் பகவானுடைய சரித்ரம் மிகவும் புண்யமானது; பாபங்களேயெல்லாம் போக்கும். இதை உனக்கு மொழிந்தேன். இனி ஐந்தாவதான ரைவத மன்வந்தரத்தைச் சொல்லுகிறேன். கேட்பாயாக. ரைவதனென்பவன் ஐந்தாவது மனுவாயிருந்தான். அவன் தாமஸமனுவுக்கு உடன் பிறந்தவன். பலி விந்த்யன் முதலானவர்கள் அவனுடைய பிள்ளேகள். அவர்களில் அர்

ஜுனனென்பவன் ப்ரதானன். அம்மனுவின் அந்தரத்தில் விபுவென்பவன் இந்த்ரனாயிருந்தான். பூததயன் முதலியவர்கள் தேவதைகளாயிருந்தார்கள். ஹிரண்ய ரோமர் வேதசிரர் ஊர்த்வபாஹு முதலியவர்கள் ஸப்த ரிஷிகளாயிருந்தார்கள். சுப்ரரென்பவருடைய பத்னி விகுண்டை யென்பவள். பகவான் வைகுண்டனென்று பேர் பூண்டு வைகுண்டரென்னும் தேவச்ரேஷ்டர்களுடன் தன்னுடைய அம்சத்தினால் அவர்களுக்குப் பிள்ளையாகப் பிறந்தான். தேவியாகிய ஸ்ரீமஹாலக்ஷ்மியின் வேண்டுகோளின்மேல் அவளுடைய இஷ்டத்தை நிறைவேற்றும் பொருட்டு அந்த வைகுண்டன் லோகாலோக பர்வதத்தின்மேல் வைகுண்டமென்னும் லோகத்தைப் படைத்தான். அதை லோகாலோக பர்வதத்திலுள்ள ஜனங்கள் நமஸ்கரிக்கிறார்கள். அந்த வைகுண்ட பகவானுடைய ப்ரபாவமும் குணங்களும் மஹத்தான ஸம்ருத்திகளும் என்னால் கூடுமானவளவு சொல்லப்பட்டன. அவனுடைய மஹிமைகளை யெல்லாம் ஒருவராலும் சொல்ல முடியாது. எவன் ஸ்ரீமஹாவிஷ்ணுவின் குணங்களை யெல்லாம் சொல்லுகிறானோ, அவன் பூமியிலுள்ள தூட்களையெல்லாம் கணக்கிட்டவனாவான். சக்ஷுவின் புதல்வன் சாக்ஷுஷனென்று ப்ரஸித்தி பெற்றவன். அவன் ஆறாவது மனுவாயிருந்தான். பூரு புருஷன் ஸுத்யும்னன் முதலியவர்கள் சாக்ஷுஷமனுவின் புதல்வர்கள். அப்பொழுது மந்த்ரத்ருமனென்பவன் இந்த்ரனாயிருந்தான். ஆப்யர் முதலியவர்கள் தேவகணங்களாயிருந்தார்கள். ஹவிஷ்மான் வீரகர் முதலியவர்கள் ஸப்தரிஷிகளாயிருந்தார்கள். அந்த ஆறாவது மன்வந்தரத்திலும் பகவான் வைராஜருடைய பார்யையாகிய ஸம்பூதியிடத்தில் தன்னுடைய அம்சத்தினால் அஜிதனென்று ப்ரஸித்தனாய்

அவதரித்தான். அவன் க்ஷீரஸமுத்ரத்தைக் கடைந்து தேவதைகளுக்கு அம்ருதத்தைத் திரட்டிக்கொடுத்தான். க்ஷீரஸமுத்ரத்தைக் கடையும்பொழுது மந்தர பர்வதம் அசைகையில் அப்பகவான் கூர்மரூபியாய் அம் மந்தரபர்வதத்தைத் தன்முதுகில் தரித்தான்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:—ப்ரஹ்மரிஷீ! பகவான் க்ஷீரஸமுத்ரத்தைக் கடைந்த விதத்தையும், எதற்காகக் கடைந்தானோ அதையும், கூர்மரூபியாய் மந்த்ர பர்வதத்தைத் தாங்கினதின் காரணத்தையும், தேவதைகளுக்கு அம்ருதம் கிடைத்த வண்ணத்தையும், அம்ருதம் தவிர இன்னம் ஏதேது உண்டாயிற்றோ அதையும் விவரித்துச் சொல்வீராக. பகவானுடைய இச்செயல் மிகவும் ஆச்சர்யமல்லவா! ஆகையால் இதை விரித்து மொழிவீராக. நெடுநாளாக ஆத்யாத்மிகம் முதலிய ஸம்ஸார தாபங்களால் தபிக்கப்பட்ட என் மனம் நீர் வர்ணிக்கிற பகவானுடைய மஹிமையை எவ்வளவு கேட்டினும் த்ருப்தி யடையாமல் மேன்மேலும் கேட்கவேண்டுமென்று விரும்புகின்றது.

ஸூதபௌராணிகர் சொல்லுகிறார்:—ஓ அந்தணர்களே! இங்ஙனம் வினவப்பெற்ற மஹானுபாவரான சுகர் அவனுடைய கேள்விகளைப் புகழ்ந்து பகவானுடைய வீரச்செயல்களைச் சொல்லத் தொடங்கினார்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—முன்பு தேவதைகள் கூரான ஆயுதங்களை ஏந்தின அஸுரர்களால் யுத்தத்தில் அடியுண்டு விழுந்து ப்ராணன்களை இழந்து மீளவும் எழுந்திருக்கவில்லை. மற்றும், ஒரு காலத்தில் இந்த்ரன் ஐராவதத்தின் மேல் ஏறிக்கொண்டு போகும்பொழுது துர்வாஸமுனிவர் தன் கழுத்திலிருந்த பூமாலையைக் கழற்றி இந்த்ரனுக்குப் பரிசாக அளித்தார். அவ்விந்த்ரன்

அதை ஐச்வர்ய மதத்தினால் ஆதரிக்காமல் ஐராவதத்தின் கும்பஸ்தலத்தில் வைத்தான். அவ்வைராவதம் மதித்திருக்கையால் அதையெடுத்துக் காலால் மிதித்துத் துவைத்து விட்டது. அப்பொழுது அம்முனிவர் இந்த்ரன் மேல் கோபித்து அவனை நோக்கி 'இந்த்ரனே! நீ மூன்று லோகங்களுடன் ஐச்வர்யங்களெல்லாம் அழியப் பெறுவாயாக' என்று சபித்தார். மன்னவனே! அந்தச் சாபத்தினால் இந்த்ரனுடன் கூடின மூன்று லோகங்களும் சோபை அழியப்பெற்றன. அப்பொழுது யாகாதி கர்மங்கள் ஏவையும் ஐச்வர்யத்தை வளர்க்க வல்லவையாகவில்லை. இந்த்ரன் வருணன் முதலிய தேவதைகள் அனைவரும் உலகங்களெல்லாம் சோபையற்றிருப்பதையும் யுத்தத்தில் அடியுண்டு விழுந்த தேவதைகள் பிழைத்தெழுந்திராமல் அப்படியே மாண்டு போவதையுங் கண்டு எவ்வளவு ஆலோசித்துங்கூட அதை மாற்றுவதற்குரிய உபாயம் தோன்றப்பெறாதிருந்தார்கள். பிறகு தேவதைகள் அனைவரும் மேரு பர்வதத்தின் சிரத்திலிருக்கிற ப்ரஹ்மாவின் ஸபைக்குச் சென்று எல்லாரும் தண்டனிட்டு ப்ரஹ்மாவுக்கு விண்ணப்பஞ் செய்தார்கள். அப்பால் அப்பரமேஷ்டி இந்த்ரன் வாயு முதலிய தேவதைகள் ஒளி மழுங்கிப் பலமற்றிருப்பதையும், மூன்று லோகங்களும் அமங்களமாயிருப்பதையும், அஸுரர்கள் தேஜோபலங்கள் அமைந்திருப்பதையுங் கண்டு மனவூக்கத்துடன் பரமபுருஷனை த்யானித்து ஸந்தோஷத்தினால் முகம் மலரப்பெற்று இந்த்ராதிதேவதைகளை நோக்கி 'நான், ருத்ரன், நீங்கள், அஸுராதிகள், மனுஷ்யர்கள், திர்யக்குகள், வ்ருக்ஷங்கள், ஸ்வேதஜம், உத்பிஜ்ஜம் முதலியவைகள் ஆகிய அனைவரும் பகவானுடைய அவதாரமான அநிருத்தனுடைய ஜ்ஞா

ணுதி குணங்களின் பதிறுயிரத்தில் ஒரு பாகத்தினுல் படைக்கப் பட்டிருக்கிருேம். நாமெல்லாரும் அவனையே சரணம் அடைவோமாக. நம்மை எவன் படைத்தானே அவனே நம்மைக் காப்பவன். இதைக் காட்டிலும் மற்ருெரு உபாயமும் இல்லை. அப்பரம புருஷனுக்கு வதிக்கத் தகுந்தவனுவது ரக்ஷிக்கத் தகுந்தவனுவது உபேக்ஷிக்கத் தகுந்தவனுவது ஆதரிக்கத் தகுந்தவனுவது எவனுமே இல்லை. ஆயினும் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹார காலங்களில் ரஜஸ்ஸு ஸத்வம் தமஸ்ஸு என்னும்மூன்று குணங்களின் தோற்றங்களுக்குக் காரணமான ஜீவாத்மாக்களின் புண்யபாப கர்மங்களுக்குத் தகுந்தபடி நடக்கிருன். ப்ராணிகளைப் பாதுகாக்கும்பொருட்டு ஸத்வ குணத்தின் தோற்றத்திற்குக் காரணமான கர்மத்திற்குத் தகுந்தபடி நடக்குந் தன்மையுள்ள அப்பகவான் ஸத்வகுணம் தலையெடுத்த தேவாதிகளைப் பாதுகாக்கும் ஸமயம் இதுவாகையால் நாமெல்லோரும் ஜகத்திற்கு ஹிதம் செய்பவனுகிய அப்பரமபுருஷனைச் சரணம் அடைவோமாக. அவன் நமக்கு ஸுகத்தை விளைப்பான். அவன் இயற்கையாகவே தேவதைகளிடத்தில் ப்ரீதியுடையவன். (ஆனுல் அது பக்ஷபாதமாகுமோ வென்ருல் ஆகாது. அரசன் நல்லொழுக்க முடையவர்களிடத்தில் ப்ரீதி செய்வது அவனுக்குக் குணமே யன்றிப் பக்ஷபாதமாகாதல்லவா? அங்ஙனமே ஸத்வ குணம் தலையெடுத்த தேவதைகளிடத்தில் ப்ரீதி செய்வது அவனுக்குக் குணமாகுமேயன்றித் தோஷமாகாது).

ஸ்ரீசுகர் சொல்லுகிருர்:—சத்ருக்களை அழிக்குந் தன்மையனே! ப்ரஹ்மதேவன் இங்ஙனம் தேவதைகளுக்கு மொழிந்து அவர்களோடு கூடவே தன்னுடைய லோகத்தினின்றும் புறப்பட்டு அலோகமென்று சொல்லப்

படுகின்ற இருளடர்ந்த பூமிக்கு அப்புறத்திலிருப்பதாகிய அஜிதனுடைய லோகமான வைகுண்டத்திற்குப் போனான். ப்ரஹ்மாதி தேவதைகள் பகவான் அஜிதனென்னும் பெயர் பூண்டு அவதரித்திருக்கிறானென்று கேட்டவர்களேயன்றிப் பார்த்தவர்களல்லர். அத்தகைய ப்ரஹ்மதேவன் அந்த வைகுண்டலோகத்தில் என்றும் கண்ணால் காணமுடியாத உருவமுடையவனும் இங்கு இருக்கிறானென்று கேள்விக்கு மாத்திரம் விஷயமான பகவானுக்கு நமஸ்காரம் செய்து இந்த்ரியங்களையெல்லாம் ஸ்தோத்ரம் செய்வதற்குரியவாறு ஊக்கத்துடன் அடக்கிக்கொண்டு உபநிஷத்தின் பொருள்களை உண்கொண்ட உரைகளால் ஸர்வஸ்மாத்பரனான அப்பகவானை ஸ்தோத்ரம் செய்தான்.

ப்ரஹ்மதேவன் சொல்லுகிறான்:—ஓ தேவனே! உன்னை நமஸ்கரிக்கிறோம். நீ எல்லோரினும் மேற்பட்டவன். உனக்கு இணையாவது எதிராவது எதுவுமே இல்லை நீயே அனைவர்க்கும் சரணம் அடையத் தகுந்தவன். நீ மனத்திற்கு எட்டாமல் வெகுதூரத்தில் இருப்பவன். உன்னை வாக்கினால் நிரூபிக்கமுடியாது. யோகிகள் உன்னை மனத்தினால் ஸாக்ஷாத்கரிக்கினும், வேதாந்த வாக்குக்கள் உன்னை நிரூபிக்கினும், உன் ஸ்வரூப ரூப குண விபூதிகளை அவர்களாலும் இவ்வளவென்று அளவிடமுடியாது. ப்ரக்ருதி புருஷர்களைக் காட்டிலும் விலக்ஷணனாகையால் இத்தகையனென்று உன்னை ஊஹிக்க முடியாது. நீ கர்மத்தினால் விளையும் ப்ராக்ருத சரீரமற்றவன். நீ ப்ராணிகளுடைய ஹ்ருதயமாகிற குகையில் வாஸஞ் செய்பவன். அந்த ஹ்ருதயத்திலிருக்கிற ஜீவாத்மாக்களுக்கும் முற்பட்டவன். அவர்களுக்கு அந்தந்தச்சரீரங்களை விளைத்தவன் நீயே. உன்னைப் பணிகிறவர்

களை அனுக்ரஹிக்கும் பொருட்டும் அந்தராத்மாவாய் நியமிக்கும் பொருட்டும் ஹ்ருதயத்தில் அமைந்திருப்பினும் நீ இயற்கையில் தேசகாலவஸ்து பரிச்சேதமற்றவன். நீ ஜகத்திற்கெல்லாம் உபாதான காரணமாயிருப்பினும், ப்ரக்ருதியைப்போல ஒன்று மற்றொன்றாக மாறுகையாவது, ஜீவனைப்போல ஸ்வபாவம் மாறுகையாவது உனக்குக் கிடையாது. நீ எவ்வகை விகாரங்களும் தீண்டப்பெறாதவன். நீ ஸூக்ஷ்ம சேதனா சேதனங்களைச் சரீரமாகக்கொண்டு ஸ்தூல சேதனா சேதன ரூபமான இந்த ப்ரபஞ்சத்திற்குக் காரணமாகின்றனை யாகையால் ஸ்வரூபம் மாறப்பெறுகையாகிற விகாரம் உன் சரீரமான ப்ரக்ருதிக்கும், ஸ்வபாவம்மாறப் பெறுகையாகிற விகாரம் சேதனர்களுக்குமேயன்றி உனக்கு அவை கிடையாது. ப்ராணன் மனம் புத்தி ஆத்மாக்கள் இவர்களையெல்லாம் நீயே ஸாக்ஷாத்கரிப்பவன். சப்தாதி விஷயங்களையும் கண் காது முதலிய இந்த்ரியங்களையும் ஜீவாத்மாக்களுக்கு நீயே விளங்கச் செய்கின்றனை. நீ விழித்தல் ஸ்வப்னங்காணுதல் உறங்குதல் என்கிற மூன்று அவஸ்தைகளுமற்றவன். கர்மத்தினால் விளைகிற சரீரஸம்பந்தமற்றவன். அஜ்ஞானமும் அதனுடன் கலந்த ஜ்ஞானமுமாகிற நிழல் வெயில்கள் ராகாதி தோஷங்களையுடைய ஜீவாத்மாக்களுக்கு விளையக்கூடியவை. அவை உனக்குக் கிடையாது. நீ ஆகாயம்போல எங்கும் நிறைந்திருப்பவன். ஷாட்குண்ய பூர்ணன்; க்ருதயுகம் முதலிய மூன்று யுகங்களிலும் அவதரிப்பவன். இத்தகைய உன்னை நாங்கள் சரணமடைகிறோம். மனத்தினால் நினைத்துச் செய்யப்படுகிற புண்ய பாபகர்மங்களால் விளைகிற ஸம்ஸாரமாகிற சக்ரம் பகவானுடைய மாயையினால் தூண்டப்பட்டுச் சுழல்கின்றது. பத்து இந்த்ரியங்களும் ஐந்து ப்ராணன்களும்

ஆகிய இப்பதினைந்தும் அந்த ஸம்ஸாரமாகிற சக்ரத்திற்கு இலைகள். அது வெகு சீக்ரமாகத் திரியுந்தன்மையுடையது. ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களென்கிற மூன்று குணங்களும் அதற்கு மூன்று நாபிகள். பூமி ஜலம் அக்னி வாயு ஆகாசம் மனம் புத்தி அஹங்காரம் என்னும் இவ்வெட்டு ப்ரக்ருதிகளும் அதற்கு நேமிகள். அது மின்னல்போல நிலையற்ற தோற்றமுடையது. இப்படிப்பட்ட ஸம்ஸார சக்ரம் உன்னுடைய ஸங்கல்பமாகிற இருசைப்பற்றியே நடக்கிறதென்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள். நீ என்றும் மாறுமல் ஒரேவிதமாயிருப்பவன். நீ ஸமஸ்த ஆத்மாக்களுக்கும் அந்தராத்மாவாகையால் பரமாத்மாவென்று கூறப்படுகின்றனை. அத்தகைய உன்னைச் சரணம் அடைகிறோம். நீ வீற்றிருக்குமிடமான பரமபதம் கேவலசுத்தஸத்வமயமாகையால் என்றும் ஒருவாறுயிருக்கும். அது இந்த ப்ரக்ருதி மண்டலத்திற்கு வெளிப்பட்டது. ஸம்ஸாரிகள்கண்ணுக்குப் புலப்படாதது. ராகாதிதோஷங்களுக்குச் சிறிதும் இடமில்லாதது. பரிசுத்தர்களான நித்ய ஸித்தர்கள் நித்யவாஸம் செய்யப்பெற்றது. அதற்கு எல்லையே கிடையாது. அந்தப் பரமபதம் பெறுதற்குப் பண்டிதர்கள் உன்னை யோகமார்க்கத்தினுல் உபாஸிக்கிறார்கள். அத்தகைய உன்னைச் சரணம் அடைகிறோம். இந்த ப்ரபஞ்சத்திலுள்ள ப்ராணிகளில் ஒருவனும் உன்னுடைய மாயையைக் கடக்க வல்லவனல்லன். அனைவரும் அம்மாயையால் மதிமயங்கிக் கிடக்கிறார்கள். நீ ஸமஸ்த ப்ராணிகளிடத்திலும் ஸமமாகவே உட்புகுந்து நியமித்துக் கொண்டிருக்கின்றனை. ஆசைப்படத் தகுந்த பரமபுருஷார்த்தம் உன்னைவிட மற்றொன்றும் இல்லை. அத்தகையை உன்னை ஒருவரும் அறிகிறதில்லை. உன்னுடைய அனுக்ரஹம் இருக்குமா

யின் உன்மாயையால் மதிமயங்காமல் அதைக் கடந்து அந்தராத்மாவான உன்னையும் அறியலாம். நீ சேதனு சேதனங்களில் அமைந்திருப்பினும் அவற்றின் குணங்கள் தீண்டப்பெறு தவன். உலகத்தில் மேன்மையுடைய எங்களுக்கும் நீ மேலாயிருப்பவன். அத்தகைய உன்னை வணங்குகிறோம். இதோ விருக்கின்ற தேவதைகளும் ரிஷிகளுமாகிய நாங்கள் உனக்கு ப்ரியமான சரீரமான ஸத்வ குணத்தினால் ஸ்ருஷ்டிக்கப்பட்டவர்களாயினும் உள்ளும் புறமும் திகழ்கின்ற ஜ்ஞானப்ராகாசமுடையவர்களாயினும் உன்னுடைய ஸூக்ஷ்மமான கதியை அறிய வல்லமையற்றிருக்கிறோம். இனி ரஜஸ் தமோகுணங்களே தலையெடுக்கப் பெற்று அஜ்ஞானமூடர்களான அஸுராதிகள் உன் கதியை எங்ஙனம் அறிவார்கள்? ஜராயுஜம் அண்டஜம் ஸ்வேதஜம் உத்பிஜ்ஜம் என்று நான்கு வகைப்பட்ட பூதங்கள் அமைந்த இப்பூமண்டலம் முழுவதும் எவனால் படைக்கப்பட்டு எவனுக்குப் பாதங்களாயிருக்கின்றதோ, அவன் அளவற்ற ஐஶ்வர்யமுடையவன்; ஸ்வதந்த்ரன். அவனையே பரப்ரஹ்மமென்று கூறுகிறார்கள். புருஷஸூக்தத்தில் ஓதப்பட்ட மஹாபுருஷன் அவனே. அவன் எங்களுக்கு அருள்புரிவானாக. மஹா வீர்யமுடைய ஜலம் அப்பரமபுருஷனுடைய ரேதஸ்ஸு. மூன்று லோகங்களும் லோகபாலர்களும் அவனிடத்தினின்றே உண்டாகின்றனர்; அவனால் ஜீவிக்கின்றனர்; அவனிடத்திலேயே வளர்கின்றனர். அவனே பரப்ரஹ்மமென்று கூறப்படுகிறான்; அளவற்ற ஐஶ்வர்யமுடையவன். அத்தகைய அப்பரமபுருஷன் எங்களுக்கு அருள்புரிவானாக. தேவதைகளுக்கு அம்ருதம் கொடுப்பவனாகையால் ஆஹாரம்பலம் ஆயுள் இவற்றை விளைப்பவனும் வ்ருக்ஷங்கள் முதலிய ஸ்தாவரங்களையும் ஜங்கமங்களையும் அம்ருத

கிரணங்களால் வளர்த்து அவற்றிற்கு ப்ரபுவாயிருப்பவனுமாகிய சந்த்ரனைப் பரம புருஷனுடைய மனத்தினின்று உண்டானவனென்றும் அந்தச் சந்த்ரனே அவனுடைய மனமென்றும் சொல்லுகிறார்கள். பரப்ரஹ்மமும் மஹா விபூதியுமாகிய அப்பரமபுருஷன் எங்களுக்கு அருள் புரிவானாக. தன்னிடத்தில் ஹோமம்செய்த சருபுரோடாசாதிகளை இந்த்ரன் முதலிய தேவதைகளுக்குக் கொண்டு சேர்ப்பவனும் யஜ்ஞாதி கர்மங்களின் அனுஷ்டானத்திற்காகவே தோன்றினவனும் தேஹத்தினிடையில் ஜாடராக்னியென்னும் பெயருடன் இருந்து சுக்ல ஸோணிதம் முதலிய தாதுக்களைப் பக்வம் செய்கின்றவனுமாகிய அக்னியை அப்பரம புருஷனுடைய முகத்தினின்று உண்டானவனென்றும் அவனே அவனுடைய முகமென்றும் சொல்லுகிறார்கள். மஹா விபூதியுடைய அப்பரம புருஷன் எங்களுக்கு அருள்புரிவானாக. ஸூர்யன் அர்ச்சிராதி மார்க்கத்தில் உட்பட்டவன்; ருக்கு யஜுஸ்ஸு ஸாமம் என்கிற மூன்று வேத ஸ்வரூபன்; பரம புருஷனுக்கு வாஸஸ்தானமாயிருப்பவன்; மோக்ஷத்திற்கு த்வாரம்போன்றவன்; மோக்ஷத்தை விளைக்கவல்ல புண்யகர்மங்களை அனுஷ்டிப்பதற்குரிய காலத்தை அறிவிப்பவன்; உதய அஸ்தமயங்களால் ப்ராணிகளின் ஆயுஸ்ஸைப் பறிப்பவனாகையால் ம்ருத்யுவைப் போன்றவன். இத்தகைய ஸூர்யனை அப்பரம புருஷனுடைய நேத்ரமென்று சொல்லுகிறார்கள். மஹா விபூதியுடைய அப்பரமபுருஷன் எங்களுக்கு அருள்புரிவானாக. வாயு ஜங்கம ஸ்தாவர ரூபமான ஸமஸ்த பூதங்களுக்கும் மனோபலம் தேஹபலம் இந்த்ரியபலம் இவற்றை விளைக்கிறான். மற்றும் அவர்களுடைய தேஹங்களில் ப்ராணாதி நாமங்களால் ஐந்துவகையாகப் பிரிந்திருக்கிறான். ப்ராணி

களின் புத்தி முதலியவற்றிற்கு அதிஷ்டானதேவதைகளாகிய நாங்கள், மஹாராஜனை ப்ருத்யர்கள் அனுஸரிப்பதுபோல, அந்தப் பஞ்சவ்ருத்தி ப்ராணனை அனுஸரித்திருக்கிறோம். அத்தகையவாயு அப்பரம புருஷனுடைய ப்ராணனிடத்தினின்று உண்டானான். மஹாவிபூதியுடைய அப்பரமபுருஷன் எங்களுக்கு அருள்புரிவானாக. அவனுடைய காதிலிருந்து திசைகள் உண்டாயின. தேஹத்திலுள்ள ரந்த்ரங்கள் அவனுடைய ஹ்ருதயத்தினின்றும் உண்டாயின. கர்மேந்த்ரியங்கள் ஜ்ஞானேந்த்ரியங்கள் மனம் ப்ராணன் சரீரம் இவற்றிற்கு ஆதாரமான ஆகாயம் அப்பரம புருஷனுடைய நாபியினின்றும் உண்டாயிற்று. மஹாவிபூதியுடைய அப்பரம புருஷன் எங்களுக்கு அருள்புரிவானாக. அவனுடைய பலத்தினின்று மஹேந்த்ரனும், அனுக்ரஹத்தினின்று தேவதைகளும், கோபத்தினின்று ருத்ரனும், ஸந்தோஷத்தினின்று ப்ரஹ்மாவாகிய நானும், விவரங்களினின்று காயத்ரி முதலிய சந்தங்களும் ரிஷிகளும், ஆண்குறியினின்று ப்ரஜாபதியும் உண்டானோம். மஹாவிபூதியுடைய அப்பரமபுருஷன் எங்களுக்கு அருள்புரிவானாக. அவனுடைய மார்பினின்று ஸ்ரீமஹாலக்ஷ்மியும், சாயையினின்று பித்ருக்களும், ஸ்தனத்தினின்று தர்மமும், முதுகினின்று அதர்மமும், சிரத்தினின்று த்யுலோகமும், சிரிப்பினின்று அப்ஸரஸ்த்ரீகளும் உண்டானார்கள். மஹாவிபூதியுடைய அப்பரமபுருஷன் எங்களுக்கு அருள்புரிவானாக. அவனுடைய முகத்தினின்று ப்ராஹ்மணகுலமும் இந்திரியங்களுக்கு விஷயமாகாத பொருளை அறிவிக்குந் திறமையுடைய வேதமும், புஜங்களினின்று க்ஷத்ரியனும் பலமும், துடைகளினின்று வைஶ்யனும் வர்த்தகம் செய்யுந்திறமையும், பாதங்களினின்று ஶூத்ரனும் ஶுஶ்ரு

வைஷ்யும் உண்டானார்கள். மஹாவிபூதியுடைய அப்பரம புருஷன் எங்களுக்கு அருள்புரிவானாக. அவனுடைய கீழு தட்டினின்று லோபமும், மேலுதட்டினின்று ப்ரீதியும், மூக்கினின்று காந்தியும், ஸ்பர்சத்தினின்று பசுக்களுக்கு ஹிதமான காமமும், புருவங்களினின்று யமனும், இமை மயிர்களினின்று காலமும் உண்டானார்கள். மஹா விபூதியுடைய அப்பரமபுருஷன் எங்களுக்கு அருள்புரிவானாக. பூமி ஜலம் முதலிய பஞ்சபூதங்கள் காலம் கர்மம் ஸத்வாதி குணங்கள் ப்ரஹ்மாண்டம் அதிலுள்ள கார்யவர்க்கம் இவையெல்லாம் அவனுடைய ஸங்கல்பத்தினால் நிர்மிக்கபபட்டனவென்றுசொல்லுகிறார்கள். அவன் சேதன அசேதனங்களைக் காட்டிலும் விலக்ஷணனாகையால் அவனுடைய ஸ்வரூபம் பெரிய வித்வான்களுக்கு மாத்ரமே அறியக் கூடியதன்றி ஸாதாரணமாய் மற்ற எவர்க்கும் அறியமுடியாது. மஹாவிபூதியுடைய அப்பரமபுருஷன் எங்களுக்கு அருள்புரிவானாக. அவன் ப்ரளயகாலத்தில் சேதனர் அசேதனம் காலம் முதலிய சக்திகள் ஒய்ந்திருக்கப் பெற்றவன்; ஸ்வதந்த்ரமான ஆத்மஸ்வரூபத்தின் உண்மையை அனுபவிக்கையால் நிறைவாளனாயிருப்பவன்; ப்ரக்ருதியின் பரிணமங்களான சப்தாதி விஷயங்களில் பற்றற்றவன்; ஸ்வபாவஸித்தமான ஐஸ்வர்யமுடையவன். அத்தகைய அப் பரமபுருஷனுக்கு அடிக்கடி நமஸ்காரம். உன் திவ்யமங்கள விக்ரஹத்தைக் காண விரும்பி உன்னைச் சரணம் அடைந்த எங்களுக்குப் புன்னகையோடுகூடினதும் தாமரை மலர்போன்றதுமாகிய உன்முகத்தைக் காட்டுவாயாக. நாங்கள் உன்னைக் கண்ணால் காண ஆசைப்படுகிறோம். தர்மம் தலை சாய்ந்து அதர்மம் தலையெடுக்குங்காலங்கள்தோறும் ஸங்கல்பத்தினால் அவதாரங்களைக் கொண்டு எங்களால் செய்யமுடி

யாத கார்யங்களைச் செய்கிறாயல்லவா? அப்படிப்பட்ட உனக்கு உன் திவ்யமங்கள விக்ரஹத்தைக் காட்டுவது சேராததன்று. ப்ராணிகள் தாங்கள் ஆசைப்படுகிற சப்தாதி விஷயங்கள் கிடைக்காமையால் வருந்தி மீளவும் அவற்றைப் பெறுதற்காக வருத்தம் அதிகமாயும் ஸுகம் அற்பமாயும் இருக்கப்பெற்ற கர்மங்களைச் செய்கிறார்கள். அவையெல்லாம் வீணாகின்றன. உன்னிடத்தில் அர்ப்பணஞ் செய்த கர்மம் எதுவும் வீணாகிறதில்லை. தர்மாசரணமும் லௌகிகவ்யாபாரமுங்கூட ஸர்வேஶ்வரனை உன்னிடத்தில் அர்ப்பணஞ் செய்யப்படுமாயின் அது பயனற்றதாகாது. நீ ஸமஸ்த ப்ராணிகளுக்கும் அந்தராத்மாவாயிருப்பவன். ஆனது பற்றியே ப்ரீதிக்கிடமானவன். ஹிதம் செய்பவனும் நீயேயாகையால் உன்னிடத்தில் அர்ப்பணஞ் செய்த கர்மம் எதுவும் வீணாகாது. வ்ருக்ஷத்தின் வேரில் ஜலம் கொட்டினேமானால் அதன் அடிப்பாகமும் அதினின்று பிரிந்த கிளைகளும் மற்றும் இலை தளிர் பூ காய் முதலியவைகளும் த்ருப்தி யடைகின்றன. இங்ஙனமே பரமாத்மாவான உனக்குச் செய்த ஆராதனம் ஸமஸ்த புருஷார்த்தங்களையும் நிறைவேற்றிக் கொடுக்கும். உன் செயல்கள் விலக்ஷணமாகையால் இப்படிப்பட்டவையென்று நிரூபிக்கமுடியாதவை. நீ எல்லாவிதத்திலும் அளவற்றவன்; கெட்டகுணங்கள் எவையுமதீண்டப்பெறாதவன். நீ ஸத்வாதி குணங்களை அடக்கியாள்கின்றனை. ப்ராணிகளின் புண்ய பாப கர்மங்களுக்குத் தகுந்தபடி அவர்களுக்கு ஸத்வாதி குணங்களின் தோற்றங்களை விளைக்கின்றனை. இத்தகைய உனக்கு நாங்கள் இப்பொழுது நமஸ்காரஞ் செய்கிறோம். உன்னை அருள் புரிவிப்பதற்குரிய உபாயம் நமஸ்காரமேயன்றி மற்றொன்றுமில்லை. ஐந்தாவது அத்யாயம் முற்றிற்று.

(தேவதைகளுக்குப் பகவான் ஸேவை ஸாதித்தலும், தேவதைகள் அவனை ஸ்தோத்ரம் செய்தலும், அவனுடைய ஆஜ்ஞையின் மேல் அம்ருதத்திற்காக க்ஷீரஸமுத்ரத்தைக் கடைய ப்ரயத்னம் செய்தலும்.)

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மன்னவனே! தன்னைப் பற்றினருடைய தாபங்களைப் போக்குந் தன்மையனும் ஸர்வேஸ்வரனுமாகிய பகவான் ஆயிரம் ஸூர்யர்கள் உதித்தாற்போலத் திகழ்கின்ற பேரொளி யுடையவனாகி அந்த ப்ரஹ்மாதி தேவதைகளுக் கெதிரே வந்து தோன்றினான். பிரமன் முதலிய அத்தேவர்கள் அனைவரும் பகவானுடைய ஒளிப்பெருக்கினால் கண்கள் தடைபட்டு ஆகாயத்தையாவது திசைகளையாவது பூமியையாவது தம்மையாவது காணப்பெறவில்லை. இனி எதிரே தோற்றியிருக்கும் ப்ரபுவை எங்ஙனம் காண்பார்கள்? பகவானுடைய திவ்ய மங்களவிக்ரஹம் நிர்மலமாய் மரகதரத்னம் போல் நிர்மலமாயிருந்தது. அவனுடைய திருக்கண்கள் தாமரைமலரின் உட்புறம்போல் சிவந்திருந்தன. அவன் உருக்கி அழுக்கெடுத்த பொன்போலத் திகழ்கின்ற பீதாம்பரத்தை உடுத்திருந்தான். அவனுடைய அங்கங்களெல்லாம் தெளிந்து அழகாயிருந்தன. அவன் அழகான முகமும் அழகிய புருவங்களும் அமைந்து பெரிய ரத்னங்கள் இழைக்கப்பெற்ற கிரீடமும் தோள்வளைகளும் அணிந்திருந்தான். தாமரை மலர் போன்ற அவனது முகம் குண்டலங்களால் திகழ்கின்ற கபோலங்களின் காந்தியால் மிகவும் அழகாயிருந்தது. மற்றும், அவன் அரைஞாண்மாலை கைவளை முத்துமாலை சிலம்பு தண்டை கௌஸ்துபமணி வனமாலை இவைகளை அணிந்து மார்பில் வீற்றிருக்கின்ற ஸ்ரீமஹாலக்ஷ்மியால் மிகவும் விளக்கமுற்றிருந்தான். ஸுதர்சனம் முதலிய அவ

னுடைய அஸ்த்ரங்கள் புருஷவுருவத்துடன் அவனைப் பணிந்திருந்தன. தேவர்களில் தலைவனாகிய ப்ரஹ்மதேவன் அத்தகைய பரமபுருஷனுடைய திருவுருவத்தைக் கண்டு ருத்ரனும் மற்றுமுள்ள தேவதைகளும் தானுமாக அவனுக்கு ஸாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து அவனை ஸ்தோத்ரம் பண்ணினான்.

ப்ரஹ்மதேவன் சொல்லுகிறான்:—உனக்கு ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்கள் கிடையாது. நீ ஸத்வ ரஜஸ் தமஸ் ஸுக்களென்கிற ப்ராக்ருத குணங்களற்றவன்; துக்கத்தின் ஸம்பந்த மற்ற மஹாநந்தஸ்வரூபன்; அணுஸ்வரூபனான ஜீவனைக்காட்டிலும் ஸூக்ஷ்மன்; அப்படிப்பட்ட ஜீவனுக்கும் உட்புகுந்து நியமிக்குந்தன்மை யுடையவன். உன் ஸ்வரூபத்தை அளவிடமுடியாது. நீ மிகுந்த ப்ரபாவமுடையவன். அத்தகைய உனக்கு நமஸ்காரம். புருஷ ஶ்ரேஷ்டனே! உன்னுடைய இவ்வுருவம் வேதத்தினாலும் அதைப் பின்சென்ற பாஞ்சராத்ரம் முதலிய சாஸ்த்ரங்களாலும் அறிவிக்கப்பட்ட வழிகளில் இறங்கி நன்மையை விரும்புவோர்களால் ஆராதிக்கத் தகுந்தது. மூன்று லோகங்களும் நாங்களும் உன்னுடைய இவ்வுருவத்தில் புலப்படுகின்றோம். ஜகத்காரணனே! உன்னுருவம் இந்த ப்ரபஞ்சத்திற் கெல்லாம் ஆதாரமாயிருக்கின்றது. இந்த ப்ரபஞ்சம் முதலிலும் நடுவிலும் கடையிலும் உன்னிடத்திலேயே இருக்கின்றது. உனக்கு நீயே ஆதாரமன்றி மற்றொரு ஆதாரம் கிடையாது. இந்த ப்ரபஞ்சத்தினுடைய ஆதி நடு அந்தங்களென்கிற மூன்று அவஸ்தைகளும் நீயே. ஆகையால் இந்த ப்ரபஞ்சமெல்லாம் நீயே. மண்ணால் செய்யப்பட்ட குடம் அதைக்காட்டிலும் எங்ஙனம் வேறுபட்ட தன்றோ அங்ஙனமே உன்னிடத்தினின்றும் உண்டான இந்த ப்ர

யர்களே! உங்களுக்கு நன்மை உண்டாகும் விதத்தைச் சொல்லுகிறேன். மனவூக்கத்துடன் கேட்பீர்களாக. நீங்கள் இப்பொழுது தானவர்களோடும் தைத்யர்களோடும் ஸ்நேஹஞ் செய்வீர்களாக. அவர்கள் காலவசத்தினால் அனுகூலர்களாயிருப்பார்கள். ஆகையால் அவர்கள் ஸ்நேஹஞ் செய்ய ஒப்புக்கொள்வார்களோ மாட்டார்களோ என்று சங்கிக்கவேண்டாம். அவர்களால் உங்களுடைய நன்மை நிறைவேறும் வரையில் அவர்களை அனுஸரித்து ஸ்நேஹத்துடன் இருப்பீர்களாக. நம்முடைய ப்ரயோஜனம் பெரிதாயிருக்குமாயின், அதை நிறைவேற்றும் பொருட்டுச் சத்ருக்களாயினும் அவர்களோடு ஸந்தி செய்யவேண்டும். தேவதைகளே! ப்ரயோஜனம் கைகூடின பின்பு எலியும் பாம்பும்போல த்வேஷத்தைப் பாராட்டலாம். நீங்கள் அம்ருதத்தைப் பெறும் விஷயத்தில் விரைந்து யத்னம் செய்வீர்களாக. எப்படிப்பட்ட ஜந்துவாயினும் அவ்வம்ருதத்தைப் பானஞ் செய்யுமாயின் ம்ருத்யுவின்வாயில் அகப்பட்டிருப்பினும் அதினின்று விடுபட்டு மரணமற்றதாகும். புதர்கள் புற்கள் கொடிகள் ஓஷதிகள் இவையெல்லாவற்றையும் கொண்டுவந்து க்ஷீரஸமுத்ரத்தில் போட்டு மந்தரபர்வதத்தை மத்தாகவும் வாஸுகியைக் கயிறாகவும் கொண்டு நான் ஸஹாயமாயிருக்கப்பெற்றுச் சோம்பலின்றிக் கடைவீர்களாக. உங்களுடன் ஸமுத்ரத்தைக் கடைந்த அஸுரர்கள் கேவலம் வருத்தத்தோடு மீண்டு போவார்கள். நீங்கள் மாத்ரமே அம்ருதபானஞ் செய்து பலன் பெறுவீர்கள். தேவதைகளே! அஸுரர்கள் எதை விரும்புகிறார்களோ அதை நீங்கள் ஒப்புக்கொள்ளுங்கள். எல்லா ப்ரயோஜனங்களும் நல்லவார்த்தையால் ஸித்திப்பதுபோலக் கோபத்தினால் ஸித்திக்காது. ஸமுத்ரத்தில் காலகூட விஷம்

உண்டாகும். அதினின்று நீங்கள் பயப்படவேண்டிய தில்லை. அதை ருத்ரன் விழுங்கி விடுவான். மற்றும் ஸமுத்ரத்தைக் கடையும்பொழுது அதினின்று உண்டாகும் வஸ்துக்களில் எதிலும் லோபத்தையும் காமத்தையும் செய்யலாகாது. கோபமென்பது சிறிதும் கூடாது. இப்படியிருந்து ஸமுத்ரத்தைக் கடைவீர்களாயின் அம்ருதம் பெறலாம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—தான் ஸங்கல்பித்தபடி நடத்துந்திறமையுடையவனும் ஸர்வேச்வரனுமாகிய அப்பரமபுருஷன் தேவதைகளுக்கு இங்ஙனம் ஆஜ்ஞை செய்து அவர்கள் பார்த்துக்கொண்டே யிருக்கையில் அந்தர்த்தான மடைந்தான். மன்னவனே! அந்தத் தேவர்கள் மறைந்த பகவானுக்கு நமஸ்காரஞ் செய்து ப்ரஹ்மதேவனும் ருத்ரனும் தங்கள் இருப்பிடம் போய்ச் சேர்ந்தார்கள். தேவதைகள் பலி சக்ரவர்த்தியிடம் போனார்கள். துதிக்கத்தகுந்த குணசாலியாகிய பலிசக்ரவர்த்தி, தேவதைகள் சத்ருக்களாயினும் அவர்கள் யுத்தமுயற்சியின்றி வந்திருப்பதைக்கண்டு ஸந்திசெய்யவேண்டியகாலம் இன்னதென்றும் யுத்தம்செய்யவேண்டியகாலம் இன்னதென்றும் அறிந்த நற்குணர்ந்தவனாகையால் அந்தத் தேவர்களை வதிக்கமுயன்றுகோலாஹலஞ் செய்கின்ற அஸுரஸேனாதிபதிகளைத் தடுத்தான். அவனை அஸுரஸ்ரேஷ்டர்கள் பலரும் பாதுகாத்துக்கொண்டிருந்தார்கள். அவன் பெரிய செல்வப்பெருக்குடன் திகழ்வுற்றிருந்தான். தேவர் முதலிய அனைவரையும் அவன் வென்றவன். அத்தகைய பலியினிடம் அந்தத் தேவர்கள் சென்றார்கள். பிறகு மிகுந்த மதியுடைய தேவேந்த்ரன் நல்ல வார்த்தைகளால் அவ்வஸுரராஜனை அருள்புரியச் செய்துகொண்டு அம்ருதங் கடையும் விஷயத்தைப் பற்றிப்

பரமபுருஷனிடத்தில் தான் கற்ற உபாயத்தைச் சொன்னான். அது பலி சக்ரவர்த்திக்கும் சம்பரன் அரிஷ்டநேமி முதலிய மற்ற அஸுரஸ்ரேஷ்டர்களுக்கும் த்ரிபுரவாஸிகளுக்கும் ருசித்தது. சத்ருக்களைத் தண்டிக்குந்தன்மையுள்ள மஹாவீரனே! பிறகு தேவர்களும் அஸுரர்களும் ஆகிய அவர்கள் அனைவரும் ஒருவரோடொருவர் நட்புடையவர்களாகி ஸங்கேதஞ் செய்துகொண்டு அம்ருதத்திற்காக மிகுந்த யத்னம் செய்தார்கள். கொடிய மதமுடையவர்களும் உழல்தடிபோன்ற புஜமுடையவர்களுமாகிய அந்தத் தேவாஸுரர்கள் மந்தரபர்வதத்தைத் தங்கள் பலத்தினால் பிடுங்கிக் கர்ஜித்துக்கொண்டு பாரந் தாங்குந் திறமையுடையவர்களாகையால் அதை க்ஷீரஸமுத்ரத்திற்குக் கொண்டுபோகத் தொடங்கினார்கள். இந்த்ரன் பலி முதலியவர்கள் அனைவரும் வெகுதூரம் பளுவைத் தூக்கிக்கொண்டு வந்தமையால் இளைப்புற்று அப்பர்வதத்தைக் கொண்டுபோக வல்லமையற்று ஸ்வாதீனமின்றி நடுவழியில் அதைக் கைவிட்டார்கள். அப்பர்வதம் மேருபர்வதம்போலப் பெரும்பாரமுடையது. ஆகையால் அது கீழ்விழும்பொழுது பல தேவதைகளையும் பல அஸுரர்களையும் சூர்ணம் செய்துவிட்டது. அப்பொழுது தேவதைகளும் அஸுரர்களும் உத்ஸாஹம் குலைந்து சிலர் கை முறிந்தவர்களும் சிலர் துடை முறிந்தவர்களுமாயிருக்கக் கண்டு பகவான் கருடன்மேல் ஏறிக்கொண்டு அவ்விடம் வந்து தோன்றினான். பிறகு பர்வதத்தின் கீழ் அகப்பட்டு உடம்பெல்லாம் முறிந்து வருந்துகிற தேவதைகளையும் அஸுரர்களையும் கண்டு அம்ருதப் பெருக்குடைய தன் கண்ணோக்கத்தினால் தேவதைகளை மாத்ரம் புண்களெல்லாம் தீர்ந்து முன்போலவே பிழைப்பித்தானன்றி அஸுரர்களை மாத்



1733. க்ஷீரஸமுத்ரங் கடைதலும், உச்சைஸ்ஸ்ர
வஸ்ஸு முதலியன உண்டாதலும்

ரம் பிழைப்பிக்கவில்லை. அனந்தரம் ஒற்றைக் கையால் அவலீலையாகவே அந்த மந்தர பர்வதத்தை எடுத்துக் கருடன் மேல் வைத்துத் தானும் ஏறிக்கொண்டு தேவ கணங்களாலும் அஸுரகணங்களாலும் சூழப்பட்டு க்ஷீர ஸமுத்ரம் போய்ச் சேர்ந்தான். பிறகு பக்ஷிஶ்ரேஷ்டனாகிய கருடன், கழுத்தினின்று மந்தர பர்வதத்தை இறக்கி ஜலத்தின் அருகாமையில் விட்டுப் பகவானால் விடை கொடுக்கப்பெற்றுப் போனான். ஆறுவது அத்யாயம் முற்றிற்று.

தேவாஸுரர்கள் க்ஷீரஸமுத்ரத்தைக் கடைகையில் அதினின்றுண்டான விஷத்தை ருத்ரன் பருகுதல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அந்தத் தேவதைகளும் அஸுரர்களும் வாஸுகியிடஞ்சென்று ஸமுத்ரங்கடைவதன் பலனான அம்ருதத்தில் உனக்கும் பாகம் கொடுக்கிறோமென்று ப்ரார்த்தித்து அதற்கு ஒப்புக்கொண்டுவந்த அந்த ஸர்ப்பராஜனை மந்தரபர்வதத்தில் கயிறாகச் சுற்றி ஸந்தோஷத்துடன் அம்ருதத்தைக் கடைய ஆரம்பித்தார்கள். குருகுலாலங்காரனே! பகவான் விஷஜ்வாலைகளால் தீவ்ரமாயிருக்கின்ற வாஸுகியின் முகத்தை அஸுரர்கள் பிடித்துக்கொள்ளும்படி செய்ய விரும்பி முதலில் தான் முகத்தைப் பிடித்துக்கொண்டான். பிறகு தேவதைகளும் முகத்தையே பிடித்துக்கொண்டார்கள். பகவானும் தேவதைகளும் முகத்தைப் பிடித்துக்கொண்டதை அஸுரஶ்ரேஷ்டர்கள் ஒப்புக்கொள்ளவில்லை. 'நாங்கள் நன்கு வேதாத்யயனம் செய்தவர்கள்; ஶாஸ்த்ரங்களைக் கற்றவர்கள்; பிறவியாலும் நற்செயல்களாலும் ப்ர

ஸித்தி பெற்றவர்கள். இத்தகையநாங்கள் அமங்களமான ஸர்ப்பத்தின் வாலைப் பிடிக்கமாட்டோம்' என்று சொல்லி அஸுரர்கள் வெறுமனே யிருந்தார்கள். பரமபுருஷன் அதைக் கண்டு புன்னகை செய்து கொண்டே முகத்தை விட்டுத் தேவதைகளும் தானுமாக வாலைப்பிடித்துக்கொண்டான். இங்ஙனம் அந்தத் தேவாஸுரர்கள் இன்னபாகத்தை இன்னவர் பிடித்துக்கொள்ள வேண்டியதென்று ஏற்பாடு பண்ணிக்கொண்டு பெரிய முயர்ச்சியுடன் க்ஷீரஸமுத்ரத்தைக் கடைந்தார்கள். அவ்வாறு கடையும் பொழுது வெறும் ஜலத்தில் ஆதாரமில்லாதிருந்த மந்தர பர்வதம் ஜலத்தில் அமிழ்ந்து போய்விட்டது. கௌரவ ஶ்ரேஷ்டனே! மஹாபலிஷ்டர்களான தேவாஸுரர்கள் அந்த மந்தர பர்வதத்தை எவ்வளவு ப்ரயத்னப்பட்டு எடுக்கப் பார்த்தும் அது பெரும்பாரமாகையால் அவர்களுக்கு ஸாத்யப்படவில்லை. ஜலத்தில் முழுகியே போய் விட்டது. அந்தத் தேவாஸுரர்கள் மிகுந்த பலமுடைய தெய்வத்தினால் தங்கள் பௌருஷம் வீணாகப்பெற்று மன வருத்தமுற்று முகவொளி மழுங்கி நின்றார்கள். வீணாகாத ஸங்கல்பமுடையவனும் அளவற்ற வீர்யமுடையவனும் ஸர்வேஶ்வரனுமாகிய அவ்வஜிதபகவான் அங்ஙனம் விக்னம் நேர்ந்ததைக் கண்டு அற்புதமான பெரிய ஆமையின் உருவம் தரித்து ஜலத்தில் முழுகி அப்பர்வதத்தை மேலுக் கெடுத்தான். அக்குலபர்வதம் மேலெழுந்து வரக்கண்டு தேவாஸுரர்கள் அனைவரும் மீளவும் கடையத் தொடங்கினார்கள். லக்ஷயோஜனை விஸ்தாரமுடைய கூர்மரூபியான அந்தப் பகவான் மற்றொரு ஜம்பூத்வீபம் போலப் பேருருவமுடையவனாகி மந்தரபர்வதத்தைத் தன் முதுகினால் தாங்கிக்கொண்டிருந்தான். மன்னவனே! தேவஶ்ரேஷ்டர்களும் அஸுரஶ்ரேஷ்டர்களும் தமக்

குள்ள புஜபலத்தையெல்லாம் கொண்டு சுழற்றுகின்ற அம்மந்தர பர்வதத்தை முதுகில் தாங்குகிற ஆதி கூர்ம ரூபியான பகவான் அந்தப்பர்வதம் சுழலுவதைத் தினவு சொறிவதுபோல ஸுகமாகவே நினைத்தான். அளவற்ற பலமுடையவனாகையால் அவனுக்கு அது ஒரு பொருளே யன்று. அம்மஹாவிஷ்ணு இங்ஙனம் ஜலத்தில் கூர்ம ரூபியாய்ப் பர்வதத்தைத் தரித்துக்கொண்டே அஸுர ஸ்வபாவத்தினால் அஸுரர்களிடத்திலும் தெய்வஸ்வ பாவத்தினால் தேவதைகளிடத்திலும் ஆவேசித்து அவரவர்களுக்குத் தேஹ மனோ பலங்களை வளர்த்திக் கொண்டிருந்தான். வாஸுகியிடத்திலும் நித்ராரூப மாய் ப்ரவேசித்ததான். மற்றும், அப்பர்வதம் அசை யாதிருக்குமாறு அதன்மேல் மற்றொரு குலபர்வதம் போன்று ஆயிரம் புஜங்களுடையவனாகி ஒரு புஜத்தினால் அப்பர்வதத்தை அமுக்கிக்கொண்டிருந்தான். ஆகாயத் தில் ப்ரஹ்மதேவன் ருத்ரன் இந்த்ரன் முதலியவர்கள் அவனைத் துதித்து அவன்மேல் புஷ்பவர்ஷங்களைப் பொ ழிந்தார்கள். பர்வதத்தின் மேலும் கீழும் பர்வதத்தி லும் தம்மிடத்திலும் அமைந்திருக்கின்ற பரமபுருஷனால் உதவி செய்யப்பெற்ற அந்தத் தேவாஸுரர்கள் மதித்து மிகுந்த பலத்துடன் மந்தரபர்வதத்தினால் முதலை முத லிய ஜலஜந்துக்களெல்லாம் பயந்தோடும்படி க்ஷீர ஸமுத்ரத்தைக் கடைந்தார்கள். வாஸுகியின் முன் பாகத்தைப் பிடித்துக்கொள்ள வேண்டுமென்று மேல் விழுந்து பிடித்துக்கொண்ட பௌலோமன் காலேயன் பலி இல்வலல் முதலிய அஸுரர்கள் அந்த ஸர்ப்ப ராஜனுடைய கடுமையான அனேகமாயிரங் கண்களி னின்றும் முகங்களினின்றும் மூச்சுக் காற்றுக்களினின் றும் வெளிக்கிளம்புகின்ற அக்னிகளாலும் புகைகளாலும்

பலமெல்லாம் ஒடுங்கப்பெற்றுக் காட்டுத்தீயினால் கொளு த்தப்பட்ட ஸரலவ்ருக்ஷங்கள் போன்றிருந்தார்கள். தேவதைகளும் அந்த வாஸுகியின் உஷ்ணமான மூச்சுக் காற்றின் ஜ்வாலையால் ஒளி மழுங்கி மூச்சுக்காற்றின் புகைகளால் ஆடைகளும் பூமாலைகளும் கவசங்களும் அழுக்கடைந்து மழுங்கப்பெற்று வருத்தமுற்றிருக்கை யில், இந்த்ரனுடைய ஆஜ்ஞையின்படி நடக்குந்தன்மை யுள்ள மேகங்கள் அந்தத் தேவதைகளின் மேல் மழை பெய்தன. மற்றும் ஸமுத்ரத்தின் அலைகளைத் தழுவிக் குளிர்ந்த காற்றும் அவர்கள் மேல் வீசின. அங்ஙனம் தேவகூட்டத் தலைவர்களும் அஸுரர் கூட்டத் தலைவர்க ளும் நெடுங்காலம் வருந்திக் கடலைக்கடைந்துகொண்டிரு ப்பினும் அம்ருதம் தோன்றாதிருக்கையினால், அஜிதபக வான்தானே கடையத்தொடங்கினான். காலமேகம்போலக் கறுத்து அரையில் பீதாம்பரம் தரித்துக் கழுத்தில் மின் னல்போலத் திகழ்கின்ற ஆபரணங்களையணிந்து கிரீடத் துடன் கூடின சிரத்தினால் ஆகாயத்தை அளாவி மார்பில் வனமாலை யென்னும் பூமாலை அசையப் பெற்ற செந் தாமரைக்கண்ணனாகிய அப்பகவான் உலகங்களுக்கு அபயங்கொடுக்கவல்ல புஜங்களால் ஸர்ப்பத்தைப் பிடி த்து மந்தரமென்னும் மத்தினால் ஸமுத்ரத்தைக் கடை ந்துகொண்டு மற்றொரு பர்வதம்போல விளங்கினான். அப்பொழுது ஸமுத்ரத்திலுள்ள ஸாதாரண மீன்களும் மகரமீன்களும ஸர்ப்பங்களும் ஆமைகளும் பயந்தோ டின. திமிகளும் நீர்யானைகளும் முதலைகளும் திமிங்கி லங்களும கலக்கமுற்றன. அத்தகைய அந்த ஸமுத்ரத் தினின்றும முதலில் மிகவும் பொறுக்கமுடியாத ஹாலா ஹலமெனனும விஷம் உண்டாயிற்று. அதற்கு ஒருவ ராலும் எவ்விதத்திலும் பரிஹாரம் செய்ய முடியவில்லை.

அது அதிக வேகமுடையது. ஆகையால் அது எல்லாத் திசைகளிலும் மேலும் கீழும் பரவிக் கிளம்பி நிரம்பிப் பொறுக்க முடியாதிருந்தது மன்னவனே! மூன்று லோகங்களிலுமுள்ள ஸமஸ்த ப்ரஜைகளும் இந்த்ரன் முதலிய அவர்களின் ப்ரபுக்களும் அவ்விஷத்தைக் கண்டு பயந்து அதற்குப் பரிஹாரஞ் செய்யமுடியாமல் எவரும் காப்பவரின்றிச் சிவனைச் சரணம் அடைந்தார்கள் தன் பத்னியான பார்வதியுடன் மூன்று லோகங்களுக்கும் க்ஷேமத்தை விரும்பிக் கைலாஸ பர்வதத்தில் தவஞ் செய்துகொண்டிருக்கின்ற முனிவர்களால் புகழப் பெற்றவனும் தேவதைகளில் சிறந்தவனுமாகிய அந்தச் சிவ பெருமானிடஞ் சென்று அவனைக் கண்டு நமஸ்கரித்து ஸ்தோத்ரம் செய்தார்கள்

[1]ப்ரஜாபதிகள் சொல்லுகிறார்கள்:—நீ தேவர்களுக்கெல்லாம் தேவன். நீயே உலகங்களையெல்லாம் படைக்கின்றனை. ஸமஸ்த பூதங்களுக்கும் அந்தராத்மாவாயிருக்கின்றனை. நாங்கள் உன்னைச் சரணம் அடைந்தோம். மூன்று லோகங்களையும் தஹிக்கின்ற இந்த விஷத்தினின்று எங்களைப் பாதுகாப்பாயாக. ஸமஸ்த லோகங்களுடைய ஸம்ஸாரபந்தத்தையும் மோக்ஷத்தையும் நீயே நடத்துகின்றனை. மற்றும், நீ உன்னைப் பற்றினருடைய துக்கங்களைப் போக்குந்தன்மையுடையவன். அத்தகைய உன்னையே மதியுள்ள பண்டிதர்கள் ஆராதிக்கிறார்கள். நீ ப்ராணிகளுக்கு உபாயத்தை உபதேசித்து அஜ்ஞானமாகிற அந்தகாரத்தைப் போக்குகின்றனை. ப்ரபூ! ஸ்வயம் ப்ரகாசனே! மஹானுபாவா! நீ ஸத்வ

1. ருத்ராந்தர்யாமியான பரமபுருஷனைத் துதிக்கிறார்களென்றுவது, பரமபுருஷனுடைய அஸாதாரணதர்மங்களை ருத்ரனிடத்தில் ஏறிட்டுத் துதிக்கிறார்களென்றுவது கருத்துக் கொள்ளவேண்டும்.

ரஜஸ்தமோகுணங்கள் அமைந்திருப்பதும் உன் சக்தி போல் உன்னைவிட்டுப் பிரியாததுமாகிய மாயையினால் இந்தப் ப்ரபஞ்சத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை நடத்தமுயன்று ப்ரஹ்மன் விஷ்ணு சிவன் என்னும் பெயர்களையும் உருவங்களையும் தரிக்கின்றனை. உபநிஷத்துக்களில் ஓதப்படுகிற ரஹஸ்யப் பொருளும் இணையெதிரில்லாததும் சேதனுசேதனரூபமுமான ஸமஸ்தவஸ்துக்களையும் படைத்து அவற்றுள் புகுந்து நியமிப்பதுமாகிய பரப்ரஹ்மம் நீயே. சேதனர் அசேதனர் காலம் முதலிய சக்திகளுடன் தோற்றுகின்ற இந்த ப்ரபஞ்சமெல்லாம் நீயே. உன்னை யறிவிக்கும் ப்ரமாணம் சாஸ்த்ரம் ஒன்று மாத்ரமே யொழிய மற்றொன்றுமன்று. நீயே ஜகத்காரணன். பண்டிதர்கள் உன்னையே பரமாத்மனென்று கூறுகிறார்கள். ப்ராணன்கள் இந்த்ரியங்கள் பூமி முதலிய பஞ்சபூதங்கள் ஸத்வாதி குணங்கள் இவை யெல்லாம் உன்னால் தரிக்கப்பட்டுத் தத்தம் செயல்களில் வல்லவையாகின்றன. காலமும் யாகாதிகர்மங்களும் உன்னுடைய சரீரங்களே. நீ என்றும் ஒரேவிதமாயிருப்பவன். ஸமஸ்த வஸ்துக்களிலும் உட்புகுந்து நிறைந்திருக்கும் ப்ரஹ்மம் நீயே. நீ தர்மத்தைச் சரீரமாகவுடையவன். மற்றும், தர்மங்களால் நீயே ஆராதிக்கப்படுகின்றனை. மூன்று அக்ஷரங்கள் அடங்கின ப்ரணவம் உன்னையே குறிக்கின்றது. ஸமஸ்த தேவஸ்வரூபனாகிய அக்னி உன்னுடைய முகம். லோகநாதனே! பூமியை உன் பாதாரவிந்தங்களாகச் சொல்லுகிறார்கள். காலத்தை ஸகலதேவஸ்வரூபனான உன்னுடைய கதியாகவும், திசைகளை உன் காதுகளாகவும், வருணனை உன்நாக்காகவும் த்யானிக்கிறார்கள். ஆகாயம் உன்னுடைய நாபி காற்று உன் மூச்சுக்காற்று. ஸூர்யன் உன் கண்கள். ஜலம் உன்னு

டைய ரேதஸ்ஸு. உன் ஸ்வரூபம் மேன்மை தாழ்மை களுக்கிடமான ஸமஸ்த ஜீவாத்மாக்களுக்கும் ஆதார மாயிருக்கின்றது. சந்த்ரன் உன்னுடைய மனம். த்யுலோகம் உன்னுடைய சிரஸ்ஸு. ஸமுத்ரங்கள் உன் வயிறு. பர்வதங்கள் உன் எலும்புக் குவியல்கள். ஸமஸ்த ஓஷதிகளும் கொடிகளும் உன் ரோமங்கள். காயத்ரி முதலிய சந்தங்கள் உன்னுடைய ஸப்ததாதுக்கள். வேதஸ்வரூபமான மூர்த்தியுடையவனே! வேதங்களிற் சொல்லப்பட்ட அவ்வவ்வகைப்பட்ட தர்மங்களெல்லாம் உன் ஹ்ருதயம். தத்புருஷ அகோர ஸத்யோஜாத வாமதேவ ஈஶானங்களென்கிற ஐந்து அனுவாகங்களும் உன்னுடைய வசனங்கள். அவற்றுள் நூற்று முப்பத்தெட்டு மந்த்ரங்கள் அடங்கியிருக்கின்றன. ஓ தேவனே! ஸ்வயம் ப்ரகாசமும் சிவமென்று கூறப்படுவதுமாகிய பரமாத்மதத்வம் உன்னுடைய நிலைமை. நீ பரமாத்மாவுக்குச் சரீரமாகி அவனை விட்டுப் பிரியாது நிலை பெற்றிருப்பவன். அதர்மத்தின் இலைகளாகிய தம்பம் லோபம் முதலியவை உன்னுடைய நிழல். ப்ரபஞ்சத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களுக்குக் காரணமான ஸத்வ ரஜஸ் தமோ குணங்கள் உன்னுடைய முக்கண்கள். தேவனே! காயத்ரி முதலிய சந்தங்கள் அடங்கின பழயதாகிய வேதம் உன்னுடைய ஸங்கல்பம். நீ எல்லாவற்றையும் ஸாக்ஷாத்கரித்தவன். நீ அனைவர்க்கும் அந்தராத்மாவாயிருப்பவன், நீயே சாஸ்த்ரங்களைப்ரசாரஞ் செய்கின்றனை. கைலாஸ பர்வதத்தைக்காப்பவனே! ஸமஸ்த லோகங்களையும் பாதுகாப்பவனே! ப்ரஹ்மதேவன் விஷ்ணு இந்த்ரன் இவர்களும் ஸ்வயம்ப்ரகாசமான உன் ஸ்வரூபத்தை அறியவல்லரல்லர். உன்ஸ்வரூபத்தில் ரஜஸ்ஸு தமஸ்ஸு மிச்ரஸத்வம் என்கிற ப்ராக்ருத குணங்களின் ஸம்பக்

தமே கிடையாது. அத்தகைய உன்ஸ்வரூபத்தையே பர ப்ரஹ்மமென்று கூறுகிறார்கள். தேவ மனுஷ்யாதி பேதங்கள் தீண்டப்பெறாதது. ப்ராணித்ரோஹிகளான அத்வரன் தக்ஷன் த்ரிபுரன் முதலிய பலரையும் நீ அழித்தனை. ஆயினும் அது உனக்கு ஒரு புகழன்று. உன் பெருமையாகிற ஸமுத்ரத்திற்கு அது ஒரு திவலை போன்றது. நீ உன்னால் படைக்கப்பட்ட இந்த ப்ரபஞ்சத்தை யெல்லாம் ப்ரளயகாலத்தில் உன் நெற்றிக்கண்ணில் விளங்கும் அக்னியின் பொரியால் பஸ்மமாவதை அறியாதிருக்கின்றனை. நீ பார்வதியுடன் கலந்து திரிவதைக் கண்டு மிகவும் காமக்கலவியில் கால் தாழ்ந்தவனென்றும், ஸ்மமமான பூமியில் ஸஞ்சரிப்பதைப் பற்றிக் கொடியவனென்றும் ஹிம்ஸையில் ருசியுடையவனென்றும் சில அறிவுகேடர்கள் பிதற்றுவார்கள். அவர்கள் உன்னுடைய உண்மையை அறிந்தவர்களல்லர். ஆத்ம ஸ்வரூபத்தை அறிந்து அதன் அனுபவத்தினால்ஸந்தோஷமுற்றிருப்பவர்களும் ப்ரபஞ்சத்திற்கெல்லாம் ஹிதம் உபதேசிப்பவர்களுமாகிய பெரியோர்கள் உன்னுடைய இணையடிகளை ஹ்ருதயத்தில் த்யானிக்கிறார்கள். நீ ப்ரபஞ்சத்தின் க்ஷேமத்திற்காக என்றும் கொடிய தவஞ்செய்கின்றனை. இத்தகைய உன் கருத்தை அறியாமல் சிலர் வெட்கமின்றிப் பிதற்றுகிறார்கள். கார்யதசையில் ஸ்தூலமாயும் காரணதசையில் ஸூக்ஷ்மமாயுமுள்ள சேதனசேதனங்களைக் காட்டிலும் விலக்ஷணனும் எங்கும் நிறைந்தவனுமாகிய உன் ஸ்வரூபத்தை ப்ரஹ்மாதிகளும் அறியவல்லரல்லர். இனி அவர்கள் உன் மஹிமையை எங்ஙனம் துதிக்கவல்லராவார்கள்? அந்த ப்ரஹ்மாதிகளால் படைக்கப்பட்டவர்களால் படைக்கப்பட்ட நாங்கள் உன் ஸ்வரூபத்தை அறியவாவது அதைத் துதிக்கவாவது எங்ஙு

னம் வல்லவராவோம்? ஆயினும் நாங்கள் எங்கள் சக்திகுத் தகுந்தபடி ஸ்தோத்ரம் செய்தோம் உன் பெருமைக்குத் தகுந்தவாறு துதிசெய்ய எவரும் வல்லவராக மாட்டார்கள். பரமேஶ்வரனே! உன்னைக் காட்டிலும் மேற்பட்ட வஸ்துவாவது கீழ்ப்பட்ட வஸ்துவாவது எங்களுக்கு எதுவும் தெரியவில்லை. உன் செயலை ஒருவராலும் அறியமுடியாது. நீ உலகங்களின் க்ஷேமத்திற்காக இங்ஙனம் தோற்றுகின்றனை யென்பது மாத்ரமே எங்களுக்குத் தெரியும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—தன்னிடத்தில் இல்லாதவைகளும் பரமபுருஷனுக்கே அஸாதாரண மாயிருப்பவைகளுமான குணங்களை இங்ஙனம் ஏற்றி அதிகமாகத் துதிசெய்யப்பெற்ற தேவனாகிய ருத்ரன் காலகூடவிஷத்தினின்றும் ப்ரஜைகளுக்கு நேர்ந்த வ்யஸனத்தைக் கண்டு ஸமஸ்த பூதங்களுக்கும் நண்பனாகையால் தன் காதலியாகிய பார்வதியைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தான்.

ருத்ரன் சொல்லுகிறான்:—பார்வதீ! ப்ரஜைகளுக்கு இப்படி மஹத்தான வருத்தம் நேர்ந்திருக்கின்றதைக் கண்டனையா? க்ஷீரஸமுத்ரத்தைக் கடையும்பொழுது அதினின்றும் காலகூடமென்னும் விஷம் உண்டாயிற்று. அதனால் ப்ரஜைகள் வருந்துகின்றனர். ஜீவிக்கவேண்டுமென்று விரும்புகிற இந்த ப்ரஜைகளுக்கு நான் அபயம் கொடுக்கவேண்டும். வல்லமையுடையவன் தீனர்களைப் பாதுகாக்கவேண்டுமல்லவா? அவன் செய்யவேண்டிய ப்ரயோஜனம் அவ்வளவேயன்றி வேறில்லை. ஆகையால் வல்லமையுடைய நான் ப்ரஜைகளை இந்த வ்யஸனத்தினின்றும் பாதுகாக்க வேண்டியவனாயிருக்கிறேன். வல்

லமையுடைய பெரியோர்கள் ஒரு க்ஷணத்திற்குள் அழியுந்தன்மையுள்ள தம் ப்ராணன்களாலும் ப்ரஜைகளைப் பாதுகாப்பார்கள். மங்களஸ்வபாவமுடையவளே! பகவானுடைய மாயையினால் மதிமயங்கி ஒருவர்மேலொருவர் வைரத்தை ஏற்றுக்கொண்டிருக்கும் ப்ராணிகளிடத்தில் எவன் தயை செய்கிறானோ அவனிடத்தில் ஸர்வாந்தராத்மாவான பகவான் ப்ரீதியடைகிறான். ஷாட்குண்ய பூர்ணனாகிய பகவான் ஸந்தோஷம் அடைவானாயின், ஜங்கம ஸ்தாவரங்களோடு கூடின நான் மிகுந்த ஸந்தோஷம் அடைவேன். பகவானுக்கு ஸந்தோஷத்தை விளைப்பதைவிட வேறொரு ப்ரயோஜனம் எதுவுமேயில்லை. ஆகையால் நான் இந்த விஷத்தைப் புசிக்கிறேன். என்னால் ப்ரஜைகளுக்கு ஸுகம் உண்டாகுமாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார் :—இங்ஙனம் ருத்ரன் தன் பத்னியாகிய பார்வதியை அனுமதி கொடுக்குமாறு வேண்டிக்கொண்டு அவ்விஷத்தைப் புசிக்க ஆரம்பித்தான். அவனுடைய வைபவத்தை அறிந்த பார்வதியும் அப்படியே ஒப்புக்கொண்டாள். அப்பால் அச்சிவபெருமான் எங்கும் நிறைந்திருப்பதாகிய அந்த விஷத்தைத் தன் உள்ளங்கைக்குள் அடக்கிக்கொண்டு அம்மஹாதேவன் மனயிரக்கமுற்று ப்ராணிகளுக்கு ஸுகத்தை விளைப்பதற்காக அதைப் பக்ஷித்தான். ஜலத்தின் மலமாகிய அவ்விஷம் மஹானுபாவனாகிய அந்த ருத்ரனிடத்திலும் தன் வீர்யத்தை வெளியிட்டது. அது அவனைக் கழுத்தில் கறுப்பு நிறமுடையவனாகச் செய்தது. ஸாதுவாகிய ருத்ரனுக்கு அதுவும் அலங்காரமாகவே ஆயிற்று. தம் ப்ரயோஜனத்தை எதிர் பாராமல் பிறர்கார்யத்தை நிறைவேற்றுந் தன்மையுடைய பெரியோர்கள் பெரும்பாலும் உலகங்களின் மனவருத்தங்களைக் கண்டு பொறுக்க முடி

யாமல் தாங்களும் வருந்துவார்கள். அது அனைவர்க்கும் அந்தராத்மாவான பரமபுருஷனுக்குச் சிறந்த ஆராதனமாம். தன்னைப் பற்றினருடைய மனவிருப்பங்களைப் பெய்யுந்தன்மையுடைய சிவபெருமான் அங்ஙனம் விஷம் பருகின வ்ருத்தாந்தத்தைக் கேட்டு ப்ரஜைகளும் பார்வதியும் ப்ரஹ்மதேவனும் பகவானும் புகழ்ந்தார்கள். ருத்ரன் விஷத்தைப் பானம் செய்யும்பொழுது சிந்தின அதன் துளிகளைத் தேள்முதலிய விஷப்பூச்சிகளும் ஸர்ப்பங்களும் விஷச்செடி கொடிகளும் கடிக்குந் தன்மையுள்ள மற்றுமுள்ள ஜந்துக்களும் தம்ப்ராணன்களால் ஏற்றுக்கொண்டன. ஏழாவது அத்யாயம் முற்றிற்று.

{ ஸமுத்ரத்தில் தோன்றின ஸ்ரீ மஹாலக்ஷ்மி பகவானைவரித்தலும், அம்ருதத்தை அஸுரர்கள் பறித்தலும், பகவான் மோஹினியவதாரஞ் செய்தலும். }

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இவ்வாறு சிவபெருமான் விஷத்தைப் பக்ஷிக்கையில், இந்த்ரன் முதலிய ஸமஸ்த தேவதைகளும் பலி முதலிய ஸமஸ்த அஸுரர்களும் ஸந்தோஷம் அடைந்து வலிவுடன் ஸமுத்ரத்தைக் கடைந்தார்கள். பிறகு அந்த ஸமுத்திரனின்றும் காமதேனு உண்டாயிற்று. தயிர் பால் நெய் முதலியவற்றால் அக்னிஹோத்ரம் முதலிய வைதிக கர்மங்களுக்கு உபயோகப்படுவதாகிய அக்காமதேனுவை ப்ரஹ்மவாதிகளான ரிஷிகள் அங்கீகரித்தார்கள். தேவதைகள் வந்து ஹவிர்ப்பாகங்களைப் பெறுகிற யஜ்ஞாதி கர்மங்களுக்குவேண்டிய பால் தயிர் நெய் முதலிய பரிசுத்தமான ஹவிஸ்ஸுக்களுக்காக அவர்கள் அதை அபேக்ஷித்தார்கள். பிறகு சந்த்ரன்போல் வெளுத்த நிறமுடைய உச்சைஸ்ரவஸ்

ஸென்கிற குதிரை உண்டாயிற்று. அதைப்பலிசக்ரவர்த்தி விரும்பினான். இந்த்ரன் தனக்கு அதில்விருப்பம் உண்டாயினும் காமக்ரோதங்கள் செய்யலாகாதென்ற பகவானுடைய நியமனத்தை நினைந்து அவ்விருப்பத்தை வெளியிடாமலேயிருந்தான். அப்பால் ஐராவதமென்கிற சிறந்த யானையொன்று உண்டாயிற்று. அதுவும் சந்த்ரன் போல் வெளுத்திருந்தது. மற்றும், அக்கஜேந்த்ரம் சிகரங்கள் போன்ற நான்கு தந்தங்களால் ருத்ரனுடைய கைலாஸ பர்வதத்தின் சோபையைப் பறித்தது. மன்னவனே! அதன்பிறகு எட்டுத் திக்கஜங்களும் அப்ரமு முதலிய எட்டு யானைப்பேடுகளும் கௌஸ்துபமென்னும் ரத்னமும் உண்டாயின. அந்தக் கௌஸ்துப ரத்னம் பத்மராகம். ரத்னங்களில் சிறந்த அந்தக் கௌஸ்துபமணியைப் பகவான் தன் மார்புக்கு அலங்காரமாகக் கொள்ள விரும்பினான். பிறகு ஸ்வர்க்கலோகத்திற்கு அலங்காரமாகிய பாரிஜாதமென்னும் வ்ருக்ஷம் உண்டாயிற்று. மன்னவனே! நீ இப்பூமண்டலத்தில் விரும்புவோர்களின் விருப்பங்களையெல்லாம் நிறைவேற்றிக் கொடுப்பதுபோல, அந்தப் பாரிஜாதவ்ருக்ஷம் ஸமஸ்த ப்ராணிகளின் விருப்பங்களையும் ஸர்வகாலங்களிலும் நிறைவேற்றிக்கொடுக்குந்தன்மையுடையது. அப்பால் கழுத்தில் பொன்னலங்காரங்கள் பூண்டு அரையில் அழகான ஆடைகளை உடுத்தித் திகழ்கின்ற அப்ஸரஸ்த்ரீகள் உண்டானார்கள். அவர்கள் அழகிய நடைகளாலும் விலாஸங்கள் அமைந்த கண்ணோக்கங்களாலும் ஸ்வர்க்கவாஸிகளுக்கு மனக்களிப்பை விளைவிக்குந் தன்மையுள்ளவர்கள். பிறகு பகவானிடத்தில் மிக்கமனவூக்கமுடைய ஸ்ரீமஹாலக்ஷ்மி தன் தேஹகாந்தியால் மின்னல்போலத் திசைகளையெல்லாம் விளங்கச் செய்துகொண்டு மேற்கிளம்பினாள். தேவதைகள்

அஸுரர்கள் தானவர்கள் முதலிய அனைவரும் அவளு டைய அழகு காம்பீர்யம் வயது தேஹகாந்தி பெருமை முதலிய குணங்களால் மனம் பறியுண்டு அவளிடத்தில் மனவிருப்பங் கொண்டார்கள். இந்த்ரன் அந்த ஸ்ரீமஹா லக்ஷ்மி உட்காரும்பொருட்டு மிகவும் அற்புதமான பெ ரிய ஒரு ஸிம்ஹாஸனம் கொண்டு வந்து கொடுத்தான். கங்கை யமுனை முதலிய சிறப்புடைய நதிகள் மானிட உருவத்துடன் பொற்குடங்களில் ஜலங்கொண்டு வந்தன. பூமியும் உருவத்துடன் தோன்றி அபிஷேகத்திற்கு வே ண்டிய ஓஷதிகளையெல்லாம் கொண்டுவந்தாள். பசுக்கள் பஞ்சகவ்யங்களை ஈன்றன. வஸந்தருது உருவத்துடன் தோன்றிச் சித்திரை வைகாசி மாதங்களில் விளையும் புஷ்பங்களை அளித்தது. பிறகு ரிஷிகள் அபிஷேகத் திற்கு வேண்டிய ஏற்பாடுகளையெல்லாம் செய்தார்கள். கந்தர்வர்கள் மங்களங்களைப் பாடினார்கள். நட்டுவப்பெண் கள் ஆடல் பாடல்களை நடத்தினார்கள். மேகங்கள் உரு வத்துடன் வந்து ம்ருதங்கம் பணவம் முரஜம் ஆனகம் கோமுகம் சங்கம் வேணு வீணை முதலிய வாத்யங்களை முழக்கிப் பெருங்கோஷத்தை விளைத்தன. அப்பால் கை களில் தாமரை மலரேந்தின அந்த ஸ்ரீமஹா லக்ஷ்மியைத் திக்கஜங்கள் பூர்ண கலசங்களால் அபிஷேகஞ்செய்தன. அப்பொழுது அந்தணர்கள் அபிஷேகஸமயத்தில் படிக்க வேண்டிய வேதமந்த்ரங்களைப் படித்தார்கள். பிறகு ஸமுத்ரராஜன் பொன்னிறமுள்ள பட்டுவஸ்த்ரங்களையும், வருணன் மதுபானத்தினால் மதித்த வண்டுகள் அமைந்த வைஜயந்தியென்னும் பூமாலையையும், விஸ்வகர்மாவென் னும் ப்ரஜாபதி பற்பல ஆபரணங்களையும், ஸரஸ்வதி முத்துமாலையையும், ப்ரஹ்மதேவன் தாமரை மலரையும், நாகங்கள் குண்டலங்களையும், அந்த ஸ்ரீமஹாலக்ஷ்மிக்

குக் கொடுத்தார்கள். அனந்தரம் மங்களமான அலங் காரங்கள் செய்யப்பெற்ற ஸ்ரீ மஹாலக்ஷ்மி வண்டுகள் ஒலிக்கப்பெற்ற கருநெய்தல் மாலையைக் கையில் ஏந்திக் கொண்டு அழகிய கபோலங்களும் குண்டலங்களும் வெட் கத்துடன் கூடின புன்னகையும் அமைந்து மிகவும் அழகிய முகத்துடன் அங்கு உலாவினாள். குங்குமங் கலந்த சந்த னம் பூசப்பெற்று ஒன்றோடொன்று ஏற்றக்குறைவின்றி ஒத்திருக்கின்ற இணைக்கொங்கைகளும் சிறுத்தழகிய இடையும் அமைந்த அந்த ஸ்ரீமஹாலக்ஷ்மி இனிதாக ஒலிக்கின்ற சிலம்பு தண்டைகளுடன் இங்கு மங்கும் உலா விக்கொண்டு பொற்கொடிபோல விளங்கினாள். பிறகு என்றும் மாறாத கல்யாண குணங்களுடையவனும் கெட்ட குணங்கள் எவையும் தீண்டப்பெறாதவனும் அழிவற்ற வனுமாகிய தனக்குரிய புருஷனை அங்குள்ள கந்தர்வர் யக்ஷர் தேவர் ஸித்தர் சாரணர் இவர்களிலும் மற்ற ஸ்வர்க்கவாஸி முதலியவர்களிலும் தேடித்திரிந்தும் தன க்குரியவன் எவனும் தோன்றப்பெறாதிருந்தாள். ஒவ்வொ ருவனிடத்திலும் ஒவ்வொரு தோஷம் புலப்படுகையால் அவர்களில் எவனையும் தனக்குரியவனாக அவள் நினைக்க வில்லை. அம்மஹாலக்ஷ்மி தன் மனத்திற்குள் 'ருத்ரன் துர்வாஸர் முதலிய சிலர் பெருந்தவமுடையவர்களாயி ருக்கிறார்கள். ஆயினும் அவர்கள்கோபத்தை வெல்லவல் லமையற்றிருக்கிறார்கள். இது நிச்சயம். ப்ருஹஸ்பதி சுக் ரன்முதலிய சிலர் பேரறிஞராயிருக்கிறார்கள். ஆயினும் அவர்கள் ப்ரயோஜனங்களை விரும்புகிறார்களேயன்றி அவற்றில் பற்றைத் துறக்கவில்லை. ப்ரயோஜனங்களில் பற்றற்ற அறிவே அறிவாமன்றி மற்ற அறிவு அறிவா காது. ப்ரஹ்மதேவன் முதலிய சிலர் பெருமையுடைய வர்களாயிருக்கிறார்கள். ஆயினும் அவர்கள் காமத்தை

வெல்லமுடியாமல் தம்புதல்வியைப் புணர்வதுமுதலிய அக்ருத்யங்களைச் செய்கிறார்கள். இந்த்ரன் முதலிய சிலர் ஐஶ்வர்ய முடையவர்களாயிருக்கிறார்கள். ஆயினும் அவர்களுடைய ஐஶ்வர்யம் பிறனுடைய ஸங்கல்பத்தினால் விளைந்ததேயன்றி இயற்கையில் ஏற்பட்டதன்று. அப்படிப்பட்டவர்களை ஐஶ்வர்யமுடையவர்களாக எப்படி நினைக்கலாம்? யமன்முதலிய சிலரிடத்தில் தர்மம் இருக்கின்றது. ஆயினும் அவர்களுக்கு ப்ராணிகளிடத்தில் நட்பு கிடையாது. சிபிசக்ரவர்த்தி முதலிய சிலரிடத்தில் தானஞ்செய்யுங் குணம் இருக்கின்றது. ஆயினும் அது மோக்ஷத்தை விளைக்கும்படியான நிலைமையில் இல்லை. எத்தகைய செயல்களும் ப்ரயோஜனத்தை விரும்பாமல் பகவானிடத்தில் அர்ப்பணம் செய்யப்பெறுமாயின் அப்பொழுதுதான் அவை மோக்ஷத்தை விளைக்கவல்லவையாம். பகவானுடைய முகமலர்ச்சியைத் தவிர மற்ற ப்ரயோஜனங்களை விரும்பிச்செய்யுஞ் செயல்களெல்லாம் மோக்ஷத்தை விளைக்கவல்லவையாகமாட்டா. கார்த்தவீர்யார்ஜுனன் முதலிய சிலரிடத்தில் வீர்யம் இருக்கின்றது. ஆயினும் அது பகவானுடைய வீர்யவேகத்தினால் பரிஹரிக்கப்பட்டது. பகவானையொழிந்த மற்றவர் அனைவரும் ஸத்வம் முதலிய ப்ராக்ருதகுணங்கள் தீண்டப்பெற்றவர்களேயன்றி, அவை தீண்டப்பெறாதவர்கள் இல்லை. மார்க்கண்டேயன்முதலிய சிலவரிடத்தில் நீண்ட வாழ்நாள் இருக்கின்றது. ஆயினும் அவர்களிடத்தில் நன்னடக்கை கிடையாது. அவர்கள் இந்த்ரியங்களின் த்ருப்திக்காக ப்ரவ்ருத்தி தர்மங்களில் கால்தாழ்ந்திருக்கிறார்கள். சிலரிடத்தில் நன்னடக்கையும் இருக்கின்றது. ஆயினும் அவர்கள் என்றும் அழியாத வாழ்நாளுடையவரென்பது நிச்சயிக்கமுடியாது. வேறு சிலரிடத்தில்

நன்னடக்கையும் நீண்ட வாழ்நாளும் அமைந்திருக்கிறது. ஆயினும் அவர்களுடைய வேஷம் அமங்களமாயிருக்கின்றது. எவன் ஸமஸ்த கல்யாண குணங்களுக்கும் விளை நிலமாகி மிகவும் மங்களமூர்த்தியாயிருக்கிறானோ, அந்த கையை பகவான் இயற்கையில் அவாப்தஸமஸ்தகாமனாகை யால் என்னை விரும்பவில்லை' என்று நன்றாகச்சிந்தித்து, அப்பால் அம்மஹாலக்ஷ்மி, பகவான் தன்னை மேல்விழுந்து விரும்பாதிருப்பினும், பிறர்க்கு நேரக்கூடாதவை களும் ஸ்வபாவஸித்தங்களுமான மங்களகுணங்களெல்லாம் அமைந்திருக்கையால் அனைவரிலும் சிறப்புற்றுப் போக மோக்ஷங்களைக் கொடுக்கவல்லவனாகையால் முகுந்தனென்னும் பெயர்பெற்று ஸத்வம்முதலிய ப்ராக்ருத குணங்கள் தீண்டப்பெறாதவனும் தான் மேல்விழுந்து விரும்பிப் பெறத் தகுந்தவனுமாகிய அப்பரமபுருஷனையே கணவனாக வரித்தாள். அந்த ஸ்ரீமஹாலக்ஷ்மி வெட்கம் வழியப்பெற்ற புன்னகையினால் மலர்கின்ற கண்களுடைய வளாகி அந்தப் பகவானுடைய மார்பைத் தனக்கு வாஸஸ்தானமாக விரும்பித் தேன்களைப் பருகி மதித்த வண்டுகள் இனமினமாக இரைக்கப் பெற்று அழகாயிருக்கின்ற புதிய கருநெய்தல்மாலையை அப்பகவானுடைய கழுத்தில் போட்டு அவனுடைய அனுக்ரஹத்தை எதிர்பார்த்துக்கொண்டு அவனருகில் பேசாது நின்றிருந்தாள். மூன்று லோகங்களுக்கும் மாதாவாயிருப்பவளும் ஸமஸ்த ஐஸ்வர்யங்களுக்கும் ஆதாரமாயிருப்பவளுமாகிய அந்த ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு மூன்று லோகங்களுக்கும் தந்தையாகிய பகவான் தன்மார்பை நிலைநின்ற மேலான வாஸஸ்தானமாகக்கொடுத்தான். அவளும் அவனுடைய மார்பில் இடம்பெற்று வீற்றிருந்து கருணையமைந்த கண்ணோக்கத்தினால் தன் ப்ரஜைகளான மூன்று லோகங்களையும்

அவற்றைப் பாதுகாக்கும் ப்ரபுக்களையும் வளரச்செய்தாள். அப்பொழுது தேவதைகளைப் பின்தொடர்ந்த கந்தர்வர்களும் ஸித்தர்களும் சாரணர்களும் மற்றுமுள்ள தேவஜாதியர்களும் சங்கம் ம்ருதங்கம் முதலியவாத்யங்களை முழக்கி ஆடல் பாடல்களைச் செய்து பெருங்கோஷத்தை விளைத்தார்கள். ப்ரஹ்மதேவன் ருத்ரன் அங்கிரஸ்ஸு முதலிய ஸ்ருஷ்டிகர்த்தாக்கள் அனைவரும் அப்பரமபுருஷனுடைய குணங்களை வெளியிடுகின்றவைகளும் பொய்யாகாதவைகளுமான மந்த்ரங்களால் அவனை ஸ்தோத்ரம் செய்தார்கள். தேவதைகளும் ப்ரஜாபதிகளும் மற்ற ப்ரஜைகளும் அந்த ஸ்ரீமஹாலக்ஷ்மியால் கடாக்ஷிக்கப்பெற்று நன்னடக்கை முதலிய குணங்கள் அமைந்து மிகுந்த ஆநந்தம் அடைந்தார்கள். அப்பொழுது தைத்யர்களையும் தானவர்களையும் அவள் கடாக்ஷிக்கவில்லை. ஆகையால் அவர்கள் அனைவரும் பல மற்று உத்ஸாஹமின்றி வெட்கம் தொலைந்து மதிமயங்குந் தன்மையர்களானார்கள். இங்ஙனம் ஸ்ரீமஹாலக்ஷ்மி தோன்றின பின்பு ஸுரைக்கு அபிமானிதேவதை கமலம்போன்ற கண்களையுடைய ஓர் கன்னிகையாய்த் தோற்றிற்று. அதை அஸுரர்கள் பகவானுடைய அனுமதியின் மேல் பரிக்ரஹித்தார்கள். மஹாராஜனே! அம்ருதத்தை விரும்புகிற தேவாஸுரர்கள் மீளவும் ஸமுத்ரத்தைக் கடைகையில், அதினின்று மிகவும் அற்புதமான ஒரு புருஷன் உண்டானான். நீண்டு பருத்த புஜதண்டங்களும் சங்கம்போல் மூன்று ரேகைகள் அமைந்த கண்டமும் சிவந்த கண்களும் அகன்றமார்பும் அழகிய ரத்னகுண்டலமும் அமைந்து மேகம்போல் கறுத்து யௌவனவயதுடையவனாகிச் சிறந்த பூமாலை அணிந்து ஸமஸ்த ஆபரணங்களும் பூண்டு பொன்னிறமான ஆடையுடுத்துச்

தலைமயிர்கள் கறுத்து சுருசுருத்துச் சுருண்டு அழகாயிருக்கப்பெற்றுப் புன்னகையுடன் ப்ரகாசித்தான். அவன் ஸிம்ஹம்போலக் கம்பீரமாக அடியிட்டு நடக்குந்தன்மையுடையவன். மற்றும், அவன் கைவளை யணிந்து கையில் அம்ருதம் நிறைந்த கலசத்தை ஏந்திக்கொண்டிருந்தான். அவன் ஒன்றான பகவானுடைய அம்சத்தினால் பிறந்தவன். தன்வந்தரியென்று பெயர் பெற்றவன். ஆயுர்வேதமென்கிற வைத்யசாஸ்த்ரத்தை உள்ளபடி ஆராய்ந்தறிந்தவன். யாகங்களில் ஹவிர்ப்பாகமுடையவன். அஸுரர்கள் அங்ஙனம் தன்வந்தரிபுருஷன் உண்டானதையும் அவன் கையில் அம்ருதம் நிறைந்த கலசம் கொண்டு வந்ததையும் கண்டு ஸமுத்ரங் கடைந்ததனால் உண்டான வஸ்துக்களையெல்லாம் தாமே பெற விரும்பி விரைந்து பலாத்காரமாக அவன் கையினின்றும் அந்த அம்ருத கலசத்தைப் பிடுங்கிக்கொண்டார்கள். தேவதைகள் அதைக் கண்டு வருந்திப் பகவானைச் சரணம் அடைந்தார்கள். தன் ப்ருத்யர்களுடைய மனவிருப்பங்களை நிறைவேற்றிக் கொடுக்குந் திறமையுடைய பகவான் இவ்வாறு தேவதைகள் வருந்துவதைக் கண்டு 'நீங்கள் வருந்தவேண்டாம். உங்கள் ப்ரயோஜனத்தை நான் என்மாயையினால் ஸாதித்துக் கொடுக்கிறேன்' என்று தேவதைகளுக்கு ஸமாதானம் சொல்லி அவ்விடத்திலேயே அந்தர்த்தானம் அடைந்தான். அம்ருதத்தின் நிமித்தமாக மனவிருப்பமுற்ற அஸுரர்களுக்குள் ஒருவர்மேலொருவர்க்குக் கலஹம் உண்டாயிற்று. மன்னவனே! அவ்வஸுரர்கள் 'நான் முன்னே நான் முன்னே' என்றும் 'நீ கூடாது நீ கூடாது' என்றும் சண்டை செய்தார்கள். அந்த அஸுரர்களில் பலத்தில் மிகுந்த சிலர் அம்ருத கலசத்தைப் பலாத்காரமாகப் பிடுங்கிக் கொண்டுபோகையில் அவர்க

ளிடத்தினின்றும் அதை மீட்கமுடியாத துர்ப்பலர்களான சில அஸுரர்கள் அந்த ப்ரபலர்களை நோக்கி 'இந்த அம்ருதத்தில் தேவதைகளுக்கும் பாகம் கொடுக்கவேண்டும். அவர்களும் நம்மைப்போல வருந்திக் கடலைக் கடைந்தார்களல்லவா? ஆகையால், ஸத்ரயாகத்தில் எல்லோர்க்கும் யாகத்தின் பலன் ஒத்திருப்பதுபோல. இந்த அம்ருதத்தில் தேவதைகளுக்கும் பாகம் உள்ளதுதான். இது பழையதர்மமேயன்றி நாங்கள் புதிதாக ஏற்படுத்திச் சொல்லுவதன்று' என்று பெருமையினால் அடிக்கடி தடுத்தார்கள். இப்படி விவாதமாயிருக்கும் ஸமயத்தில் எல்லா உபாயங்களையும் அறிந்த பகவான் தனனுடைய ஸாமர்த்யத்தினால் இத்தகையதென்று நிரூபிக்கமுடியாமல் மிகவும் அற்புதமான ஒரு பெண்ணுருவம் தரித்தான். அப்பெண் மணியின் தேஹம் அழகிய கருநெய்தல் போல் கறுத்து ஸர்வாங்கஸுந்தரமாய் ஒன்றோடொன்றுஒத்திருக்கின்ற காதுகளில் குண்டலங்களை அணிந்து அழகிய கபோலங்களும் உயர்ந்த மூக்கும் அமைந்த முகத்தினால் மிகவும் ரமணீயமாயிருந்தது. அவளுக்கு யௌவனவயது அப்பொழுது தான் புதிதாக ஆரம்பித்திருந்தது. அதனால் அவளுடைய கொங்கைகள் திரண்டுருண்டு இணைந்து மிகவும் அழகாயிருந்தன. அக்கொங்கைகளின் பாரம் பொறுக்கமுடியாமல் இடை இளைத்திருந்தது. முகத்தின் வாஸனையில் ஆசையால் மேல் விழுந்து வருகின்ற வண்டுகளின் ஜங்காரத்தினால் அவளுடைய கண்கள் சஞ்சலமாயிருந்தன. மலர்ந்த மல்லிகைப்பூமாலையைத் தலைமயிர்ச் சொருக்கில் சூடி அழகிய கழுத்தில் கண்டாபரணங்களையும், அழகிய புஜங்களில் தோள்வளைகளையும் அணிந்திருந்தாள். அழுக்கின்றி நிர்மலமான ஆடை யுடுத்து த்வீபம் போன்ற நிதம்பங்களின் மேல் விளங்குகின்ற அரை

காண்மாலையால் மிகவும் ப்ரகாசித்துக்கொண்டிருந்தாள். விலாஸத்துடன் அழகாய் நடையிடுகின்ற அப்பெண்மணியின் பாதங்களில் சிலம்புதண்டைகள் ஒலித்துக்கொண்டிருந்தன. அவள் வெட்கம் வழிந்த புன்னகையும் அசைகின்ற புருவ நெரிப்பும் அமைந்த கண்ணோக்கங்களால் அஸுரஸ்ரேஷ்டர்களின் மனத்தில் காமவிகாரத்தை அடிக்கடி விளைத்துக் கொண்டிருந்தாள். எட்டாவது அத்யாயம் முற்றிற்று.

{ மோஹினிரூபியான பகவான் அஸுரர்களை மதிமயக்கி அம்ருத கலசத்தை வாங்கித் தேவதைகளுக்கு அம்ருதங் கொடுத்தல். }

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஒருவர் மேல் ஒருவர்க்குள்ள ஸ்நேஹத்தைத் துறந்து ஒருவரையொருவர் தடுத்துப் பழித்து அம்ருதகலசத்தைத் திருட்டுத்தனத்தினால் பறித்துக் கொண்ட அஸுரர்கள் அங்ஙனம் அழகமைந்த பெண்மணி வருவதைக் கண்டார்கள். அவ்வஸுரர்கள் அவளைக் கண்டதும் 'ஆ! இதென்ன அழகு? ஆ! இதென்ன ஒளி? ஆ! இவளுடைய யௌவன வயது புதிதாயிருக்கின்றது' என்று மொழிந்து அப்பெண்மணியை எதிர்கொண்டு சென்று காமவிகாரம் விளையப்பெற்று அவளை இங்ஙனம் வினவினார்கள்.

அஸுரர்கள் சொல்லுகிறார்கள்:—தாமரை யிதழ் போன்ற கண்களுடையவளே! நீ யார்? எங்கிருந்து வந்தனை? நீ என்ன செய்ய விரும்புகின்றனை? நீ யாருடையவள்? அழகிய துடைகளுடையவளே! இதைச் சொல்லுவாயாக. நீ எங்கள் மனத்தைக் கலக்குகின்றனை. தேவதைகள் அஸுரர் ஸித்தர் கந்தர்வர் சாரணர் இவர்களில் எவராலும் நீ தீண்டப்படாதவளென்று எங்களுக்

குத் தோன்றுகின்றது. யோகீச்வரர்களுங்கூட உன்னைத் தீண்டியிருக்கமாட்டார்கள். இனி, மனுஷ்யர்கள் உன்னைத் தீண்டுவதற்கு இடமே யில்லை. ஆகையால் நீ ஒருவர்க்கும் வாழ்க்கைப்பட்டவளல்லள். அழகிய புருவமுடையவளே! ஈச்வரன் எங்களிடம் மனஇரக்கமுற்று எங்களுடைய ஸமஸ்த இந்த்ரியங்களையும் மனத்தையும் களிக்கச் செய்ய விரும்பி உன்னை அனுப்பினனோ? ஆம். இதுவே நிச்சயம். புகழத்தகுந்த மேன்மையுடையவளே! அம்ருதமாகிற ஒரு வஸ்துவைக் குறித்துப் பொறாமையினால் ஒருவர் மேல் ஒருவர் த்வேஷத்தை ஏற்றுக்கொண்டிருக்கிற ஜ்ஞாதிகளான எங்களுக்கு நீ ஸந்தியை விளைப்பாயாக. அழகிய இடையுடையவளே! எங்களுக்கு இந்த அம்ருதத்தைப் பங்கிட்டுக்கொடுப்பாயாக. நாங்கள் காச்யபருடைய பிள்ளைகள்; உடன் தோன்றினவர்கள். இப்பொழுது நாங்கள் சண்டை செய்யும்பொருட்டுப் பௌருஷத்தை ஏற்றுக்கொண்டிருக்கிறோம். எங்களுக்குச் சண்டை நேராதிருக்குமாறு ந்யாயத்தின்படி இந்த அம்ருதத்தைப் பங்கிட்டுக்கொடுப்பாயாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்.—மாயையினால் மடந்தையின் உருவம் தரித்தபகவான் அஸுரர்களால் இங்ஙனம் தூண்டப்பட்டுச் சிரித்து அழகிய கடைக்கண்களால் அவர்களை நோக்கிக்கொண்டே இங்ஙனம் மொழிந்தான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—காச்யபருடைய புதல்வர்களே! பரமபுருஷனை விரும்புந்தன்மையுடைய என்னை ஏன் நீங்கள் தொடர்கின்றீர்கள்? பண்டிதனாயிருப்பவன் ஒருகாலும் காமவிகாரத்தினால் மதிமயங்கிப் பரபுருஷனை விரும்புகிற மடந்தையர்களிடத்தில் விச்வாஸம் செய்யமாட்டானல்லவா? அஸுரர்களே! மனம் போனவழியே திரியுந்தன்மையுள்ள பெண்களோடும் செந்நாய்க

ளோடும் ஸ்நேஹம் செய்யலாகாது. அவர்களுடைய ஸ்நேஹம் நிலேநின்றிருப்பதன்றென்று சொல்லுகிறார்கள். அவர்கள் புதிது புதிதாகத் தேடுவார்கள்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்.—இங்ஙனம் அம்மோஹினியின் பரிஹாஸவாக்யங்களால் அஸுரர்கள் மனம் கலங்கப்பெற்று மனக்கருத்தினால் கம்பீரமாகச் சிரித்து அம்ருத பாத்ரத்தையும் அவள் கையில் கொடுத்தார்கள். அப்பால் பெண்ணுருவம் தரித்த பகவான் அம்ருத பாத்ரத்தை வாங்கிக்கொண்டு புன்னகையின் சோபையினால் திகழ்கின்ற அழகிய உரையுடன், 'நான் நன்மை செய்யினும் தீமை செய்யினும் அது உங்களுக்கு ஸம்மதமாயிருக்குமாயின், இந்த அம்ருதத்தை உங்களுக்குப் பங்கிட்டுக்கொடுக்கிறேன்' என்றான். அஸுரஸ்ரேஷ்டர்கள் அம்மோஹினி மொழிந்த மொழியைக் கேட்டு அதன் கருத்தை யறியாமல் 'அப்படியே ஆகட்டும்' என்று ஒப்புக்கொண்டார்கள். பிறகு அந்த மோஹினியின் ஆஜ்ஞையினால் தேவதைகளும் அஸுரர்களும் உபவாஸம் இருந்து ஸ்நானம் செய்து ஹவிஸ்ஸினால் அக்னியில் ஹோமஞ்செய்து ப்ராஹ்மணர்களுக்கும் மற்றப்ராணிகளுக்கும் பசு முதலியவைகளேக் கொடுத்து ப்ராஹ்மணர்களால்ஸ்வஸ்திவாசனஞ்செய்யப்பெற்று ப்ரீதியுடன் புதிய வஸ்த்ரங்களே உடுத்தி நன்றாக அலங்கரித்துக்கொண்டு எல்லோரும் கிழக்கு நுனியாகப் பரப்பின தர்ப்பங்களின் மேல் உட்கார்ந்தார்கள். அகில் முதலிய தூபங்களேயிட்டு நெய்விளக்குகளே யேற்றி முழுவதும் அலங்காரம் செய்யப்பெற்ற ஸபையில் தேவர்களும் அஸுரர்களும் கிழக்கு நுனியான தர்ப்பங்களில் உட்கார்ந்திருக்கையில், மோஹினிகையில் அம்ருதகலசத்தை ஏந்திக்கொண்டு ஸபைக்குள் நுழைந்தாள். மன்னவனே! அடிபெருத்து நுனி




1754. பகவான் மோஹினியவதாரஞ் செய்து தேவதைகளுக்கு அம்ருதம் பங்கிட்டுக் கொடுத்தல்

சிறுத்து அழகாயிருக்கின்ற துடைகளுடையவளும் அழகிய வெண்பட்டு வஸ்த்ரத்தினால் திகழுகின்ற அகன்ற இடையின் பின்புறமுடையவளும் மதித்த யானைப்பேடு போல மெதுவாய் நடக்குந்தன்மையளும் யௌவனமதத்தினால் கண்கள் தழதழக்கப்பெற்றவளும் ஸ்வர்ணமயமான சிலம்பு தண்டைகளின் த்வனியினால் சப்தம் செய்பவளும் குடம்போன்ற கொங்கைகள் அமைந்தவளுமாகிய அந்தமோஹினி பார்க்கப் பதினாயிரங் கண்கள்வேண்டும்படி மிகவும் அழகாயிருந்தாள். ஸ்ரீமஹாலக்ஷ்மியைப் போன்று ஸ்வர்ணமயமான குண்டலங்கள் அணிந்துகாது மூக்கு கபோலம் முகம் இவையெல்லாம் அழகாயிருக்கப் பெற்று ஸ்தனத்தின்மேல் போர்த்த பட்டுவஸ்த்ரம் காற்றில் சிறிது நழுவி மிகவும் அழகாயிருப்பவளும் பரதேவதையுமாகிய அந்த மோஹினியைக் கண்டு தேவாஸுரர்கள் அனைவரும் அவளுடைய புன்னகையமைந்த கண்ணோக்கத்தினால் அடியுண்டுநன்கு மோஹித்தார்கள். தன்னைப் பற்றினவர்களைக் கைவிடாது பாதுகாக்குந்தன்மையுள்ள மோஹினிரூபியான பகவான் இயற்கையில் கொடியர்களான அஸுரர்களுக்கு அம்ருதங் கொடுப்பது ஸர்ப்பங்களுக்குப் பால் வார்ப்பதுபோல அந்யாயமென்று நினைத்து அந்த அம்ருதத்தை அஸுரர்களுக்குப் பங்கிட்டுக் கொடுக்கவில்லை. அப்பகவான், தேவதைகள் அஸுரர்கள் ஆகிய இருதரத்தவர்களையும் தனித்தனி வரிசையாகப் பிரிந்திருக்கும்படிசெய்து அவர்களைத்தங்கள் தங்கள் வரிசைகளில் உட்காரவைத்தான். பெண்ணுருவங்கொண்ட பகவான் கலசத்தைக் கையில் எடுத்துக்கொண்டு அருகில் செல்வது வெகுமதிப்பது இஷ்டமான உரைகளைப் பேசுவது முதலியவற்றால் அஸுரர்களை வஞ்சித்துக் கிழத்தனம் மரணம் இவற்றைப் போக்குந் திறமையுள்ள

அம்ருதத்தைத் தூரத்திலிருக்கிற தேவதைகளுக்கு மாத்ரமே கொடுத்துப் பானம்செய்வித்தான். மன்னவனே! அஸுரர்கள் அம்ருதம் கிடைக்கப் பெறாதவர்களாயினும் அம்மோஹினியிடம் தாங்கள் முதலில் செய்துகொண்ட ஏற்பாட்டைப் பாராட்டியும் அவளிடத்தில் தங்களுக்குள்ள ஸ்நேஹத்தைப் பற்றியும் ஸ்த்ரீயோடு விவாதப்படுவது இகழ்வென்பதைப் பற்றியும் பேசாதிருந்தார்கள். அந்த மோஹினியிடத்தில் மிகுந்த ஸ்நேஹமுடைய அவ்வஸுரர்களுக்கு அவளுடைய ஸ்நேஹத்திற்கு என்ன கெடுதி நேருமோவென்னும் பயத்தினாலும் அவள் தங்களிடத்தில் வைத்திருக்கிற வெகுமதியினால் கட்டுண்டிருப்பதனாலும் அவளுக்கு அனிஷ்டமான பேச்சை எதையும் சொல்லாமல் வெறுமனே இருந்தார்கள். அப்பொழுது ராஹு தேவதைகளோடொத்த வேஷம் பூண்டு மறைந்து தேவதைகளின் வரிசையில் நுழைந்து அம்ருதபானம் செய்தான். சந்த்ரஸூர்யர்கள் அதைக் கண்டு அவனை வெளியிட்டார்கள். பகவான் கத்தி போன்ற நுனியுடைய சக்ராயுதத்தினால் அம்ருதபானம் செய்கிற அந்த ராஹுவின் தலையை அறுத்தான். அவனுடைய கபந்தம் அம்ருதம் தீண்டப்பெறாமையால் கீழே விழுந்தது. தலை அம்ருதம் பட்டமையால் [1] அமாத்வத்தை அடைந்தது. ப்ரஹ்மதேவன் அவனை ஸூர்ய சந்த்ராதிகளைப் போலச் சுபாசுபங்களை அறிவிக்கும் க்ரஹமாயிருக்கும்படி ஏற்படுத்தினான். அங்ஙனம் க்ரஹங்களில் ஒருவனாகிய அந்த ராஹு வைரத்தை மறக்காமல் மனத்தில் வைத்துக்கொண்டு பர்வகாலங்களில் சந்த்ரஸூர்யர்களை விழுங்கவேண்டுமென்று எதிர்த்தோடுகிறான். தேவதைகள் அம்ருதபானம் செய்தா

1. அமாத்வம்-மரணமற்றவர்களான தேவர்களின் தன்மை.

கையில் உலகங்களைப் பாதுகாக்கும் தன்மையனும் ஸமர்த்தனுமாகிய பகவான் அஸுர ஶ்ரேஷ்டர்கள் பார்த்துக் கொண்டேயிருக்கையில்முன்போலத் தன்னுடைய புருஷவுருவத்தை ஏற்றுக்கொண்டான். தேவாஸுரர்கள் இருவகையரும் தேசம் காலம் காரணம் ப்ரயோஜனம் செயல் புத்தி இவையெல்லாம் ஒத்திருக்கப்பெற்றவர்களாயினும் பலத்தில் மாறுபாட்டை அடைந்தார்கள். அவர்களில் தேவதைகள் பகவானுடைய பாதாரவிந்தங்களின் பராகத்தைப் பற்றினவர்களாகையால் அம்ருதமாகிற பலத்தை ஸுகமாகப் பெற்றார்கள். அஸுரர்கள் அந்தப் பகவானுடைய பாதாரவிந்தங்களின் பராகத்தைப் பற்றாமையால் வருந்தியும் அம்ருதத்தை இழந்தார்கள். ப்ராணிகள், தேஹம் பிள்ளை பெண்டிர் முதலியவர்களுக்காக ப்ராணன் தனம் செயல் மனம் வாக்கு இவைகளால் செய்வதெல்லாம் அஹங்கார மமகாரங்களாலும் எல்லாம் பரமாத்மஸ்வரூபங்களேயென்னும் புத்தியில்லாமையாலும் கிளைக்கு ஜலம் கொட்டுவது போலப் பயனற்றவைகளே. ஸகலஜகத்காரணனும் ஸர்வாந்தராத்மாவும் ஷாட்குண்ய பூர்ணனுமாகிய பரமபுருஷனுடைய ப்ரீதியை உத்தேசித்துச் செய்யும் செயல்களெல்லாம் பரமாத்மாவைத்தொடர்ந்த புத்தியமைந்திருக்குமாயின் மரத்தின் அடியில் ஜலம் கொட்டுவதுபோலப் பெரும் பயனைப் பெறும். ஒன்பதாவது அத்யாயம் முற்றிற்று.

அஸுரர்கள் த்வேஷத்தினால் தேவதைகளோடு யுத்தஞ் செய்கையும், தேவதைகள் அஸுரமாயைகளால் வருந்துவதும், பகவான் அவ்விடம் வந்து ஆவிர்ப்பவித்தலும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மன்னவனே! அஸுரர்கள் இங்ஙனம் ஸமுத்ரங் கடையுங்கார்யத்தில் முயற்சி

ஏற்றுக்கொண்டவர்களாயினும் ஸர்வாந்தராத்மாவான பரமபுருஷனிடத்தில் மனப்பற்றின்றிக் கொழுத்திருந்தார்களாகையால் அம்ருதத்தை அடையவில்லை. ராஜனே! பகவான் இவ்வாறு அம்ருதத்தை உண்டாக்கித் தன் பக்தர்களான தேவதைகளைப் பானம் செய்வித்து ஸமஸ்தபூதங்களும் பார்த்துக்கொண்டிருக்கையில் கருடவாஹனத்தின்மேல் ஏறிக்கொண்டு போனான். அங்ஙனம் அம்ருதத்தை இழந்த அஸுரர்கள் தங்கள் சத்ருக்களான தேவதைகளுக்குப் பெரிய பலஸித்தி உண்டானதைப் பொறுக்கமுடியாமல் ஆயுதங்களை ஏந்திக்கொண்டு தேவதைகளை எதிர்த்தோடினார்கள். அப்பால் தேவக்கூட்டத்திலுள்ளவர் அனைவரும் அம்ருதபானத்தினால் வலித்து மேன்மையுடன் வளர்ந்திருக்கையாலும் ஸ்ரீமந்நாராயணனுடைய பாதாரவிந்தங்களைப் பணிகையாகிற பலத்தினாலும் உத்ஸாஹமுற்று ஆயுதங்களை ஏந்திக்கொண்டு அஸுரர்களை எதிர்த்துச் சண்டை செய்தார்கள். மன்னவனே! அந்த க்ஷீரஸமுத்ரத்தின் கரையில் தேவதைகளுக்கும் அஸுரர்களுக்கும் மிகப் பயங்கரமான ஸங்குல யுத்தம் நடந்தது. அது தேவாஸுரயுத்தமென்று பேர்பெற்றது. அது காண்போர்களுக்கு மயிர்க்கூச்சலை விளைத்தது. அப்பொழுது ஒருவர்க்கொருவர் சத்ருக்களான தேவாஸுரர்கள் பெருங் கோபாவேசமுற்று யுத்தத்தில் ஒருவர்மேல் ஒருவர் விழுந்து பாணங்களாலும் பலவகை ஆயுதங்களாலும் ஒருவரையொருவர் அடித்தார்கள். சங்கு ம்ருதங்கம் துந்துபி டமரு முதலிய வாத்யங்களின் த்வனியும் யானைகளின் பிளிறல்களும் குதிரைகளின் கனைப்புக்களும் காலாட்களின் கர்ஜனையும் சேர்ந்து பெருங் கோஷம் உண்டாயிற்று. அந்தத் தேவாஸுரயுத்தத்தில் தேராளி

கள் தேராளிகளோடும், காலாட்கள் காலாட்களோடும், குதிரைகள் குதிரைகளோடும், யானைகள் யானைகளோடும் கலந்து சண்டை செய்தார்கள். அந்தத் தேவாஸுரவீரர்களில் சிலர் ஒட்டைகள்மேலும், சிலர் யானைகள்மேலும், சிலர் கழுதைகள்மேலும், சிலர் வெளுத்தமுகமுடைய கரடிகள்மேலும், சிலர் புலிகள்மேலும், சிலர் ஸிம்ஹங்கள்மேலும், சிலர் கழுக்கள்மேலும், சிலர் கங்கபக்ஷிகள்மேலும், சிலர் செந்நாய்கள்மேலும், சிலர் பருந்துகள்மேலும், சிலர் பாஸபக்ஷிகள்மேலும், சிலர் திமிங்கிலமென்கிற மத்ஸ்யங்கள்மேலும், சிலர் சரப ம்ருகங்கள்மேலும், சிலர் கடாக்கள்மேலும், சிலர் கட்க ம்ருகங்கள்மேலும், சிலர் பசுக்கள்மேலும், சிலர் எருதுகள்மேலும், சிலர் கவயம்ருகங்கள்மேலும், சிலர் அருண ம்ருகங்கள்மேலும், சிலர் நரிகள்மேலும், சிலர் பெருச்சாளிகள்மேலும், சிலர் ஓணான்கள்மேலும், சிலர் நாய்கள்மேலும், சிலர் மனுஷ்யர்கள்மேலும், சிலர் ஆடுகள்மேலும், சிலர் க்ருஷ்ணஸார ம்ருகங்கள்மேலும், சிலர் ஹம்ஸங்கள்மேலும், சிலர் பன்றிகள்மேலும், மற்றும் பலர் ஜலம் பூமி ஆகாயம் இவற்றில் வஸிப்பவைகளும் விகாரமான உருவமுடையவைகளுமான பலவகை ஜந்துக்கள்மேலும் ஏறிக்கொண்டு சத்ருக்களை எதிர்த்தார்கள். ராஜனே! தேவதைகள் அஸுரஸைன்யத்திலும் அஸுரர்கள் தேவஸைன்யத்திலும் முன்னே முன்னே நுழைந்து யுத்தம் செய்தார்கள். அந்தத் தேவாஸுரர்களுடைய இரண்டு ஸைன்யங்களும் வெளுத்த த்வஜபடங்களாலும் நிர்மலங்களும் விலையுயர்ந்தவைகளும் வஜ்ரமணிகள் இழைத்த காம்புடையவைகளுமான குடைகளாலும் அத்தகைய விசிறிகளாலும் காற்றில் அசைகின்ற மயில்தோகைச் சாமரங்களாலும் அந்த

தகைய மேலுத்தரீயங்களாலும் தலைப்பாகைகளாலும் சப்திக்கின்ற கவசங்களாலும் ஆபரணங்களாலும் சாணையிடப்பெற்று நிர்மலமாயிருப்பவைகளும் ஸூர்ய கிரணங்கள் பட்டு மிகவும் ஜ்வலிக்கின்றவைகளுமான ஆயுதங்களாலும் வீரர்களின் வரிசைகளாலும் ஜலஜந்துக்களால் ஸமுத்ரங்கள் போலத் திகழ்ந்தன. அஸுர ஸைன்யங்களுக்கு ப்ரபுவாகிய பலிசக்ரவர்த்தி வைஹாயஸமென்னும் விமானத்தில் ஏறிக்கொண்டு உதயபர்வதத்தில் வீற்றிருக்கும் சந்த்ரன்போல விளங்கினான். அந்த வைஹாயஸ விமானம் நினைத்தபடியெல்லாம் போகுந் திறமையுள்ளது; மயனால் நிர்மிக்கப்பட்டது. அதில் யுத்தத்திற்கு வேண்டிய அஸ்த்ரம் சஸ்த்ரம் முதலியவை அனைத்தும் அமைந்திருக்கும்; எல்லோர்க்கும் ஆச்சர்யத்தை விளைக்கும்; மிக்க விஸ்தாரமுடையது. அதற்கு நிகரான விமானங்கள் எவையுமே இல்லை. ஆகையால் இத்தகையதென்று அதன் நிலைமையை நிரூபிக்க முடியாது. நினைத்தவிட மெங்கும் நிற்குமாகையால் இன்ன இடத்தில் இருக்குமென்று நிரூபிக்க முடியாது. ஓரிடத்திலிருப்பினும் பேரொளியுடையதாகையால் கண்ணால் கண்டறிய முடியாது. ஸேனாபதிகள் அனைவரும் அவனைச் சூழ்ந்திருந்தார்கள். அவன் குடை சாமரம் முதலிய உபசாரங்களெல்லாம் செய்யப்பெற்றிருந்தான். நமுசி, சம்பரன், பாணன்; விப்ரசித்தி, அயோமுகன், த்விமூர்த்தன், காலநாபன், ப்ரஹேதி, ஹேதி, இல்வலன், சகுனி, பூதஸந்த்ராஸன், வஜ்ரதம்ஷ்ட்ரன், விரோசனன், ஹயக்ரீவன், சங்கு, சிரன், கபிலன், மேகதுந்துபி, தாரகன், உக்ரத்ருக்கு, சும்பன், நிசும்பன், ஜம்பன், உத்கலன், அரிஷ்டன், அரிஷ்டநேமி, மயன், த்ரிபுராதிபன், இவர்களும், பௌலோமர், காலகேயர், நிவாதகவசர்

முதலிய மற்றவர்களும் தங்கள் தங்கள் வாஹனங்க ளில் ஏறிக்கொண்டு அந்தப் பலி சக்ரவர்த்தியைச் சுற்றி லும் சூழ்ந்திருந்தார்கள். இவர்களெல்லோரும் அம் ருதத்தில் பாகம் நேரப்பெறாமல் ஸமுத்ரங்கடைந்த வருத்தத்தை மாத்ரம் அடைந்தவர்களாகையால் யுத் தத்தில் முன் நின்று தேவதைகளைப் பலவாறு வென்றார் கள். அவர்கள் ஸிம்ஹநாதங்களைச் செய்து பெருங் கோஷமுடைய சங்கங்களை ஊதினார்கள். தேவேந்த்ரன் இங்ஙனம் சத்ருக்கள் கொழுத்திருப்பதைக் கண்டு மிக வும் கோபித்துத் திக்கஜமான ஐராவதத்தின் மேல் ஏறி அருவிகள் பெருகப்பெற்ற உதயபர்வதத்தின்மேல் ஏறின ஸூர்யன் போல ப்ரகாசித்தான். பல வகையான வாஹனங்களும் த்வஜங்களும் ஆயுதங்களுமுடைய தேவ தைகளும் வாயு அக்னி வருணன் முதலிய திக்பாலகர்க ளும் தங்கள் தங்கள் கூட்டங்களோடுகூடி அவ்விந்த்ர னைச் சூழ்ந்து நின்றார்கள். அந்தத்தேவதைகளும் அஸு ரர்களும் ஒருவர்க்கொருவர் ஸமீபத்தில் சென்று ஒருவரையொருவர் பேர் சொல்லியழைத்து வசவுக ளால் அவமதித்து முன்னே சென்று இரண்டிரண்டு பேர் களாக யுத்தம் செய்தார்கள். பலி சக்ரவர்த்தி இந்த்ர னோடும், ஸுப்ரஹ்மண்யன் தாரகனோடும், வருணன் ஹேதியோடும், மித்ரன் ப்ரஹேதியோடும், யமன் கால நாபனோடும், விஶ்வகர்மன் மயனோடும். சம்பரன் த்வஷ்டா வோடும், விரோசனன் ஸவிதாவோடும், நமுசி பராஜித னோடும், அஶ்விதேவதைகள் வ்ருஷபர்வனோடும், ஸூர்ய னொருவன் பாணன் முதலிய பலிபுத்ரர்கள் நூறுபேர்க ளோடும், ஸோமன் ராஹுவோடும், அனிலன் புலோம னோடும், மஹாபலமுடைய பத்ரகாளிதேவி சும்பன் நிசும் பன் இவர்களோடும், வ்ருஷாகபி ஜம்பனோடும், விபாவ

ஸுமாரிஷனோடும், இல்வல வாதாபிகள் மரீசி முதலிய ப்ரஹ்மபுத்ரர்களோடும், துர்மர்ஷன் காமதேவனோடும், உத்கலன் ப்ராஹ்மி முதலிய ஸப்தமாதாக்களோடும், ப்ருஹஸ்பதி சுக்ரனோடும், சனி நரகனோடும், மருத்துக்கள் நிவாதகவசர்களோடும், அஷ்டவஸுக்கள் காலகேயர்களோடும், விஸ்வதேவர்கள் பௌலோமர்களோடும், ருத்ரர்கள் க்ரோதவசர்களோடும் கலந்து யுத்தம் செய்தார்கள். இங்ஙனம் யுத்தத்தில் அந்தத் தேவஸ்ரேஷ்டர்களும் அஸுரஸ்ரேஷ்டர்களும் இரண்டிரண்டு பேர்களாகக் கூட்டங்கூடி ஒருவரையொருவர் கிட்டிச் சண்டை செய்து ஒருவரையொருவர் வெல்ல விரும்பிக் கூரான பாணங்கள் கத்திகள் ஈட்டி முஸுண்டி சக்ரம் கதை ருஷ்டி பட்டஸம் சக்தி உல்முகம் ப்ராஸம் பரஸ்வதம் நிஸ்த்ரிம்சம் பல்லம் பரிகம் முத்கரம் பிண்டிவாலம் இவைகளால் பலமுள்ளவளவு ஒருவரை யொருவர் அடித்துத் தலைகளையும் அறுத்தார்கள். யானைகளும் யானைக்காரர்களும் குதிரைகளும் குதிரைக்காரர்களும் தேர்களும் தேராளிகளும் காலாட்களும் மற்றும் பலவகை வாஹனங்களும் முரிந்து விழுந்தன. ப்ராணிகள் அனைவரும் கை துடை கழுத்து கால் இவைகளும் த்வஜங்களும் தனுஸ்ஸுக்களும் கவசங்களும் ஆபரணங்களும் அறுப்புண்டு விழுந்தார்கள். அந்தத் தேவாஸுரர்களின் அடிவைப்புக்களாலும் தேர்ச்சக்ரங்களின் உறைச்சல்களாலும் யுத்தபூமியினின்று பெருந்துகள் கிளம்பித் திசைகளையும் ஆகாயத்தையும் ஸூர்யனையும் மறைத்தது. பிறகு ரக்தப் பெருக்குக்களால் நாற்புறத்திலும் நனைந்து அந்தத் தூள் முழுவதும் அடங்கிற்று. கிரீடங்களும் குண்டலங்களும் சிதறப்பெற்றுப் பரபரப்போடு கூடின கண்களுடையவைகளும் உதட்டைக் கடித்துக்கொண்டிருப்பவைகளு

மான அறுப்புண்டு விழுந்த தேவாஸுரர்களின் தலைகளாலும் ஆபரணங்களும் ஆயுதங்களும் அமைந்த புஜதண்டங்களாலும் திரண்டுருண்ட துடைகளாலும் நிறைந்த அந்த யுத்தகளம் முழுவதும் ஒருவாறு திகழ்வுற்றிருந்தது. அந்த யுத்த பூமியில் கபந்தங்கள் அறுந்து விழுந்திருக்கிற தங்கள் முகங்களிலுள்ள கண்களால் பார்த்துக்கொண்டே புஜதண்டங்களில் ஆயுதங்களை ஏந்தி யுத்த வீரர்கள்போலச் சத்ருக்களை எதிர்த்தோடக் கிளம்பின. பலிசக்ரவர்த்தி மஹேந்த்ரனைப் பத்து பாணங்களாலும் ஐராவதத்தை மூன்று பாணங்களாலும் அவ்வைராவதத்தின் பாதங்களைப் பாதுகாக்கும் நான்கு வீரர்களை நான்கு பாணங்களாலும், யானையை நடத்தும் பாகனை ஒரு பாணத்தினாலும் வருந்த அடித்தான். தனுர்வித்யையில் ஸமர்த்தனாகிய அத்தேவேந்த்ரன் அங்ஙனம் வருகின்ற அந்தப் பாணங்கள் வந்து தன்மேல் விழுவதற்கு முன்னமே கூரான அத்தனை பல்ல பாணங்களால் அவற்றைச் சிரித்துக்கொண்டே பிளந்தான். இந்த்ரன் செய்த ப்லாக்யமான அச்செயலைக் கண்டு பலி அதைப் பொறுக்க முடியாமல் தான் மறைந்துகொண்டு அஸுரமாயையைப் படைத்தான். ப்ரபு! அதனால் தேவஸைன்யத்தின் மேல் ஒரு பர்வதம் வந்து தோன்றிற்று. அந்தப் பர்வதத்தினின்று காட்டுத் தீப்பற்றியெரிகின்ற வ்ருக்ஷங்களும் கல்லுளிபோல் கூரான நுனிகளையுடைய கற்களும் வந்து விழுந்து அஸுர சத்ருக்களான தேவதைகளின் ஸைன்யத்தைச் சூர்ணஞ்செய்தன. தேள்களும் கடிக்குந் தன்மையுடைய மஹாஸர்ப்பங்களும் ஸிம்ஹம் புலி பன்றி இவைகளும் மத்த கஜங்களும் கர்ஜித்துக்கொண்டு அந்தப் பர்வதத்தினின்றும் வெளிப்பட்டன. அரையிலாடையின்றிக் கையில் சூலாயுதத்தை யேந்தி

கொண்டிருக்கிற பலவாயிரம் ராக்ஷஸிகளும் அத்தகைய ராக்ஷஸர்களும் 'கிழி! பிள! வெட்டு! குத்து!' என்று மொழிந்துகொண்டு கூட்டங் கூட்டமாய்க்கிளம்பினார்கள். மற்றும், ஆகாயத்தில் மிகப்பெரிய மேகங்கள் தோன்றிக் கம்பீரமாகவும் கர்ணகடோரமாகவும் ஒலித்துக் காற்றினால் அடியுண்டு கர்ஜனைகள் செய்து நெருப்புத்துணுக்கைகளைப் பெய்தன. அஸுரச்ரேஷ்டனாகிய அந்தப் பலியினால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட காற்றுடன்கூடின அக்னி, ப்ரளய காலாக்னிபோலப் பொறுக்கமுடியாத பெருங்கொடுமையுடன் தோன்றித் தேவதைகளின் ஸைன்யத்தைத் தஹித்து விட்டது. அப்பால் தேவதைகளுக்கு நாற்புறத்திலும் பெரு மழைக்காற்றுகளால் அலைகளும் நீர்ச்சுழிகளும் கிளம்பப்பெற்றுக் கரைபுரண்டு கிளர்ந்தெழுந்து மிகவும் பயங்கரமான ஸமுத்ரம் தோற்றிற்று. இங்ஙனம் பலியைப்போல மற்ற அஸுரர்களும் தங்கள் தங்கள கதி பிறர்க்குத் தெரியாதபடி மறைந்து பயங்கரர்களாகி மிகவும் பயங்கரமான மாயைகளைப் படைத்துக் கொண்டிருக்கையில், தேவஸைன்யத்திலுள்ளவர் அனைவரும் வருத்தமுற்றார்கள். மன்னவனே! இந்த்ரன் முதலிய தேவதைகள் அனைவரும் அந்த மாயைகளுக்குப் பரிஹாரம் இன்னதென்று தெரியாமல், உலகங்களுக்கெல்லாம் ரக்ஷகனான பகவானை த்யானிக்கையில், பீதாம்பரம் உடுத்தவனும் அப்போதலர்ந்த செந்தாமரை மலர் போன்ற திருக்கண்களுடையவனும் ஆயுதங்களை யேந்தின எட்டுப் புஜங்கள் அமைந்தவனும், ஸ்ரீமஹாலக்ஷ்மி கௌஸ்துபமணி விலையுயர்ந்த கிரீடம் குண்டலம் இவை திகழப் பெற்றவனுமாகிய அப்பகவான் கருடனுடைய தோள்மேல் தளிர்போன்ற தன் பாதங்களைத் தொங்க விட்டுக்கொண்டு அவர்களுக்கு ப்ரத்யக்ஷமாய் வந்து

தோன்றினன். அவன் அவ்விடம் வந்து நுழைந்த மாத்ரத்தில் அஸுரர்களின் செயலாலுண்டான மாயைகளெல்லாம் மஹானுபாவனை அப்பகவானுடைய மஹிமையால், ஸ்வப்னத்தில் கண்ட வஸ்துக்கள் விழித்துக்கொண்ட பின்பு மறைவது போலப், பறந்து போயின. பகவானை நினைத்த மாத்ரத்தில ஆபத்துக்களெல்லாம் நீங்கிப்போம். அவன் நேரே புலப்படுவானாயின் ஆபத்துக்கள் நீங்குவதைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? ஸிம்ஹத்தை வாஹனமாகவுடைய காலநேமியென்னும் அஸுரன் அவ்வாறு யுத்தத்தில் பகவான் கருடவாஹனத்தின் மேல் வந்து தோன்றக்கண்டு சூலத்தைச் சுற்றி அவன் மேல் ப்ரயோகித்தான். மூன்று லோகங்களுக்கும் ப்ரபுவாகிய பகவான் கருடன் தலைமேல் விழவருகின்ற அந்தச் சூலத்தை அப்படியே பிடித்துக்கொண்டு அச்சூலத்தினலேயே சத்ருவாகிய அந்தக் காலநேமியையும் அவனுடைய வாஹனமான ஸிம்ஹத்தையும் அடித்தான். அப்பால் மஹாபலிஷ்டர்களான மாலி ஸுமாலி யென்னும் இரண்டு அஸுரர்கள் பகவானை யெதிர்த்து அவனுடைய சக்ராயுதத்தினுல் தலையறுப்புண்டு யுத்த பூமியில் விழுந்தார்கள். அவர்களில் மாலி யென்பவன் பகவானுடைய வாஹனமான கருடனைக் கூரான கதையால் நோக்கி அடித்தான். அடித்ததும் ஸந்தோஷத்தினுல் கர்ஜனை செய்தான். ஆதி புருஷனுகிய பகவான் அது கண்டு சக்ராயுதத்தினுல் அவனுடைய தலையை அறுத்தான்.

பத்தாவது அத்யாயம் முற்றிற்று.

தேவதைகள் அஸுரர்களை வதித்தலும், நாரதர் வந்து யுத்தத்தைத் தடுத்தலும், சுக்ரன் அஸுரர்களைப் பிழைப்பித்தலும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அப்பால் இந்த்ரன் வாயு முதலிய தேவதைகள் அனைவரும் பரமபுருஷனுடைய பேரருளால் அஸுரர்களின் மாயைகளால் நேர்ந்த மனக்கலக்கம் தீர்ந்து முன்பு தாங்கள் எவரெவர்களால் த்வந்த்வயுத்தத்தில் அடியுண்டார்களோ, அவ்வஸுரர்களையெல்லாம் நன்றாக அடித்தார்கள். மஹானுபாவனாகிய தேவேந்த்ரன் பெருங்கோபத்துடன் பலியின்மேல் ப்ரயோகிக்க வஜ்ராயுதத்தை யெடுத்து நோக்கினான். அப்பொழுது ப்ரஜைகள் 'ஆ! ஆ!' என்று இறைச்சலிட்டார்கள். வஜ்ராயுதத்தை யேந்தின இந்த்ரன் மஹாயுத்தத்தில் பெருங்கோபத்துடன் உலாவிக்கொண்டு சண்டை செய்யவேண்டுமென்னும் விருப்பத்துடன் எதிரே நிற்கின்ற பலியைப் பொருள் செய்யாமல் இங்ஙனம் மொழிந்தான்.

இந்த்ரன் சொல்லுகிறான்:—மூடா! துர்ப்புத்தியுடைய ஒருவன் அறியாத பிள்ளைகளைக் கபடத்தினால் கண்கட்டி ஜயித்து அவர்கள் பணத்தைப் பறிப்பது போல, மாயையில் ஸமர்த்தர்களான எங்களை நீ மாயையால் ஜயிக்க விரும்புகின்றனை. கீழான பதவியினின்றும் மேல் பதவியை எதிர்பார்க்கிறாய். மாயைகளால் ஸ்வர்க்கத்தைக் கைப்பற்ற முயற்சி செய்கிறாய். இத்தகையனான உன்னைத் துஷ்டஜந்துக்களைப்போல இப்பொழுது நான் வதிக்கின்றேன். துர்மாயைகளைக் கற்றறிந்து கொழுத்திருக்கின்ற உன் தலையை நூறு கணுக்களையுடைய வஜ்ராயுதத்தினால் அறுத்து விடுகிறேன். மந்தபுத்தியுடை

யவனே! நீ உன் ஜ்ஞாதிகளுடன் வந்து பலமுள்ளவளை வும் யுத்தஞ் செய்வாயாக.

பலி சொல்லுகிறுன்:—யுத்தஞ்செய்ய முயன்றவர்கள் அனைவர்க்கும் காலத்தினுல் பரிபாக தசையை அடைந்த பூர்வ கர்மங்களுக்குத் தகுந்தபடி கீர்த்தி ஜயம் அபஜயம் மரணம் இவை க்ரமமாக விளைகின்றன. பண்டிதர்கள் ஜயம் அபஜயம் புகழ் முதலிய பலன்களைப் பெறுகிறஜனங் களைப் பார்த்துக் காலத்தினுல் பரிபக்வமான கர்மத்தின் பலனை அனுபவிக்கிருர்களென்று நினைப்பார்கள் ஆகை யால் அவர்கள் ஜயாதிகளைப்பற்றி ஸந்தோஷிக்கவும் மாட்டார்கள்; அபஜயாதிகளைப் பற்றி வருந்தவுமாட் டார்கள். உண்மை இப்படியிருக்க, ஜயித்தோமென்று ஸந்தோஷிக்கிற நீங்கள் அறிவுடையவர்களாக மாட்டீர் கள். நீங்கள் கர்மத்தினுல் விளைகிற ஜயம் முதலிய பலன் களைப் பற்றி உங்கள் தேஹத்தையே காரணமாக நினைக் கிறீர்கள். நீங்கள் அறிஞர்களால் 'இப்படியும் சில மூடர்கள் உண்டோ' என்று சோகிக்கத் தகுந்தவர்களா யிருக்கிறீர்கள். ஆகையால் மர்மத்தில் உறுத்தும்படி யான உங்கள் வார்த்தைகளை நாங்கள் நன்றென்று கொள்ளமாட்டோம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிருர்:—வீரர்களின் கொழுப்பை அடக்குந்திறமையுடைய மஹாவீரனுகிய பலி இங்ஙனம் மேன்மையுடைய தேவேந்த்ரனைப் பலவாறு வைது அவ் வைதல்களால் அடியுண்ட அவனை மீளவும் காது நுனி வரையில் இழுத்து விடப்பட்ட நாராசபாணங்களால் அடித்தான். உண்மையை உரைக்கின்ற சத்ருவாகிய பலியினுல் இங்ஙனம் நிந்திக்கப்பட்ட தேவேந்த்ரன், மா வெட்டியால் அடியுண்ட யானைபோல, அவன் சொன்ன நிந்தனைகளைப் பொறுக்கமுடியாமல், எங்கும் தடைபடா

தனும் சத்ருக்களை அழிப்பதுமாகிய வஜ்ராயுதத்தை அவன்மேல் ப்ரயோகித்தான். அவ்வஸுரன் அதனால் அடிக்கப்பட்டு, இறகுகள் ஒடிந்த பர்வதம்போல விமானத்துடன் கீழே விழுந்தான். அப்பால், அந்தப் பலியின் நண்பனாகிய ஜம்பனென்பவன் தன் ஸ்நேஹிதனாகிய பலி அடியுண்டு பூமியில் விழுந்திருப்பதைக் கண்டு, அவன் மாண்டபின்பும் அவனுடைய ஸ்நேஹத்தை நினைத்து அதற்குரியபடி செய்ய முயன்று இந்த்ரனை எதிர்த்தோடினான். மஹா பலிஷ்டனான அந்த ஜம்பாஸுரனும் ஸிம்ஹ வாஹனத்தின்மேல் ஏறிக்கொண்டு வந்து வேகத்துடன் கதையை யெடுத்து இந்த்ரனைக் கழுத்தடியில் அடித்து அவனுடைய யானையையும் அடித்தான். ஐராவதம் கதையின் அடியினால் மிகவும் வருந்தித் தழதழத்து முழந்தாள்களால் பூமியை ஊன்றிக்கொண்டு மூர்ச்சித்து விட்டது. பிறகு மாதலி, யானை மூர்ச்சித்ததைக் கண்டு பச்சை நிறமுடைய ஆயிரங் குதிரைகள் பூட்டப்பெற்ற ரதத்தைக் கொண்டுவந்தான். இந்த்ரன் ஐராவதத்தை விட்டு மாதலிகொண்டு வந்த ரதத்தின்மேல் ஏறிக்கொண்டான். அஸுர ஸ்ரேஷ்டனான ஜம்பாஸுரன் இந்த்ர ஸாரதியான மாதலி ஸமயம் அறிந்து ரதங்கொண்டு வந்த செயலைக்கண்டு 'ஸாரதியென்பவன் இத்தகையனாயிருக்கவேண்டும்' என்று புகழ்ந்து யுத்தத்தில் சிரித்துக் கொண்டே ஜ்வலிக்கின்ற சூலத்தினால் மாதலியை அடித்தான். மாதலி சூலத்தின் அடியாலுண்டான வருத்தம் பொறுக்க முடியாதிருப்பினும் தைர்யத்தை அவலம்பித்துப் பொறுத்திருந்தான். இந்த்ரன் பெருங்கோபமுற்று வஜ்ராயுதத்தினால் ஜம்பனுடைய தலையை அறுத்தான். அந்த ஜம்பனுடைய ஜ்ஞாதிகளான நமுசி பலன் பாகன் என்னும் மூன்று அஸுரர்களும் நாரதர் மூலமாய் ஜம்பன்

மரணம் அடைந்தானென்று கேள்விப்பட்டு விரைந்து யுத்த பூமிக்கு வந்து சேர்ந்தார்கள். அவர்கள் கொடிய உரைகளால் இந்த்ரனை அவமதித்து, மேகங்கள் பர்வதத்தின்மேல் ஜலதாரைகளைப் பெய்வதுபோல, இந்த்ரனுடைய மர்மஸ்தானங்களில் பாணங்களைப் பெய்தார்கள். அவர்களில் பாணங்களை மிகவும் சீக்ரமாகத் தொடுத்து விடுந்திறமையுடைய பலன் யுத்தத்தில் இந்த்ரனுடைய ஆயிரம் குதிரைகளையும் இந்த்ரனையும் அத்தனை பாணங்களால் ஒரே தடவையில் அடித்தான்; பாகாஸுரன் இறுநூறு பாணங்களை ஒரே தடவையில் எடுத்துத்தொடுத்து விடுத்து மாதலியையும் ரதத்தையும் தனித்தனியே ஒவ்வொரு அவயவத்தையும் விடாமல் அடித்தான். ரதத்திலாவது மாதலியின் சரீரத்திலாவது ஓரிடத்திலுங்கூடப் பாணம் பொத்தாத இடமே யில்லை. அவன் ஒரேதடவையில் பாணங்களையெடுத்துத் தொடுத்து விடுத்ததும் ஒரு அவயவமும் தவறாமல் பாணங்களை நாட்டினதும் காண்போர்க்கு மிக்க அற்புதமாயிருந்தது. நமுசி ஸ்வர்ணமயமான பிடிகளையுடைய பதினைந்து பெரிய பாணங்களால் இந்த்ரனை அடித்து யுத்தத்தில் நீர்கொண்ட மேகம்போலக் கர்ஜனைசெய்தான். அப்பால் அவ்வஸுரர்களெல்லோரும் வர்ஷாகாலத்து ஸூர்யனை மேகங்கள் மறைப்பதுபோல, ரதத்தோடும் ஸாரதியோடுங்கூடின இந்த்ரனை நாற்புறத்திலும் பாணங்களால் மறைத்தார்கள். அப்பொழுது அவ்விந்த்ரனைத் தொடர்ந்த தேவக்கூட்டங்களெல்லாம் அவனைக் காணாமல் மனம் தழதழத்து நாயகனற்று ஸமுத்ரத்தினிடையில் ஓடம் உடைந்து வருந்துகிற வர்த்தகர்கள்போல முறையிட்டார்கள். பிறகு தேவேந்த்ரன் பாணங்களின் பிடிகளாகிற கூட்டினின்று குதிரை தேர் த்வஜம் ஸாரதி இவற்றுடன்

வெளிப்பட்டு விடியற்காலத்து ஸூர்யன்போலத் தன்னொளியினால் திசைகளையும் ஆகாயத்தையும் பூமியையும் ப்ரகாசிக்கச் செய்துகொண்டு விளங்கினான். அவ்வஜ்ர பாணி தன் ஸைன்யம் அஸுரர்களின் பாணங்களால் வருந்துவதைக் கண்டு கோபங்கொண்டு சத்ருக்களைக் கொல்லவிரும்பி வஜ்ராயுதத்தை ஏந்தினான். அவன் பலன் பாகன் இவர்களின் தலைகளை அவர்களுடைய பந்துக்கள் பார்த்துக் கொண்டிருக்கையில் அவர்களுக்குப் பெரும் பயத்தை விளைக்கொண்டு எட்டு நுனிகளையுடைய வஜ்ரா யுதத்தினாலேயே அறுத்தான். நமுசி அவர்கள் மாண்டதைக் கண்டு சோகம் பொறாமை கோபம் இவற்றுடன் இந்த்ரனைக் கொல்லவிரும்பிப் பெருமுயற்சிகொண்டான். எஃகினால் இயற்றப் பட்டதும் பொன்னலங்காரம்செய்து சிறுமணிகள் கட்டப்பெற்றதுமாகிய சூலத்தையெடுத்துக் கோபாவேசத்துடன் இந்த்ரன்மேல் எதிர்த்தோடி மாண்டாயென்று மொழிந்து சூலத்தைச் சுழற்றி ஸிம்ஹம்போலக் கர்ஜனை செய்துகொண்டே அதைத் தேவேந்த்ரன்மேல் ப்ரயோகித்தான். தேவேந்த்ரனும் ஆகாயத்தில் பெருங்கொள்ளிபோல வருகின்ற அச்சூலத்தைப் பாணங்களால் ஆயிரம் துணுக்கைகளாக அறுத்துக் கோபத்துடன் அந்த நமுசியைக் கழுத்தில் வஜ்ராயுதத்தினால் நாற்புறத்திலும் பிளந்து அவன் தலையை அறுக்கத் தொடங்கினான். இந்த்ரனால் பலமுள்ளவளவும் ப்ரயோகிக்கப்பட்ட மிக்க உறுதியையுடைய அவ்வஜ்ராயுதம் அந்த நமுசியின் கழுத்துத் தோலையுங்கூட அறுக்க வல்லதாகவில்லை. மஹாவீர்யமுடைய வ்ருத்ராஸுரனைக் கொன்ற வஜ்ராயுதம் நமுசியின் கழுத்துத் தோலால் திரஸ்கரிக்கப் பட்டதென்பது மிகவும் ஆச்சர்யமாயிருந்தது. வஜ்ராயுதமும் தடைபட்டபடியால் சத்ருவாகிய

அந்த நமுசியிடத்தினின்று தேவேந்த்ரன் பயந்தான். அவன், 'எங்கும் தடைபடாத வஜ்ராயுதம் இப்பொழுது தடைபட்டதே. இது தெய்வாதீனமாய் நேர்ந்ததோ? அல்லது லோகவிமோஹனார்த்தமாக நேர்ந்ததோ? முன்பு பெரிய பர்வதங்கள் இறகுகளுடன் பறந்து வந்து பூமியில் ஆங்காங்கு இறங்கிப் பாரங்களால் ப்ரஜைகளைப் பாழ்செய்கையில், அவற்றின் இறகுகளை இந்த வஜ்ராயுதத்தினால் தான் நான் சேதித்தேன். மற்றும், த்வஷ்டாவின் தவப்பெருக்கே ஒரு வடிவங்கொண்டு வந்ததோவென்னும்படி மஹாவீர்யத்துடன் பிறந்த வ்ருத்ராஸுரனை இந்த வஜ்ராயுதத்தினால் கொன்றேன். மற்றும், மற்ற ஆயுதங்களால் எவ்வளவு அடிக்கினும் தோலுங்கூட அழியப்பெறாத மஹா பலிஷ்டர்களான பலி ஜம்பன் பலன் முதலிய அஸுரர்களும் இந்த வஜ்ராயுதத்தினால் இப்பொழுது அடியுண்டு மாண்டார்கள். அப்படிப்பட்ட இந்த வஜ்ராயுதம் அத்தகைய நானே ப்ரயோகித்தும் அற்பனான இந்த அஸுரனிடத்தில் தடைபட்டது. ததீச மஹர்ஷியின் ப்ரஹ்மதேஜோமயமான இவ்வஜ்ராயுதம் இப்பொழுது நிஷ்காரணமாக வெறுந்தடிபோலாய் விட்டது. இனி இவ்வஜ்ரத்தை நான் எடுக்கமாட்டேன்' என்று மனவருத்தப்பட்டுக் கொண்டிருக்கையில், அசரீரி வாக்கு இந்த்ரனைக் குறித்து இவ்வஸுரன் 'உலர்ந்த வஸ்துக்களாலாவது நனைந்த வஸ்துக்களாலாவது வதிக்கத் தகுந்தவனல்லன். நனைந்தவைகளாலும் உலர்ந்தவைகளாலும் உனக்கு மரணம் இல்லையென்று இவனுக்கு நான் வரம் கொடுத்து விட்டேன். தேவேந்த்ரனே! ஆகையால் இந்தச் சத்ருவை வதிப்பதற்கு நீ வேறு உபாயத்தை ஆலோசிக்கவேண்டும்,' என்று மொழிந்தது. இங்ஙனம் கண்ணுக்குப் புலப்படாது மொழிந்த

தெய்வமொழியைக் கேட்டு இந்த்ரன் மனவூக்கமுற்று உலர்ந்ததும் நனைந்ததுமாகாமல் இருவகையிலும் உட்பட்ட வஸ்து எதுவாயிருக்கலாமென்று தனக்குள் சிந்தித்து அவ்விருவகைப்பட்ட வஸ்து நுரையென்று நிச்சயித்தான். பிறகு உலர்ந்ததும் நனைந்ததுமாகாமல் இருவகைப்பட்டதாகிய நுரையைக் கொண்டு வஜ்ராயுதத்தின்மேல் பூசி அவ்வஜ்ராயுதத்தினால் நமுசியின் தலையை அறுத்தான். ஸமர்த்தனாகிய அந்தத் தேவேந்த்ரனை முனிவர்கள் கூட்டங்கூட்டமாய் நின்று துதித்தார்கள். புஷ்பங்களை அவன்மேல் இறைத்தார்கள். விஶ்வாவஸு பராவஸு என்னும் கந்தர்வஶ்ரேஷ்டர்கள் கானஞ்செய்தார்கள். தெய்வதுந்துபிவாத்யங்கள் முழங்கின. நாட்யப்பெண்கள் ஸந்தோஷமுற்று நாட்யமாடினார்கள். இந்த்ரனைப்போலவே வாயு அக்னி வருணன் முதலிய மற்றவர்களும் ஸிம்ஹங்கள் அற்ப ம்ருகங்களை வதிப்பதுபோலத் தங்களை யெதிர்த்த சத்ருக்களை அஸ்த்ர ஸமூஹங்களால் அடித்துக் கொன்றார்கள். இங்ஙனம் தேவதைகள் அஸுரர்களை வதித்துக் கொண்டிருக்கையில், ப்ரஹ்ம தேவன் அஸுரர்கள் அழிந்துபோவதைக் கண்டு இனி அஸுரர்கள் அடியோடு முடிந்துபோவார்களென்று நினைத்து நாரத மஹர்ஷியை அனுப்ப, அவர் வந்து இந்த்ரன் முதலிய தேவதைகளைத் தடுத்தார்.

நாரதர் சொல்லுகிறார்:—ஸ்ரீமந் நாராயணனுடைய புஜங்களைப் பற்றியிருக்கிற நீங்கள் அம்ருதம் பெற்றீர்கள். அப்பொழுது ஸ்ரீமஹாலக்ஷ்மி உங்களுக்கு மூன்று லோகங்களின் ஐஶ்வர்யத்தைக் கொடுத்து வளர்த்தாள். ஆகையால் நீங்கள் இப்பொழுது கலஹத்தினின்றும் மீளுவீர்களாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இந்த்ரன்முதலிய தேவர்கள் அனைவரும் நாரதமுனியின் வசனத்தைக் கேட்டு அதைக் கௌரவித்துக்கோபத்தையும் அதனால் ஏற்பட்ட யுத்த ப்ரயத்னத்தையும் நிறுத்தி அனுசரர்களால் பாடப்பெற்று ஸ்வர்க்கலோகம் போய்ச் சேர்ந்தார்கள். அப்பால் அந்த யுத்தத்தில் அடிபட்டு மிகுந்த தானவர்களும் தைத்யர்களுமாகிய அஸுரர்களனைவரும் வஜ்ராயுதத்தினால் அடியுண்டு பூமியில் விழுந்திருக்கிற பலியை நாரதருடைய அனுமதியின்மேல் எடுத்துக்கொண்டு அஸ்தமய பர்வதத்திற்குப் போனார்கள். அங்குச் சுக்ராசார்யன் அவயவங்கள் அழியாமல் தலையோடிருக்கிற அஸுரர்களை ம்ருதஸஞ்ஜீவினியென்கிற தன்மந்த்ரவித்யையினால் பிழைப்பித்தான். பலியும் அந்தச் சுக்ராசார்யனுடைய ஸ்பர்சத்தினால் இந்த்ரியங்களும் நினைவும் மீண்டு வரப்பெற்று யுத்தத்தில் தான் தோல்வி யடைந்தானாயினும், உலகத்திலுள்ள ப்ராணிகள் அனைவரும் பரக்ருதி ஸம்பந்தமுடையவர்களாகையால் அவர்களுக்கு ஜய அபஜயங்களும் ஸுகதுக்கங்களும் கர்மாதீனமாய் விளைகின்றனவென்று உலகத்தின் உண்மையை ஆராய்ந்தறிந்தவனாகையால் அதைப்பற்றி வருந்தவில்லை. பதினொன்றாவது அத்யாயம் முற்றிற்று.

மோஹினியின் அழகைக் கண்டு ருத்ரன் மதிமயங்கின வ்ருத்தாந்தத்தைக் கூறுதல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—பகவான் பெண்ணுருவங் கொண்டு அஸுரர்களை மதிமயக்கித் தேவதைகளுக்கு அம்ருதபானஞ் செய்வித்தானென்ற வ்ருத்தாந்தத்தை ருத்ரன் கேள்விப்பட்டுப் பார்வதியுடன் வ்ருஷபவாஹனத்தின் மேலேறி ஸமஸ்த பூதகணங்களும் தொடர்ந்து

வரப்பெற்றுப் பகவானுடைய பெண்ணுருவத்தைப் பார்க்க விரும்பி, அம்மதுசூதனன் இருக்கின்ற விடத்திற்கு வந்தான். அவ்வுருத்திரன் உமையும் தானுமாகப் பகவானால் ஆதரவுடன் பூஜிக்கப்பெற்று ஸுகமாக உட்கார்ந்து தானும் பகவானைப் பூஜித்துப் புன்னகையுடன் அவனைக் குறித்து இங்ஙனம் மொழிந்தான்.

ருத்ரன் சொல்லுகிறான்:—தேவர்களுக்கும் தேவனே! உலகமெங்கும் நிறைந்திருப்பவனே! சேதனசேதனரூபமான ஜகத்திற்குள் புகுந்து நியமிப்பவனே! ஜகத்தெல்லாம் தானேயென்னும்படி அதைச் சரீரமாகவுடையவனே! சேதனசேதனரூபமான ஸமஸ்த வஸ்துக்களுக்கும் நீயே அந்தராத்மா வாயிருக்கின்றனை. நீயே ஸகல ஜகத்காரணன். காரணாவஸ்தையில் நாமரூப விபாகங்களுக்கிடமின்றி ஸூக்ஷ்மமான சேதனசேதனங்களை நியமிப்பவன் நீயே. ஸூக்ஷ்மசேதனசேதனங்களைச் சரீரமாகவுடைய உன்னிடத்தினின்றே இந்த ப்ரபஞ்சமெல்லாம் உண்டாயிற்று. இது உன்னிடத்திலேயே கடைசியில் மறைகின்றது. இதனுடைய ஸ்திதியும் உன்னால்தான் நடக்கின்றது. இந்த ப்ரபஞ்சமெல்லாம் நீயே. நீ இந்த ப்ரபஞ்சத்தைக் காட்டிலும் இயற்கையில் விலக்ஷணனாயிருப்பவன். நீ தனக்குத் தானே தோற்றுந் தன்மையுள்ள ஆத்மவஸ்துக்களையும் பிறர்க்கே தோற்றுந் தன்மையுள்ள அசேதனங்களையும் சரீரமாகவுடையவன். ஆயினும் அந்தச் சேதனசேதனங்களின் விகாரங்கள் தன் மேல் தீண்டப்பெறாதவன். ப்ரபஞ்சத்திற்குள்ள ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்கள் உனக்குக் கிடையாது. நீ ஸ்வரூபத்திலும் ஸ்வபாவத்திலும் விகாரமற்றவன். என்றும் ஸங்கோசமின்றி அழியாத

தும் அளவற்றதுமான ஜ்ஞானமுடையவன்; அத்தகைய ஜ்ஞானத்தையே வடிவமாகவுடையவன். ஸ்வரூபத்தினா லும் ஸ்வபாவத்தினாலும் அளவற்றவனாகையால் நீயே பரப்ரஹ்மமென்று வேதங்களில் கூறப்படுகின்றனை. ப்ரக்ருதி ஸம்பந்தத்தினின்று விடுபடுகையாகிற மோக்ஷமென்னும் நன்மையை விரும்புகிறவர்கள் இஹலோக ஸுகங்களிலும் பரலோகஸுகங்களிலும் மனப்பற்றைத் துறந்து வேறு ப்ரயோஜனத்தை விரும்பாமல் உன் ஸ்வரூப குணவிபூதிகளை மனனம் செய்துகொண்டு ஜகத்காரணனான உன் பாதாரவிந்தங்களை உபாஸிக்கிறார்கள். எங்கும் நிறைந்திருப்பதும் ஸ்வரூபத்தினாலும் ஸ்வபாவத்தினாலும் விகாரமற்றதும் சிறுமை பெருமை குறுமை முதலிய குணங்களற்றதும் சோகமற்றிருக்கை முதலிய எட்டுக்குணங்கள் அமைந்ததும் கேவலஜ்ஞானானந்த ஸ்வரூபமுடையதும் விகாரங்களற்றதும், எல்லாவற்றிற்கும் காரணமும் எல்லாம் தனக்குச் சரீரமுமாகையால் ப்ரக்ருதி புருஷ ஸ்வரூபமான ஸமஸ்தப்ரபஞ்சத்தைக் காட்டிலும் வேறாகாததும் தனக்குச் சரீரமான ப்ரபஞ்சத்தைக் காட்டிலும் விலக்ஷணமாயிருப்பதும் ப்ரபஞ்சத்தின் ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களுக்குக் காரணமுமாகிய பரப்ரஹ்மம் நீயே. உனக்கு நீயே நியாமகனன்றி வேறொரு நியாமகன் எவனுமே இல்லை. ப்ரபஞ்சத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்கள் இத்தகைய பரமாத்ம ஸ்வரூபத்தையொழிய மற்ற எதனாலும் நிறைவேற மாட்டாவாகையால் இத்தன்மைகளெல்லாம் அமைந்த நீயே அவற்றை நடத்துகின்றனையென்பது நிச்சயம். இந்தக் கல்யாண குணங்களெல்லாம் நிரை நிரையாய மைந்தவனாயினும் நீ எதிலும் அபேக்ஷயற்றவன். ஐஶ்வர்யங்களெல்லாம் நிறைந்தவனாகையால் ப்ரஹ்ம

தேவன் முதல் பூச்சி புழு வரையிலுள்ள ஸமஸ்தமான ஜகத்தையும் த்ருணமாக நினைத்துப் பேசாதிருப்பவன். கார்யதசையை அடைந்து நாம ரூபவிபாகங்களுக்கிடமாகிச் சேதநாசேதனங்கள் இரண்டும் அடங்கியிருக்கிற இந்த ப்ரபஞ்சத்தைக்காட்டிலும் இதற்குக் காரணனான நீ வேறுபட்டவனன்று. கார்யகாரணங்கள் இரண்டும் ஒன்றேயல்லவா? 'ஆனால் அவையிரண்டும் ஒன்றோடொன்று பேதப்படாதிருக்கவேண்டுமே. சேதநாசேதன ரூபமான ப்ரபஞ்சத்தைக்காட்டிலும் விலக்ஷணனான எனக்கு அதைக்காட்டிலும் வேறாகாமை எங்ஙனம் பொருந்தும்?' என்றால், நீ காரணதசையில் நாமரூபவிபாகத்திற்கிடமல்லாத ஸூக்ஷ்ம சேதநா சேதனங்களைச் சரீரமாகக்கொண்டு ஒருவனாயிருந்தனை. உன் கார்யமான ஜகத்து நாமரூபங்களுக்கிடமாகி ஸ்தூலதசையை அடைந்திருக்கையால் பேதப்பட்டிருக்கிறதேயன்றி மற்றப்படி பேதமில்லை. ஆகையால் கார்யகாரணங்களிரண்டிக்கும் வேறுபாடில்லை. ஸ்வர்ணம் கார்யகாரணாவஸ்தைகளிரண்டிலும் ஒன்றேயல்லவா? அங்ஙனமே கார்யமான ஜகத்திற்கும் காரணமான பரப்ரஹ்மமென்று கூறப்படுகிற உனக்கும் வஸ்துபேதமில்லை. காரணதசையில் உன் சரீரமான சேதநாசேதனங்கள் ஸூக்ஷ்மமாயிருந்தன. கார்யதசையில் அவை ஸ்தூலமாயிருக்கின்றன. சிலர் ஜகத்தை உன்னைக்காட்டிலும் வேறுபட்டதென்று நினைக்கிறார்கள். அது அவர்களுடைய அறிவின்மையின் கார்யமேயன்றி வேறன்று. ஸத்வாதிகுணங்களின் பரிணாமமான ப்ரபஞ்சம் ப்ரக்ருதி புருஷர்களைக்காட்டிலும் விலக்ஷணஸ்வரூபனான உனக்குச் சரீரமாயிருக்கின்றது. சரீரமும் ஆத்மாவும் வெவ்வேறாயினும் அந்தச் சரீராத்ம பாவரூபமான ஸம்பந்தத்

தைப் பற்றி அபேதமும் உண்டாகையால் உன்சரீரமான ஜகத்திற்கும் உனக்கும் பேதமேயன்றி அபேதமில்லையென்பது சேராது. ஜகத்து உனக்குச் சரீரமாயிருப்பதும், நீ அதற்கு அந்தராத்மாவாயிருப்பதும் ஶ்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸங்களால் ஏற்பட்ட விஷயமாகையால் அதை அழிக்கமுடியாது. வேதாந்தங்களை ஓதியுணர்ந்தவர்களில் சிலர் உன்னை ப்ரஹ்மமென்றும், சிலர் தர்மமென்றும், சிலர் ப்ரக்ருதி புருஷர்களைக்காட்டிலும் விலக்ஷணனாகையால் பரேசனென்று கூறப்படுகிறானென்றும், சிலர் புருஷனென்றும், வேறுசிலர் விமலை உத்கர்ஷிணி முதலிய ஒன்பது சக்திகள் அமைந்தவனென்றும் இணையெதிரில்லாதவனென்றும் நிர்விகாரனென்றும்ஸ்வதந்த்ரனென்றும் மஹாபுருஷனென்றும் சொல்லுகிறார்கள். ருத்ரனென்று பெயர் பெற்ற நான் நீண்ட வாழ்நாளுடைய ப்ரஹ்மதேவன் மரீசி முதலிய ரிஷிகள் ஆகிய ப்ராணிவர்க்கத்தில் சேர்ந்த நாங்கள் உன்னுடைய மாயையினால் ஜ்ஞானஸங்கோசத்தை அடைந்திருக்கிறோம். ஆகையால் உன்னால் படைக்கப்பட்ட இந்த ப்ரபஞ்சத்தையே உள்ளபடி அறியவல்லரல்லோம். இனி ஸ்வரூபத்தையும் அளவற்றவைகளான உனது ரூப குண விபூதிகளையும் எங்ஙனம் அறிவோம்? நாங்களே அறியமாட்டோமாயின், ஸர்வகாலமும் ஜ்ஞான ஸங்கோசத்திற்கிடமான அமங்களகார்யங்களில் ஊக்கமுற்றதைத்யர் மனுஷ்யர் முதலிய மற்ற ப்ராணிகள் அறியமாட்டார்களென்பதைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? அப்படிப்பட்ட ஸ்வரூபரூபாதிகளையுடையவனும் ஜ்ஞானஸ்வரூபனுமாகிய நீ உன்னால் படைக்கப்பட்ட இந்த ப்ரபஞ்சம்முழுவதிலும் அந்தராத்மாவாய்ப்புகுந்து, காற்று ஸமஸ்த சேதனசேதனங்களிலும் ஆகாசத்திலும் நிறைந்

திருப்பதுபோல நிறைந்து அவற்றையெல்லாம் ஸர்வ காலமும் அறிகின்றனை. மற்றும், இந்த ப்ரபஞ்சத்தினுடைய ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களையும் ப்ராணிகளின் சேஷ்டைகளையும் ஜகத்தின் ஸம்ஸாரபந்தத்தையும் மோக்ஷத்தையும் நீ யொருவனே அறிகின்றனை. ஸர்வஜ்ஞத்வம் முதலிய கல்யாண குணங்களால் லீலாரஸங்களை அனுபவிக்கிற உன்னுடைய வராஹாதி அவதாரங்கள் பலவற்றையும் பார்த்திருக்கிறேன். நீ இப்பொழுது ஏற்றுக்கொண்ட பெண்ணுருவத்தை நான் பார்க்கவில்லை. ஆகையால் அவ்வுருவத்தை நான் இப்பொழுது பார்க்க விரும்புகிறேன். எந்தப் பெண்ணுருவத்தைக்கொண்டு தைத்யர்களை மதிமயக்கித் தேவர்களுக்கு அம்ருதபானம் செய்வித்தனையோ, அப்படிப்பட்ட பெண்ணுருவத்தைப் பார்க்க நாங்கள் வந்திருக்கிறோம். அதைப் பார்க்க வேண்டுமென்று நாங்கள் ஆசைப்படுகிறோம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் சூலபாணியாகிய ருத்ரனால் வேண்டப்பெற்ற பகவான் சிரித்து ருத்ரனைப் பார்த்துக் கருத்தறிய முடியாமல் கம்பீரமாயிருக்குமாறு இங்ஙனம் மொழிந்தான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—அம்ருத கலசத்தை அஸுரர்கள் பறித்துக்கொண்டு போகையில், தேவதைகளின் கார்யத்தை நிறைவேற்ற முயன்று அதற்குரிய உபாயத்தை ஆலோசித்துக் காமுகர்களால் வெகுமதிக்கத் தக்கதும் காமவிகாரத்தை விளைவிப்பதுமாகிய அற்புதமான பெண்ணுருவத்தை அஸுரர்களின் குதூஹலத்திற்காக ஏற்றுக்கொண்டேன். தேவஸ்ரேஷ்டனே! அதை நீ பார்க்கவேண்டுமென்று விரும்புகின்றனையாகையால் உனக்குக் காண்பிக்கிறேன்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— பகவான் இங்ஙனம் மொழிந்து அவ்விடத்திலேயே மறைந்தான். ருத்ரனோ வென்றால், பார்வதியும் தானுமாய் நாற்புறத்திலும் உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தான். அப்பால் ருத்ரன் அவ்விடத்தில் விசித்ரமான புஷ்பங்களும் சிவந்தழகிய தளிர்களும் அமைந்த வ்ருக்ஷங்கள் நிரம்பின உத்யானவனத்தில் பருத்தழகிய நிதம்பத்தின் மேல் வெண்பட்டு வஸ்த்ரம் தரித்து அதன்மேல் அரைநாண் மாலை அணிந்து பந்தடித்து விளையாடிக்கொண்டிருக்கிற ஒரு பெண்மணியைக் கண்டான். அவள் உயரக்கிளம்புகிற பந்தை அடிக்கடி அடித்து விளையாடும்பொழுது நிமிர்வதும் வணங்குவதுமாயிருக்கையால் அசைகின்ற கொங்கைகளின் பாரத்தினாலும் அவற்றின்மேல் அணிந்த ஹாரங்களின் பாரத்தினாலும் நுண்ணிய இடை முறிபவள் போன்று தளிர்போன்ற பாதங்களால் இங்குமங்கும் உலாவிக்கொண்டிருந்தாள். நாற்றிசைகளிலும் கிளம்பிச் சுழன்று அசைந்து வருகிற பந்தைப் பார்த்து அடிக்கடி அடித்து விளையாடிக்கொண்டிருக்கையால் நீண்டு சஞ்சலித்துக்கொண்டிருக்கிற அவளுடைய கண்களின கருவிழிகள் சோர்வுற்றிருந்தன. காதுகளில் அணிந்த அழகிய குண்டலங்களால் விளங்குகின்ற கபோலங்களாலும் கறுத்த முன்னெற்றி மயிர்களாலும் அவளுடைய முகம் மிகவும் அலங்காரமுற்றிருந்தது. அவள் அரையில நழுவுகின்ற வெண்பட்டையும் தலையில் அவிழ்கின்ற மயிர்ச்சொருக்கையும் அழகிய இடக்கையினால் முடிப்பதும் அத்தகைய மற்ற வலக்கையினால் பந்தை அடிப்பதுமாயிருந்து தன் கபடச் செயலால் ஜகத்தையெல்லாம் மதிமயங்கச் செய்து கொண்டிருந்தாள். ருத்ரன், இங்ஙனம் பந்தடிக்கும் விளையாட்டினால் சிறிது வெட்கமுற்று அத

ணல் புன்னகை உள்ளடங்கப்பெற்ற அப்பெண்மணியின் கடைக்கண்ணோக்கத்தினல் வஞ்சிக்கப்பட்டு ஸர்வாங்க ஸௌந்தரியான அவளைத் தான் பார்ப்பதனுலும் அவள் தன்னைத் திரும்பிப் பார்ப்பதனுலும் மனம் தழதழக்கப் பெற்றுத் தன்னையும் அருகிலிருக்கின்ற பார்வதியையும் ப்ருத்யர்களான ப்ரமதகணங்களையும் அறியப்பெருதிருந் தான். இப்படியிருக்க, அவள் அடித்துக்கொண்டிருக் கும் பந்து அவள் கையினின்று தவறி வெகுதூரம் சென் றது. அப்பொழுது அந்தப் பந்தைத் தொடர்ந்து போ கின்ற அப்பெண்மணி அரையில் உடுத்திருந்த மெல்லிய தான ஆடையை அரைநாண்மாலையுடன் ருத்ரன் பார்த் துக் கொண்டிருக்கையில் காற்று பறித்துக்கொண்டு போயிற்று. இங்ஙனம் காற்றினல் அரையாடை பறியுண் டவளும் அழகிய கடைக் கண்களுடையவளும் பார்க்கப் பதிஞயிரங்கண்கள் வேண்டும்படி பேரழகியும் மனத்திற் கினியளுமாகிய அப்பெண்மணியைக் கண்டு வெட்கமுற் றுக் கடைக்கண்ணோக்கங்களால் தன்னை நோக்குகின்ற அவளிடத்தில் மனவிருப்பங்கொண்டான். அம்மஹா தேவன் அம்மாதரசியின் கடைக்கண்ணோக்கத்தினல் விவேகம் பறியுண்டு மன்மதவிகாரம் தலைக்கொண்டுவெட் கம் பறந்தோடப்பெற்றுப் பார்வதி பார்த்துக்கொண் டிருப்பினும் அவளருகே சென்ருன். அரையில் ஆடை யின்றியிருக்கிற அப்பெண்மணி அங்ஙனம் ருத்ரன் அரு கே வரக்கண்டு மிகவும் வெட்கமுற்று வ்ருக்ஷங்களில் மறைந்து சிரித்து ஓரிடத்தில் நிலைகொள்ளாதிருந்தாள். ருத்ரன் காமனுக்கு உட்பட்டு இந்த்ரியங்களெல்லாம் கல ங்கப்பெற்று யானைக் கூட்டங்களில் தலைமையுள்ள ஆண் யானை காமவிகாரத்தினல் பெண்யானையைப் பின் பற்று வதுபோல, அங்ஙனம் மரங்களில் மறைவதும் வெளிப்

படுவதுமாகிக் கடைக்கண்களால் மனத்தைப் பறிக்கின்ற அப்பெண்மணியைப் பின் றொடர்ந்து சென்றான். அவன் வெகு வேகமாகச் சென்று அவள் விரும்பாதிருப்பினும் அவளைத் தலைமயிர்ச் சொருக்கில் பிடித்துத் தன்னருகே இழுத்துப் புஜங்களால் அணைத்துக் கொண்டான். பருத்த இடையின் பின்புறமுடையவளும் பகவானுடைய மாயையினால் ஏற்பட்டவளுமாகிய அப்பெண்மணி ஆண்யானையினால் அணைக்கப்பட்ட பெண்யானை போல் ருத்ரனால் அணைக்கப்பெற்றுத் தலைமயிர்கள் கலைந்து இப்படியப்படி அசைந்து மெல்ல மெல்ல அந்தத் தேவ தேவனுடைய மார்பினின்றும் தன்னைப் பலாத்காரமாக விடுவித்துக்கொண்டு ஓடிப்போனாள். அந்தருத்ரன் சத்ருவாகிய மன்மதனால் ஜயிக்கப்பட்டவன்போன்று ஆச்சர்யமான செயல்களையுடைய ஸ்ரீமஹாவிஷ்ணுவின் மாயையினால் ஏற்பட்ட அப்பெண்மணியின் பதவியை மீளவும் தொடர்ந்து சென்றான். வீணாகாத வீர்யமுடைய அத்தேவன் பெண்யானையைத் தொடர்ந்தோடுகிற மத்தகஜம்போன்று அப்பெண்மணியைத் தொடர்ந்தோடும் பொழுது அவனுடைய வீர்யம் வெளியாயிற்று மஹானுபாவனான அந்த ருத்ரனுடைய வீர்யம் எங்கெங்கு விழுந்ததோ, அவ்விடங்களெல்லாம் பொன் வெள்ளி விளையுமிடங்கள் ஆயின. மற்றும் நதி குளம் பர்வதம் வனம் உபவனம் முதலிய எவ்வெவ்விடங்களில் அவனுடைய ரேதஸ்ஸு விழுந்ததோ, ஆங்காங்கு அந்த ருத்ரனுடைய ஸாந்நித்யம் உண்டாயிற்று. அதனால் அவனை உபாஸிக்கும் ரிஷிகள் அவ்வவ்விடங்களில் வாஸம் செய்யத் தொடங்கினார்கள். இங்ஙனம் ரேதஸ்ஸு வெளியாகையில், ருத்ரன் தான் பகவானுடைய மாயையாகிய மடந்தையினால் மதிமயங்கினதை அறிந்தான். மன்னவ

னே! அப்பால் அவன் காமவிகாரத்தினின்று திரும்பினான். பிறகு, ஒருவராலும் அறியமுடியாத சேஷ்டைகள் அமைந்தவனும் ஸகலஜகத்ஸ்வரூபனுமாகிய பகவானுடைய மஹிமையை அறிந்த ருத்ரன அப்பெண்ணுருவத்தையும் அதன் சேஷ்டைகளையும் அற்புதமாக நினைத்தான். அனந்தரம் பகவான் தனக்கு அஸாதாரணமான புருஷ உருவத்துடன் தோன்றி, வெட்கமின்றித் தைர்யத்துடனிருக்கிற ருத்ரனைப் பார்த்து மிகவும் ஸந்தோஷமுற்று இங்ஙனம் மொழிந்தான்.

பகவான் சொல்லுகிறான்:— ஓ தேவஸ்ரேஷ்டனே! நீ தெய்வாதீனமாய் ஸ்வயமாகவே காமவிகாரத்தினின்று மீண்டு இயற்கையைப் பெற்றாய். ருத்ரனே! ஒருவராலும் கடக்கமுடியாத என்மாயையினால் நீ வெகுதூரம் மதிமயங்கப்பெற்றனையல்லவா? ஆயினும் அதினின்று நீ ஸ்வயமாகவே மீண்டது அற்புதமே. உன்னைத் தவிரச்சப்தாதி விஷயங்களில் மனவிருப்பமுற்ற மற்ற எவன் தான் என் மாயையைத் தாண்டிப்போக வல்லனாவான்? என் மாயை, இந்த்ரியங்களை வெல்ல முடியாத மூடர்களால் வருந்தியும் கடக்கமுடியாத பற்பல தோஷங்களை விளைக்கும். ஆகையால் ஜிதேந்த்ரியர்களைத் தவிர மற்றவர்களால் அதை வெல்லமுடியாது. இத்தகைய என் மாயை ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களென்கிற மூன்று குணங்களையே வடிவமாகவுடையது. காலத்தைச் சரீரமாகவுடைய நான் ஸ்ருஷ்டி முதலிய காலங்களுக்கு உரியபடி ரஜஸ்ஸு முதலிய குணங்களின் அம்சத்தை ஏற்றுக்கொண்டு அதில் நிறைந்திருப்பேன். இம்மாயை உன்னை மதிமயங்கச் செய்யாதிருக்குமாறு உனக்கு நான் அருள்புரிகிறேன்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— இங்ஙனம் பகவானால் அருள்புரியப்பெற்ற ருத்ரன் அவனிடம் விடைபெற்றுக்

கொண்டு அவனை ப்ரதக்ஷிணம் செய்து நமஸ்கரித்து ப்ரமதகணங்களுடன் தன் வாஸஸ்தானமான கைலாஸ பர்வதம் போய்ச் சேர்ந்தான். பரத வம்சாலங்காரனே! பிறகு மஹானுபாவனாகிய ருத்ரன் ரிஷிஸ்ரேஷ்டர்கள் பலரும் கேட்டுக்கொண்டிருக்கையில், தன் சரீரத்தின் பாதியாகிய பார்வதியைக் குறித்து இங்ஙனம் மொழிந்தான்.

ருத்ரன் சொல்லுகிறான்:—பரதேவதையும் கர்மத்தினால் வினையும் பிறவி முதலிய விகாரங்களற்றவனுமாகிய பரமபுருஷனுடைய மாயையின் மஹிமையைக் கண்டனையல்லவா? நான் ஸமஸ்த வித்யைகளுக்கும் அதிபதி; எதற்கும் உட்படாதவன். இப்படிப்பட்ட நானும் இம்மாயையினால் மதிமயங்கப்பெற்றேன். தம்மைத் தாமே அடக்கியாளுந்திறமையில்லாத மனுஷ்யர் தைத்யர் முதலிய மற்றவர்கள் இம்மாயையினால் மதிமயங்குவதைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? பலவாயிரமாண்டுகள் தவம் புரிந்திருந்து கடைசியில் அந்தத் தவத்தினின்றும் திரும்பியிருக்கின்ற என்னைப் பார்த்து 'நீ உபாஸிக்கும் வஸ்து எது' என்று வினவினையல்லவா? நான் உபாஸித்த வஸ்து இதோ நேரே புலப்பட்ட இந்தப் புராண புருஷனே. இவனைக் காலம் தீண்டாது. இவன் காலம் முதலிய ஸமஸ்தவஸ்துக்களையும் ஒரே தடவையில் ஸாக்ஷாத்கரிப்பவன்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மன்னவனே! சார்ங்கமென்னும் வில்லை ஏந்தி ஒருவராலும் வெல்லப்படாமல் அஜிதனென்று பெயர்பெற்ற பரமபுருஷனுடைய விக்ரமங்களை இங்ஙனம் உனக்கு மொழிந்தேன். இவன் ஸமுத்ரங்கடையும் பொழுது ஆமையின உருவங்கொண்டு மந்தரமென்னும் மஹாபர்வதம் முழுகாத

படி அதை முதுகில் தாங்கிக் கொண்டிருந்தான். இந்த ஸமுத்ரம் கடைந்த வ்ருத்தாந்தத்தை அடிக்கடி கீர்த்தனம் செய்பவனும் அதைக் கேட்பவனும் எந்த முயற்சிசெய்யினும் அதுஎக்காலத்திலும்எவ்விடத்திலும் வீணாகாது. பகவான் மேன்மையுடைய ப்ரஹ்மாதி தேவதைகளாலும் புகழத்தகுந்த மேலான புகழுடையவன். அவனுடைய குணங்களைச் சொன்னால், அது ஸம்ஸாரத்தில் விளையக்கூடிய ஆத்யாத்மிகம் முதலிய ஸமஸ்தமான வருத்தங்களையும் போக்கும். பகவான் மாயப்பெண்ணுருவங்கொண்டு அஸுரர்களை மதிமயக்கி வஞ்சித்து ஸமுத்ரங் கடைந்தெடுத்த அம்ருதத்தைத் தன் பக்தர்களான தேவதைகளுக்குப் பானம் செய்வித்தான். இந்த்ரியங்களை வெல்ல முடியாத மூடர்களுக்கு அவனுடைய பாதாரவிந்தங்கள் எவ்விதத்திலும் எட்டமாட்டா. அவன் பக்தியினால் அடையத் தகுந்தவனேயன்றி மற்ற எதற்கும் விஷயமாக மாட்டான். தன்னைத் தொடரும் ப்ராணிகளின் மனவிருப்பங்களையெல்லாம் நிறைவேற்றிக்கொடுப்பவன். அத்தகைய பரமபுருஷனை நான் நமஸ்கரிக்கின்றேன். பன்னிரண்டாவது அத்யாயம் முற்றிற்று.

—●●◆ ஏழாம் மனுமுதல் மற்ற மனுக்களைக் கூறுதல். ◆●●—

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— இப்பொழுது இருக்கும் மனு ஏழாவது மனு. இவன் விவஸ்வானுடைய புதல்வன்; ஸ்ராத்ததேவனென்று பெயர் பெற்றவன். இவனுடைய பிள்ளைகளைச் சொல்லுகிறேன் கேட்பாயாக. சத்ருக்களை அழிப்பவனே! இந்த ஏழாம் மனுவாகிய வைவஸ்

வத மனுவுக்கு இக்ஷ்வாகு, நபகன், த்ருஷ்டன், சர்யாதி, நரிஷ்யந்தன், நாபாகன், திஷ்டன், கரூஷகன், ப்ருஷத்ரன், வஸுமான் என்று பத்துப்பிள்ளைகள். இந்தமன்வந்தரத்தில் ஆதித்யர்கள் வஸுக்கள் ருத்ரர்கள் விஸ்வதேவர்கள் மருத்துக்கள் அஸ்வினர்கள் ருபுக்கள் ஆகிய இவர்கள் தேவதைகளாயிருக்கிறார்கள். புரந்தரனென்பவன் அவர்களுக்கு ப்ரபுவான இந்த்ரனாயிருக்கிறான். கஸ்யபர், அத்ரி, வஸிஷ்டர், விஸ்வாமித்ரர், கௌதமர், ஜமதக்னி, பரத்வாஜர் என்னுமிவர்கள் இம்மன்வந்தரத்து ரிஷிகளாக ஏற்பட்டிருக்கிறார்கள். இம்மன்வந்தரத்திலும், பகவான் கஸ்யபரிடத்தினின்று அதிதிக்குப் பிள்ளையாக அவதரித்தான். இவன் விவஸ்வான் முதலிய ஆதித்யர்களுக்குப் பின்பிறந்தவன்; உபேந்த்ரனென்னும் பெயருடையவன். இவனே வாமன உருவங்கொண்டவன். இங்ஙனம் ஏழு மன்வந்தரங்களை உனக்குச் சுருக்கமாகச் சொன்னேன். இனி மேல் வரப்போகிற மன்வந்தரங்களைச் சொல்லுகிறேன் கேட்பாயாக. பகவானுடைய அவதாரங்கள் அமைந்தவையாகையால் அவையும் அவஸ்யம் கேட்கத் தகுந்தவைகளே. மன்னவனே! விவஸ்வானுடைய பத்னிகள் இருவர். அவர்கள் விஸ்வகர்மாவென்னும் ப்ரஜாபதியின் புதல்விகள். ராஜேந்த்ரனே! அவர்கள் ஸம்ஜ்ஞையென்றும் சாயையென்றும் பெயருடையவர்கள். உனக்கு நான் இவர்களை முன்னமே சொல்லியிருக்கிறேன். அவனுக்குப் படபையென்று மூன்றாம் பார்யையும் ஒருத்தி உண்டென்று சிலர் சொல்லுகிறார்கள். அவர்களில், யமனென்றும் ஸ்ராத்ததேவனென்றும் ஸம்ஜ்ஞையின் பிள்ளைகள் இருவர். அவளுக்கு யமியென்று ஒரு பெண்ணும் உண்டு. அவள் தான் யமுனாநதி. சாயையின் பிள்ளைகளையும் சொல்லுகிறேன்,

கேள். சாயைக்கு ஸாவர்ணியென்றும் சனைஶ்சரனென்றும் இரண்டு பிள்ளைகள். தபதியென்று ஒரு பெண். இவளே ஸம்வரணனுடைய பார்யை. அஶ்வினர்கள் படையின் பிள்ளைகள். எட்டாவது அந்தரத்தில் ஸாவர்ணி மனுவாயிருக்கப் போகிறான். மன்னவனே! ஸாவர்ணிக்கு நிர்மோஹன் விரஜஸ்கன் முதலிய பிள்ளைகள் பிறக்கப்போகிறார்கள். அந்த எட்டாவது மனுவின் அந்தரத்தில் ஸுதபர் விரஜர் அம்ருதப்ரபர் என்னுமிவர்கள் தேவதைகளாயிருக்கப்போகிறார்கள். விரோசனனுடைய பிள்ளையாகிய பலி இந்த்ரனாயிருக்கப் போகிறான். மூன்றடிகள் தாவென்று வேண்டுகிற வாமனரூபியான ஸ்ரீமஹாவிஷ்ணுவுக்கு இந்தப் பூமண்டலத்தை முழுவதும் கொடுத்து அவனுடைய அனுக்ரஹத்தினால் நேர்ந்த இந்த்ரபதவியைச் சிலகாலம் அனுபவித்துத் துறந்து மோக்ஷஸித்தியைப் பெறப்போகிறான். மற்றும், இந்தப் பலி பகவானால் கட்டுண்டு மீளவும் ஸந்தோஷமுற்ற அந்தப் பகவானாலேயே ஸ்வர்க்கத்தைக் காட்டிலும் மேற்பட்டதாகிய ஸுதலமென்கிற அதோலோகத்தில் வஸிக்கும்படி நியமிக்கப்பட்டு இப்பொழுது இந்த்ரன் போல் இருக்கிறான். இந்த மன்வந்தரத்தில் காலவர், தீப்திமான், பரசுராமர், அஶ்வத்தாமா, க்ருபாசார்யர், ருஶ்யஶ்ருங்கர், எங்கள் தந்தையாகிய வ்யாஸ பகவான் ஆகிய இவர்கள் தங்கள் தங்கள் யோக ப்ரபாவத்தினால் ஸப்தரிஷிகளாயிருக்கப்போகிறார்கள். ராஜனே! இவர்கள் இப்பொழுது தங்கள் தங்கள் ஆஶ்ரம ஸ்தானங்களில் இருக்கிறார்கள். இந்த மன்வந்தரத்தில் பகவான் தேவகுஹ்யரிடத்தினின்று ஸரஸ்வதியிடத்தில் அவதரித்து ஸார்வபௌமனென்று ப்ரஸித்தி பெற்று வல்லமையினால் ஏழாம் மன்வந்தரத்து இந்த்ரனாகிய புரந்

தானிடத்தினின்று இந்த்ரபதத்தைப் பிடுங்கிப் [1] பலிக்குக் கொடுக்கப் போகிறான். வருணனுடைய பிள்ளையாகிய தக்ஷஸாவர்ணியென்பவர் ஒன்பதாம் மனுவாயிருக்கப் போகிறார். த்ருதகேது தீப்தகேது முதலியவர் அவருடைய பிள்ளைகள். தாரா மரீசி கர்க்கன் முதலியவர் தேவதைகளாயிருக்கப் போகிறார்கள். ப்ருதனென்று பெயர் பெற்றவன் இந்த்ரனாயிருக்கப் போகிறான். த்யுதிமான் முதலியவர் ஸப்த ரிஷிகளாயிருக்கப்போகிறார்கள். அந்த மன்வந்தரத்தில் பகவான் ஆயுஷ்மானென்பவர்க்கு அம்புதாரை யென்பவளிடத்தில் ருஷபனென்னும் பெயர்கொண்ட புதல்வனாக அவதரிக்கப்போகிறான். அப்பகவானால் பாதுகாக்கப்பட்ட மூன்று லோகங்களையும் ப்ருதனென்கிற தேவேந்த்ரன் அனுபவிக்கப் போகிறான். பத்தாவது அந்தரத்தில் உபச்லோகருடைய புதல்வரும் மனோகுணசாலியுமாகிய ப்ரஹ்மஸா

1 சாக்ஷுஷமென்கிற ஆறாவது மன்வந்தரத்தில் துர்வாஸரின் சாபத்தால் இந்த்ரன் ஐச்வர்யத்தை இழந்து அஜிதபகவானைச் சரணம் அடைந்து அவனுடைய உதவியால் அம்ருதத்தைப் புசித்துப் பலியை ஜயித்துத் தேவர்கூட்டத்துடன் மூன்றுலோகங்களையும் ஆண்டு வருகையில், பலி பார்க்கவர்களால் பலம் வளரப்பெற்று இந்த்ரனை ஒட்டி ஸ்வர்க்கத்தைக் கைப்பற்றினான். அப்பொழுது அதிதி பகவானை ஆராதிக்கப் பகவான் ஆதித்யர்களுக்குத் தம்பியாய் வாமனனாகப் பிறந்து பலியிடம் சென்று மூவடிவேண்டிக் கபடத்தினால் அவனிடத்தினின்று ஐச்வர்யத்தைப் பிடுங்கி இந்த்ரனுக்குக் கொடுத்துப் பலியை அனுக்ரஹித்து "இப்பொழுது நீ ஸுதலமென்னும் அதோலோகத்தில் இரு. ஸாவர்ணி மன்வந்தரத்தில் நீ இந்த்ர பட்டத்தை அனுபவிப்பாய்' என்று மொழிந்து அவனை ஸுதலத்தில் வைத்தான். எட்டாம் மன்வந்தரத்தில் அவன் மேல்வர அப்பொழுது அவதரித்த ஸார்வபௌமனென்னும் பகவான் அவனுக்குப் புரந்தரனிடத்தினின்று இந்த்ரபட்டத்தைக் கொடுக்கப்போகிறான். என்று கருத்து.

வர்ணியென்பவர் மனுவாயிருக்கப் போகிறார். பூரிஷேணன் முதலியவர் அம்மனுவின் புதல்வர்கள். ஹவிஷ்மான் ஸுக்ருதி ஸத்யர் ஜடாமூர்த்தி முதலியவர் அப்பொழுது ஸப்த ரிஷிகளாயிருக்கப்போகிறார்கள். ஸுவாஸனர் விபுத்தர் முதலியவர் தேவதைகளாயிருக்கப்போகிறார்கள். சம்புவென்பவன் இந்த்ரனாயிருக்கப்போகிறான். ஸமர்த்தனாகிய பகவான் விஸ்வஸ்ருஜித்தென்பவருடைய பார்யையாகிய விஷூசியென்பவளிடத்தில் தன்னுடைய அம்சத்தினால் அவதரித்து இந்த்ரனாகிய சம்புவுடன் ஸ்னேஹம் செய்யப்போகிறான். சிறந்த மனமுடைய தர்மஸாவர்ணியென்பவர் பதினொன்றும் மனுவாயிருக்கப்போகிறார், அவருக்கு ஸத்யன் தர்மன் முதலிய பத்துப் பிள்ளைகள் பிறக்கப்போகிறார்கள். விஹங்கமர் காமகமர் நிர்வாணர் ருசிகள் என்னுமிவர்கள் தேவதைகளாயிருக்கப் போகிறார்கள். த்ருவனென்பவன் இந்த்ரனாயிருக்கப்போகிறான். அருணர் முதலியவர் ஸப்தரிஷிகளாயிருக்கப்போகிறார்கள். அந்த மன்வந்தரத்தில் பகவான் ஆர்யகருக்கு அவருடைய பார்யையாகிய வைத்ருதையென்பவளிடத்தில் பிள்ளையாக அவதரித்துத் தர்மஸேதுவென்று ப்ரஸித்தனாயிருக்கப் போகிறான். அவன் மூன்று லோகங்களையும் பாதுகாக்கப்போகிறான். ராஜனே! ருத்ரஸாவர்ணியென்பவர் பன்னிரண்டாம் மனுவாயிருக்கப் போகிறார். தேவவான் உபதேவன் தேவஜ்யேஷ்டன் முதலியவர் அவருடைய பிள்ளைகள். ருதுதாமாவென்பவன் அந்த மன்வந்தரத்தில் இந்த்ரனாயிருக்கப் போகிறான். ஹரிதர் முதலியவர் தேவதைகளாயிருக்கப்போகிறார்கள். தபோமூர்த்தி தபஸ்வி ஆக்னீத்ரகர் முதலியவர் ஸப்த ரிஷிகளாயிருக்கப் போகிறார்கள். அப்பொழுது பகவான் ஸத்யஸஹஸ்ஸுக்கு ஸூன்ருதையிடத்தில்

பிள்ளையாகப் பிறந்து ஸ்வதாமனென்று பெயர்பெற்றுத் தன் திறமையினால் அந்த மன்வந்தரத்தை நடத்தப்போகிறான். சிறந்த மனமுடைய தேவஸாவர்ணியென்பவன் பதின்மூன்றும் மனுவாயிருக்கப்போகிறான். சித்ரஸேனன் விசித்ரன் முதலியவர் அம்மனுவின் பிள்ளைகள். ஸுகர்மர் ஸுத்ராமர் என்பவர் தேவதைகளாயிருக்கப் போகிறார்கள். திவஸ்பதியென்பவன் இந்த்ரனாயிருக்கப் போகிறான். அப்பொழுது நிர்மோகர் தத்வதர்சர் முதலியவர் ஸப்த ரிஷிகளாயிருக்கப் போகிறார்கள். அப்பொழுது பகவான் தேவஹோத்ரனுடைய பார்யையாகிய ப்ருஹதியிடத்தில் யோகேஸ்வரனென்னும் பெயர் பூண்டு பிறந்து இந்த்ரனாகிய திவஸ்பதியின் இஷ்டங்களை நிறைவேற்றப்போகிறான். இந்த்ரஸாவர்ணியென்பவன் பதினான்காம் மனுவாக வரப்போகிறான். உரு கம்பீரன் வஸு முதலியவர் அவனுடைய பிள்ளைகள். பவித்ரர் சாக்ஷுஷர் என்பவர்கள் தேவதைகளாயிருக்கப் போகிறார்கள். சுசியென்பவன் இந்த்ரனாயிருக்கப்போகிறான். அக்னி பாஹு சுசி சுக்ரர் மாகதர் முதலியவர்கள் ஸப்த ரிஷிகளாயிருக்கப் போகிறார்கள். அப்பொழுது பகவான் ஸத்ராயணனுக்கு விதானையிடத்தில் பிள்ளையாகப் பிறந்து ப்ருஹத்பானுவென்று பெயர் பெற்று யஜ்ஞ கர்மங்களைப் பரவும்படிச் செய்யப்போகிறான். ஓ மஹாராஜனே! கீழ்நடந்த ஆறுமன்வந்தரங்களையும் இப்பொழுது நடக்கிற மன்வந்தரத்தையும் மேல்வரப்போகிற ஏழு மன்வந்தரங்களையும் உனக்கு நான் சொன்னேன். இந்தப் பதினான்கு மன்வந்தரங்களே ஒரு கல்பமாம்; ஆயிரம்யுகங்கள் அடங்கினது. இந்தக் கல்பமே ப்ரஹ்மதேவனுக்கு ஒரு அஹோராத்ரம். பதின்மூன்றாவது அத்யாயம் முற்றிற்று.

## மனு முதலியவர்களுக்கு ஏற்பட்ட செயல்களை விவரித்துக் கூறுதல்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான் :—மஹானுபாவரே! மன்வந்தரத்தில் சொல்லப்பட்ட இந்த மனு முதலியவர்களில் எவரெவர் எந்தெந்த வ்யாபாரத்தில் யாவரால் நியமிக்கப்பட்டிருக்கிறார்களோ, அவற்றையெல்லாம் விவரித்துச் சொல்வீராக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார் :—மன்னவனே! மனுக்கள் மனுபுத்ரர்கள் ஸப்தரிஷிகள் இந்த்ரர்கள் தேவதைகள் ஆகிய இவர்கள் அனைவரும் யஜ்ஞாதி அவதாரங்களைச் செய்த பரமபுருஷனால் தத்தம் வ்யாபாரங்களில் நியமிக்கப் படுகிறார்கள். மன்னவனே! பரமபுருஷனுடைய அவதாரங்களான யஜ்ஞன் முதலியவர்களைமொழிந்தேனல்லவா? மனுமுதலியவர்கள் அந்த யஜ்ஞன் முதலியவர்களால் தூண்டப்பட்டு உலகத்தின் போஷணத்தை நடத்துகிறார்கள். காலக்ரமத்தில் அத்யயனம் செய்பவரில்லாமையால் அழிந்துபோன வேத ஸமூஹங்களைத் தங்கள் யோகப்ரபாவத்தினால் ஸப்த ரிஷிகள் ஸாக்ஷாத்கரித்து ப்ரசாரம் செய்கிறார்கள். அந்த வேதங்களே ஸனாதனமான தர்மத்தை அறிவிக்கின்றன. மன்னவனே! பிறகு மனுக்கள் யஜ்ஞாதி ரூபியாய் அவதரித்த பகவானால் நியமிக்கப்பட்டு மனவூக்கமுற்று அந்த வேதத்தினால் அறிவிக்கப்பட்ட தர்மத்தைத் தத்தம் காலத்தில் ப்ரஜைகளுக்கு உபதேசித்துப் பூமியில் பரவச்செய்கிறார்கள். மனுக்களின் புதல்வர்கள் அந்தந்த மன்வந்தரம் முடியும் வரையில் தத்தம் பிள்ளை பேரன் முதலியவரிசையாக வர்ணாஶ்ரம தர்மங்கள் அழியாதபடி ப்ரஜைகளைப் பாதுகாக்கின்றார்கள். ரிஷிகள் பித்ருக்கள் பூதங்கள் மனுஷ்யர்கள் இவர்களுடன் யஜ்ஞாதி கர்மங்களில்

தேவதைகள் ஹவிர்ப்பாகங்களைப் புசிக்கின்றார்கள். இந்த்ரன் யஜ்ஞரூபியான பகவானால் கொடுக்கப்பட்ட நிலைநின்ற த்ரைலோக்ய ராஜ்ய ஸம்பத்தை அனுபவித்துக்கொண்டு ப்ரஜைகளுக்கு வேண்டியவளவு மழை பெய்து மூன்று லோகங்களையும் பாதுகாக்கின்றான். யஜ்ஞ ரூபியாய் அவதரித்த ஸர்வேச்வரன் மனு முதலியவர்களை நியமித்துக்கொண்டு கபிலர் முதலிய ஸித்த உருவங்களைக்கொண்டு யுகங்களுக்குத் தகுந்தபடி ஜ்ஞானத்தை உபதேசிக்கிறான்; மரீசி முதலிய ப்ரஜாபதிகளாய் ஸ்ருஷ்டியை நடத்துகிறான்; ராஜஸ்வரூபியாய் துஷ்டஜந்துக்களை வதிக்கிறான்; மீளவும் காலரூபியாய் ஸமஸ்தவஸ்துக்களுடைய நாசத்திற்கும் காரணமாயிருக்கிறான்; ஸ்ருஷ்டிமுதலிய கார்யங்களுக்குத் தகுந்தபடி தனித்தனியே குணங்களை ஏற்றுக்கொள்கிறான். இவ்வுலகத்திலுள்ள ப்ராணிகள் பற்பல நாமரூபங்களுக்கிடமான மாயையினால் மதிமயங்கி ஜ்ஞானமே வடிவாகப் பெற்று ஒருவாறாயிருக்கின்ற ஜீவாத்மாக்களை 'இவன் தேவன், இவன் மனுஷ்யன்' என்று பலவாறு ப்ரமித்துச் சாஸ்த்ரங்களால் உன்னை நிரூபிக்கிறார்களன்றி உன்னைக் காணவல்லராகிறதில்லை. பழய வ்ருத்தாந்தங்களை அறிந்த பெரியோர்கள் ஒரு அவாந்தர கல்பத்திற்குப் பதினான்கு மன்வந்தரங்கள் ப்ரமாணமென்று கூறுகிறார்கள். பதினான்காவது அத்யாயம் முற்றிற்று

---

{வாமனவதார வ்ருத்தாந்தம். பலி விச்வஜித்யாகம் செய்து ஸ்வர்க்கத்தை ஜயிக்கையில் தேவதைகள் பயந்துமறைதல்.}

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:—ஸர்வேச்வரனாகிய ஸ்ரீமஹாவிஷ்ணு தான் 'அவாப்தஸமஸ்தகாம

வைகளும் வண்டுகள் தேன்களைப் பருகி மதித்துப்பாடிக் கொண்டிருக்கப் பெற்றவைகளுமான நந்தனம் முதலிய பற்பல உபவனங்களும் உத்யானங்களும் அமைந்து அழகாயிருக்கும். அவ்வுத்யானங்களிலும் உபவனங்களிலும் தளிர் பூ காய் பழம் முதலியவற்றால் பெரும்பாரமுடைய கிளைகள் அமைந்த கல்ப வ்ருக்ஷங்கள் நிறைந்திருக்கும். மற்றும், அங்கு ஹம்ஸம் ஸாரஸம் சக்ரவாகம் நீர்க்காகம் முதலிய ஜலபக்ஷிகள் பலவும் இனமினமாயிருக்கப்பெற்ற தாமரையோடைகள் ஏற்பட்டிருக்கும். அவ்வோடைகளில் தெய்வமடந்தையர்கள் தத்தம் காதலருடன் இறங்கி விளையாடிக்கொண்டிருப்பார்கள். த்ரிவிக்ரமாவதாரம் செய்த பகவானுடைய பாதாரவிந்தத்தினின்றுண்டான கங்காநதி அந்நகரை அகழி போலச் சுற்றிக்கொண்டிருக்கும். மற்றும், அந்நகரம் ஸ்வர்ணமயமாகையால் அக்னிபோல ஜ்வலிப்பதும் யுத்தங்களுக்காகக் கட்டின மேற்கட்டடங்கள் அமைந்து உயர்ந்திருப்பதுமாகிய ப்ராகாரம் அமையப் பெற்றிருக்கும். மற்றும், அந்நகரத்தில் உள்வாசல்கள் பொன் பட்டம் கட்டின கதவுகள் அமைந்திருக்கும். கோபுரங்கள் ஸ்படிகரத்னமயமாயிருக்கும். ராஜமார்க்கங்கள் தனித்தனியே பிரிக்கப்பட்டிருக்கும். அந்நகரம் விஸ்வகர்மாவென்னும் தெய்வத்தச்சனால் இயற்றப்பட்டது; ஸபைகளாலும் முற்றங்களாலும் கிளைவீதிகளாலும் அழகாயிருக்கும். அங்கு ஏழுடுக்கு மெத்தைகள் அளவற்றிருக்கும். மற்றும், அங்கு நாற்சந்திவீதிகள் இந்த்ரநீலமணிகளால் இயற்றப்பட்டு வஜ்ரமணிகளாலும் பவழங்களாலும் இயற்றின திண்ணைகள் அமைக்கப்பெற்றிருக்கும். யௌவனவயது ஸௌகுமார்யம் இவை மாறாதிருக்கப்பெற்றவர்களும் யௌவனவயதின் இடையில்

இருப்பவர்களும் நிர்மலமான ஆடைகள் உடுத்திருப்ப வர்களும் சிறந்த ஸௌந்தர்யமுடையவர்களுமாகிய மடந்தையர்கள் ஜ்வாலைகளோடு கூடின அக்னிகள் போல அந்நகரத்தில் திகழ்வுற்றிருப்பார்கள். காற்று தெய்வப்பெண்களின் தலைச்சொருக்கினின்று நழுவின புதிய செங்கழுநீர்ப் பூமாலைகளின் பரிமளத்தை முகந்து கொண்டு பொற்சாளரங்களினின்று வெளிவருகின்ற அகிற்புகையின் வாஸனையோடுகூடி மார்க்கத்தில் வீசிக் கொண்டிருக்கும். அந்நகரில் தெய்வமடந்தையர்கள் வெள்ளைத்துணி விரிக்கப்பெற்ற மார்க்கத்தில் நடப்பார் களேயன்றி வெறுந்தரையில் நடக்கமாட்டார்கள். முத் துக்களால் இயற்றின மேற்கட்டிக்களும், ஸ்வர்ணத் தினால் இயற்றி ரத்னங்கள் இழைக்கப் பெற்ற த்வஜங் களும் பலவகைப் பதாகைகளும் அங்கு வரிசைவரிசை யாய்க் கட்டப்பட்டிருக்கும். மயில் புறா வண்டு முதலிய பறவைகளின் கோஷங்கள் எப்பொழுதும் அமைந்திருக் கும். விமானத்தில் ஸஞ்சரிக்கின்ற மடந்தையர்களின் பாடல்களால் மங்களமுற்றிருக்கும். மத்தளம் சங்கம் கன கத்தம்பட்டம் துந்துபி தாளம் வீணை முரஜம் வேணு முதலிய வாத்ய கோஷங்களாலும் மற்றும் பலவாத்யங்க ளோடு கூடின அப்ஸரஸ்த்ரீகளின் ஆடல்களாலும் கந்தர்வாதிகளின் பாடல்களாலும் அந்நகரம் மனத்திற் கினிதாயிருக்கும். தன்னழகால் ஒன்றான திவ்யகீதங் களின் அதிஷ்டான தேவதையை வென்றிருக்கும். அதன் அழகை மற்ற எந்த நகரமும் ஜயிக்கவல்லதன்று. அந்நகரத்தின் ஒளியினால் ஸூர்யன்முதலிய க்ரஹங்க ளின் ஒளியும் மழுங்கிப்போகும். அதர்மிஷ்டர்களும் துர்ப் புத்தியுடையவர்களும் பூதங்களுக்கு த்ரோஹம் செய்ப வர்களும் மூர்க்கர்களும் அஹங்காரமுடையவர்களும்

காமுகர்களும் லோபமுடையவர்களும் அந்நகரத்தை அணுகமாட்டார்கள். இந்தத் தோஷங்களற்ற புருஷர்களே அதை அடைவார்கள். பெருஞ் சேனையோடு சென்ற அந்தப் பலி இத்தகையதான அந்த அமராவதி யென்னும் தெய்வநகரத்தைக் கிட்டித் தன் ஸேனையினால் அதை நாற்புறத்திலும் தகைந்து, இந்த்ரனுடைய மடந்தைகளுக்குப் பயத்தை விளைவித்துக்கொண்டு சுக்ராசார்யன் கொடுத்த பெருங்கோஷமுடைய சங்கத்தை எடுத்து ஊதினான். இந்த்ரன் பலியினுடைய அப்பெரிய முயற்சியைக் கண்டு ஸமஸ்த தேவகணங்களுடன் ப்ருஹஸ்பதியை நோக்கி இங்ஙனம் மொழிந்தான்.

இந்த்ரன் சொல்லுகிறான்:—பேரறிவுடையவரே! முன்பு நம்மால் தோல்வி யடைந்து நம்மேல் விரோதம் கொண்டிருக்கிற பலி இப்பொழுது செய்கிற இப்பெரு முயற்சியை நம்மால் பொறுக்க முடியாதென்று நினைக்கிறேன். இவனுக்கு இப்படிப்பட்ட திறமை எங்ஙனம் உண்டாயிற்று? இவன் சத்ருக்களை வெல்லுவதில் நிலைநின்ற திறமை அமைந்திருக்கிறான். இந்தப் பலியை எவனும் எந்த உபாயத்தினாலும் வெல்ல முடியாது. இவன் வாயினால் ஜகத்தையெல்லாம் பருகுபவன் போலவும், பத்துத் திசைகளையும் நக்குபவன் போலவும், கிளர்ந்தெரிகின்ற ப்ரளயாக்னிபோலக் கண்ணோக்கங்களால் ஆகாயத்தை எரிப்பவன் போலவும் திகழ்கிறான். என் சத்ருவாகிய பலிக்கு இங்ஙனம் பிறரால் எவ்வகையிலும் வெல்ல முடியாதிருக்கும் பெருமை எந்தக்காரணத்தினால் உண்டாயிற்று? இவன் இந்த்ரியபலம் மனோபலம் தேஹபலம் தேஜஸ்ஸு இவையெல்லாம் அமைந்து பெரிய முயற்சி கொண்டிருப்பதற்குக் காரணம் யாதோ அதை எனக்குச் சொல்வீராக.

ப்ருஹஸ்பதி சொல்லுகிறார்:—இந்த்ரனே! உன் சத்ருவாகிய இந்தப் பலிக்கு இப்படிப்பட்ட மேன்மை உண்டானதற்குக் காரணம் நான் அறிவேன். வேதங்களை ஓதியுணர்ந்த சுக்ரன் முதலியவர்கள் தங்கள் சிஷ்யனாகிய பலிக்குத் தேஜஸ்ஸை விளைவித்தார்கள். பலிக்கு இந்தப் பெருமையெல்லாம் ப்ரஹ்மதேஜஸ்ஸினால் உண்டாயிற்று. ஆகையினால் பகவானைத் தவிர உன்னைப்போன்ற மற்ற எவனாவது அல்லது நீயேயாவது இவனெதிரில் ஒரு க்ஷணமும் நிற்கமுடியாது. நீங்கள் எல்லாரும் ஸ்வர்க்கத்தைத் துறந்து எங்காயினும் போய்க் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்து சத்ருவுக்குத் தோல்வி நேரும்படியான காலத்தை எதிர்பார்த்துக் கொண்டிருப்பீர்களாக. இவன் இப்பொழுது ப்ரஹ்மதேஜோபலத்தினால் செய்யும் செயல்களெல்லாம் பயன்பெறும்படியான காலம் நேரப்பெற்று நிலைநின்ற பராக்ரமமுடையவனாயிருக்கிறான். மீளவும் இவன் அந்த ப்ராஹ்மணர்களையே அவமதித்துக் குடும்பத்துடன் அழியப்போகிறான். அந்தக் காலத்தை எதிர்பார்த்துக் கொண்டிருப்பீர்களாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—தேவதைகள் அந்தந்த ஸமயங்களில் செய்யத்தகுந்த கார்யங்களை அறிந்த ப்ருஹஸ்பதியுடன் தாங்கள் செய்யவேண்டிய கார்யத்தைப் பற்றி நன்றாக ஆலோசித்துக் கொண்டு ஸ்வர்க்கத்தைத் துறந்து காமரூபிகளாகையால் நினைத்தபடி வடிவங்களைக் கொண்டு போனார்கள். இங்ஙனம் தேவதைகள் மறைகையில், பலி அமராவதி பட்டணத்தைக் கைப்பற்றி மூன்று லோகங்களையும் தன் வசமாக்கிக் கொண்டான். பிறகு லோகங்களையெல்லாம் வென்றிருப்பவனும் தம்மைத் தொடர்ந்த சிஷ்யனுமாகிய பலியைக்கொண்டு அவனிடத்

தில் வாத்ஸல்யமுடைய ப்ருகுக்கள் ப்ராப்தமான இந்த்ர பதவியை நிலைப்படுத்திக்கொள்ளும்பொருட்டு நூறு அஸ்வமேத யாகங்களைச் செய்வித்தார்கள். பிறகு அந்தப் பலி நூறு யாகங்கள் செய்த ப்ரபாவத்தினால் மூன்று லோகங்களிலும் எல்லாத்திசைகளிலும் புகழ் பரவப் பெற்றுச் சந்த்ரன்போல விளங்கினான். நீண்ட ஸங்கல்பத்தையுடைய அந்தப் பலிசக்ரவர்த்தி தன்னை ப்ரயோஜனங்களெல்லாம் கைகூடப் பெற்றவன்போல நினைத்து ப்ராஹ்மணர்களால் கைகூடுவிக்கப்பட்ட ஸம்ருத்தியையுடைய ஸம்பத்தை அனுபவித்து வந்தான். பதினைந்தாவது அத்யாயம் முற்றிற்று.

அதிதி தன் புதல்வர்களான தேவதைகள் ஐஸ்வர்யத்தை இழந்து காணாதுபோனமைக்கு வருந்தித் தன் கணவரான கஸ்யபரிடத்தில் அதன் பரிஹாரத்தை வேண்ட அவர் பயோவ்ரதத்தை அனுஷ்டிக்கும்படி உபதேசித்தல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அப்பொழுது தேவதைகளின் தாயான அதிதி தன் புதல்வர்கள் காணாதுபோய், தைத்யர்கள் ஸ்வர்க்கத்தைக் கைப்பற்றிவருகையில், நாதனற்றவள்போலப் பரிதபித்தாள். இப்படியிருக்கையில் வெகுகாலமாய் ஸமாதியினின்று ஓய்ந்திருக்கின்ற ஜ்ஞானிகரான கஸ்யபமுனிவர் உத்ஸவங்களும் அதற்குக்காரணமான ஸந்தோஷமுமற்றுச் சூன்யம்போலிருக்கிற அந்த அதிதியின் ஆஸ்ரமத்திற்கு ஒருகால்வந்தார். குருகுலாலங்காரனே! அம்முனிவர் விதிப்படி பூஜை செய்யப்பெற்று, ஆஸனத்தில் உட்கார்ந்து முகம் வாடியிருக்கிற தன் பத்னியான அதிதியை நோக்கி இங்ஙனம் மொழிந்தார்.

கச்யபர் சொல்லுகிறார்:—மங்கள ஸ்வபவமுடையவளே! இப்பொழுது இவ்வுலகத்தில் ப்ராஹ்மணர்களுக்காவது பசுக்களுக்காவது தர்மத்திற்காவது ம்ருத்யுவின் இச்சையை அனுஸரித்திருக்கிற மற்ற ஜனங்களுக்காவது ஒரு கெடுதியும் இல்லையே? என் அகமுடையவளே! நமது அகத்தில் தர்மத்திற்காவது அர்த்தத்திற்காவது காமத்திற்காவது ஏதேனும் கெடுதி நேரிட்டிருக்கின்றதா என்ன? இந்த இல்லறவாழ்க்கையில் இந்த்ரியங்களை வெல்லமுடியாத மூடர்களே வருந்துவார்களன்றி உன்னைப் போன்ற ஜிதேந்த்ரியர்கள் மனப்பற்றைக் கொள்ளமாட்டார்கள். நீ குடும்பகார்யத்தில் ஊக்கமுற்றிருக்கையில், அதிதிகள் வந்து எதிர்கொள்வது முதலியன செய்து உன்னால் பூஜைசெய்யப்பெறாமல் நம் க்ருஹத்தினின்று திரும்பிப் போனார்களா என்ன? அதிதிகள் வந்து ஜலத்தினாலுங்கூடப் பூஜை செய்யப்பெறாமல் திரும்பிப்போவார்களாயின், அவ்வீடுகள் நரிகள் வஸிக்கும் பாழிகள்போன்றவைகளேயாம். பதிவ்ரதையே! நல்லியற்கையுடையவளே! நான் புறப்பட்டுப்போனபின்பு நீ மனவருத்தமுற்றுத் தத்தகாலங்களில் ஆஹவனீயம் முதலிய அக்னிகளில் ஹவிஸ்ஸுக்களால் ஹோமம் செய்யாமல் தவறிப்போயினையா என்ன? அக்னி உரியபடி பூஜிக்கப்பட்டு வருமாயின், எல்லாவிருப்பங்களையும் கறக்கும். க்ருஹஸ்தாச்ரமத்திலிருக்கும் புருஷன் அந்த அக்னியின் பூஜையினால் புண்யலோகங்களைப் பெறுவான். ப்ராஹ்மணனையும் அக்னியையும் ஸமஸ்த தேவதாஸ்வரூபனான பகவானுக்கு முகமென்று ச்ருதிகள் கூறுகின்றன. ஆழ்ந்த மனமுடையவளே! உன் புதல்வர்கள் அனைவரும் க்ஷேமமாயிருக்கின்றார்களல்லவா? உன் முகக்குறிகளால் உன்மனம் அஸ்வஸ்த

மாயிருப்பதுபோலத் தோற்றுகின்றது. அதற்குக் காரணம் இன்னதென்று தெரியவில்லையாகையால் உன்னை வினவுகின்றேன், சொல்வாயாக.

அதிதி சொல்லுகிறாள்:—ப்ராஹ்மண ஶ்ரேஷ்டரே! ப்ராஹ்மணர்களுக்கும் பசுக்களுக்கும் தர்மத்திற்கும் இவ்வுலகத்திலுள்ள மற்ற ஜனங்களுக்கும் க்ஷேமமே. என் அகமுடையவரே! தர்ம அர்த்த காமங்களுக்கு விளைநிலமாகிய க்ருஹஸ்தாஶ்ரமம் பூஜையை விரும்புகிற அக்னிகள் அதிதிகள் ப்ருத்யர்கள் பிச்சைக்காரர்கள் ஆகிய இவையெல்லாம் உம்முடைய நினைவினால் குறைவற்றிருக்கின்றன. மஹானுபாவரே! நீர் ப்ரஜைகளுக்கு ப்ரபுவாயிருந்து இத்தகைய தர்மங்களை உபதேசித்து அனுஷ்டிக்கும்படி செய்வித்துக் கொண்டிருக்கையில், நான் விரும்பும்விருப்பம் எதுதான் எனக்குக் கைகூடாது. 'ஆனால் ஏன் மனவருத்த முற்றிருக்கிறாய்?' என்றால் சொல்லுகிறேன். மரீசி மஹர்ஷியின் புதல்வரே! ஸத்வ ரஜஸ் தமோகுணங்களில் ஒவ்வொன்று தலையெடுக்கப் பெற்றிருக்கிற தேவர் தைத்யர் முதலிய இந்த ப்ரஜைகளெல்லாம் உம்முடைய மனத்தினின்றும் சரீரத்தினின்றும் உண்டாயினவாகையால், அவை யெல்லாவற்றையும் நீர் துல்யமாகப் பார்க்குந்தன்மையுடையவர். ப்ரபூ! ஆயினும் மஹேஶ்வராகிய உம்மை நீர் ப்ரீதியுடன் பணிகிறவர்களிடத்தில் பக்ஷபாத முடையவரல்லவா? ஆகையால் உம்மை ப்ரீதியுடன் பணிகின்ற எனக்கு நன்மை உண்டாகும் உபாயத்தை ஆலோசிக்கவேண்டும். நல்ல வ்ரதமுடையவரே! சத்ருக்களால் ஐஶ்வர்யமும் வாஸஸ்தானமும் பறிக்கப்பெற்று வருந்துகின்ற எங்களைப் பாதுகாக்கவேண்டும். நீர் எல்லாத் திறமைகளும் அமைந்தவரல்லவா? உம்முடைய பத்னியாகிய நான் எவ்

விதத்திலும் துக்கம் நேரக்கூடாதவளாயினும் இப்பொழுது தைத்யர்களால் இருப்பிடத்தினின்று துரத்தப்பட்டு துக்கஸாகரத்தில் மூழ்கிக் கிடக்கிறேன். இப்பொழுது ப்ரபலர்களாயிருக்கிற தைத்யர்களால் என்னுடைய ஐஶ்வர்யம் ஸம்பத்து புகழ் வாஸஸ்தானம் இவையெல்லாம் பறிக்கப்பட்டன. பிறர் கார்யங்களை நிறைவேற்றிக் கொடுக்குந் திறமையுடையவரே! என் புதல்வர்கள் இவற்றையெல்லாம் மீளவும் முன்போலவே எந்த உபாயத்தினால் பெறுவார்களோ, அதை உம்முடைய மங்களமான புத்தியினால் ஆலோசித்து நடத்தவேண்டும். நீர் பிறர்க்கு க்ஷேமத்தை விளைவிப்பவர்களில் சிறந்தவரல்லவா?

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் அதிதியினால் வேண்டப்பெற்ற கஶ்யபப்ரஜாபதி புன் சிரிப்புடன் அதிதியை நோக்கி மேல்வருமாறு மொழிந்தார்.

கஶ்யபர் சொல்லுகிறார்:—நல்லவளே! ஸ்ரீமஹாவிஷ்ணுவினுடைய மாயையின் பலம் அளவற்றது. அந்த மாயையினால் மதிமயங்கியல்லவோ இவ்வுலகமெல்லாம் புத்ராதிகளிடத்தில் ஸ்நேஹமாகிற பாசத்தினால் கட்டுண்டிருக்கின்றன? ப்ருதிவி முதலிய பஞ்சபூதங்களின் பரிணாமமான தேஹம் எங்கே? ப்ரக்ருதியைக் காட்டிலும் விலக்ஷணனான ஆத்மா எங்கே? இங்ஙனம் ஒன்றை விட ஒன்று வெவ்வேறான தேஹம் ஆத்மா இவ்விரண்டில் கணவன் பிள்ளை முதலியவர் எதைச் சேர்ந்தவர்கள்? தேஹத்தோடு ஸம்பந்தமுடையவர்களா? ஆத்மாவோடு ஸம்பந்தமுடையவர்களா? ஆத்மாவுக்குப் பிள்ளைபெண்டிர் கணவன் முதலியவர்களோடு ஸம்பந்தம் தேஹத்தின் மூலமாய் உள்ளதேயன்றி நேரே கிடையாது. தேஹம் வளர்தல் குறைதல் முதலிய விகாரங்களுக்கிடமாகையாலும் பஞ்சபூதங்களின் பரிணாமமாகையாலும் நித்யமன்

ருகையால் அதைப்பற்றி ஏற்பட்ட பிள்ளை முதலியவர்களிடத்தில் ஸ்னேஹம் உண்டாவதற்குக் காரணம் தேஹாத்மப்ரமமே யொழிய வேறன்று. ஆகையால் தேஹாத்மப்ரமத்தைத் துறந்து அந்தத் தேஹத்தைத் தொடர்ந்த பிள்ளை முதலியவர்களிடத்தில் ஸ்னேஹத்தை மாற்றிக்கொண்டு அவர்களைப்பற்றிச் சிந்திக்காதிருக்கவேண்டும். உனக்கு இவ்விருப்பத்தை நிறைவேற்றிக்கொள்ள வேண்டுமென்னும் பிடிவாதம் உள்ளதாயின், வாஸுதேவனை ஆராதிப்பாயாக. அவன் தன்னை ஆராதிக்கும் ஜனங்களுக்கு ஹிதம் செய்பவன்; அவன் ஸமஸ்தப்ராணிகளின் ஹ்ருதயங்களில் வாஸஞ்செய்பவன்; நன்மையை விரும்பும் ஜனங்களால் வேண்டப்பெற்றவன்; ஷாட்குண்ய பூர்ணன்; அபாரமாகக்கொடுக்குந் தன்மையுடையவன். தன்னைப் பற்றினவர்களுடைய வருத்தங்களைப் போக்குந் தன்மையன்; தீனர்களிடத்தில் தயைசெய்பவன். ஷாட்குண்ய பூர்ணனும் அவாப்தஸமஸ்தகாமனுமாகிய பரமபுருஷனுடைய ஸேவை வீணாகாததென்பது என் அபிப்ராயம். அவன் உன் விருப்பங்களை நிறைவேற்றிக் கொடுப்பான்.

அதிதிசொல்லுகிறாள்:—மஹானுபாவரே! நான் பகவானை எவ்விதத்தில் ஆராதிக்கவேண்டும்? நான் எப்படி ஆராதித்தால், ஸத்ய ஸங்கல்பனான பகவான் என் மனோரதத்தை நிறைவேற்றுவான்? அந்தணர் தலைவரே! பிள்ளைகளுடன் வருந்துகின்ற என் விஷயத்தில் எந்தவிதத்தில் சீக்ரமாக ஸந்தோஷம் அடைவானோ, அவ்விதத்தை எனக்கு உபதேசிக்கவேண்டும்.

கஶ்யபர் சொல்லுகிறார்:—நான் ப்ரஜைகளை விரும்பி, ப்ரஹ்மதேவனை வேண்டுகையில், அவர் எனக்கு ஒரு வ்ரதத்தை உபதேசித்தார். அதை நான் உனக்குச்

சொல்லுகிறேன். அந்த வ்ரதம் ப்ரஹ்ம ருத்ராதிகளுக்கும் ப்ரபுவான பரமபுருஷனைச் சீக்ரத்தில் ஸந்தோஷம் அடையச் செய்யும். பால்குனமாதத்தில் சுக்லபக்ஷத்தில் பயோவ்ரத மென்னும் வ்ரதத்தைப் பன்னிரண்டு நாள்கள் அனுஷ்டிக்கவேண்டும். அந்த வ்ரதத்தினால் மாறாத பக்தியுடன் தாமரைக்கண்ணனாகிய கண்ணனை ஆராதிக்கவேண்டும். அமாவாஸ்யையின்னன்று கிடைக்குமாயின் காட்டுப்பன்றிகள் தோண்டின மண்ணால் உடம்பைப் பூசிநதியில் 'பூமிதேவி! உன்னை யதாஸ்தானத்தில் நிலைநிறுத்தவிரும்பிப் பகவான் ஆதிவராஹ உருவங்கொண்டு உன்னைப் பாதாளத்தினின்றும் எடுத்தான். உனக்கு நமஸ்காரம். என் பாபத்தைப் போக்குவாயாக' என்னும் இம்மந்த்ரத்தை ஜபித்துக்கொண்டு ஸ்நானஞ் செய்யவேண்டும். பிறகு ஸந்த்யாவந்தனம் முதலிய நியமங்களை முடித்துக்கொண்டு பூமியில் ஓரிடத்தை அலங்கரித்து அவ்விடத்திலும் கும்பஜலத்திலும் ஸூர்யமண்டலத்திலும் அக்னியிலும் குருவினிடத்திலும் மனவூக்கத்துடன் பகவானை ஆராதிக்கவேண்டும். பரமபுருஷனே! நீ ஷாட்குண்ய பூர்ணன். நீ அபாரமாகக் கொடுக்குந் தன்மையுடையவன்; ஸமஸ்த பூதங்களிடத்திலும் வாஸஞ்செய்பவன்; அதைப்பற்றியே உன்னை வாஸுதேவனென்று கூறுகிறார்கள். நீ ஸமஸ்த சேதனாசேதனங்களையும் ஸாக்ஷாத்கரித்துக் கொண்டிருப்பினும் அவற்றின் குணங்கள் தீண்டப்பெறாதவன். புருஷஸூக்தத்தில் நிரூபிக்கப்படும் மஹாபுருஷன் நீயே. இத்தகைய உனக்கு நமஸ்காரம். நீ கண்முதலிய இந்த்ரியங்களுக்கு விஷயமாகாதவன். அணுஸ்வரூபனான ஜீவனிடத்திலும் உட்புகுந்திருப்பவனாகையால் நீ ஜீவனைக்காட்டிலும் ஸூக்ஷ்மன். ஜீவனுக்குள் புகுந்து நிறைந்திருப்பதுபோல

ப்ரக்ருதியிலும் புகுந்து நிறைந்திருக்கின்றனையாகையால் உன் ஸ்வரூபத்தை அளவிடமுடியாது. நீ இருபத்து நான்கு தத்வங்களும் சரீரமாயிருக்கப்பெற்று அவற்றின் ஸ்வரூபத்தை நன்றாக உணர்ந்தவன். ஸத்வாதி குணங்களின் பரிணாம ரூபமான அவ்விருபத்து நான்கு தத்வங்களுக்கும் நீயே காரணன். உனக்கு நமஸ்காரம். யஜ்ஞாதி கர்மங்களை வெளியிடுவதும் யஜ்ஞ புருஷனாகிய ஸ்ரீமஹாவிஷ்ணுவை நன்றாக எடுத்துரைப்பதும் [1] இரண்டு தலைகளும் மூன்று பாதங்களும் நான்கு கொம்புகளும் ஏழு ஹஸ்தங்களும் அமைந்த ஒரு அற்புத வ்ருக்ஷம்போன்றதுமாகிய வேதவித்யையைச் சரீரமாகவுடையவன். அத்தகைய உனக்கு நமஸ்காரம். உன்பாதத்தினின்று நழுவின கங்காஜலத்தைச் சிரத்தில் தாங்கினமையால் பரிசுத்தனாகிச் சிவனென்று பெயர் பெற்றவனும் பிறந்தவுடனே அழுதமையால் ருத்ரனென்று பெயர் பெற்றவனும் எல்லாவித்யைகளுக்கும் நிர்வாஹகனும் பூதங்களுக்கு ப்ரபுவும் உமாபதியுமாகிய சங்கரன் உனக்குச் சரீரமாகி உன்னால் தூண்டப்பட்டு ஸம்ஹாரத்தை நடத்துகிறான். ஆகையால் அதுவும் உன்செயல்தான். நீயே ப்ரஹ்மதேவனுக்கு அந்தர்யாமியாயிருந்து உலகங்களைப் படைக்கின்றனை. ஸமஸ்த பூதங்களும் உன்னால் தான் பிழைத்திருக்கின்றன. ப்ராண

1. ப்ரவ்ருத்திநிமித்தம் அதற்கு இடமான வஸ்து இவைகளை இரண்டு தலைகளாகவும், இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலமென்கிற மூன்று காலங்களை மூன்று பாதங்களாகவும், நாமம் ஆக்யாதம் நிபாதம் உபஸர்க்கம் என்று நான்கு வகைப்பட்ட சப்தங்களை நான்கு கொம்புகளாகவும், ஏழு வேற்றுமைகளை ஏழு ஹஸ்தங்களாகவும் சொல்லுகிறது. உலகத்தில் புலப்படும் வ்ருஷபங்களுக்கு இரண்டு கொம்புகளும் நான்கு பாதங்களும் ஒருதலையும் உள்ளவை. ஆகையால் இந்தவேதமாகிற வ்ருஷபம் விலக்ஷணமென்று நிரூபிக்கப்படுகிறது.

வாயுவும் நீயே. நீ ப்ரஹ்மதேவன் முதலாகப் பூச்சி புழு வரையிலுமுள்ள ஸகலமான ஜகத்திற்கும் அந்தராத்மாவாயிருக்கின்றனை. நீயே யோக ஸ்ப்ருதிகளை வெளியிட்டு அந்த யோகைஸ்வர்யத்தை நிர்வஹிக்கின்றனை. இத்தகைய உனக்கு நமஸ்காரம். நீயே முதன்மையான தேவன்; தேவர்களுக்கும் தேவன். நீயே நாராயணன்; எல்லாமறிந்தவன். நீ நரநாராயணரிஷிகளாய் அவதரித்தவன். நீ உன்னைப் பற்றினவர்களுடைய மனவருத்தங்களைப் போக்குந் தன்மையுடையவன். உனக்கு நமஸ்காரம். நீ இந்த்ரநீலம்போலக் கரிய திருமேனியுடையவன்; ஸ்ரீமஹாலக்ஷ்மியால் அணைக்கப்பெற்றவன். ப்ரஹ்ம ருத்ராதிகளுக்கு அந்தர்யாமியாகி ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களை நீயே நிர்வஹிக்கின்றனை. நீ கேசவாதி த்வாதச மூர்த்திகளாய் அவதரித்தவன்; பீதாம்பரமுடுத்தவன். உனக்கு நமஸ்காரம். வரேண்யா! வரங்கொடுப்பவர்கள் அனைவரிலும் சிறந்தவன் நீயே. ஆகையால் தான் பண்டிதர்கள் தங்கள் நன்மை நிறைவேறும்பொருட்டு உன் பாத தூளியை உபாஸிக்கிறார்கள். ஸ்ரீமஹாலக்ஷ்மியும் தேவதைகளும் உன் பாதாரவிந்தங்களின் வாஸனையை விரும்பினவர்கள் போன்று உன்னை அனுஸரிக்கிறார்கள். வாஸுதேவனே! ஷாட்குண்ய பூர்ணனாகிய அப்படிப்பட்ட நீ எனக்கு அருள் புரிவாயாக' என்று இம் மந்த்ரங்களால் பகவானை ஆவாஹனம் செய்து அப்பகவானுக்கு ஆஸனமளித்து அர்க்யம் பாத்யம் முதலிய உபசாரங்களும்செய்து ப்ரத்தையுடன் ஆராதிக்க வேண்டும். இங்ஙனம் ஆராதித்த பின்பு கந்தபுஷ்பங்களோடுகூடின க்ஷீரத்தினாலும் சுத்தஜலத்தினாலும்வாஸுதேவபகவானுக்கு ஸ்நானம்செய்வித்து. வஸ்த்ரம் யஜ்ஞோபவீதம் ஆபரணம் பாத்யம்ஆசமனம் இவைகளால்

ஆராதித்துக் கந்தம் புஷ்பம் முதலிய உபசாரங்களும் ஸமர்ப்பிக்கவேண்டும். ஒவ்வொரு உபசாரம் செய்யும் பொழுதும் த்வாதசாக்ஷரமந்த்ரத்தை உச்சரிக்கவேண்டும். மீளவும் அம்மந்த்ரத்தை உச்சரித்துக்கொண்டே, விபவம் உள்ளதாயின், [1] சால்யன்னத்தை நெய்யும் வெல்லமும் சேர்த்துப் பாலில் பக்வஞ்செய்து நைவேத்யம் கொடுத்து த்வாதசாக்ஷரமந்த்ரத்தினால் ஹோமம் செய்து நிவேதனம்செய்த அந்தப் பாயஸான்னத்தைக், கிடைப்பானாயின், புசிக்கக்கூடிய ப்ராஹ்மணனுக்குக் கொடுக்கவேண்டும். சேஷாதபக்ஷத்தில் தானாவது புசிக்க வேண்டும். இங்ஙனம் ஆராதித்த பின்பு ஆசமனம் கொடுத்துத் தாம்பூலம் ஸமர்ப்பித்து, அப்பால் த்வாதசாக்ஷரமந்த்ரத்தை நூற்றெட்டுத்தரம் ஜபித்துப் பகவானை ஸ்தோத்ரங்களால் துதிக்கவேண்டும். அப்பால் ப்ரதக்ஷிணம் செய்து தண்டம் போல் பூமியில் விழுந்து ஸந்தோஷத்துடன் நமஸ்கரிக்கவேண்டும். பகவானுக்கு ஸமர்ப்பித்த புஷ்பம் முதலியவற்றைக் களைந்து சிரஸில் தரித்துக்கொண்டு அப்பால் பகவானை உத்வாஸனம் செய்யவேண்டும். பிறகு இரண்டுபேர்களுக்குக் குறையாமல் ப்ராஹ்மணர்களைப் பாயஸான்னத்தினால் விதிப்படி புஜிப்பிக்கவேண்டும். பிறகு நன்கு பூஜிக்கப்பட்ட அந்த ப்ராஹ்மணர்களால் அனுமதி கொடுக்கப்பெற்று இஷ்டபந்துக்களுடன் அவர்கள் புசித்து மிகுந்த அன்னத்தைப் புசிக்கவேண்டும். அப்பால் அன்றையதினம் ராத்ரி ப்ரஹ்மசர்யத்துடன் படுத்திருக்கவேண்டும். இங்ஙனம் முதனாள் கழிகையில் மற்றைநாள் விடியற்காலையில் எழுந்து ஸ்நானம் செய்து பரிசுத்தனாகி மனவூக்கத்துடன் முதனாள் செய்த ப்ரகாரமாகவே பகவானை ஆவாஹனம்

1. செம்பா அரிசியின் அன்னம்.

செய்து பாலாலும் சுத்த ஜலத்தாலும் ஸ்நானம் செய்வித்துக் கந்தம்புஷ்பம் தீபம் அர்க்யம் பாத்யம் ஆசமனம் முதலியவற்றால் ஆராதிக்கவேண்டும். இங்ஙனமே வ்ரதம் முடியும்வரையில் தினந்தோறும் ஆராதிக்கவேண்டும். பாலையே ஆஹாரமாகப் புசித்துக்கொண்டு பகவானை ஆராதிப்பதில் மிக்க விருப்பமுற்று இந்த வ்ரதத்தை அனுஷ்டிக்கவேண்டும். முதனாள்போலவே அக்னியில் ஹோமஞ்செய்து ப்ராஹ்மணர்களையும் புசிப்பிக்கவேண்டும். இங்ஙனம் தினந்தோறும் பன்னிரண்டுநாள் வரையில் பாலையே புசித்துக்கொண்டிருந்து பகவானை ஆராதித்தல் ப்ராஹ்மணர்களைப் புசிப்பித்தல் அவர்களைப் பூஜித்தல் ப்ரஹ்மசர்யம் தவறாதிருத்தல் வெறுந்தரையிற் படுத்தல் மூன்று காலமும் ஸ்நானம் செய்தல் ஆகிய இவற்றையெல்லாம் சுக்லபக்ஷப்ரதமை தொடங்கி த்ரயோதசிவரையில் தவறாமல் நடத்தவேண்டும். வீண்பேச்சுக்களையும் பலவகையான போகங்களையும் துறக்கவேண்டும். அஸத்துக்களோடு பேசலாகாது. ஸமஸ்த பூதங்களுக்கும் ஹிம்ஸை செய்யாமல் வாஸுதேவனையே அனுஸந்தித்துக்கொண்டிருக்கவேண்டும். இங்ஙனம் பன்னிரண்டு தினங்கள் கடந்த பின்பு த்ரயோதசியின்று சாஸ்த்ரங்களை உணர்ந்த நான்கு ருத்விக்குக்களைக்கொண்டு சாஸ்த்ரத்திற் சொன்ன விதியின்படி பஞ்சாம்ருதங்களால் பகவானுக்கு ஸ்நானம் செய்விக்கவேண்டும். பணத்தில் லோபமின்றி ஸமஸ்த உபசாரங்களும் அமைந்திருக்குமாறு பகவானுக்குப் பெரிய பூஜை செய்யவேண்டும். மிகுந்த ஒளியுடைய ஸ்ரீமஹாவிஷ்ணுவைக் குறித்துப் பாலில் ஹவிஸ்ஸைப் பக்வம் செய்து மனவூக்கத்துடன் புருஷஸூக்த மந்த்ரங்களைச் சொல்லி ஹோமம் செய்து பரமபுருஷனை ஆராதிக்க

வேண்டும். அப்பால் அப் பரமபுருஷனுக்கு ப்ரீதியை விளைப்பதும் அறுசுவை அமைந்ததுமாகிய நைவேத்யத்தை அவனுக்கு நிவேதனம் செய்யவேண்டும். பிறகு, ஜ்ஞானம் அனுஷ்டானம் இவை நன்றாகவுடைய ஆசார்யனையும் ருத்விக்குக்களையும் தன் சக்திக்குத் தகுந்தபடி ஆடை ஆபரணம் பசு இவைகளால் ஸந்தோஷப்படுத்த வேண்டும். அதுவே ஸ்ரீமஹாவிஷ்ணுவுக்கு மிகுந்த ப்ரீதியை விளைவிக்கவல்ல ஆராதனமாம். பரிசுத்தமான புன்னகை யமைந்தவளே! அறுசுவையமைந்த மேலான அன்னத்தினால் அந்த ருத்விக்குக்களையும் அங்கு வந்திருந்தவர்களும் புசிப்பிக்கத்தகுந்தவர்களுமான மற்ற ப்ராஹ்மணர்களையும் புசிப்பிக்கவேண்டும். அப்பால் ஆசார்யனுக்கும் ருதவிக்குக்களுக்கும் தன் பணத்திற்குத் தகுந்தபடி தக்ஷிணை கொடுக்கவேண்டும். அங்கு வந்திருக்கின்ற சண்டாளன் வரையிலுமுள்ள அனைவரையும் அன்னம் முதலியவற்றால் ஸந்தோஷப்படுத்த வேண்டும். இங்ஙனம் தீனர் அந்தர் க்ருபணர் முதலிய அனைவரும் புசித்த பின்பு அதெல்லாம் பகவானுக்கு ஸந்தோஷத்தை விளைப்பதே யென்று பாவித்துத் தானும் பந்துக்களோடு புசிக்கவேண்டும். முதனாளும் கடைசிநாளும் இடையில் பன்னிரண்டு நாள்களுமாகச் சேர்ந்த பதினான்குநாள்களில் தினந்தோறும் ஆடல் பாடல் வாத்யம் ஸ்தோத்ரம் ஸ்வஸ்திவாசனம் இவைகளாலும் பகவானுடைய கதைகளாலும் அவனைப் பூஜிக்க வேண்டும். பரமபுருஷனுடைய ஆராதனங்களிற்சிறந்த இந்தப் பயோவ்ரதமென்னும் வ்ரதத்தை எனக்கு ப்ரஹ்மதேவன் சொன்னான். அதை நான் உனக்குச் சொன்னேன். மிகுந்த பாக்யமுடையவளே! நீயும் இந்தப்பயோவ்ரதத்தை நன்றாக அனுஷ்டித்து இதனால்,

பரிசுத்தமான பக்தியையுடைய மனத்தினால் பணியத் தகுந்த பகவானை ஆராதிப்பாயாக. இந்த வ்ரதம் ஸர்வ யஜ்ஞமென்னும் பேருடையது. இந்த ஒரு வ்ரதமே ஸமஸ்த யஜ்ஞ வ்ரதங்களுக்கும் நிகராயிருக்கும். மங்கள ஸ்வபாவமுடையவளே! இது எல்லாத் தவங்களிலும் சிறப்புடையது. இதை அனுஷ்டித்தால் எல்லாத் தானங்களும் செய்தாற்போலாகும். ஏனென்றால், இந்த வ்ரதம் ஸர்வேச்வரனான பரமபுருஷனுக்கு மேலான த்ருப்தியை விளைவிக்கவல்லது. எந்த நியமங்களாலும் யாகங்களாலும் பகவான் ஸந்தோஷம் அடைவானோ, அந்த நியமங்களே சிறந்த நியமங்களாம். அந்த யாகங்களே சிறந்த யாகங்களாம். மற்றவையெல்லாம் பயனற்றவைகளே. மங்கள ஸ்வபாவமுடையவளே! ஆகையால் நீ மனவூக்கமுற்று ச்ரத்தையுடன் இந்த வ்ரதத்தை அனுஷ்டிப்பாயாக. இதனால் பகவான் ஸந்தோஷம் அடைந்து உனக்கு வரங்களைக் கொடுப்பான்.

பதினாறாவது அத்யாயம் முற்றிற்று.

அதிதி பயோவ்ரதத்தை அனுஷ்டிக்கையில், பகவான் அவளுடைய விருப்பத்தை நிறைவேற்றும் பொருட்டு அவளுக்குப் பிள்ளையாகப் பிறத்தல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— இங்ஙனம் தன் பர்த்தாவாகிய கச்யபரால் வ்ரதத்தை அனுஷ்டிக்கும்படி உபதேசிக்கப்பட்ட அவ்வதிதி சோம்பலின்றி மனவூக்கத்துடன் பன்னிரண்டுநாள் அந்தப் பயோவ்ரதத்தை அனுஷ்டித்தாள். அவள் புத்தியாகிற ஸாரதியைக்கொண்டு மனத்தினால் இந்த்ரியங்களாகிற துஷ்டக் குதிரைகளை அடக்கி மற்றொன்றிலும் செல்லாத புத்தியினால் மஹாபுருஷனும் ஸர்வேச்வரனுமாகிய வாஸுதேவனையே சிந்தித்துக்

கொண்டிருந்து பயோவ்ரதத்தை அனுஷ்டித்தாள். அவள், ஸர்வாந்தராத்மாவும் ஷாட்குண்யபூர்ணனுமாகிய வாஸுதேவனிடத்தில் மனத்தை மற்றொன்றிலும் செல்லாதபடி புத்தியினால் நிலைநிறுத்தி வ்ரதத்தை அனுஷ்டித்துக் கொண்டிருக்கையில், பீதாம்பரம் உடுத்துச் சதுர்ப்புஜனாய்ச் சங்கம் சக்ரம் கதை இவை தரித்துத் திகழ்கின்ற ஆதிபுருஷனாகிய வாஸுதேவபகவான் அவளுக்கு ப்ரத்யக்ஷமாய் வந்து தோன்றினான். அவ்வதிதி அங்ஙனம் கண்ணுக்குப் புலப்படுகின்ற வாஸுதேவபகவானைக் கண்டு விரைந்தெழுந்து ப்ரீதியினால் தழுதழுத்துச் சரீரத்தைத் தண்டம்போல் பூமியில் சாய்த்து நமஸ்கரித்தாள். அவள் எழுந்து கைகூப்பிக் கொண்டு வெறுமனே நின்றிருந்தாளன்றி, ஆநந்த நீர்களால் கண்கள் கலங்கி உடம்பெல்லாம் மயிர்க்கூச்சம் நிறைந்து அந்தப் பகவானுடைய காட்சியாகிற மஹோத்ஸவத்தினால் சரீரத்தில் நடுக்கம் உண்டாகப்பெற்று ஸ்தோத்ரம் செய்யமுடியாதிருந்தாள். குருகுலாலங்காரனே! அனந்தரம் அவ்வதிதி, ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கும் யஜ்ஞங்களுக்கும் உலகங்களுக்கும் நாதனாகிய பகவானைக் கண்டு கண்களால் பருகுபவள்போன்று ப்ரீதியினால் தழுதழுத்த உரையுடன் மெல்லமெல்லத் துதிசெய்யத் தொடங்கினாள்.

அதிதி சொல்லுகிறாள்:—யஜ்ஞங்களுக்கு ப்ரபுவே! யஜ்ஞங்களில் கொடுக்கிற ஹவிஸ்ஸைப் புசிப்பவனே! தன்னைப் பற்றினவர்களைக் கைவிடாதவனே! கங்கர்தி புண்ய தீர்த்தங்களுக்கு விளைநிலமான பாதாரவிந்தங்களும் பரிசுத்தமான புகழும் கேட்ட மாத்ரத்தில் மங்களத்தை விளைக்கவல்ல நாமங்களும், வருந்திச் சரணம் அடைந்தவர்களின் துக்கங்களைப் போக்கவல்ல தோற்றங்களும்

உடையவனே! என்னைப்போன்ற தீனர்களுக்கு நீ நாதனு யிருக்கின்றனை யல்லவா? ஆகையால் எங்களுக்கு ஸுகத்தை விளைப்பாயாக. நீ ஜகத்தையெல்லாம் சரீரமாக வுடையவன். ஆகையால் தான் நீ இவ்விடத்தில் எனக்குத் தோன்றினை. தன்னைப் பற்றினவர்களுடைய துக்கங்களைப் போக்குந்தன்மையுள்ள உனக்கு நமஸ்காரம். ப்ரபஞ்சத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களுக்கு நீயே காரணன். அவற்றை நிறைவேற்றும்பொருட்டுப் பலவாறு பரிணமிக்குந்தன்மையுடைய மாயையின் குணங்களான ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களை உன்னிச்சையினால் ஏற்றுக்கொள்கின்றனை. நீ ஸூக்ஷ்மர்களான ஜீவாத்மாக்களிடத்திலும் அந்தராத்மாவாய் வ்யாபித்திருக்கின்றனை. நீ ப்ரபஞ்சமாகப் பரிணமிக்கினும் விகாரங்களெல்லாம் உன் சரீரமான ப்ரக்ருதி புருஷர்களைச் சேர்ந்தவைகளேயன்றி உன்னைச் சேர்ந்தவைகளன்று. ஆகையால் என்றும் வேறுபாடின்றி ஸ்வரூபத்தினாலும் குணங்களாலும் நீ ஒரேவிதமாயிருப்பவன். மற்றும், நீ ஸர்வகாலமும் தோற்றுவதும் கல்யாணகுணங்களெல்லாம் நிறைந்திருப்பதும் அளவிறந்த ஆநந்தமே வடிவாயிருக்கப்பெற்றதுமாகிய உன் ஸ்வரூபத்தை எப்பொழுதும் உள்ளபடி அறிந்தநுபவித்துக் கொண்டிருக்கின்றனையாகையால் ஜீவாத்மாக்களுக்குள்ள அஜ்ஞானம் உனக்கு ஒருகாலும் கிடையாது. இங்ஙனம் நித்யஜ்ஞாநந்தஸ்வரூபனாகிய உனக்கு நமஸ்காரம். அனந்தனே! ஸந்தோஷமுற்றிருக்கின்ற உன்னிடத்தினின்று ப்ராணிகளுக்கு மேலான ஆயுஸ்ஸு, இணையில்லாத அழகு பலம் முதலியவை அமைந்த சரீரம், நினைத்த போகங்களை அநுபவிக்கும்படியான செல்வப்பெருக்கு, ஸ்வர்க்கம், பூமி, பாதாளம், அணிமாதியான ஸமஸ்தயோ

கஸித்திகள், தர்ம அர்த்த காமங்கள், ஸம்சயமில்லாத ஞானம் ஆகிய இவையெல்லாம் ஸுலபமாக உண்டாகின்றன. சத்ருஜயம் முதலிய மற்ற வரங்கள் உண்டாவதைப் பற்றிச் சொல்லவேண்டுமோ?

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மன்னவனே! செந்தாமரைக் கண்ணனாகிய பகவான் இங்ஙனம் அதிதியால் துதி செய்யப்பெற்று ஸமஸ்த ப்ராணிகளுடைய மனோபாவத்தையும் அறிந்தவனாகையால் மேல்வருமாறு மொழிந்தான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—தேவதைகளின் தாயே! சத்ருக்களாகிய தைத்யர்களால் செல்வம் பறியுண்டு வாஸஸ்தானத்தினின்றும் துரத்தப்பெற்று வருந்துகின்ற உன்புதல்வர்களுக்கு முன்போல ஐஶ்வர்யம் வரவேண்டுமென்று நீ நெடுநாளாய் விரும்பியிருப்பது எனக்குத் தெரியும். கொடிய மதமுடைய அஸுரவீரர்களை யுத்தத்தில் வென்று ஜயத்தையும் செல்வத்தையும் பெற்ற புதல்வர்களுடன் ஓரிடத்தில் வஸிக்கவிரும்புகின்றனை. இந்த்ரனை முதன்மையாகவுடைய உன்பிள்ளைகளால் யுத்தத்தில் அடியுண்ட சத்ருக்களின் மடந்தையர்கள் யுத்தபூமிக்கு வந்து வருந்திக் கண்ணீருடன் கதறுவதைக் காண ஆசைப்படுகின்றனை. புகழையும் செல்வத்தையும் சத்ருக்களிடத்தினின்று மீட்டுக்கொண்டு பெரிய ஐஶ்வர்யத்துடன் ஸ்வர்க்கத்தில் வீற்றிருந்து விளையாடுகின்ற புதல்வர்களைப் பார்க்க விரும்புகின்றனை. தேவீ! இப்பொழுது அந்த அஸுரவீரர்கள் காலஸ்வரூபனான ஈஶ்வரன் அனுகூலனாயிருக்கப்பெற்ற அந்தணர்களால் பாதுகாக்கப்பட்டிருக்கின்றார்கள். ஆகையால் அவர்கள் பெரும்பாலும் ஜயிக்க முடியாதவர்களென்றே எனக்குத் தோற்றுகின்றது. அவர்களிடத்தில் இப்பொழுது நாம்

பராக்ரமத்தை உபயோகப் படுத்துவோமானால், அது நமக்கு ஸுகத்தை விளைவிக்காது. ஆயினும் உன்னுடைய வ்ரதானுஷ்டானத்தினால் ஸந்தோஷம் அடைந்த நான் இவ்விஷயத்தில் ஏதேனும் ஒரு உபாயத்தை ஆலோசிக்க வேண்டும். ஏனென்றால், என்னைக் குறித்துச் செய்த ஆராதனம் வீணாவதற்குரியதன்று. செய்தவர்களின் ஸ்ரத்தைக்குரியபடி அவரவர்கள் விரும்பும்பலன்களைக் கொடுத்தே தீரவேண்டும். நீ உன் பிள்ளைகளின் பாதுகாப்பை விரும்பிப் பயோவ்ரதத்தினால் என்னை நன்றாகப் பூஜித்தனை; நன்றாகத் துதித்தனை. ஆகையால் நான் உன் விருப்பத்தை நிறைவேற்றியே தீரவேண்டும். மற்றும், நான் கஶ்யபருடைய தவத்திற்குப் பலன் கொடுக்க வேண்டியவனாயிருக்கிறேன். இரண்டுக்கும் பொருந்துமாறு நான் என்னுடைய அம்சத்தினால் உனக்குப் பிள்ளையாகப் பிறந்து உன் பிள்ளைகளைப் பாதுகாக்கிறேன். மங்கள ஸ்வபாவமுடையவளே! ஆகையால் நீ உன் பர்த்தாவும் பாபமற்றவருமான கஶ்யப ப்ரஜாபதியை அனுஸரிப்பாயாக. பர்த்தாவின் மூலமாக நீ திவ்ய உருவங்கொண்ட என்னைக் கர்ப்பத்தில் தரிப்பாய். நான் சொன்ன இந்தத்தேவரஹஸ்யத்தை நீ வருந்தியும் பிறர்க்குச் சொல்லலாகாது. தேவி! தேவரஹஸ்யங்களெல்லாம் நன்றாக மறைத்து வைத்துக்கொண்டிருந்தால் தான் பயன் பெறும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—பகவான் இவ்வளவு மாத்ரமே மொழிந்து அவ்விடத்திலேயே அந்தர்த்தானம் அடைந்தான். அதிதியும் துர்லபமான பகவானுடைய அவதாரம் தன்னிடத்தில் நேரப்பெற்றுத் தன் ப்ரயோஜனம் கைகூடினதாகப் பாவித்து ஸ்ரத்தையமைந்த மேலான பக்தியுடன் பர்த்தாவை அனுஸரித்திருந்தாள்.

வீணாகாத ஞானக்கண்ணுடைய அந்தக் கஸ்யபப்ரஜாபதியும் அவ்வதிதி தன்னை அனுஸரிப்பதன் காரணத்தையும் பகவானுடைய அம்சம் தன்னிடத்தில் ஆவேசித்திருப்பதையும் யோக த்ருஷ்டியினால் அறிந்தார். மன்னவனே! காற்று எல்லா இடங்களிலும் துல்யமாகவே வீசிக்கொண்டிருப்பினும் மரங்களின் கிளைகளில் வீசும்பொழுது ஒன்றோடொன்று உறையும்படி செய்து காட்டுத்தீயைக் கிளப்புவதுபோல, அந்தக் கஸ்யபர் தான் பின்னைகளிடத்தில் ஸமமாயிருப்பவராயினும் தவமஹிமையால் நெடுநாளாய் ஸம்பாதித்திருப்பதும் தைத்யர்களை அழிப்பதுமாகிய வீர்யத்தை மனவிருப்பத்துடன் அதிதியிடத்தில் ஆதானம்செய்தார். அப்பால் ப்ரஹ்மதேவன், அதிதியின் கர்ப்பத்தில் ஆதிதேவனாகிய பரமபுருஷன் ப்ரவேசித்திருப்பதை அறிந்து அருகாமையில் வந்து பரப்ரஹ்மமென்று கூறப்படுகிற அப்பகவானுடைய அஸாதாரணமான குணங்களை வெளியிடுகிற நாமங்களால் ஸ்தோத்ரம் செய்தான்.

ப்ரஹ்மதேவன் சொல்லுகிறான்:—பகவானே! மேன்மையுடையவர்களால் பாடப்பெற்றவனே! நீ எல்லாரிலும் மேன்மையுற்றிருப்பாயாக. நீ அதிதிக்குப் புதல்வனாகப் பிறந்து மூன்று அடிகளால் உலகங்களை யெல்லாம் அளக்கப் போகின்றனை. அதனால் நீ உருக்ரமனென்று பெயர் பெறப் போகின்றனை. உனக்கு நமஸ்காரம். ப்ராஹ்மணர்களுக்கு அனுகூலர்களாகி அவர்களுக்கு ஹிதம் செய்யுந் தன்மையுள்ளவர்களுக்கு நீ ப்ரபுவாயிருப்பவன். நீ இயற்கையாகவே ப்ராஹ்மணர்களின் விருப்பங்களை நிறைவேற்றிக் கொடுத்து அதனால் மனக்களிப்புற்றுப் பேரொளியுடன் ப்ரகாசிப்பவன். உனக்கு நமஸ்காரம். ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களுக்கு வேண்டிய ரஜஸ் ஸத்வ தமோ

குணங்களை நீ நியமித்துக்கொண்டிருக்கின்றனை. உன
க்கு அடிக்கடி நமஸ்காரம். இந்த அதிதியே முன்ஜன்மத்
தில் ப்ருஶ்னியென்னும் பெயர் பூண்டு பிறந்திருந்தாள்.
அப்பொழுது நீ அவளுக்குப் பிள்ளையாகப் பிறந்தனை.
அத்தகைய உனக்கு நமஸ்காரம். வேதங்கள் உன்னிடத்
தினின்றே வெளியாயின. உன்னையே அவை முழுவதும்
கூறுகின்றன. ஆகையால் அவ்வேதங்களுக்குக் கர்ப்
பம் போன்றிருக்கின்றனை. நீயே உலகங்களை யெல்லாம்
படைக்கின்றனை. மூன்று லோகங்களும் உன் நாபியில்
இருக்கின்றன. நீ மூன்று லோகங்களுக்கும் அப்புறத்தி
லிருக்கின்ற பரமபதத்தில் வாஸம் செய்பவன். நீ ஜீவாத்
மாக்களுக்குள் அந்தர்யாமியாய்ப் புகுந்திருக்கின்றனை.
நீ எங்கும் நிறைந்திருப்பவன். உனக்கு நமஸ்காரம். இந்த
ப்ரபஞ்சத்தின் ஆதி நடு அந்தங்களுக்கு நீயே காரணன்.
உன்னையே அளவிறந்த சக்திகளையுடைய பரம புருஷ
னென்று சொல்லுகிறார்கள். ஆழமுள்ள ப்ரவாஹம் தன்
னிடத்தில் விழுந்த த்ருணம் முதலியவற்றை அடித்துக்
கொண்டு போவதுபோல, நீயே காலத்தைச் சரீரமாக
வுடையவனாகி உலகங்களை யெல்லாம் தூண்டுகின்றனை;
ப்ரஜைகளையும் ப்ரஜாபதிகளையும் மற்றுமுள்ள ஜங்கம
ஸ்தாவரங்களையும் நீயே படைத்துப் பாதுகாக்கின்றனை.
இத்தகைய நீ ஜீவனைப்போல் கர்மத்தினால் ஜன்மாதிக
ளைப் பெறுபவனல்லை. ப்ரஜைகளின் க்ஷேமத்திற்காகவே
நீ உன் ஸங்கல்பத்தினால் அவதரிக்கின்றனை. தேவனே!
ஜலப்ரவாஹத்தில் அகப்பட்டுக்கொண்டு முழுகுகிறவனு
க்கு ஓடம்போல, ஸ்வர்க்கத்தினின்று நழுவி வருந்துகின்ற
தேவதைகளுக்கு நீயே மேலான கதி. ஆகையால் அந்தத்
தேவதைகளை முன் போலவே ஸ்வர்க்கத்தில் ஸ்தாபிப்
பாயாக. பதினேழாவது அத்யாயம் முற்றிற்று.

பகவான் வாமனனாக அவதரித்துப் பலியின் யாக பூமிக்குப்போக அவன் பகவானை ஸத்கரித்தல்

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— இங்ஙனம் ப்ரஹ்மதேவனால் துதிக்கப்பட்ட செயல்களும் ப்ரபாவங்களுமுடையவனும் கர்மத்தினால் விளையும் மரணம் பிறவி இவையற்றவனும் மோக்ஷம் கொடுப்பவனுமாகிய பகவான் நான்கு புஜங்கள் அமைந்து சங்கம் கதை தாமரைமலர் சக்ரம் இவை தரித்துப் பீதாம்பரம் உடுத்துத் தாமரையிதழ் போல் மிளிர்ந்து செவ்வரியோடி நீண்ட கண்கள் விளங்கப்பெற்று அதிதியிடத்தில் ஆவிர்ப்பவித்தான். அப்பரமபுருஷன் கழுத்து நிர்மலமாகிக் காதுகளில் அணிந்த மகர குண்டலங்களின் சோபையால் ஒளிப்பெருக்குடன் திகழ்கின்ற முகாரவிந்தமும் மார்பில் ஸ்ரீவத்ஸமென்னும் திருமருவும் திகழ்கின்ற கைவளை தோள்வளை கிரீடம் அரைநாண் மாலை முத்துமாலை சிலம்பு தண்டை இவைகளும் திகழப்பெற்றிருந்தான். வண்டினங்கள் முரலப்பெற்றதும் தனக்கு அஸாதாரணமாயிருப்பதும் மிக்க அழகு பொருந்தியதுமாகிய வனமாலையால் விளக்கமுற்ற ஸர்வஜ்ஞனாகிய அப்பரமபுருஷன் கஶ்யபப்ரஜாபதியின் க்ருஹத்திலுள்ள அந்தகாரத்தையெல்லாம் தன்னுடைய தேஹகாந்தியால் போகக்கொண்டு கழுத்தில் அணிந்த கௌஸ்துபமணியுடன் ப்ரகாசித்தான். அப்பொழுது திசைகளும் ஜலங்களும் ப்ராணிகளின் மனங்களும் தெளிந்தன. ப்ரஜைகள் ஸந்தோஷம் அடைந்தன. வர்ஷருது முதலிய ருதுக்கள் தத்தம் குணங்கள் அமைந்திருந்தன. த்யுலோகம் அந்தரிக்ஷலோகம் பூலோகம் ஆகிய மூன்று லோகங்களும் தேவதைகளும் அக்னிஜ்வாலைகளும் பசுக்களும்

ப்ராஹ்மணர்களும் பர்வதங்களும் ஸந்தோஷம் அடைந்தன. பாத்ரபதமாஸத்தின் சுக்லபக்ஷத்தில் த்வாதசியின்று ஶ்ரவண நக்ஷத்ரத்தில் அபிஜித்தென்கிற முஹூர்த்தத்தில் ஸர்வேஶ்வரன் அதிதியிடத்தில் ஆவிர்ப்பவித்தான். அஶ்வினி முதலிய ஸமஸ்த நக்ஷத்ரங்களும் குருசுக்ரன் முதலிய க்ரஹங்களும் அந்தப் பகவானுடைய ஜன்மத்தை மேன்மை பெறும்படி செய்தன. அந்த த்வாதசியின்று பகலில் பகவான் ஆவிர்ப்பவிக்கும் பொழுது ஸூர்யன் ஆகாயத்தின் இடையில் வந்திருந்தான் என்று பகவான் அவதரித்தானென்று சொல்லுகிறார்களோ அந்த த்வாதசி திதி விஜயையென்று கூறப்படுகின்றது. அப்பொழுது சங்கம் துந்துபி ம்ருதங்கம் பணவம் ஆனகம் முதலிய பல வாத்யங்கள் முழங்கின. நானாவிதமான வாத்யங்களின் த்வனிகள் எல்லாம் ஒன்று சேர்ந்து பெருங்கோஷம் உண்டாயிற்று. அப்ஸரமடந்தையர்கள் மனக்களிப்புற்று ஆடினார்கள். சிறப்புடைய கந்தர்வர்கள் பாடினார்கள். முனிவர்களும் தேவர்களும் மனுக்களும் பித்ருக்களும் அக்னிகளும் ஸித்தர் வித்யாதரர் கிம்புருஷர் கின்னரர் சாரணர் யக்ஷர் ராக்ஷஸர் ஸுபர்ணர் நாகர் ஆகிய இவர்களும் கூட்டங்கூட்டமாயிருந்து ஸ்தோத்ரம் செய்தார்கள். உபதேவதைகள் ஆடல் பாடல்களைச் செய்து அந்தப் பரமனைப் புகழ்ந்தார்கள். ஆதித்யர்கள் அந்த ஆஶ்ரமம் முழுவதும் புஷ்பங்களால் இறைத்தார்கள். அதிதி அங்ஙனம் தன் கர்ப்பத்தினின்று உண்டான அந்தப் பரமபுருஷனைக் கண்டு வியப்புற்று ஸந்தோஷம் அடைந்தாள். தன்னுடைய ஆச்சர்யமான சக்தியோகத்தினால் திவ்யமங்களவிக்ரஹம் கொண்டிருக்கிற பகவானைக் கண்டு ப்ரஹ்மதேவனும் வியப்புற்று 'ஜய விஜயீபவ' என்றான். கௌஸ்துபம் முதலிய ஆபரணங்களோடும்

சங்கு சக்கரம் முதலிய ஆயுதங்களோடும் கூடின எந்த உருவம் தனக்கு அஸாதாரணமாய்த் திகழ்கின்றதோ, ப்ரக்ருதி புருஷர்களைச் சரீரமாகவுடைய அந்தப் பகவான் எந்த வுருவத்தை நித்யவிபூதி முதலிய இடங்களில் ஏற்றுக்கொண்டிருக்கிறனோ, அப்படிப்பட்ட உருவத்துடனே தோன்றின அப்பரமன் தாய் தந்தைகள் பார்த்துக்கொண்டேயிருக்கையில், கூத்தாடி ஒரு வேஷத்தைக் களைந்து மற்றொரு வேஷம்பூண்டு வருவதுபோல, அவ்வுருவத்தை மறைத்து வாமன வடிவாய்த் தோன்றினன். வாமனரூபியான அந்தப் பகவானைக் கண்டு மஹர்ஷிகள் ஸந்தோஷம் அடைந்து கஶ்யபப்ரஜாபதியை முன்னிட்டுக்கொண்டு ஜாதகர்மம் முதலிய கார்யங்களை நடத்தினர்கள். அந்த வாமனனுக்கு உபநயன ஸம்ஸ்காரம் நடக்கையில் ஸூர்யன் ஸாவித்ரியை உபதேசித்தான். லோகநாதனும் அழிவற்றவனுமாகிய அந்த வாமனனுக்கு ப்ருஹஸ்பதி [1]ப்ரஹ்ம ஸூத்ரத்தையும், காஶ்யபர் மேகலையையும், பூமி தேவி க்ருஷ்ணஜினத்தையும், வனங்களுக்கு ப்ரபுவாகிய சந்த்ரன் தண்டத்தையும், தாய் கௌபீனம் வஸ்த்ரம் இவைகளையும், த்யுதேவதை குடையையும், வேதகர்ப்பர் கமண்டலுவையும், ஸப்தர்ஷிகள் குசங்களையும், ஸரஸ்வதி அக்ஷமாலையையும் கொடுத்தார்கள். இங்ஙனம் உபநயனம் செய்யப்பெற்ற வாமனனுக்குக் குபேரன் பிக்ஷாபாத்ரம் கொடுத்தான். பதிவ்ரதையும் மஹானுபாவையும் உமை அம்பிகையென்று பெயர்பெற்றவளுமாகிய பார்வதி தானே நேரில் வந்து பிக்ஷை கொடுத்தாள். இங்ஙனம் வெகுமதிக்கப்பெற்றவனும் மேன்மைக்கிடமுள்ளவனுமாகிய ப்ரஹ்மசாரி வாமனன் ப்ரஹ்ம தேஜஸ்ஸினல் ப்ரஹ்மரிஷிகள் நிறைந்த அந்த ஸபையை மிகவும்

1. யஜ்ஞோபவீதம்.

விளங்கச் செய்தான். ஸமர்த்தராகிய கஶ்யபர் ஜ்வலித்துக் கொண்டிருக்கிற உபகயனுக்னியை ருஜுவாக்கிப் பரிஸ்தரணம் இட்டு நன்கு பூஜித்து ஸமித்துக்களால் ஹோமம் செய்தார். பிறகு மஹானுபாவனுகிய அவ்வாமனன், பலிசக்ரவர்த்தி ப்ருகுவம்சத்தவர்களைக்கொண்டு அஶ்வமேத யாகங்கள் செய்கிறுனென்றும், பிறரால் எதிர்க்க முடியாமல் மஹாபலிஷ்டனுயிருக்கிறுனென்றும் கேள்விப்பட்டு எல்லாப் பலங்களும் நிறைந்து பாரத்தினுல் பூமியை அடிக்கடி வணங்கச் செய்துகொண்டு அவ்விடம் சென்ருன். நர்மதா நதியின் வடகரையில் ப்ருகுவத்ஸமென்னும் க்ஷேத்ரத்தில் யாகங்களிற் சிறந்த அஶ்வமேத யாகத்தை நடத்துகின்ற பலியின் ருத்விக்குகள், அருகாமையில் உதித்த ஸூர்யன் போல் வருகின்ற வாமன பகவானைத் தூரத்திலேயே கண்டார்கள். மன்னவனே! யஜமானனும் ருத்விக்குகளும் ஸபையிலுள்ள மற்றவர்களும் வாமனனுடைய தேஜஸ்ஸினுல் ஒளி புறிக்கப் பெற்றவர்களாகி, 'ஸூர்யன் வருகிருனு? அல்லது அக்னி வருகிருனு? அல்லது ஸனத்குமாரர் யாகத்தைப் பார்க்க விரும்பி வருகிருரா?' என்று பலவாறு ஸந்தேஹித்தார்கள். இங்ஙனம் ஆசார்யர்களாகிய ப்ருகுக்களும் சிஷ்யனுகிய பலியும் ஸந்தேஹித்துக்கொண்டிருக்கையில், அந்த வாமனபகவான் தண்டத்தையும் குடையையும் ஜலம் நிறைந்த கமண்டலுவையும் தரித்துக்கொண்டு அஶ்வமேத யாகம் நடக்கும் இடத்திற்குள் நுழைந்தான். முஞ்சப் புற்களால் பின்னிய மேகலையை அரையில் தரித்து உபவீதத்தின்மேல் க்ருஷ்ணுஜினத்தை உத்தரீயமாகப் போர்த்து ஜடைகளும் குடுமியும் அமைந்து மாயையினுல் மாணிக்குறளுருவங்கொண்ட பகவான் யஜ்ஞபூமியில் நுழைந்துவரக் கண்டு யஜமானனுகிய பலியும் யாகம் செய்

விக்கிற ப்ருத்விக்களும் அக்னிகளுடன் அந்தப் பகவானுடைய தேஜஸ்ஸினால் ஒளி மழுங்கப்பெற்று எழுந்து அவனை ஸத்கரித்தார்கள். யஜமானனாகிய பலி, உருவத்திற்குத் தகுந்த அவயவங்கள் அமையப்பெற்றவனும் மனத்திற்கினியனும் ஆயிரங்கண்கள் கொண்டு காணத் தகுந்தவனுமாகிய வாமரூபியான பகவானைக் கண்டு அவனுக்கு ஆஸனம் கொண்டு வந்தான். அப்பால் பலி அவ்வாமனனை நல்வரவாவென்று விசாரித்து அவனுடைய பாதங்களை அலம்பிப் பற்றற்ற யோகிகளின் மனத்தில் விளையாடுபவனாகிய அந்தப் பகவானை ஆராதித்தான். தன்னுடைய தர்மத்தை அறிந்த பலி கலிதோஷங்களையெல்லாம் போக்குந் திறமையுள்ளதும் மிக்க மங்களமுமாகிய அந்தப் பகவானுடைய பாதாரவிந்தங்களின் ப்ரக்ஷாளன ஜலத்தைத் தன் தலையில் தரித்தான். தேவர்களுக்கும் தேவனாகிய ப்ரஹ்மதேவனும் சந்த்ரமௌலியாகிய ருத்ரனும் பெரிய பக்தியுடன் அவனுடைய பாதங்களை அலம்பிப் பெருகின ஜலமாகிய கங்கையைச் சிரஸா வஹித்தார்கள். ஆகையால் தேவதேவர்களாலும் தலைமேல் தாங்கி வெகுமதிக்கத் தகுந்த அந்தப் பகவானுடைய ஸ்ரீபாததீர்த்தத்தைப் பலி சிரத்தில் தரித்தது ஒரு பெருமையன்று. பலி இங்ஙனம் பூஜித்து அவனைக் குறித்து மேல் வருமாறு கூறினான்.

பலி சொல்லுகிறான்:—ப்ராஹ்மணனே! உனக்கு நல்வரவா? உனக்கு நமஸ்காரம். உனக்கு நாங்கள் என்ன செய்ய வேண்டும்? உன் ப்ருத்யர்களாகிய எங்களைக் கொண்டு உன் கார்யத்தை நிறைவேற்றிக்கொள்வாயாக. சிறந்த உருவமுடைய உன்னைக் கண்டால் ப்ரஹ்மர்ஷிகளின் தவமே இங்ஙனம் ப்ரத்யக்ஷமாக ஒரு வடிவங்கொண்டு வந்ததோ என்று தோற்றுகிறது. மஹானுபாவனாகிய நீ எங்

கள் க்ருஹம் தேடி வந்தனையாகையால் எங்கள் பித்ருக்கள் த்ருப்தி அடைந்தார்கள். குலமும் பரிசுத்தமாயிற்று. இந்த யாகமும் விதிப்படி அனுஷ்டிக்கப்பட்டதாயிற்று. இப்பொழுது என்னுடைய அக்னிகளும் விதியின்படி நன்கு ஹோமம் செய்யப்பெற்றன. ப்ராஹ்மண குமாரனே! உன் பாதங்களை அலம்பின ஜலத்தினால் பாபங்களெல்லாம் தொலையப்பெற்ற என்னுடையதாகிய இப் பூமியும் சிறியவைகளான. உன்னடிகளால் பரிசுத்தமாயிற்று. ப்ராஹ்மண குமாரனே! நீ ஏதோ ஒன்றை யாசிக்க வந்தவன்போலத் தோற்றுகின்றனை. மாணீ! ஆகையால் பசு ஸுவர்ணம் எல்லாக்குணங்களும் அமைந்த வீடு அறுசுவையும் அமைந்த அன்னம் கன்னிகை செல்வப் பெருக்குடைய க்ராமங்கள் குதிரைகள் யானைகள் மேலான ரதங்கள் ஆகிய இவற்றுள் நீ எதை விரும்புகின்றனையோ அதை என்னிடத்தினின்று பெற்றுக்கொள்வாயாக. பூஜிக்கத்தகுந்தவர்களில் சிறந்தவனே! மற்றும் நீ எதை விரும்புகின்றனையோ அதையெல்லாம் நான் கொடுக்க ஸித்தமாயிருக்கின்றேன். வேண்டிப் பெற்றுக் கொள்வாயாக. பதினெட்டாவது அத்யாயம் முற்றிற்று.

பகவான் மூன்றடி பூமி வேண்டுதலும், பலி கொடுப்பதாக ஒப்புக்கொள்ளச் சுக்ரன் வேண்டாமென்று தடைசெய்தலும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இவ்வாறு தர்மம் அமைந்து உண்மையும் மதுரமுமாக மொழிந்த பலி சக்ரவர்த்தியின் வசனத்தைக் கேட்டுப் பகவான் ஸந்தோஷம் அடைந்து அவனைப் புகழ்ந்து இதை மொழிந்தான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—ஓ மன்னவனே! உன் வசனம் உண்மையும் ப்ரியமுமாயிருக்கின்றது. மற்றும், இது உன் குலத்தின் பெருமைக்குப் பொருந்தித் தர்மம் அமைந்து புகழையும் விளக்கவற்றாயிருக்கின்றது. நீ பரலோகஸாதனமான தர்மத்தின் நிர்ணயத்திற்காக உன் பாட்டனும் உன் குலத்தில் வயது முதிர்ந்தவனும் மிக்க சாந்தனுமாகிய ப்ரஹ்லாதனையே ப்ரமாணமாகக் கொண்டிருக்கின்றனை. ப்ரஹ்லாதனுடைய ஆசாரத்தினாலேயே அவனுடைய வம்சத்தில் பிறந்த உன்னுடைய ஆசாரமும் நன்றாயிருக்குமென்று தெரிகின்றது. இந்த உன் வம்சத்தில் யாசிக்கும் ப்ராஹ்மணனுக்கு இல்லையென்றுசொல்லுகிற நிஸ்ஸத்வனாவது கொடுக்கிறேனென்று ப்ரதிஜ்ஞைசெய்து கொடாதிருக்கிற க்ருபணனாவது இது வரையில் பிறந்ததும் இல்லை. இனி பிறக்கப்போகிறதுமில்லை. இப்பொழுது பிறந்திருக்கிறானென்பதும் இல்லை. மன்னவனே! தானம் செய்யவேண்டிய காலத்தில் யாசகன் கேட்டபின்பு கொடுக்கிறவனும் யுத்தத்தில் பின் வாங்குகிறவனும் ஸ்வதந்த்ர மில்லாதவர்களும் இந்த வம்சத்தில் மூன்று தலைமுறையாகக் கிடையாது. ஆகாயத்தில் சந்த்ரன்போல், இந்த வம்சத்தில் ப்ரஹ்லாதன் மிக்க புகழுடன் ப்ரகாசித்துக் கொண்டிருக்கிறானல்லவா? இந்த வம்சத்தில் பிறந்த ஹிரண்யாக்ஷன் தானொருவனே கதையை ஆயுதமாகக் கொண்டு திக்விஜயத்திற்காக இந்தப் பூமி யெல்லாம் திரிந்தும் தன்னோடெதிர்த்துச் சண்டை செய்யும் வீரன் எவனும் கிடைக்கப்பெறவில்லை. மஹாஜலத்தில் பூமியை மேலுக்கெடுப்பதற்காக வராஹ உருவங்கொண்ட மஹாவிஷ்ணு அவனை மிகவும் பரயாஸப்பட்டுக் கொன்று தான் ஜயித்ததாக நினைத்தான். ஆகையால் அந்த ஹிரண்யாக்ஷனுடைய வீர்யம் அளவற்றதென்று அறிவாயாக. இங்

னம் இந்த வம்சத்தில் பிறந்தவர்கள் யுத்தவீரர்களாகி ப்ராணபத்திலும் பின் வாங்கமாட்டார்கள். அந்த ஹிர ண்யாக்ஷனுடைய வதத்தைக் கேட்டு அவனுடைய ப்ரா தாவாகிய ஹிரண்யகசிபு முன்பு கோபாவேசம் கொண்டு தன் ப்ராதாவைக் கொன்ற விஷ்ணுவை வதிக்கும் பொ ருட்டு அவ்விஷ்ணுவின் ஸ்தானத்திற்குச் சென்றான். அம்மஹாவிஷ்ணுவும் சூலத்தைக் கையிலேந்தி ம்ருத்யு வைப்போல் வருகின்ற அந்த ஹிரண்யகசிபுவைக் கண்டு இவனை வெல்ல முடியாதென்று நினைத்து மாயாவிகளில் சிறந்தவனும் அந்தந்த ஸமயங்களுக்குத் தகுந்த ப்ரயோ ஜனங்களை அறிந்தவனுமாகிய அவ்விஷ்ணு 'நான் எங் கெங்குப் போகிறேனோ அங்கங்கெல்லாம் இந்த ஹிரண்ய கசிபு ப்ராணிகளுக்கு ம்ருத்யுவைப்போன்று வந்து நிற் கின்றான். ஆகையால் இப்பொழுது வெளியில் புலப்படு கிற நான் இவனுடைய ஹ்ருதயத்தில் ப்ரவேசிக்கிறேன்' என்று சிந்தித்தான். அஸுரஸ்ரேஷ்டனே! அவ்விஷ்ணு இங்ஙனம் நிச்சயித்துக்கொண்டு அதற்காக அங்கு ஸஞ் சரித்துக்கொண்டிருக்கிற ஹிரண்யகசிபுவின் சரீரத்தில் ப்ரவேசித்தான். அதிலும் ஹ்ருதயத்தில் ப்ரவேசித்தால் நம்மை இவன் தெரிந்துகொள்வானென்று நிச்சயித்து அவனுடைய மூச்சுக்காற்றில் மறைந்து ஸூக்ஷ்ம சரீர முடையவனாகி மனநடுக்கமுற்று மூக்குரந்த்ரத்தில் உள் ளும் புறமும் உலாவிக்கொண்டிருக்கிற காற்றோடு காற்றா யிருந்தான். அப்பால் தைத்யராஜனாகிய அந்த ஹிரண்ய கசிபு சூன்யமாயிருக்கிற அந்தப் பகவானுடைய க்ருஹம் முழுவதும் தேடியும் அவனைக் காணாமல் கோபித்து நான் ஜயித்தேனென்று ஸிம்ஹநாதம் செய்தான். மீளவும் அவ் வீரன் பூமியிலும் ஸ்வர்க்கத்திலும் திசைகளிலும் அந்த ரிக்ஷத்திலும் அதலம் முதலிய விவரங்களிலும் ஸமுத்

ரங்களிலும் விஷ்ணுவைத் தேடியும் காணவில்லை. இங்ஙனம் காணப்பெறாத அவ்வஸுரராஜன் 'உலகமெல்லாம் தேடினேன். என் ப்ராதாவைக் கொன்றவன் எங்கும் புலப்படவில்லை. எங்குப் போனவர் மீண்டு வருகிறதில்லையோ, அவ்விடத்திற்கே அவன் போனான். மரணம் அடைந்தான். இது நிச்சயம். இவ்வுலகத்தில் ப்ராணிகளுக்கு ஒருவர்க்கொருவர் த்வேஷம் உண்டாயிருக்குமாயின், அது மரணம் வரையில் தொடர்ந்துவருமேயன்றி அதற்கு மேல் தொடராது. ஏனென்றால், கோபம் தேஹத்தைக்காட்டிலும் விலக்ஷணனான ஆத்மாவின் ஸ்வரூபத்தை அறியாமையால் உண்டாகின்றது. தேஹாத்மாபிமானத்தினால் வெளியாகின்றது. தேஹம் தொலைந்த பின்பு கோபமும் தொலைந்து போகின்றது. ஆகையால் அதை உபேக்ஷிக்கவேண்டுமேயன்றி இனித் தொடரலாகாது' என்று அவன் நிச்சயித்துக் கோபத்தை மாற்றிக்கொண்டிருந்தான். ப்ரஹ்லாதனுடைய பிள்ளையும் உன் தந்தையுமாகிய விரோசனன் தந்தைபாட்டன்மார்களுடைய நடத்தையை அறிந்து ப்ராஹ்மணர்களிடத்தில் ப்ரீதியுடையவனாயிருந்தான். அவன் ப்ராஹ்மணவேஷம் தரித்து யாசகர்களாய் வந்த தேவதைகளுக்குத் தன் ஆயுஸ்ஸை மனவிருப்பத்துடன் கொடுத்தான். நீ, க்ருஹஸ்தர்களான ப்ருகுக்கள் முதலிய ப்ராஹ்மணர்களும் உன் குலத்தில் பிறந்த பெரியோர்களான விரோசனன் முதலியவர்களும் பெரும்புகழுடையவர்களும் சூரர்களுமான மற்றவர்களும் அனுஷ்டித்து வந்த தர்மங்களை அனுஷ்டிக்கின்றனை. தைத்யஶ்ரேஷ்டனே! அப்படிப்பட்ட வம்சத்தில் பிறந்து தர்மிஷ்டனுமாகிய உன்னிடத்தில் நான் என்காலால் அளக்கப்பட்ட மூன்றடியளவுள்ள சிறிது பூமியை வேண்டுகிறேன். நீ விரும்பின




1824. வாமனபகவான் பலியின் யாகபூமியில்
சென்று மூன்றடி பூமி வேண்டுதல்

வரங்களைக் கொடுப்பவர்களில் சிறந்தவன். ஆகையால் உனக்கு இது ஒரு பொருளன்று. ராஜனே! நீ உலகங்களுக் கெல்லாம் ப்ரபுவாயிருக்கின்றனை. மற்றும் தாராளமாய்க் கொடுக்குந் தன்மையும் அமையப்பெற்றிருக்கின்றனை. ஆயினும் உன்னிடத்தினின்று நான் இவ்வளவுமாத்ரமே விரும்புகிறேனன்றி, மற்றொன்றும் விரும்பவில்லை. புண்யபாபங்களின் ஸ்வரூபத்தை அறிந்த அறிஞன் தனக்கு எவ்வளவு பொருள் வேண்டுமோ அவ்வளவுமாத்ரமே விரும்புவானாயின் அவன் அதனால் பாபத்தை அடையமாட்டான். அதற்குமேல் விரும்புவானாயின், பாபிஷ்டனாவான்.

பலி சொல்லுகிறான்:—ஓ ப்ராஹ்மண குமாரனே! உன் வார்த்தைகள் வ்ருத்தர்களாலும் புகழத் தகுந்தவைகளாயிருக்கின்றன. ஆயினும் நீ பாலனாயிருக்கின்றனை. உன் புத்தி ஒன்றுமறியாத மூடர்களின் புத்தியைப்போன்றிருக்கின்றது. ஆகையால் உன் ப்ரயோஜனத்தை நீ உள்ளபடி அறியமாட்டாதிருக்கின்றனை. உலகங்களுக்கெல்லாம் தனியாளனாகிய என்னைப் பெரியோர்களும் புகழும்படியான வார்த்தைகளால் அருள் புரிவித்து மிகவும் சிறியதான உன் பாதத்தினால் மூன்றடியளவுள்ள பூமியை வேண்டுகின்றனை. ஜம்பூத்வீபம் முதலிய த்வீபத்தையுங் கொடுக்கவல்ல என் பெருமையை அறியாமல் இங்ஙனம் வேண்டுகின்றனையாகையால் நீ மூடபுத்தியனென்று தோற்றுகிறது. என்னிடம் வந்து யாசித்த புருஷன் மீளவும் மற்றொருவனிடம் ஒன்று யாசிக்க உரியவனல்லன். ஓ மாணியே! ஆகையால் உன்னிஷ்டப்படி பெரிய ஜீவனத்தை விளைக்கும்படியான பூமியை என்னிடத்தினின்று பெற்றுக்கொள்வாயாக.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—மன்னவனே! மூன்று லோகங்களிலும் எவ்வளவு தேசங்கள் இருக்கின்றனவோ, அவை யெல்லாவற்றையும் பெற்றுக்கொள்ளினும், அவையும் இந்த்ரியங்களை வெல்லமுடியாமூடர்களை நிரம்பினவர்களாகச்செய்ய வல்லவையாகமாட்டா. மூன்று அடிகளால் ஸந்தோஷப்படாத மனிதன் ஒன்பது கண்டங்கள் அமைந்த ஜம்பூத்வீபத்தைப் பெற்றபின்பும், சிறப்புடையவைகளான ஏழு த்வீபங்களும் வேண்டுமென்னும் விருப்பம் உண்டாகப்பெற்று அவ்வளவில் த்ருப்தி அடையமாட்டான். ப்ருது கயன் முதலிய மன்னவர்கள் ஏழு த்வீபங்களுக்கு ப்ரபுக்களாயிருந்தும் அர்த்தகாமங்களில் மேன்மேலும் ஆசை உண்டாகப்பெற்று அவ்வாசைக்கு முடிவு நேரப் பெறுமலே யிருந்தார்களென்று எங்களுக்குக் கேள்வி. தெய்வாதீனமாய்க் கிடைத்ததைக் கொண்டு ஸந்தோஷமுற்றிருப்பவன் ஸுகமாயிருப்பான். இந்த்ரியங்களை வெல்லமுடியாமையால் கிடைத்ததைக் கொண்டு ஸந்தோஷம் அடையாமல் மேன்மேலும் விரும்புகிறவன் மூன்று லோகங்களைப் பெற்றாலும் ஸுகமாயிருக்கமாட்டான். அர்த்தகாமங்களில் தெய்வாதீனமாய்க் கிடைத்ததைக் கொண்டு த்ருப்தி அடையாதிருப்பானாயின், அந்த அத்ருப்தி அவனுக்கு மேன்மேலும் ஸம்ஸாரபந்தத்திற்கு ஹேதுவாம். தெய்வாதீனமாய்க் கிடைத்ததைக் கொண்டு த்ருப்தி அடைந்திருப்பானாயின், அது மோக்ஷத்திற்கு ஹேதுவாம். இங்ஙனம் பெரியோர்கள் சொல்லுகிறார்கள். ப்ராஹ்மணன் தெய்வாதீனமாய்க் கிடைத்ததைக் கொண்டு த்ருப்தி அடைந்திருப்பானாயின், அவனுக்குத் தேஜஸ்ஸு வளர்ந்து வரும். அங்ஙனம் த்ருப்தி அடையாமல் மேன்மேலும் ஆசைப்படுவானாயின், ஜலத்தினால் அக்னி அணைவதுபோல

அவனுக்கு உள்ள தேஜஸ்ஸும் நசித்துப்போம். வரங் கொடுப்பவர்களில் சிறந்தவனே! ஆகையால் மூன்று அடியளவுள்ள பூமியையே நான் வேண்டுகிறேன். நான் இவ்வளவில் ப்ரயோஜனம் கைகூடப்பெறுகிறேன். எந்த வஸ்துவும் தன் ப்ரயோஜனத்திற்குப் போதுமானவளவாயிருந்தால் தான் ஸுகத்தைக் கொடுக்கும்; அதிகமாயிருந்தால் துக்கத்திற்கிடமாம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் சொல்லப்பட்ட பலி சிரித்துக்கொண்டே 'ஆனால் உனக்கு இஷ்டமான வளவு பெற்றுக்கொள்வாயாக' என்று மொழிந்து வாமனனுக்குப் பூமியைக் கொடுக்க ஜலபாத்ரத்தை எடுத்தான். அப்பொழுது வாமனனுக்குப் பூமியைக் கொடுக்க முயன்றிருக்கிற சிஷ்யனாகிய அஸுர ஸ்ரேஷ்டனைக் கண்டு விஷ்ணுவின் அபிப்ராயத்தை அறிந்த சுக்ரன் மூன்று காலங்களையும் அறிந்தவர்களில் சிறந்தவனாகையால் இங்ஙனம் மொழிந்தான்.

சுக்ரன் சொல்லுகிறான்:—விரோசன் புத்ரனே! இவ் வாமனன் ஷாட்குண்ய பூர்ணனும் அழிவற்றவனுமாகிய ஒன்றான விஷ்ணுவே. தேவதைகளின் கார்யத்தை நிறைவேற்றும் பொருட்டு அவ் விஷ்ணுவே கச்யபரிடத்தினின்று இங்ஙனம் வாமனனாய் அவதரித்தான். இவன் மூன்றடிகளென்னும் வ்யாஜத்தினால் மூன்று லோகங்களையும் வாங்கித் தேவதைகளுக்குக் கொடுக்கப்போகிறான். இத்தகையனாகிய இவ்வாமனனுக்கு நீ உனக்கு வரப்போகிற கெடுதியை அறியாமல் மூன்றடி பூமி கொடுக்கிறேனென்று ப்ரதிஜ்ஞை செய்தனை. இது எனக்கு யுக்தமாய்த் தோற்றவில்லை. இதனால் தைத்யர்களுக்குப் பெரிய அநீதி வந்துவிட்டது. மாயையினால் ப்ரஹ்மசாரியின் உருவந் தரித்திருக்கிற இவ்வாமனன் உன்னுடைய ஸ்தானம்

ஐஶ்வர்யம் ஸம்பத்துதேஜஸ்ஸு எங்கும் நிறைந்திருகின்ற புகழ் ஆகிய இவற்றையெல்லாம் உன்னிடத்தினின்று பிடுங்கி இந்த்ராநுக்குக் கொடுக்கப்போகிருன். இவன் விஶ்வரூபனுகி மூன்றடிகளால் மூன்றுலோகங்களேயும் அளக்கப்போகிருன். அளந்துகொண்டு போகட்டுமே யென்கிருயோ? மூடா! ஸொத்தையெல்லாம் விஷ்ணுவுக்குக் கொடுத்துவிட்டு நீ எப்படி இருக்கப்போகிருய்? ஆயினும் ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றவேண்டுமே யென் கிருயோ? ஓரடியினுல் பூமியையும் மற்ருேரடியினுல் த்யு லோகத்தையும் அளந்து பெரிய சரீரத்தினுல் அந்தரிக்ஷத்தை யெல்லாம் வ்யாபிக்கப்போகிற இந்தப் பகவானுடைய மூன்ருவது அடிக்கு என்ன கதி; மூன்ருவது அடிக்கு இடமில்லாமையால் நீ கொடுத்தும் உன் ப்ரதிஜ்ஞை நிறைவேருது. ப்ரதிஜ்ஞை செய்ததைக் கொடுக்க முடியாத உனக்கு நரகமே கதியென்று எனக்குத் தோற்றுகிறது. ஆயினும் ஸொத்தையெல்லாம் கொடுத்ததனுல் எனக்குக் கீர்த்தி உண்டாகுமென்கிருயோ? எந்த தானத்தினுல் தன்னுடைய ஜீவனமே அழிந்துபோகுமோ, அப்படிப்பட்ட தானத்தைப் பெரியோர்கள் புகழமாட்டார்கள். ஜீவனமுடைய புருஷன் செய்யும் தானம் யஜ்ஞம் தவம் மற்றுமுள்ள நற்செயல் இவையெல்லாம் தர்மாதிகளுக்கு ஹேதுவாமேயன்றி, ஜீவனமில்லாதவன் செய்கிற தானுதிகளெல்லாம் தர்மாதிகளுக்கு ஹேதுவாகமாட்டா. அறிஞனே! ஆகையால் பணத்தை, தர்மம் யசஸ்ஸு அர்த்தம் காமம் பந்துக்கள் ஆகிய ஐந்து ப்ரயோஜனங்களையும் குறித்து ஐந்து வகையாகப் பிரித்து உபயோகப்படுத்தும் புருஷனே இஹலோகத்திலும் பரலோகத்திலும் ஸந்தோஷமுற்றிருப்பான். ஆனல் ப்ரதிஜ்ஞை செய்த பின்பு இல்லையென்று எங்ஙனம் பொய்சொல்வே

னென்று சங்கிப்பாயாயின், இன்னது பொய்யென்றும் இன்னது மெய்யென்றும் பஹ்வ்ருசர்கள் நிச்சயித்திருக்கிறார்கள். அஸுர ச்ரேஷ்டனே! அதைச் சொல்லுகிறேன்; கேள். ஆகட்டுமென்று அங்கீகாரத்துடன் சொல்லும் வார்த்தையே மெய்யாம். முதலே ஒப்புக்கொள்ளாமல் இல்லையென்று சொல்லும் வார்த்தையே பொய்யாம். தேஹமாகிற வ்ருக்ஷத்திற்கு அந்த மெய்யென்பது புஷ்பம் பலம் இவைகளைப் போன்றிருக்குமென்று உணரவேண்டும். இங்ஙனம் ச்ருதி சொல்லுகின்றது. அந்தத் தேஹமாகிற வ்ருக்ஷம் ஜீவித்திராத பக்ஷத்தில் மெய்யாகிற புஷ்பபலங்கள் உண்டாகமாட்டா. தேஹமாகிற அந்த வ்ருக்ஷத்திற்குப் பொய்யே வேர்போன்றிருக்கும். பொய்யில்லாமல் ஜீவித்திருக்கமுடியாது. வேரைப் பிடுங்கின் வ்ருக்ஷம் உலர்ந்து சீக்ரத்தில் கீழே விழுந்து போகின்றது. இங்ஙனமே பொய்யே பேசாதிருக்கும் தேஹம் உடனே உலர்ந்துபோம்; ஜீவிக்கமாட்டாது. இவ்விஷயத்தில் ஸந்தேஹமில்லை. ஆகட்டுமென்று அங்கீகரித்து எல்லாவற்றையுங் கொடுக்கிறேனென்று ஒப்புக்கொண்டதற்குச் சிறிது கொடுக்கிறேனென்பது கருத்தாகவேண்டும். ஸொத்தையெல்லாம் கொடுப்பானாயின், ஜீவனமே இல்லாமற் போமாகையால் தேஹம் நசித்துக் கொடுக்கிறவனுக்கு ஆபத்து நேரிடும். ஆகையால் தானம் பயன் படாமற்போம். ஆகட்டுமென்று அங்கீகரித்ததற்கு எல்லாவற்றையும் கொடுக்கிறேனென்பதாகக் கருத்து கொள்ளலாகாது. கொஞ்சம் கொடுக்கிறேனென்பது கருத்தென்று கொள்ளின் தான் கொடுக்கிறவன் மிகுவான். யாசகனுக்குத் தன் ஸொத்தையெல்லாம் கொடுக்கிறேனென்று ப்ரதிஜ்ஞை செய்வானாயின், எல்லாவற்றையும்கொடுத்துத் தான் ஜீவித்திருக்கவல்லனாகமாட்

டான். ஆகையால் தன்ஜீவனத்தை அழித்துக்கொள்ளாமல் சிறிதுமாத்ரமே கொடுக்கவேண்டும். ஒன்றுமேயில்லையென்னும் வார்த்தை முழுப்பொய்யாம். அதனால் பிறனுடைய ஸொத்தையும் தான்பறித்துக்கொள்வான். ஆனால் அதை அம்ருதம்போல் ஸர்வகாலமும் உபயோகப்படுத்தலாமேயென்றால், அது கூடாது. ஒன்றுமே யில்லையென்று சொல்லுகிறவன் அபகீர்த்தியைப் பெறுவான். ஒன்றுமே யில்லை யென்கிறவன் பிழைத்திருந்தும் செத்தவனைப் போன்றவன். ஆகையால் கொஞ்சம் கொடுக்கவேண்டும். ஸ்த்ரீகளை உத்ஸாஹப்படுத்துங் காலத்திலும் பரிஹாஸத்திலும் விவாஹத்திலும் ஜீவனத்திற்காகவும் ப்ராணஸங்கடத்திலும் பசுக்கள் ப்ராஹ்மணர் இவர்களின் ஹிதத்திற்காகவும் ஒருவனுக்கு ப்ராணாபத்து நேரும்பொழுதும் பொய் பேசுவது நிந்தைக்கிடமாகாது. ஆகையால் நீ ப்ரதிஜ்ஞை செய்தபோதிலும் ஜீவனத்திற்காகப் பொய் பேசுவது பிசகாகாது. பத்தொன்பதாவது அத்யாயம் முற்றிற்று.

---

பலி விஷ்ணுவின் கபடத்தை அறிந்தும் பொய்பேசப் பயந்து ப்ரதிஜ்ஞை செய்தபடி கொடுக்கையும், பகவான் வளர்ந்து உலகங்களை அளத்தலும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மன்னவனே! யாகம்செய்கின்ற பலி தன்குலாசார்யனாகிய சுக்ரனால் இங்ஙனம் சொல்லப்பெற்று க்ஷணகாலம் ஒன்றும் பேசாதிருந்து தான் செய்ய நினைத்ததையே நிச்சயித்துக்கொண்டு சுக்ராசார்யனை நோக்கி மொழிந்தான்.

பலி சொல்லுகிறான்:—நீர் சொன்னது வாஸ்தவமே. இது க்ருஹஸ்தர்களின் தர்மந்தான். இது க்ருஹஸ்தர்

களின் அர்த்தம் காமம் புகழ் ஜீவனம் இவைகளை எவ்வி தத்திலும் அழிக்காது. பாதுகாத்துக்கொடுக்கும்: நானும் க்ருஹஸ்தனே. ஆயினும் ப்ரஹ்லாதனுடைய பிள்ளையாகிய நான் கொடுக்கிறேனென்று ப்ரதிஜ்ஞைசெய்து இப்பொழுது பொருளாசையால் தூர்த்தன்போல ப்ராஹ்மணனை எப்படி நிராகரிப்பேன்? இந்தப் பூமிதேவி 'அஸத்யத்தைக்காட்டிலும் வேறு அதர்மம் கிடையாது' என்று மொழிந்தாள். 'பொய் பேசும் புருஷனைத் தவிர மற்ற எல்லாவற்றையும் நான் தரிப்பேன்' என்று நினைத்தாள். 'மேரு மந்தராதி பர்வதங்களைத் தாங்குவதுங்கூட எனக்கு வருத்தமன்று. பொய்பேசும் புருஷனைத் தரிப்பது எனக்குப் பொறுக்க முடியவில்லை' என்பது பூமியின் கருத்து. ஆகையால் நான் எப்படிப் பொய்சொல்லுவேன்? மற்றும், நான், நரகம் ஏழ்மை, ஸமுத்ரம்போல் கடக்கமுடியாதபெருந்துயரம், ஸ்தானத்தினின்று நழுவுதல், மரணம் ஆகிய இவற்றுள் எதினின்றும் பயப்படவில்லை. ப்ராஹ்மணனை ஏமாற்றுகையாகிற இம்மஹாபாபத்தினின்றுமே நான் பயப்படுகிறேன். பூமி முதலிய எல்லாப்பொருள்களும், புருஷன் மரணம் அடைந்த பின்பு அவனை இவ்வுலகத்திலேயே துறக்கப்போகின்றனவல்லவா? அத்தகைய பொருள்களைப் புருஷன் தான் ஜீவித்திருக்கும்பொழுதே ஏன் கொடுக்கலாகாது. எதைக் கொடுத்தால் ப்ராஹ்மணன் ஸந்தோஷம் அடையமாட்டானோ, அப்படிப்பட்ட வஸ்துவைக் கொடுப்பதனால் என்ன உபயோகம்? அவன் ஒன்று கேட்க, நாம் மற்றொன்றைக் கொடுத்தால் அவனுக்கு எப்படி ஸந்தோஷம் உண்டாகும்? அவன் ஸந்தோஷம் அடையானாயின், அந்தக் கொடை வீண். ததீசர் சிபி முதலிய பெரியோர்கள் துறக்கமுடியாத ப்ராணன்களாலும் ப்ராணிகளுக்கு

நன்மையைச் செய்தார்கள். இனிப் பூமி முதலிய மற்ற வஸ்துக்களைப் பற்றி விசாரிக்கவேண்டுமோ? ப்ராஹ்மண ஶ்ரேஷ்டரே! அஸுரஶ்ரேஷ்டர்களான எங்கள் மூப்பாட்டன் முதலியவர்கள் யுத்தத்தில் பின்வாங்காத மஹா வீரர்களாயிருந்து இப்பூமியை ஆண்டுவந்தார்கள். அவர்களுடைய போகங்களைமாத்திரம் காலமானது பாழ்செய்துவிட்டதேயன்றி, அவர்கள் புகழைப் பாழ்செய்யவில்லை. அது இப்பொழுதும் தொடர்ந்து வருகின்றது. ப்ரஹ்மர்ஷீ! யுத்தத்தில் பின்வாங்காமல் தேஹத்தைத் துறப்பவர்கள் பலரும் ஸுலபமாகக் கிடைக்கக்கூடியவர்கள் தான். அத்தகையர் பலர் உண்டாயிருந்தார்கள். ஆனால், ஸத்பாத்ரம் நேரும்பொழுது தம்முடைய ஸொத்தையெல்லாம் ஶ்ரத்தையுடன் கொடுத்தவர்கள் எவருமே இல்லை. இது ஒருவராலும் செய்யமுடியாதகார்யம். ஆகையால் இதை நான் அவஶ்யம் செய்யவேண்டும். யாசகர்களின் விருப்பங்களை நிறைவேற்றுவதனால் ஏழ்மை உண்டாகுமாயின் விவேகியும் மன இரக்கமுடையவனுமாகிய ஸாதாரண புருஷனுக்கும் அதுக்ஷேமந்தான். ப்ரஹ்மவித்துக்களான உம்மைப்போன்றவர்களுக்கு அது க்ஷேமமென்பதைப்பற்றிச்சொல்லவேண்டுமோ? ஆகையால் இந்த ப்ரஹ்மசாரியின் விருப்பத்தைக்கொடுப்பது எனக்கு யுக்தமே. வேதங்களில் விதிக்கப்பட்ட யஜ்ஞாதி கர்மங்களை அனுஷ்டிப்பதில் ஸமர்த்தர்களான உம்மைப்போன்ற பெரியோர்கள் ஸோமயாகங்களாலும் அல்லாத யாகங்களாலும் எவனை மிக்க ஆதரவுடன் ஆராதிக்கிறார்களோ; அப்படிப்பட்ட ஒன்றான பகவான் தானே இங்ஙனம் ப்ரஹ்மசாரி வேஷம் பூண்டு வந்திருப்பின், அவன் எனக்கு இப்பொழுது வரங் கொடுப்பவனாயினும் ஆகட்டும்; அல்லது சத்ருவாயினும் ஆகட்டும். முனிவரே! நான் இவன் விரும்பும் பூமியை

இவனுக்குத் தடையின்றிக் கொடுக்கப் போகிறேன். 'மூன்றாமடிக்கு இடமில்லாமையால் உன்னை இவன் பந்தனம் செய்வானே' என்றால், ஸொத்தையெல்லாம் கொடுத்து நிரபராதியான என்னை இவன் அதர்மத்தினால் பந்தனம் செய்தாலும் செய்யட்டும். அது எனக்குப் பொருளன்று. அதற்காக நான் ப்ராஹ்மண உருவங் கொண்ட இவனை வதிக்கமாட்டேன். ஒருகால் இவன் உத்தம ச்லோகனாகிய விஷ்ணுவாயிருப்பானாயின், என் ஸொத்தையெல்லாம் பெற்றுக்கொண்டு என்னைப் பந்தனம் செய்கையாகிற பாபகர்மத்தினால் தன்புகழைப் பாழ் செய்ய விரும்பமாட்டான். ஆனால் என்ன செய்வானென்றால், என்னை யுத்தத்தில் வதித்து இந்தப் பூமியைப்பறித்துக்கொண்டுபோவான். என்னைவதிக்கவல்லமையற்றிருப்பானாயின், என்னால் அடியுண்டு பூமியில் சயனிப்பான்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார் :—சுக்ரன் தன் சிஷ்யனாகிய பலி இங்ஙனம் தன் கட்டளையில் ச்ரத்தையின்றி அதை ஏற்றுக்கொள்ளாதிருக்கையில், தெய்வத்தினால் தூண்டப்பெற்று, ஸத்யம் தவறலாகாதென்னும் மனவுறுதியுடையவனும் விவேகியுமாகிய அந்தப்பலியைச் சபித்தான்.

சுக்ரன் சொல்லுகிறான் :—நீ தன்னைத் தானே பண்டிதனாகப்பாவித்துக் கொண்டிருக்கின்றனை. இது நிச்சயம். உண்மையில் நீ ஒன்றும் தெரியாத மூடன். ஆகையால் தான் ஸொத்தெல்லாம் அழிந்து போகும்படியான ஸமயத்திலும் திறமையற்றிருக்கின்றனை. நீ உன் குருவாகிய என்னை உபேக்ஷித்து என் கட்டளையைக் கடந்தனையாகையால் சீக்ரத்திலேயே மூன்று லோகங்களுக்கும் ப்ரபுவாயிருக்கிற ஐச்வர்யத்தினின்றும் நழுவப் போகின்றனை.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் தன் குருவினால் சபிக்கப்பெற்றும் ஸத்யத்தினின்று தவறாமல் தன் ஸங்கல்பம் உறுதியாயிருக்கப் பெற்ற மஹானுபாவனாகிய பலி வாமனனைப் பூஜித்து உதக தாராபூர்வகமாக அவனுக்கு இப்பூமியைக் கொடுத்தான். முத்துக்களாலியற்றின ஆபரணம் அணிந்த விந்த்யாவளியென்னும் பேருடைய பலியின் பார்யை அப்பொழுது பாதப்ரக்ஷாளனத்திற்காக ஜலம் நிறைந்த பொற்குடம் கொண்டுவந்தாள். அப்பால் யஜமானனாகிய பலி மனக்களிப்புடன் அந்தப் பகவானுடைய அழகான பாதங்களைக் கழுவி உலகங்களையெல்லாம் புனிதம் செய்யவல்ல அந்த ஜலத்தைத் தன் தலையில் தரித்தான். அப்பொழுது தேவதைகளும் கந்தர்வர் வித்யாதரர் ஸித்தர் சாரணர் முதலியவர்களும் நிர்ப்பயமாக ஆகாயத்தில் நின்று மனக்களிப்புடன் அவன் செய்யும் தானத்தைப் புகழ்ந்து அஸுரஶ்ரேஷ்டனாகிய அவன்மேல் ப்ரீதியுடன் பூமழை பொழிந்தார்கள். அனேகமாயிரம் துந்துபி வாத்யங்கள் அடிக்கடி முழங்கின. கந்தர்வர்களும் கிம்புருஷர்களும் கின்னரர்களும் 'ஆழ்ந்த மனமுடைய இந்தப் பலி செய்யும் கார்யம் மற்ற எவராலும் செய்யமுடியாதது. இவன் தெரிந்தும் த்ரிவிக்ரமனை பகவானுக்கு மூன்று லோகங்களையும் கொடுத்தான்' என்று அவன் செயலைப்பற்றிப் பாடினார்கள். அப்பொழுது அவ்வாமனனுடைய உருவம் வளர்ந்தது. அங்ஙனம் வளர்ந்த பகவானுடைய அவ்வுருவம் ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களென்கிற முக்குணங்களின் பரிணாமமான இவ்வுலகளெல்லாம் தன்னில் அடங்கப் பெற்றிருந்தது. மற்றும் பூமி ஆகாயம் ஸ்வர்க்கம் திசைகள் அதலம் முதலிய அதோலோகங்கள் ஸமுத்ரங்கள் திர்யக்குகள் மனுஷ்யர் தேவர் முனிவர் ஆகியவெல்லாம் அவ்வுருவத்தில் இருந்தன.



1834. திரிவிக்ரமாவதாரம்

அப்பொழுது ருத்விக்குகள் ஆசார்யர்கள் ஸபிகர்கள் இவர்களோடு கூடிய பலி அளவிறந்த ஐஸ்வர்யமுடைய அந்தப் பகவானுடைய ஜகத்திற்கெல்லாம் ஆதாரமான அவ்வுருவத்தில் ஸத்வ ரஜஸ் தமோ குணங்களின் பரிணமமும் பஞ்சபூதங்கள் இந்த்ரியங்கள் சப்தாதி விஷயங்கள் அந்தக்கரணம் ஜீவாத்மாக்கள் ஆகிய இவற்றோடு கூடின ப்ரபஞ்சத்தையெல்லாம் கண்டான். பலி, ஜகத்தெல்லாம் தனக்குச் சரீரமாகப் பெற்றவனும் மஹாபுருஷனுமாகிய அந்தப் பகவானுடைய உள்ளங்காலில் அதோ லோகத்தையும், பாதங்களில் பூலோகத்தையும், கணைக்கால்களில் பர்வதங்களையும், முழங்கால்களில் பக்ஷிகளையும், துடைகளில் காற்றுத் தொகுதியையும் கண்டான். மற்றும், அவன், எங்கும் நிறைந்திருப்பவனான அந்தப் பகவானுடைய வஸ்த்ரத்தில் ஸந்த்யாகாலத்தையும், ஜகனத்தில் தன்னை முதலாகவுடைய அஸுரர்களையும், நாபியில் அந்தரிக்ஷத்தையும், வயிற்றில் ஏழு ஸமுத்ரங்களையும், மார்பில் நக்ஷத்ரங்களின் வரிசையையும் கண்டான். ஓ மன்னவனே! மற்றும், அந்தப் பகவானுடைய ஹ்ருதயத்தில் தர்மத்தையும், ஸ்தனங்களில் ஸத்யத்தையும், மனத்தில் சந்த்ரனையும், வக்ஷஸ்தலத்தில் கையில் தாமரை மலரேந்தின ஸ்ரீமஹாலக்ஷ்மியையும், கண்டத்தில் ஸாமவேதங்களையும் மற்றுமுள்ள ஸமஸ்த சப்தங்களையும், புஜங்களில் இந்த்ரன் முதலிய தேவதைகளையும், காதுகளில் திசைகளையும், சிரஸ்ஸில் த்யுலோகத்தையும், தலைமயிர்களில் மேகங்களையும், மூக்கில் ஶ்வாஸவாயுவையும், கண்களில் ஸூர்யனையும், முகத்தில் அக்னியையும், வாக்கில் வேதங்களையும், ரஸனேந்த்ரியத்தில் வருணனையும், புருவங்களில் நிவ்ருத்திசாஸ்த்ரம் ப்ரவ்ருத்தி சாஸ்த்ரம் இவைகளையும்,

இமைமயிர்களில் பகல் இரவுகளையும், நெற்றியில் கோபத்தையும், கீழுதட்டில் லோபத்தையும், த்வகிந்த்ரியத்தில் காமத்தையும், ரேதஸ்ஸில் ஜலத்தையும், முதுகில் அதர்மத்தையும், அடிவைப்புக்களில் யஜ்ஞத்தையும், நிழலில் ம்ருத்யுவையும், சிரிப்பில் மாயையையும், ரோமங்களில் ஓஷதிவகைகளையும், நரம்புகளில் நதிகளையும், நகங்களில் சிலைகளையும், புத்தியில் ப்ரஹ்மதேவனையும், இந்த்ரியங்களில் தேவதைகளையும் ரிஷிகளையும் கண்டான். ஆயிரம் சொல்லியென்ன? அந்தப் பகவானுடைய சரீரத்தில் ஒன்றுக்கொன்று விலக்ஷணங்களும் ஜங்கமஸ்தாவரரூபங்களுமான ஸமஸ்த பூதங்களையும் கண்டான். ஸமஸ்த லோகங்களுக்கும் ஆதாரனான பகவானிடத்தில் இங்ஙனம் உலகத்தை யெல்லாம் கண்ட அஸுரர்கள் அனைவரும் இஃதென்னவென்று வியப்புற்றார்கள். பிறரால் பொறுக்க முடியாத ஒளியுடைய ஸுதர்சனசக்ரமும், மேகத்தின் கர்ஜனம்போன்ற கோஷமுடைய சார்ங்கமென்னும் வில்லும், மேகத்தின் கோஷமுடைய பாஞ்சஜன்யமென்னும் சங்கமும், மிகுந்த பலமுடைய கௌமோதகியென்னும் கதையும் வித்யைக்கு ஆதாரமாய் வித்யாதரமென்றும் நந்தகமென்னும் பேருடைய கத்தியும், சந்த்ரன் போன்ற பல மண்டலங்கள் நிறைந்த கேடயமும், அழியாத பாணங்களையுடையவையாகையால் அக்ஷயஸாயகங்களென்கிற சிறந்த இரண்டு அம்பறாத்தூணிகளும், ஸுநந்தர் முதலிய பாரிஷதர்களும், லோகபாலர்களும் அந்தப் பகவானுக்கருகில் தங்கள் தங்கள் இடங்களில் இருந்தார்கள். மன்னவனே! மூன்றடிகளால் உலகங்களை யெல்லாம் அளக்கமுயன்ற அந்தப் பகவான், திகழ்கின்ற கிரீடம் தோள்வளை மகரகுண்டலம் ஸ்ரீவத்ஸமென்னும் அடையாளம் ரத்னங்களில் சிறந்த கௌஸ்துபம்

அமைநாண்மாலை பீதாம்பரம் வண்டினங்கள் நிறைந்த வனமாலை ஆகிய இவைகளால் அலங்காரமுற்று விளங்கினான். அவன், பலி ஆண்டுவருகின்ற பூலோகத்தை ஒரு பாதத்தினாலும் அந்தரிக்ஷலோகத்தைச் சரீரத்தினாலும் திசைகளைப் புஜங்களாலும் ஆக்ரமித்தான். இரண்டாவது பாதத்தினால் த்யுலோகத்தை ஆக்ரமிக்கின்ற அந்தப் பகவானுடைய மூன்றாவது அடிக்குப் பலியினுடைய பொருள் ஒரு அணுமாத்ரமும் மிகுந்திருக்கவில்லை. அப்பால் அந்தத்ரிவிக்ரமனுடைய இரண்டாம் பாதம் த்யுலோகத்தைக் கடந்து மேன்மேலும் சென்று மஹர்லோகம் ஜனலோகம் தபோலோகம் ஆகிய இவ்வுலகங்களுக்கெல்லாம் அப்புறத்திலிருக்கின்ற ஸத்யலோகம் போய்ச் சேர்ந்தது. இருபதாவது அத்யாயம் முற்றிற்று.

## பகவான் மூன்றாவது அடிக்கு இடமில்லாமையால் பலியைப் பந்தனம் செய்தல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— ப்ரஹ்மதேவன் பகவானுடைய பாதம் தன்வாஸஸ்தானமாகிய ஸத்யலோகத்தில் வந்திருப்பதைக் கண்டு அந்தப்பாதத்திலுள்ள சந்த்ரன் போன்ற நகங்களின் காந்திகளால் தன் வாஸஸ்தானமெல்லாம் ஒளிமழுங்கப் பெற்று ஆதரவுடன் எதிர்கொண்டு சென்றான். அங்ஙனமே மிகப்பெரிய வ்ரதங்களை அனுஷ்டித்தவர்களான மரீசி முதலிய ரிஷிகளும் ப்ரஹ்ம நிஷ்டர்களான ஸனந்தனர் முதலிய யோகிகளும் அந்தப் பகவானுடைய பாதத்தை எதிர்கொண்டார்கள். ருக்கு யஜுஸ்ஸாம முதலிய வேதங்கள் ஆயுர்வேதம் முதலிய உபவேதங்கள் நியமங்கள் மீமாம்ஸாந்யாயங்கள் தர்க்கம் ராமாயணாதி இதிஹாஸங்கள் சிக்ஷை முதலிய

அங்கங்கள் புராணங்கள் பஞ்சராத்ராதி ஸம்ஹிதைகள் ஆகிய இவற்றின் அபிமானிதேவதைகளும், யோகமாகிற காற்றினால் வீசப்பெற்றுக் கிளர்ந்தெரிகின்ற ஜ்ஞானமாகிற அக்னியினால் புண்ய பாபகர்மங்களாகிற கல்மஷங்களையெல்லாம் பஸ்மம் செய்து விளங்குகின்றவர்களும் அந்தப் பகவானுடைய பாதாரவிந்தங்களை த்யானித்த மஹிமையால் ஜ்ஞானயோகப்ரசுரமான ஸத்யலோகம் சென்று அங்கு வாஸம் செய்பவர்களுமான மற்றவர்களும் அந்தத் த்ரிவிக்ரமனுடைய பாதத்தை வணங்கினார்கள். அப்பால் பெரும்புகழுடைய ப்ரஹ்மதேவன் தான் எவனுடைய நாபிகமலத்தினின்றும் உண்டானானோ, அப்படிப்பட்ட ஸ்ரீமஹாவிஷ்ணுவின் பாதம் வெகு தூரம் உயரக் கிளம்பி வந்திருப்பதைக்கண்டு அதற்கு அர்க்யம் பாத்யம் முதலிய உபசாரங்களைச் செய்து நன்றாகப் பூஜித்துப் பக்தியுடன் ஸ்தோத்ரம் செய்தான். மன்னவனே! அப்பொழுது ப்ரஹ்மாவின் கமண்டலுஜலம் அந்தப் பகவானுடைய பாதத்தை அலம்புவதற்காக விடப்பட்டு அப்பாதத்தின் ஸம்பந்தத்தினால் பரிசுத்தமாகி ஸ்வர்க்க நதியாயிற்று. அந்த நதியே கங்கையென்று கூறப்படுகின்றது. அந்நதி பகவானுடைய கீர்த்தியைப்போல நிர்மலமாகி ஆகாயத்தில் த்ருவமண்டலத்தில் விழுந்து அங்கிருந்து கீழே பெருகிவந்து மூன்று லோகங்களையும் பவித்ரம் செய்கின்றது. அப்பால் அம்மஹாபுருஷன் தன் தேஹ விஸ்தாரத்தைக் குறுக்கிக் கொண்டான். பின்பு முன் போலவே வாமனரூபியாயிருக்கின்ற தங்கள் நாதனாகிய பகவானுக்கு லோகநாதர்களான ப்ரஹ்மதேவன் முதலியவர்களும் அவர்களைத் தொடர்ந்த மற்றவர்களும் ஜலங்களால் அர்க்யம் பாத்யம் முதலிய உபசாரங்கள் செய்து வாஸனையுள்ள சிறந்த பூமாலைகளாலும் திவ்ய

சந்தனப்பூச்சுக்களாலும் பரிமளமுள்ள மேலான தூபங்களாலும் தீபங்களாலும் பொரிகளாலும் அக்ஷதைகளாலும் சிறந்த பழங்களாலும் அவனுடைய வீர்யமஹிமை அமைந்த ஸ்தோத்ரங்களாலும் அத்தகைய ஜய சப்தங்களாலும் ஆடல்பாடல்களாலும் சங்கம் துந்துபி முதலிய பலவகை வாத்யகோஷங்களாலும் பூஜை செய்தார்கள். அப்பொழுது கரடிகளுக்கு ராஜனுகிய ஜாம்பவான் மனோவேகத்துடன் வந்து பேரி வாத்யங்களை முழக்கி எல்லாத் திசைகளிலும் பகவானுடைய ஜயத்தை விளங்கும்படி கோஷிப்பித்தான். அது மஹோத்ஸவமாயிருந்தது. மூன்றடிகள் வேண்டுமென்று கபடமாக யாசித்து யாகத்தில் தீக்ஷித்துக்கொண்டிருக்கிற தங்கள் ப்ரபுவான பலியின் பூமியையெல்லாம் பகவான் பறித்துக் கொண்டதைக் கண்டு அஸுரர்கள் அனைவரும் பெருங் கோபாவேசமுற்று இங்ஙனம் மொழிந்தார்கள்.

தைத்யர்கள் சொல்லுகிறார்கள்:—ப்ராஹ்மணனாகிய இவ்வாமனன் ஸாதாரணனன்று; மாயாவிகளில் சிறந்த ஒன்றான மஹாவிஷ்ணுவே. ப்ராஹ்மணவேஷத்தினால் மறைந்து வந்து தேவதைகளின் கார்யத்தைச் செய்ய விரும்புகிறான். நம் ப்ரபுவாகிய பலி யாகத்தில் தீக்ஷித்துக்கொண்டு துஷ்டர்களைத் தண்டிக்கும் அதிகாரத்தைத் துறந்திருக்கையில் ஸமயம் பார்த்துச் சத்ருவாகிய மஹாவிஷ்ணு இங்ஙனம்[1] வடுவாமனவேஷம் பூண்டு மறைந்து வந்து கபடமாக யாசித்து நம்ப்ரபுவின் ஸொத்தையெல்லாம் பறித்துக்கொண்டான். நம்ப்ரபு எப்பொழுதுமே ஸத்யத்தினின்றும் தவறாதவன். மற்றும், இப்பொழுது யாகத்தில் தீக்ஷித்துக் கொண்டிருக்கிறான்; ப்ராஹ்மணர்களிடத்தில் பக்ஷபாதமுடையவன்; அவர்கள்

1. வடுவாமனன் ப்ரஹ்மசாரிவாமனன்.

சொல்லை என்றும் மறுக்கமாட்டான்; மிக்க மன இரக்க மூடையவன். ஆகையால் அவன் பொய் பேச இடமில்லை. ஆதலால் அவன் ஸொத்தை இழக்கவேண்டியதாய் வந்தது. அவன்மேல் பிசகில்லை. வாமனனே தப்பு செய்தவன். இவனைக் கொல்லுவதே ந்யாயம். அதுவே நாம் நம் ப்ரபுவுக்குச் செய்யத் தகுந்த மேலான சுஶ்ரூஷையாம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—பலியின் ப்ருத்யர்களான அஸுரர்கள் இங்ஙனம் மொழிந்துகொண்டு ஆயுதங்களை எடுத்தார்கள். சூலம் பட்டயம் முதலியவற்றைக் கையிலேந்தின அவ்வஸுரர்களனைவரும் கோபம் தலையெடுக்கப்பெற்றுப் பலியின் ஆஜ்ஞையையும் எதிர் பாராமல் வாமனனை அடிக்க எதிர்த்தோடினார்கள். மன்னவனே! அங்ஙனம் அஸுரர்கள் வாமனன்மேல் எதிர்த்து வருவதைக் கண்டு நந்தன் முதலிய பகவானுடைய பரிசாரகர்கள் ஆயுதங்களை யேந்தி நகைத்து அவர்களைத் தடுத்தார்கள். நந்தன் ஸுநந்தன் ஜயன் விஜயன் ப்ரபலன் உத்பலன் குமுதன் குமுதாக்ஷன் விஷ்வக்ஸேனன் கருத்மான் ஜயந்தன் ஶ்ருததேவன் புஷ்பதந்தன் ஸாத்வதன் ஆகிய பகவானுடைய பரிசாரகர்கள் அனைவரும் பதினாயிரம் யானைப்பலமுடையவர்கள். அவர்கள் எல்லோரும் மஹாபலமுடைய அஸுரஸைன்யங்களை அடித்தார்கள். பலியும் பரமபுருஷனுடைய பாரிஷதர்களால் தன் ப்ருத்யர்களான தைத்யர்கள் அடியுண்பதைக் கண்டு சுக்ரனுடைய சாபத்தையும் நினைத்து மிகவும் கோபமுற்றிருக்கின்ற தைத்யர்களைத் தடுத்தான்.

பலி சொல்லுகிறான்:—ஓ விப்ரசித்தி! ராஹுவே! ஹேதி! என் வார்த்தையைக் கேட்பீர்களாக. நீங்கள் சண்டை செய்யவேண்டாம். திரும்பிவருவீர்களாக

நமக்கு இது ப்ரயோஜனத்தைக் கைகூட்டுவிக்குங் காலமன்று. ஓ தைத்யர்களே! காலரூபியான பகவானே ஸமஸ்த ப்ராணிகளுக்கும் ஸுகதுக்கங்களை விளைக்கிறான். எத்தகைய புருஷனும் அவனைத் தன் பல பராக்ரமாதிகளால் கடக்கமாட்டான். காலரூபியான அந்தப் பகவானே முன்பு நமக்கு ஸுகத்தை விளைத்துக்கொண்டிருந்தான். அவனே இப்பொழுது அதற்கு விபரீதமாக நமக்குத் துக்கத்தை விளைத்துக்கொண்டு தேவதைகளுக்கு ஸுகத்தை விளைக்கிறான். ஆகையால் எப்படிப்பட்ட ஜந்துவும் தேஹபலம் ஸஹாயபலம் புத்திபலம் துர்க்கபலம் மந்த்ரபலம் ஔஷதபலம் மற்றும் பலவகைப் பலங்கள் ஸாமம் முதலிய உபாயங்கள் ஆகிய எவற்றினாலும் காலரூபியான பகவானைக் கடக்கமுடியாது. தெய்வபலம் தலையெடுத்துக் கொழுத்திருந்த நீங்கள் அந்தப் பகவானுடைய அனுசரர்களான தேவதைகளைப் பெரும்பாலும் ஜயித்திருக்கிறீர்கள். அவர்களே இப்பொழுது யுத்தத்தில் ஜயித்து ஸிம்ஹநாதம் செய்கிறார்கள். நமக்குத் தெய்வம் அனுகூலமாயிருக்குமாயின், நாம் அவர்களை ஜயிப்போம். எப்பொழுது நம் ப்ரயோஜனம் கைகூடுமோ அப்படிப்பட்ட காலத்தை எதிர் பார்த்துக்கொண்டிருப்பீர்களாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— தைத்யக் கூட்டங்களிலும் தானவக் கூட்டங்களிலும் சிறந்த அவ்வீரர்களனைவரும் தங்கள் ப்ரபுவான பலியின் வார்த்தையைக் கேட்டு விஷ்ணுவின் பாரிஷதர்களால் பீடிக்கப்பட்டுப் பாதாளத்திற்குள் ப்ரவேசித்தார்கள். அப்பால் ஜயலக்ஷ்மியால் பேரொளியுடன் திகழ்கின்ற கருடன் வாமனரூபியான பகவானுடைய அபிப்ராயத்தை அறிந்து யாகத்தில் ஸுத்யையென்னும் கர்மம் நடக்குந்தினத்தி

ளன்று வருணபாசங்களால் பலியைப் பந்தனம் செய்தான். ஸர்வசக்தியான மஹாவிஷ்ணு தைத்யர்களுக்குப் பதியான பலியைப் பிடித்துப் பந்தனம் செய்கையில், ஆகாயத்திலும் பூமியிலும் மற்ற எல்லாத்திசைகளிலும் பெரிய ஹாஹாகாரம் உண்டாயிற்று. பிறகு வாமன பகவான் வருணபாசங்களால் கட்டுண்டு ஐஸ்வர்யத்தை இழந்தும் மனவுறுதி மாறாமல் விவேகியும் பெரும் புகழுமாய்த் திகழ்கின்ற அந்தப் பலியைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தான்.

வாமனன் சொல்லுகிறான்:—ஓ அஸுரனே! எனக்கு நீ இந்தப்பூமியில் மூன்றடிகள் கொடுப்பதாக ப்ரதிஜ்ஞை செய்தனை. இரண்டடிகளால் த்யுலோகம் முதலிய ஸமஸ்தலோகங்களோடு கூடிய பூமியை யெல்லாம் அளந்து பெற்றுக்கொண்டேன். மூன்றாமடிக்கு இடங் கொடுப்பாயாக. இந்த ஸூர்யன் எதுவரையில் தன் கிரணங்களால் விளங்கச்செய்கிறானோ, சந்த்ரன் நக்ஷத்ரங்களோடு கூடித் தான் எதுவரையில் விளங்கச் செய்கிறானோ, அக்னியும் மேகமும் எதுவரையில் இருக்கின்றனவோ, அதுவரையிலுமே இந்தப் பூமி உன்னதிகாரத்திற்குட்பட்டது. அப்படிப்பட்ட இப் பூலோகத்தை யெல்லாம் நான் ஒரே அடியினால் அளந்தேன். ஆகாயமும் திசைகளும் சரீரத்தினால் ஆக்ரமிக்கப்பட்டன. என்னுடையதான ஸ்வர்க்கலோகத்தை இரண்டாமடியினால் அளந்தேன். இஃதெல்லாம் நீ பார்த்துக்கொண்டிருக்கும் பொழுது நடந்ததேயன்றி மறைவில் நடக்கவில்லை. ப்ரதிஜ்ஞைசெய்த மூன்றாமடியைக் கொடாத நீ நரகத்தில் தான் வஸிக்கவேண்டியதா யிருக்கிறது. உன் ஆசார்யனாகிய சுக்ரனும் இதை முன்னமே ஒப்புக்கொண்டிருக்கிறான். ஆகையால் நீ நரகம்போய்ச் சேருவாயாக. எவன்

ஒருவனுக்கு ஒன்று கொடுக்கிறேனென்று ப்ரதிஜ்ஞை செய்து அதைக் கொடுக்க வல்லமையற்றிருக்கிறானோ, அவனுடைய மனவிருப்பம் வீணேயாம். அவனுக்கு ஸ்வர்க்கம் வெகுதூரத்தில் இருக்குமேயன்றி எப்பொழுதும் கிட்டாது. அவன் அதோகதியான நரகத்தையே அடைவான். நீ உன்னை மிகவும் சிறைவாளனாகப் பாவித்துக்கொண்டு இப்பொழுது எனக்குக் கொடுக்கிறேனென்று சொல்லி என்னை வஞ்சித்தனை. ஆகையால் அந்தப் பொய்யின்பலனாகச் சில வர்ஷங்கள் நரகத்தை அனுபவிப்பாயாக. இருபத்தொன்றாவது அத்யாயம் முற்றிற்று.

---

பகவான் பலிக்கு அருள்புரிந்து அவனை ஸுதல மென்னும் விவரலோகத்தில் இருத்திப் பலவரங்களைக் கொடுத்துத் தன்னையும் அவனுக்கு த்வாரபாலகனாகச் செய்தல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மன்னவனே! பலி இங்ஙனம் பகவானால் வஞ்சிக்கப்பட்டு ஸத்யத்தினின்று நழுவும்படி எவ்வளவு பேதம் செய்யினும் மனவுறுதி மாறப் பெறாமல் சிறிதும் தழதழப்பின்றிக் கம்பீரமாக இங்ஙனம் மொழிந்தான்.

பலி சொல்லுகிறான்:—மேன்மையுடைய ப்ராஹ்மாதிகளாலும் புகழத் தகுந்த மிக்க புகழுடையவனே! தேவதைகளிற் சிறந்தவனே! நீ என் வார்த்தையைப் பொய்யென்று நினைப்பாயாயின், அதை மெய்யாகச் செய்கிறேன். அது வஞ்சனமாகவேண்டாம். உன் மூன்றாமடியை என் தலைமேல் வைப்பாயாக. நான் நரகத்திற்காவது ஸ்தானத்தினின்று நழுவினதற்காவது வருணபாசங்களால் கட்டுண்டமைக்காவது மஹத்தான துக்கம்

நேர்ந்தமைக்காவது ஸொத்தையெல்லாம் இழந்தமைக் காவது நீ என்னை நிக்ரஹம் செய்ததற்காவது பயப்படவில்லை. பொய் பேசுவதற்கும் அபகீர்த்திக்குமே நான் பயப்படுகின்றேன். நான், ப்ராணிகளுக்கு மேன்மை யுடையவர்களால் நேர்ந்த தண்டனை புகழத்தகுந்த தென்று நினைக்கிறேன். இப்படிப்பட்ட தண்டனையைத் தாய் தந்தையர்களாவது உடன் பிறந்தவர்களாவது நண்பர்களாவது எனக்குச் செய்யமாட்டார்கள். நீ அஸுரர்களான எங்களுக்குக் கண்மறைவிலிருந்து ஹிதம் செய்யுங் குருவாயிருக்கின்றனை. சௌர்யம் வீர்யம் முதலிய பல குணங்களால் ஏற்பட்ட மதங்களால் கண் தெரியாதிருக்கின்ற எங்களுக்கு அந்த மதங்களை யெல்லாம் போக்கும்படியான கண்ணைக்கொடுத்தாற்போலிருக் கின்றனை. மற்றும், பல அஸுரர்கள் உன்னிடத்தில் த்வேஷம் வேருன்றி மாறுதிருந்து அனன்யப்ரயோஜனர் களான பக்தியோகநிஷ்டர்களுக்கும் கிடைக்க அரிதான ஸித்தியைப் பெற்றார்கள். நீ மஹானுபாவன். உன் செயல்கள் அற்புதமானவை; எண்ணிறந்தவை. அவற் றை இப்படிப்பட்டவை யென்று எவர்க்கும் சிந்திக்க முடியாது. அப்படிப்பட்ட உன்னால் நான் நிக்ரஹிக்கப் பட்டு , வருணபாசங்களால் கட்டுண்டும் சிறிதும் லஜ்ஜிக்கவில்லை; துக்கிக்கவுமில்லை. நீ என்னை நிக்ரஹித் ததும் கட்டினதும் எனக்குப் புகழே. மற்றும், என் பாட் டனுகிய ப்ரஹ்லாதன் உன் பக்தர்களால் மிகவும் புகழப் பட்டவன். அவனுடைய கீர்த்தி எங்கும் நிறைந்திருக் கின்றது. அவன் தன் தந்தையும் உனக்குச் சத்ருவுமான ஹிரண்யகசிபுவினுல் பலவாறு துக்கங்களை மூட்டி ஹிம்ஸிக் கப்பட்டும் உன்னையே ஸகலவித பந்துவாகவும் மேலான புருஷார்த்தமாகவும் பற்றி, 'மரணம் அடையுந்தன்

மையுள்ள ஜீவனுக்கு இந்தத் தேஹத்தினால் என்ன ப்ர யோஜனம்? ஆயுள் கழிவதுமாத்ரமேயன்றி மற்றொன்று மில்லை. இது எத்தனைகாலம் இருந்தாலும் கடைசியில் துறக்கப்போகின்றதேயன்றி விடாமல் கூடவேயிருக்கப் போகின்றதில்லை. பணத்தைப் பங்கிட்டுக்கொண்டு போ கின்றவர்களாகையால் திருடர்கள் போன்ற பந்துக்களா லாவது என்ன ப்ரயோஜனம்? ஸம்ஸாரத்தை மேன்மே லும்வளர்த்துக்கொள்வதற்குக் காரணமானபார்யையால் தான் என்ன ப்ரயோஜனம்? வீடு வாசல் முதலியவற்றால் தான் என்ன ப்ரயோஜனம்!' என்று நிச்சயித்து மஹா குணமுடையவனும் பேரறிஞனும் பாகவத ஸ்ரேஷ்டனு மாகிய அந்த ப்ரஹ்லாதன் ஸம்ஸார ஜனங்களுடைய ஸஹவாஸத்தினின்றும் பயந்து, நீ தன்பக்ஷமான தைத்ய குலத்தை யெல்லாம் அழிப்பவனாயினும், எவ்விதத்திலும் பயத்திற்கிடமில்லாத உன் பாதாரவிந்தத்தையே நிலை நின்ற புருஷார்த்தமாக நினைத்து அதையே சரணம் அடைந்தான். அப்படியே நானும் தெய்வாதீனமாய் என் சத்ருவாகிய உன் ஸமீபத்திற்கு வரும்படி செய்யப் பட்டேன். மற்றும், இவ் வுலகத்தில் புருஷன் எதனால் மதிகெட்டுத் தான் யமனுக்கு அருகாமையில் இருக்கின்ற தன் பிழைப்பை நிலையற்றதென்று அறிய முடியாதிருக்கி ன்றானோ, அப்படிப்பட்ட செல்வப் பெருக்கினின்றும் என்னை நீ பலாத்காரமாக நழுவச் செய்தனை. ஆகையால் இங்ஙு னம் மஹோபகாரம் செய்த உன் பாதாரவிந்தங்களையே நானும் சரணம் அடைகின்றேன்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—குருஸ்ரேஷ்டனே! அந்தப் பலிசக்ரவர்த்தி இங்ஙனம் சொல்லிக்கொண்டிருக்கையில் பகவானிடத்தில் மிகுந்த அன்புடைய ப்ரஹ்லாதன் பூர்ணசந்த்ரன் உதித்தாற்போல அவ்விடம் வந்து சேர்ந்

தான். அவன் காந்தியினால் மிகவும் திகழ்வுற்றிருந்தான். அவனுடைய கண்கள் தாமரையின் இதழ்போல மிகவும் அழகாயிருந்தன. அவன் மிக்க உயரமாயிருப்பவன்; பீதாம்பரம் உடுத்திருந்தான். அவனுடைய தேஹகாந்தி மைக்குவியலின் ஒளி போன்றிருந்தது. அவன்புஜங்கள் திரண்டுருண்டு முழந்தாள்வரையிலும் நீண்டிருந்தன. அவன் பார்க்கப் பதினாயிரம் கண்கள் வேண்டும்படி அழகாயிருந்தான். பலி அத்தகைய ப்ரஹ்லாதனைக் கண்டும் வருணபாசங்களால் கட்டுண்டிருக்கையால் முன்போல (வழக்கம்போல) அர்க்யம் முதலிய உபசாரங்களுடன் பூஜை செய்யவில்லை; வெறுமனே தலையால் வணங்கினான். அப்பால் கண்களில் நீர் ததும்பப்பெற்று வெட்கமுற்று முகத்தைச் சாய்த்துக்கொண்டிருந்தான். அனந்தரம் ஆழ்ந்தமனமுடைய ப்ரஹ்லாதன் ஸத்புருஷர்களுக்கு நாதனும் ஸுநந்தர்முதலிய பாரிஷதர்களால் சூழப்பெற்று அவ்விடத்தில் வீற்றிருக்கின்றவனுமான வாமனரூபியான பகவானைப் பார்த்து மயிர்க்கூச்சங்களாலும் கண்ணீர்களாலும் ததழதழத்து அருகில் சென்று பூமியில் விழுந்து நமஸ்கரித்து இங்ஙனம் மொழிந்தான்.

ப்ரஹ்லாதன் சொல்லுகிறான்:—இந்தப் பலி விஸ்வஜித்தென்னும் யாகத்தினால் உன்னை ஆராதித்தான். அதனால் நீயே இவனுக்கு இந்த்ரபதம் கொடுத்தனை. அதை நீயே இப்பொழுது பறித்தனை. அங்ஙனம் நீ செய்தது அழகாகத்தான் இருக்கின்றது. மதியை மயக்குகின்ற செல்வப்பெருக்கினின்றும் இவனை நீ நழுவச் செய்தமை பெரிய அனுக்ரஹமென்று எனக்குத் தோன்றுகின்றது. இல்லையாயின், இவன் செல்வக்கொழுப்பினால் ஆத்ம பரமாத்மாக்களைப் பற்றின அறிவு சிறிதுமின்றி

முதலே அழிந்துபோய் விடுவான். ஆத்மபரமாத்மாக்க ளின் உண்மையை உணர்ந்த வித்வான் மனவூக்கத்தோ டிருப்பினும் செல்வப் பெருக்கினால் மதிமயங்குவான். அப்பால் அவன் ஆத்மஸ்வரூபத்தை உள்ளபடி எங்ஙனம் அறிவான்? ஆகையால் அனர்த்தத்திற்கிடமான ஐஸ்வர் யத்தினின்றும் இவனை நீ நழுவச்செய்தது அனுக்ரஹமே. இங்ஙனம் மஹோபகாரம் செய்த உனக்கு நமஸ்காரம். நீ ஜகத்திற்கெல்லாம் ஈஸ்வரன், எல்லாமறிந்தவன்; நாரா யணன். ஸமஸ்தகர்மங்களையும் நீ ஸாக்ஷாத்கரிக்கின்றனை. உனக்கு நமஸ்காரம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— மன்னவனே! ப்ரஹ்லா தன் கைகூப்பிக் கேட்டுக்கொண்டிருக்கையில் மஹானு பாவனாகிய ப்ரஹ்மதேவன் மதுஸூதனனைப் பார்த்து இங்ஙனம் மொழியத் தொடங்கினான். அப்பொழுதே பதிவ்ரதையான விந்த்யாவளியும் தன் கணவன் கட்டுண் டிருப்பது கண்டு பயத்தினால் தழுதழுத்து நமஸ்கரித்துக் கைகளைக் குவித்துக் கண்ணும் கண்ணீருமாக உபேந்த் ரனை நோக்கி இங்ஙனம் மொழிந்தாள்.

விந்த்யாவளி சொல்லுகிறாள்:—நீ உன் விளையாட்டிற் காக இந்த ஜகத்தை யெல்லாம் படைத்தனை. அப்படிப் பட்ட இந்த ஜகத்தைச் சில துர்ப்புத்திகள் தங்களுடைய தென்று அபிமானிக்கிறார்கள். அஜ்ஞானத்தினால் தங்கள் நினைவு பிசகென்றறியாமல் வெட்கமற்றிருக்கின்ற அவர் கள் 'நாம் ஸ்வதந்த்ர ப்ரபுக்கள். இந்த ஜகத்தெல்லாம் நம்முடையதே' என்று வாயால் பேசுவார்கள். ஆனால், உண்மை அதுவன்று. அந்தராத்மாவாகிய நீ அவர்க ளுடைய அந்த வாய்ப்பேச்சையும் ஒழித்துவிடுகின்றனை. இவ்வுலகங்களை யெல்லாம் படைப்பவனும் பாதுகாப்பவ னும் அழிப்பவனுமாகிய உனக்கு அவர்கள் தங்களுடைய

தென்று எதைக் கொடுப்பார்கள்? உனக்கு என்ன கெடு தியைத் தான் செய்வார்கள்? உனக்கு ஒருகாலும் ஒரு குறையுமில்லை. (ஆகையால் 'நான் மூன்று லோகங்களை யும் கொடுத்தேன். மூன்றுமடிக்கு என் தேஹத்தைக் கொடுத்து ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றிக் கொள்கிறேன்' என்று தேஹாதிகளைத் தன்னுடையதென்று தான் அபி மானித்திருப்பதை வெளியிடுகிற இந்தப் பலி துர்ப்புத்தி. வெட்கமற்றவன். நீயே எல்லாவற்றிற்கும் உடையவன். ஆகையால் மந்தபுத்தியாகிய இவனைப் பந்தனத்தி னின்றும் விடுவித்துப் பாதுகாப்பாயாக.)

ப்ரஹ்மதேவன் சொல்லுகிறான்:- பூதங்களைப படைப் பவனே! பூதங்களுக்கு அந்தராத்மாவாகி அவற்றைப் பாதுகாப்பவனே! ஸம்ஹாரத்தை நடத்துகிற ருத்ரன் முதலிய தேவர்களுக்கும் தேவனே! ஜகத்தை யெல்லாம் சரீரமாகவுடையவனே! ஸொத்தெல்லாம் பறியுண்டிருக் கின்ற இந்தப் பலியை விடுவாயாக. இவன் நிக்ரஹத்திற்கு உரியவனன்று. இவன் தான் ஆண்டுவந்த பூலோகத்தை முழுவதும் கொடுத்தான். மற்றும் தான் கர்மத்தினால் ஸம்பாதித்த ஸ்வர்க்காதிலோகங்களையும் கொடுத்தான். இங்ஙனம் தன்னுடைய ஸொத்தை யெல்லாம் உனக்குக் கொடுத்து விட்டான். அன்றியும், புத்தியில் சிறிதும் தழதழப்பின்றித் தன் தேஹத்தையும் உனக்குக் கொடுத் தான். ஆகையால் இவன் நிக்ரஹிக்கத் தகுந்தவனல் லன். ஒருவன் உன் பாதாரவிந்தங்களில் கபடமின்றிப் புத்தி நிலைநிற்கப்பெற்று அவற்றிற்கு அர்க்யஜலம் கொ டுத்து அறுகம் புற்களாலாவது பூஜை செய்வானாயின், அவன் உத்தம கதியான மோக்ஷத்தையும் பெறுவான். இந்தப் பலி மனவுறுதியுடன் மூன்று லோகங்களையும்

உனக்குக் கொடுத்திருக்கிறான். இவன் எங்ஙனம் மனவருத்தம் அடையக்கூடும்? ஆகையால் இவனை விடுவாயாக.

ஸ்ரீவாமன பகவான் சொல்லுகிறான்:—ப்ரஹ்மதேவனே! நான் எவனை அனுக்ரஹிக்கக விரும்புகிறேனோ, அவனுடைய தனங்களைப் பறித்து விடுவேன். பணம் இருக்குமாயின், புருஷன் அதனால் மதித்துக் கர்வமுற்று விவேகமற்று உலகத்தையும் என்னையும் அவமதிப்பான். அதனால் அழிந்து போவான். ஆகையால் அநர்த்தத்திற்கிடமான பணத்தைப் பறிப்பதே நான் முதலில் செய்யும் அனுக்ரஹம். ஜீவாத்மா தான் செய்த கர்மங்களால் இவ்வுலகத்தில் பலயோனிகளில் பிறப்பதும் சாவதுமாயிருக்கையில் ஒருகால் யாத்ருச்சிக ஸுக்ருதத்தினால் புருஷஜன்மம் பெறுவான். அந்தப் புருஷஜன்மத்தில் ஜன்மம் செயல் வயது உருவம் வித்யை ஐஸ்வர்யம் தனம் இவை முதலியவற்றால் இந்த ஜீவாத்மாவுக்கு மதம் உண்டாகாதிருக்குமாயின், அவனிடத்தில் அதை என்னுடைய அனுக்ரஹமென்று அறியவேண்டும். கர்வம் அவிவேகம் இவற்றிற்குக் காரணமாயிருப்பவைகளும் ஸமஸ்த நன்மைகளையும் தடுத்துப் பல அநர்த்தங்களுக்கிடமாயிருப்பவைகளுமான ஜன்மம் முதலிய விசேஷங்கள் உண்டாயிருப்பினும், என்னிடத்தில் மனவூக்கமுடையவன் அவற்றால் மதிமயங்கப் பெறமாட்டான். தானவர்களுக்கும் தைத்யர்களுக்கும் ப்ரபுவும் அவர்களுக்குப் புகழை வளர்ப்பவனுமாகிய இந்தப்பலி ஒருவராலும் வெல்ல முடியாத என் மாயையை இனி வெல்லுவான்; எப்படிப்பட்ட ஸங்கடத்திலும் மதி மயங்கப்பெறமாட்டான். இவன் தன் தனத்தை யெல்லாம் இழந்தான்; ஐஸ்வர்யத்தினின்றும் நழுவினான்; சத்ருக்களால் அவமதிக்கப்பட்டான்; வருணபாசங்களால் கட்டுண்டான்; பந்துக்களால் கைவிடப் பட்

டான்; பெருந்துயரத்தை அடைந்தான்; குருவாகிய சுக்ராசார்யரால் விரட்டிச் சபிக்கப்பட்டான்; ஆயினும் மனவுறுதி மாறாமல் ஸத்யத்தைக் கைவிடவில்லை. நான் கபடமாகத் தர்மம் சொல்லுகையில், அப்பொழுதும் இவன் பொய் பேசாமல் தர்மத்தைக் கைவிடாதிருந்தான். இவன் என்னுடைய அனுக்ரஹத்தினால் தேஹத்தின் முடிவில் தேவதைகளுக்கும் பெறமுடியாத என் லோகத்தை அடையப்போகிறான். இவன் ஸாவர்ணிமனுவின் அந்தரத்தில் இந்த்ரபதம் பெற்று என்னையே அவலம்பித்திருக்கப் போகிறான். இப்பொழுது இவன் விஸ்வகர்மாவால் நிர்மிக்கப்பட்ட ஸுதலமென்னும் விவரலோகத்தில் சென்று அதை ஆண்டு வருவானாக. அங்கு வாஸஞ்செய்பவர்களுக்கு மனோவ்யாதிகள் சரீரவ்யாதிகள் வாட்டம் அனவதானம் குளிர் வெயில் முதலியவற்றால் விளையும் வருத்தங்களும் இன்னும் இவை போன்ற பலவருத்தங்களும் உண்டாகமாட்டா. ஓ பலி மஹாராஜனே! உனக்கு க்ஷேமம் உண்டாகுக. நீ ஜ்ஞாதிகளுடன்கூடி ஸ்வர்க்கவாஸிகளும் ஆசைப்படத் தகுந்த பெருமையுடைய ஸுதலமென்னும் விவரலோகம் போய்ச் சேருவாயாக. அங்கு நீ என் அனுக்ரஹத்தினால் ஸுகமாயிருப்பாய். அங்கு வாஸஞ்செய்கின்ற உன்னை லோகபாலர்களான இந்த்ராதிகளும் பரிபவிக்கமாட்டார்கள். இனி மற்றவர்களைச் சொல்லவேண்டுமோ? தைத்யர்களில் எவரேனும் உன் கட்டளையைக் கடப்பார்களாயின், அவர்களை என் சக்ரம் வதிக்கும். பரிஜனங்களோடும் பரிச்சதங்களோடுங்கூடின உன்னை எல்லா உபத்ரவங்களினின்றும் நான் பாதுகாக்கிறேன். ஓ வீரனே! அவ்விடத்தில் நான் எப்பொழுதும் உன் க்ருஹ த்வாரத்தில் வஸித்திருக்கக் காண்பாய். மற்றும், அவ்விடத்தில் தைத்யர்க

ளோடும் தானவர்களோடும் ஸஹவாஸத்தினால் உனக்கு உண்டாகும் அஸுரஸ்வபாவம் என்னுடைய ஸந்நிதானத்தினால் பயன்படாமல் உடனே மறைந்துபோகும். இருபத்திரண்டாவது அத்யாயம் முற்றிற்று.

{ பலி ஸுதலம் போய்ச் சேருதலும், இந்த்ரன் ஸ்வர்க்கம் சேர்ந்து ஸந்தோஷமுற்றிருத்தலும். }

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— மஹானுபாவனாகிய பலி ஸமஸ்த ஸாதுக்களாலும் புகழப்பட்டுப் பக்தி தலையெடுத்து ஆநந்த நீர்களால் கண்கள் கலங்கவும் உரை தழுதழுக்கவும் பெற்று இங்ஙனம் மொழிந்த புராண புருஷனாகிய பகவானை நோக்கி மொழிந்தான்.

பலி சொல்லுகிறான்:—ஆ! என்ன ஆச்சர்யம்! உன்னை வணங்குவதற்காகச் செய்யும் முயற்சியே உன் பக்தர்கள் விரும்பும் ப்ரயோஜனத்தை நிறைவேற்றுவதில் தவறாதிருக்கின்றது. நான் உன்னை வணங்க முயன்ற மாத்ரத்தில் ஸத்வகுணம் தலையெடுத்த லோகபாலர்களான இந்த்ரன் முதலிய தேவதைகளுக்குங்கூட இதுவரையில் ஒருகாலும் கிடைக்காத உன் அநுக்ரஹம் அஸுரனும் நீசனுமாகிய எனக்கு நேர்ந்தது.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மஹாபலி இங்ஙனம் மொழிந்து பகவானை நமஸ்கரித்து ப்ரஹ்மதேவனையும் ருத்ரனையும் வணங்கி வருணபாசங்களினின்றும் விடுபட்டு மனக்களிப்புற்றுத் தன்பரிவாரங்களோடு ஸுதலலோகம் போகமுயன்றான். பகவான் இவ்வாறுபலியிடத்தினின்றும் ஸ்வர்க்கத்தை மீட்டு இந்த்ரனுக்குக் கொடுத்து அதிதியின் விருப்பத்தை நிறைவேற்றி இந்த்ரனுக்குத் தம்பி

யாகையால் உபேந்த்ரனென்று பெயர்பெற்று ஜகத்தையெல்லாம் பாதுகாத்து வந்தான். அப்பொழுது, ப்ரஹ்லாதன் தன் வம்சத்தை வளரச்செய்பவனும் தன் பெயரனுமாகிய பலி பகவானுடைய அனுக்ரஹம் பெற்றுப் பாசங்களினின்றும் விடுவிட்டுத் திகழ்வதைக் கண்டு பக்தியினால் வணக்கமுற்றுப் பகவானை நோக்கி இங்ஙனம் மொழிந்தான்.

ப்ரஹ்லாதன் சொல்லுகிறான்:—நாதனே! நீ எங்களுக்குச் செய்த இந்த அநுக்ரஹத்தைப்ப்ரஹ்மதேவன் ஸ்ரீமஹாலக்ஷ்மி ருத்ரன் இவர்களில் ஒருவரும் பெறவில்லையென்றால் மற்றவர்கள் பெறவில்லையென்பதைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? ஸமஸ்தலோகங்களாலும் பூஜிக்கப்பட்ட ப்ரஹ்மாதிகளும் உன் பாதாரவிந்தங்களை வணங்குகிறார்கள். அப்படிப்பட்ட நீ கொடுந்தொழிலுடைய அஸுரஜாதியில் பிறந்த எங்களையும் துக்கத்தினின்று பாதுகாக்கின்றனை. உன்னருளின் பெருமையை என்னென்று சொல்லுவேன்? சரணம் கொடுப்பவனே! ப்ரஹ்மதேவன்முதலியதேவதைகள் உன் பாதாரவிந்தங்களின் [1] மகரந்தத்தைப் பணிந்து ஸ்ருஷ்டிமுதலிய அதிகாரங்களை நடத்துகையாகிற ஐஶ்வர்யங்களைப் பெறுகின்றார்கள். அப்படிப்பட்ட நீ கெடுமதிகளும் கொடுஞ்சாதியர்களுமான எங்களையும் கருணை நிறைந்த உன் கடைக்கண்ணோக்கத்திற்கு விஷயமாகச் செய்தனை. இதற்குக் காரணம் என்னவோ தெரியவில்லை. நிக்ரஹம் அனுக்ரஹம் முதலிய உன் செயல்களெல்லாம் ஆச்சர்யமானவை. கர்மவஶ்யரான ஜீவாத்மாக்களின் செயல்களைப் போன்றவையல்ல. அளவிறந்த சக்திகள் அமைந்த உன் ஸங்கல்பரூபஜ்ஞானத்தினால் அனாயாஸமாகவே நீ உலகங்களையெல்

1 தேன். அதைப் பணிகையாவது - அனுபவிக்கை.

லாம் படைக்கின்றனை. நீ அந்தப் படைப்பு முதலிய காரியங்களுக்கு வேண்டிய ஞானம் சக்தி முதலிய குணங்களெல்லாம் அமைந்தவன். ஸமஸ்த சேதனு சேதனங்களுக்கும் நீ அந்தராத்மாவாயிருப்பவன். ஆனது பற்றியே உனக்குப் பக்ஷபாதம் மனஇரக்கமில்லாமை முதலிய தோஷங்கள் எவையும் கிடையாது. நீ எல்லாவற்றையும் ஸமமாகப் பார்க்குந்தன்மையன். நீ உன் பக்தர்களுக்கு அன்பனுயிருப்பது பக்ஷபாதத்தில் சேராது. கல்பவ்ருக்ஷம் தன்னைப் பணிகிறவர்களின் விருப்பங்களை நிறைவேற்றிக் கொடுக்கின்றது. அவ்வளவால் அதற்குப் பக்ஷபாதமென்று சொல்லக்கூடுமோ? அங்ஙனமே நீ உன் பக்தர்களுக்கு அருள்புரிவதும் பக்ஷபாதமாகாது. நீ கல்பவ்ருக்ஷத்தின் ஸ்வபாவமுடையவன்:

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—குழந்தாய்! ப்ரஹ்லாதனே! உனக்கு க்ஷேமம் உண்டாகுக. ஸுதலமென்னும் பிலஸ்தானத்திற்குப் போவாயாக. அங்கு உன்பெயரனுகிய பலியுடன் களிப்புற்று ஜ்ஞாதிகளுக்கும் களிப்பை விளைத்துக்கொண்டிருப்பாயாக. அந்த ஸுதலலோகத்தில் நான் என்றும் கதாபாணியாயிருக்கக் காண்பாய். நீ என்னைக் காண்பதனுல் மஹாநந்தம் அடைந்து கர்மபந்தங்களெல்லாம் அழியப் பெறுவாய்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மன்னவனே! பரிசுத்தமான அறிவையுடைய ப்ரஹ்லாதன் இத்தகையதான பகவானுடைய ஆஜ்ஞையை அப்படியேயென்று சிரஸாவஹித்துத் தன் பெயரனை பலியுடன் கைகுவித்துப் பகவானை ப்ரதக்ஷிணம்செய்து நமஸ்கரித்து ஸமஸ்தமான அஸுர ஸைன்யங்களுக்கும் ப்ரபுவாகி அந்தப் பகவானிடம் அனுமதி பெற்றுக்கொண்டு ஸுதலலோகம் போய்ச் சேர்ந்தான். ராஜனே! அப்பொழுது நாராய

ணன் ஸபையில் அருகாமையில் ப்ராஹ்மவாதிகளான ருத்விக்குக்களின் இடையில் உட்கார்ந்திருக்கின்ற சுக்ரனைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:— ப்ராஹ்மணஸ்ரேஷ்டனே! யாகம் செய்பவனும் உன் சிஷ்யனுமாகிய பலியின் யஜ்ஞகர்மங்களில் நேர்ந்த வைஷம்யத்தை வேதத்தில் சொல்லிய விதியின்படி செய்து நிறைவேறச்செய்வாயாக.

சுக்ரன் சொல்லுகிறான்:—இந்தப் பலியின் யஜ்ஞத்தில் கர்மவைகுண்யம் எந்தக் காரணத்தினால் உண்டாகும்? பலி மனோவாக் காயங்களென்கிற மூன்று காரணங்களாலும் ஸர்வகர்மங்களுக்கும் ப்ரபுவும் யஜ்ஞபுருஷனுமாகிய உன்னை ஆராதித்தான். ஆகையால் அவனுடைய யஜ்ஞகர்மங்களில் வைகுண்யத்திற்கு ப்ரஸக்தியேயில்லை. மந்த்ரம் தந்த்ரம் தேசம் காலம் யாகத்திற்கு வேண்டிய வஸ்துக்கள் ஆகிய இவற்றுள் எதற்கு எவ்விதமான குறைவு நேரினும், அவற்றையெல்லாம் உன்னுடைய நாம ஸங்கீர்த்தனமே நிறைவேற்றி விடுகின்றது. இனி உன்னையே நேரில் பூஜித்தவனுடைய கர்மங்களில் வைகுண்யத்திற்கு என்ன ப்ரஸக்தி யுண்டு? மஹானுபாவனே! ஆயினும், சொல்லுகின்ற உன்னுடைய கட்டளைப்படி செய்கிறேன். உன் கட்டளைப்படி நடப்பதே ஸமஸ்த புருஷர்களுக்கும் சிறந்த தன்மையாமல்லவா?

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஜ்ஞானாதிகுணங்கள் நிறைந்த சுக்ரன் இவ்வாறு பகவானுடைய ஆஜ்ஞையைப் புகழ்ந்து பலியினுடைய யாகத்தில் நேர்ந்த கெடுதிக்கு ப்ராஹ்மரிஷிகளுடன் கலந்து பரிஹாரம் செய்தான். மஹாராஜனே! வாமன பகவான் சத்ருக்களால் பறிக்கப்பட்டஸ்வர்க்கத்தை இங்ஙனம் பலியிடத்தினின்று யாசித்துத் தன் ப்ராதாவான இந்த்ரனுக்குக் கொடுத்தான்.

அப்பொழுது ப்ரஜாபதிகளுக்கெல்லாம் ப்ரபுவாகிய ப்ரஹ்மதேவன் தேவதைகளோடும் ரிஷிகளோடும் பித்ருக்களோடும் மனுக்களோடும் மனுபுத்ரர்களான மன்னவர்களோடும் தக்ஷர் ப்ருகு அங்கிரஸ்ஸு முதலியவர்களோடும் ஸுப்ரஹ்மண்யனோடும் ருத்ரனோடும் கூடிக் கச்யபர் அதிதி இவர்களுக்கு ப்ரீதியை விளைக்கும் பொருட்டும் ஸமஸ்தலோகங்களின் யோகக்ஷேமங்களின் பொருட்டும் வாமனனை லோகங்களுக்கும் லோகபாலர்களுக்கும் ப்ரபுவாகச் செய்தான். வேதங்களையும் ஸமஸ்த தேவதைகளையும் தர்மத்தையும் தவத்தையும் செல்வத்தையும் மங்களமான வ்ரதங்களையும் ஸ்வர்க்க மோக்ஷங்களையும் பாதுகாக்க வல்லவனாகிய அந்த உபேந்த்ரனை ப்ரஹ்மதேவன் ஸமஸ்த பூதங்களின் க்ஷேமத்தின் பொருட்டு நாதனாக ஏற்படுத்தினான். அதனால் ஸமஸ்த பூதங்களும் மிகுந்த ஸந்தோஷம் அடைந்தன. அப்பால் தேவேந்த்ரன் ப்ரஹ்மதேவனால் தூண்டப்பட்டு லோகபாலர்களுடன் வாமன் பகவானைத் தெய்வ விமானத்தில் ஏற்றி ஸ்வர்க்கத்திற்கு அழைத்துக் கொண்டு போனான். பிறகு இந்த்ரன் உபேந்த்ரனுடைய புஜபலத்தினால் பாதுகாக்கப்பட்ட மூன்று லோகங்களையும் பெற்றுப் பயம் தீர்ந்து பெருஞ் செல்வம் நிரம்பப் பெற்றுப் பேரானந்தமுற்றிருந்தான். ப்ரஹ்மதேவன் ருத்ரன் குமரன் ப்ருகு முதலிய ரிஷிகள் பித்ருக்கள் ஸித்தர்கள் ஆகிய இவர்களும் விமானங்களில் திரியும் மற்றவர்களும் ஸமஸ்த பூதங்களும் ஸ்ரீமஹாவிஷ்ணுவின் மிக்கு அற்புதமான அப் பெருஞ் செயலைப் புகழ்ந்து பாடிக்கொண்டு அதிதியையும் புகழ்ந்து தத்தம் இருப்பிடம் சென்றார்கள். குருகுலாலங்காரனே! த்ரிவிக்ரமாவதாரம் செய்த பகவானுடைய வ்ருத்தாந்தத்தை யெல்

லாம் உனக்கு இங்ஙனம் மொழிந்தேன். இதைக் கேட்கிறவர்களுடைய பாபங்களெல்லாம் பறந்துபோம். எவன் த்ரிவித்ரமாவதாரம் செய்த பகவானுடைய மஹிமையின் எல்லையைப் பேசுகிறுனே அவன் இப்பூமியின் தூட்களை யெல்லாம் எண்ணுவான். (பூமியின் தூட்களை எண்ண முடியாதது போல அப் பகவானுடைய மஹிமையின் எல்லையைப் பேசமுடியாது. புத்தியுள்ளவன் பூமியின் தூட்களை நெடுங்காலமாக எண்ணி முடிப்பானுயினும் அப்பகவானுடைய மஹிமையின் எல்லையைப் பேசமுடியாது). 'த்ரிவிக்ரமனுடைய மஹிமையின் கரையை அறிந்தவன் இதுவரையில் பிறந்ததுமில்லை; இப்பொழுது பிறக்கவுமில்லை; இனிப் பிறக்கப்போகிறதுமில்லை. பிறந்தவனுவது பிறக்கிறவனுவது பிறக்கப் போகிறவனுவது அந்தப் பகவானுடைய மஹிமையின் அக்கரையை அடைவானே? அடையமாட்டான்' என்று மந்த்ரங்களை ஸாக்ஷாத்கரிக்கவல்ல வஸிஷ்டாதி ரிஷிகள் சொல்லுகிறார்கள். அற்புதச் செயலுடையவனும் ப்ரஹ்மாதி தேவர்களுக்கும் தேவனுமாகிய ஸ்ரீஹரியினுடைய இந்த வாமனுவதார வ்ருத்தாந்தத்தைக் கேட்கிறவன் பரமகதியான மோக்ஷத்தைப் பெறுவான். தேவர் மனுஷ்யர் பித்ருக்கள் இவர்களைப் பற்றின எந்தக் கார்யத்திலாவது இந்த வாமனுவதாரவ்ருத்தாந்தத்தை வாசிப்பார்களாயின், அவர்களுடைய அக்கார்யம் நன்கு பயன் பெறுமென்று இதன் மஹிமையை யறிந்தவர்கள் கூறுகின்றார்கள். இருபத்துமூன்றுவது அத்யாயம் முற்றிற்று.

## மத்ஸ்யாவதார வ்ருத்தாந்தம்

ஸத்யவ்ரத மன்னவன் மேன்மேலும் உருவம் வளர்ந்து வரப்பெற்ற மத்ஸ்ய ரூபியான பகவானை ஸ்தோத்ரஞ்செய்தல்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:— மஹானுபாவரே! அற்புதமான செயல்களையுடைய பகவானுடைய முதலவதாரத்தின் சரித்ரத்தைக் கேட்க விரும்புகிறோம். அவன் முதலில் ஆச்சர்யமான ஒரு மத்ஸ்யம் போலத் தோன்றினனென்று கேள்வி. தான் ஸர்வேஶ்வரனாயிருந்தும் கர்மத்திற்கு உட்பட்ட ஜீவன்போலத் தமோகுணமே இயற்கையாயிருப்பதும் பெருங்கோபமுடையதும் உலகங்களால் நிந்திக்கப்படுவதுமான மத்ஸ்ய உருவத்தை எந்த ப்ரயோஜனத்திற்காகக் கொண்டானோ, அதைக் கேட்க விரும்புகிறோம். ஜ்ஞானாதி குணங்கள் நிறைந்த முனிவரே! இவற்றையெல்லாம் எங்களுக்கு உள்ளபடி மொழிவீராக. உத்தமஶ்லோகனான பகவானுடைய சரித்ரம் ஸமஸ்தலோகங்களின் பாபத்தையும் போக்குமல்லவா?

ஸூதர் சொல்லுகிறார்:—பரீக்ஷித்து மன்னவனால் இங்ஙனம் வினவப் பெற்ற ஸ்ரீஶுகமுனிவர் ஸ்ரீமஹாவிஷ்ணுவின் மத்ஸ்யாவதார வ்ருத்தாந்தத்தை மொழிந்தார்.

ஸ்ரீஶுகர் சொல்லுகிறார்:—ஈஶ்வரன் பஶுக்களையும் ப்ராஹ்மணர்களையும் தேவதைகளையும் ஸாதுக்களையும் வேதங்களையும் பாதுகாக்கும் பொருட்டும் தர்மம் அர்த்தம் முதலிய புருஷார்த்தங்களை அவர்களுக்கு நிறைவேற்றிக் கொடுக்கும் பொருட்டும் மத்ஸ்யாதி உருவங்களை ஏற்றுக்கொள்கிறான். அவன் மேன்மையும் தாழ்மையுமுடைய தேவ மனுஷ்யாதி பூதங்களிற் பிறந்து அவற்

றைப்போலச்செயல்களைச் செய்துகொண்டிருப்பினும் கர்மத்தினால் விளைகின்ற தேவமனுஷ்யாதி தாரதம்யத்தை ஏற்றுக்கொள்கிறதில்லை. காற்று எல்லா இடங்களிலும் வ்யாபித்திருப்பினும் அவ்வவற்றின் தோஷங்கள் தீண்டப் பெறுதிருப்பதுபோல ஈச்வரனும் தேவமனுஷ்யாதி யோனிகளிற் பிறந்து அவற்றோடொத்த உருவம் செயல் முதலியன வுடையவனாயினும் அவற்றின் தோஷங்கள் தன்மேல் தீண்டப்பெறுவதில்லை. அவன் ஸமஸ்த கல்யாண குணங்களும் அமைந்து ப்ராக்ருதமான ஸத்வாதி குணங்களின் ஸம்பந்தமற்றவனுமாயிருப்பான். முன் கல்பத்தின் முடிவில் ப்ராஹ்மமென்னும் நைமித்திக ப்ரளயம் உண்டாயிற்று. அப்பொழுது பூலோகம் முதலிய மூன்று லோகங்களும் ஸமுத்ரத்தில் முழுகின. பகற்பொழுது முடிந்து ராத்ரிகாலம் நேரிட்டமையால் உறக்கம் நேரிட்டுப் படுத்துக்கொள்ள விரும்புகின்ற ப்ரஹ்மதேவனுடைய முகத்தினின்றும் நழுவின வேதங்களை அருகிலிருந்த ஹயக்ரீவனென்னும் தானவேந்த்ரன் பறித்துக்கொண்டு போயினன். அப்பொழுது தானவ ச்ரேஷ்டனாகிய ஹயக்ரீவன் செய்த கார்யத்தை அறிந்து ஸர்வேச்வரனான பகவான் அவ்வஸுரனைக் கொன்று வேதங்களை ப்ரஹ்மாவுக்கு மீட்டுக்கொடுக்கும் பொருட்டு மத்ஸ்ய வுருவங் கொண்டான். கீழ் நடந்த அந்தக் கல்பத்தில் ஸத்யவ்ரதனென்னும் ஒரு ராஜர்ஷி இருந்தான். அவன் கோபமில்லாமை முதலிய ஆத்ம குணங்களெல்லாம் நிறைந்து ஸ்ரீமந்நாராயணனையே பரமகதியாகப் பற்றி ஜலத்தையே ஆஹாரமாகக் கொண்டு தவம்புரிந்து வந்தான். அந்த ஸத்யவ்ரதனென்னும் ராஜர்ஷியே இந்த மஹாகல்பத்தில் விவஸ்வானுக்குப் பிள்ளையாகப் பிறந்து ச்ராத்த தேவனென்னும் பெயர் பெற்றுப் பக

வானால் மனுவாயிருக்கும் அதிகாரத்தில் ஏற்படுத்தப்பட்டான். அந்த ஸத்யவ்ரதன் ஒருகால் க்ருதமாலை யென்னும் நதியில் ஜலதர்ப்பணம் பண்ணிக்கொண்டிருக்கையில், அவன் கைஜலத்தில் ஒரு மத்ஸ்யம் தோன்றிற்று. அப்பால் த்ரமிடதேசத்தரசனாகிய அந்த ஸத்யவ்ரதன் தன் கையிலிருக்கும் அம்மத்ஸ்யத்தை ஜலத்துடன் நதி ஜலத்தில் விட்டான். அவன் மிக்கமனஇரக்கமுடையவன். அந்த மன்னவனை நோக்கி அம்மத்ஸ்யம் மிகவும் மனஇரக்கத்திற்கிடமான இந்த வார்த்தைகளைச் சொல்லிற்று.

மத்ஸ்யம் சொல்லுகின்றது:—ராஜனே! தீனரக்ஷகனே! ஜலஜந்துக்கள் தங்கள் ஜ்ஞாதிகளையே பக்ஷித்து ஹிம்ஸிக்குந் தன்மையுடையவை. அப்படிப்பட்ட ஜலஜந்துக்களிடத்தில் நான் பயந்து மனவருத்தமுற்றிருக்கிறேன். அப்படிப்பட்ட என்னை ஜலஜந்துக்கள் பலவும் நிறைந்த இந்த நதிஜலத்தில் ஏன் விடுகிறாய்?

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் சொல்லிய அந்த வார்த்தையைக் கேட்ட ஸத்யவ்ரதன் ஒன்றான பகவானே தன்னைப் பாதுகாக்கும்பொருட்டு மத்ஸ்யவுருவங்கொண்டிருக்கிறானென்பதை அறியாமல் தானே அம்மத்ஸ்யத்தை ரக்ஷிப்பதாக மனங்கொண்டான். கருணை நிதியான அம்மன்னவன் மிகவும் மனஇரக்கத்திற்கிடமான அந்த மத்ஸ்யத்தின் வார்த்தையைக் கேட்டு அதைக்கமண்டலு ஜலத்தில் எடுத்துவிட்டுத் தன் ஆஸ்ரமத்திற்குக்கொண்டு போனான். அம்மத்ஸ்யம் அந்தக் கமண்டலுவில் ஒரு ராத்ரியில் வளர்ந்து அதிலிருக்கத் தனக்கு இடம் போதாமல் மன்னவனைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தது.

மத்ஸ்யம் சொல்லுகின்றது:—இந்தக்கமண்டலு ஜலத்தில் பேருருவத்தத்துடன் வாஸஞ்செய்ய இஷ்டமில்லை

ஆகையால் நான் ஸுகமாயிருக்கும்படி எனக்குப் பெரிய இடம் ஏற்படுத்திக்கொடுப்பாயாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அப்பால் அம்மன்னவன் அந்த மத்ஸ்யத்தைக் கமண்டலுவினின்றும் எடுத்துப் பெரியதான ஓர் கொப்பறையில் ஜலம் சேர்த்து அதில் விட்டான். அதில் விடப்பட்ட அம்மத்ஸ்யமும் ஒரு முஹூர்த்த காலத்திற்குள் மூன்று முழம் வளர்ந்தது. அது மீளவும் மன்னவனை நோக்கி மொழிந்தது.

மத்ஸ்யம் சொல்லுகின்றது:—ராஜனே! எனக்கு இந்த இடம் ஸுகமாக வஸிக்கப் போதவில்லை. இதை விடப் பெரிய இடம் எனக்குக் கொடுப்பாயாக. நான் உன்னைச் சரணம் அடைந்தேனாகையால் நீ என்னைப் பாதுகாக்க வேண்டுமல்லவா?

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் சொல்லப்பட்ட ஸத்யவ்ரதன் அந்த மத்ஸ்யத்தைக் கொப்பறையினின்றும் எடுத்துப் பெரியதொரு தாமரைத்தடாகத்தில் விட, அது அந்தத் தடம் முழுவதும் நிரம்பிப் பெரிய மீனாக வளர்ந்துவிட்டது. மீளவும் அது மன்னவனைக்குறித்து மொழிந்தது.

மத்ஸ்யம் சொல்லுகின்றது:—மன்னவனே! ஜலத்தையே இருப்பிடமாகவுடைய எனக்கு இந்தத் தடத்து ஜலம் ஸுகமாகவாஸஞ்செய்யப்போதவில்லை. ஆகையால் என்னைப் பாதுகாக்கும் பொருட்டு வற்றாத ஜலமுடைய பெரிய மடுவில் கொண்டுபோய் விடுவாயாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் சொல்லப்பட்ட அம்மன்னவன் அந்த மத்ஸ்யத்தை ஒன்றைவிட ஒன்று பெரியதும் வற்றாத ஜலமுடையதுமான பெரிய மடுக்கள் தோறும் கொண்டுபோய் விட்டான். மீளவும் அம்மடு ஜலம் முழுவதும் நிரம்பி வளர்ந்த அம்மத்ஸ்யத்தை

ஸமுத்திரத்தில் கொண்டுபோய் விட்டான். அங்ஙனம் ஸமுத்ரத்தில் விடமுயன்ற அம்மன்னவனை நோக்கி மத்ஸ்யம் இவ்வாறு மொழிந்தது.

மத்ஸ்யம் சொல்லுகிறது:—ஓ வீரனே! இந்த ஸமுத்ரத்தில் மகரமீன் முதலிய மஹாபலிஷ்டமான ஜலஜந்துக்கள் இருக்கின்றன வாகையால் அவை என்னைப்பக்ஷித்து விடும். ஆகையால் நீ என்னை இந்த ஸமுத்ரத்தில் விடலாகாது,

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் அழகிய மொழிகளைப் பேசுகின்ற மத்ஸ்யரூபியான பகவானால் மதிமயங்கப் பெற்ற ஸத்யவ்ரதன் அந்த மத்ஸ்யத்தைப் பார்த்து மொழிந்தான்.

ஸத்யவ்ரதன் சொல்லுகிறான்:—என்னை மத்ஸ்ய உருவத்தினால் மதிமயங்கச் செய்கிற நீ யார்? இப்படிப்பட்ட ப்ரபாவமுடைய மத்ஸ்யத்தை நான் பார்த்ததுமில்லை. கேட்டதுமில்லை. நீ ஒரு பகலில் நூறு யோஜனை தூரம் நாற்புறமும் வ்யாபித்து வளர்ந்தனை. ஆகையால் நீ ஸாதாரண மத்ஸ்யமன்று. நீ தேவனே. மற்றும், நீ ப்ரஹ்மாதிதேவர்களில் ஒருவனுமல்லை. விகாரமற்றவனும் ஷாட்குண்ய பூர்ணனும் தன்னைப் பற்றினருடைய வருத்தங்களைப் போக்குந் தன்மையனுமாகிய ஸாக்ஷாந் நாராயணனே. இது நிச்சயம். உனக்கு இந்த உருவம் இயற்கையில் ஏற்பட்டதன்று. ப்ராணிகளை அனுக்ரஹிக்கும் பொருட்டு மத்ஸ்யத்தின் உருவத்தைத் தரித்திருக்கின்றனை. புருஷோத்தமனே! ஜகத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களுக்குக் காரணனே! ப்ரபூ! உன் பக்தர்களும் உன்னையே சரணம் அடைந்தவர்களுமாகிய எங்களுக்கு நீயே நாயகன். எங்களுக்கு நீ அந்தராத்மாவாயிருக்கின்றனை. உன்னை அடைவதற்கு நீயே உபாய

மன்றி வேறொரு உபாயம் கிடையாது இத்தகைய உனக்கு நமஸ்காரம். மற்றவர்க்கு நேரக்கூடாத உன் ப்ரபாவத்தினால் நீ நாராயணனே யென்று நிச்சயித்தேன். நீ லீலையினால் கொள்ளும் அவதாரங்களெல்லாம் தேவர் முதலிய ப்ராணிகளின் நன்மைக்காகவே யென்பதும் தெரியும்; நீ எந்த ப்ரயோஜனத்திற்காக இந்த மத்ஸ்ய உருவம் தரித்தனையோ அதை அறிய விரும்புகிறேன். தாமரைக் கண்ணனே! உன் பாதாரவிந்தங்களைப் பணிவது ஆத்மாக்கள் ஸ்வதந்த்ரர்களென்று அபிமானித்திருக்கிற மற்றவர்களின் பாதங்களைப் பணிவதுபோல வீணாகாது. நீ அனைவர்க்கும் நண்பனாயிருப்பவன்; ப்ரீதிக்கிடமானவன்; மற்றும் அந்தராத்மாவாயிருக்கின்றனை. மற்றவர்கள் அத்தன்மையரல்லராகையால் அவர்களைப் பணிவது வீணே. உன்னைப் பணிவது பொய்யாகாதென்பதை நானே ப்ரத்யக்ஷமாக அனுபவித்தேன். எப்படியென்றால், அற்புதமான இந்த மத்ஸ்யஉருவத்தை உன் பக்தனான எனக்கு நீ காட்டினையல்லவா?

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—தன் பக்தர்களுக்கு நண்பனும் ப்ரபுவுமாகிய மத்ஸ்யரூபியான பகவான் ப்ரளய ஸமுத்ரத்தில் விளையாட விரும்பி இங்ஙனம் மொழிகின்ற ஸத்யவ்ரதனைப் பார்த்துத் தான் செய்ய நினைத்திருப்பதை மேல்வருமாறு கூறினான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—சத்ருக்களை அழிக்கும் திறமையுடைய ஸத்யவ்ரதனே! பூலோகம் புவர்லோகம் முதலிய இந்தமூன்றுலோகங்களும் இன்றைக்கு ஏழாவது நாள் ப்ரளயஸமுத்ரத்தில் முழுகப்போகின்றன. அவ்வாறு முழுகும்பொழுது என்னால் படைக்கப்பட்ட அகன்ற ஓர் ஓடம் உன்னிடம் வரப்போகின்றது. அப்பொழுது நீ ஸமஸ்தமான ஓஷதிகளையும் பலவகைப்

பட்ட விதைகளையும் அந்த ஓடத்தில் ஏற்றிக்கொண்டு ஸப்தரிஷிகளுடன் கூடி ஸமஸ்த ஜந்துக்களாலும் சூழப் பட்டுப் பெரியதான அந்த ஓடத்தில் ஏறி மனத்திற் சிறிதும் கலக்கமின்றி ஸூர்யன் முதலிய எவ்வகை வெளிச்சமுமின்றிக் கேவலம் ரிஷிகளின் தேஜஸ்ஸினால் மாத்ரமே விளங்குவதும் ஓரே வெள்ளமாயிருப்பதுமாகிய ப்ரளய ஸமுத்ரத்தில் ஸஞ்சரிக்கப் போகின்றனை. அப்பொழுது பெருங்காற்று வீசி ஓடத்தைக் நடுங்கச்செய்யும். அந்த வோடத்தை அருகாமையில் வந்திருக்கின்ற என் கொம்பில் வாஸுகியென்னும் மஹா ஸர்ப்பமாகிற கயிற்றினால் கட்டுவாயாக. ரிஷிகளோடுகூடின பெரிய அவ்வோடத்தை நான் ப்ரளய ஸமுத்ரத்தில் ப்ரஹ்மாவின் ராத்ரி நடக்கும் வரையில் இழுத்துக்கொண்டு ஸஞ்சரிப்பேன். அப்பொழுது பரப்ரஹ்மமென்று சொல்லப்படுகின்ற என்மஹிமையை நான் உபதேசிக்க நீ கேட்டுத்தெரிந்துகொள்ளப் போகின்றனை. இடையிடையில் ஸந்தேஹங்களையும் கேள்விகளால் தெளிவித்துக் கொண்டு என் மஹிமையை விசதமாக மனத்தில் நிறுத்திக்கொள்வாய்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மத்ஸ்யரூபியான பகவான் இங்ஙனம் மன்னவனுக்குக் கட்டளையிட்டு அவ்விடத்திலேயே மறைந்தான். ஸத்யவ்ரதனும் பகவான் நிரூபித்த அக்காலத்தையே எதிர்பார்த்துக்கொண்டிருந்தான். ராஜர்ஷியாகிய அந்த ஸத்யவ்ரதன் தர்ப்பங்களைக் கிழக்கு நுனியாகப்பரப்பி மத்ஸ்யரூபியான பகவானுடைய பாதாரவிந்தங்களை த்யானித்துக் கொண்டு அந்தத் தர்ப்பங்களின்மேல் வடகிழக்கு முகமாகஉட்கார்ந்தான். அப்பால் ஸமுத்ரம், மழை பெய்கின்ற மஹாமேகங்களால் வளர்ந்து கரை புரண்டு நாற்புறத்திலும் பூமியை முழுக்கிக்கொண்டு வரப் புலப்பட்டது. அப்பொழுது

ஸத்யவ்ரதன் மத்ஸ்யரூபியான பகவானுடைய கட்டளையை நினைக்கையில், பெரிய ஓடமொன்று அருகாமையில் வரக்கண்டான். பிறகு ஓஷதிகளையும் விதைகளையும் எடுத்துக்கொண்டு ஸப்தரிஷிகளுடன் அந்த ஓடத்தில் ஏறிக்கொண்டான். அனந்தரம் ஸப்த ரிஷிகள் அந்த மன்னவனை நோக்கி 'ராஜனே! கேசவனை த்யானிப்பாயாக. அவனன்றோ நம்மை இந்த ஸங்கடத்தினின்றும் ரக்ஷித்து நமக்கு ஸுகத்தை விளைக்கப்போகிறான்?' என்றார்கள். அம்மன்னவனும் அப்படியே பகவானை த்யானிக்க, ஒற்றைக் கொம்புடையவனும் ஸ்வர்ணமயமான உருவமுடையவனும் பதினாயிரம் யோஜனை அளவுள்ளவனும் மத்ஸ்யரூபியுமான பகவான் அந்த மஹார்ணவத்தில் உடனே வந்து தோன்றினான். அப்பால் முன்பு பகவான் சொன்ன ப்ரகாரமாகவே ஸர்ப்பராஜனாகிய வாஸுகியாகிற கயிற்றால் அவ்வோடத்தைப் பகவானுடைய கொம்பில் கட்டி மனக்களிப்புடன் அந்த மதுஸூதனனை ஸ்தோத்ரம் செய்தான்.

மன்னவன் சொல்லுகிறான்:—அநாதியாகத் தொடர்ந்து வருகின்ற தேஹாத்மாபிமானம் முதலிய அஜ்ஞானத்தினால் ஆத்ம பரமாத்மாக்களின் உண்மையைப் பற்றின அறிவை அடியோடு இழந்து அவ்வஜ்ஞானத்தினால் விளையும் ஸம்ஸார தாபங்களால் வருந்துகின்ற ஜனங்கள் இந்த ஸம்ஸாரத்தில் யாத்ருச்சிக ஸுக்ருதத்தின் மூலமாய் நேரிட்ட உன் கருணையால் ஸதாசார்யன் மூலமாக உன்னைப் பற்றுகையில், நீ அவர்களுக்கு மோக்ஷம் கொடுக்கின்றனை. அப்படிப்பட்ட நீயே எங்களுக்குப் புகலிடமாயினை. நீ ஸ்வயமாகவே என்னைத் தத்வங்களைக் கேட்கும்படி தூண்டி ஹிதத்தை உபதேசித்து அஜ்ஞானத்தைப் போக்குகையால் நான் உன்னைப் பெறு

கைக்கு நீயே உபாயமுமாயினை. பிறத்தல் சாதல் முதலிய விபத்துக்களில் அகப்பட்ட ஜீவர்க்கும் ஆத்ம பரமாத்மாக்களின் உண்மையை அறியாமல் தேஹாத்மாபிமானம் குடிகொண்டு புண்ய பாபரூபமான கர்மத்திற்கு உட்பட்டுச் சப்தாதி விஷய ஸுகங்களை விரும்பி ஸுகத்திற்கிடமல்லாத கார்யங்களைச் செய்கின்றன. அந்த ஜீவாத்மாக்கள் உன்னைப் பணிந்து தேஹாத்மாபிமானம் ஸ்வதந்த்ராத்மாபிமானம் முதலிய தங்கள் துர்ப்புத்தியை உதறுகிறார்கள். நீயே ஆசார்யரூபியாய் அவர்களுடைய அஜ்ஞானத்தைப் போக்கி அவர்களை அங்கீகரிக்கின்றனை. அப்படிப்பட்ட நீ எங்கள் அஜ்ஞானமாகிற ஹ்ருதய க்ரந்தியை அறுப்பாயாக. பொன்னும் வெள்ளியும் அக்னியின் ஸம்பந்தத்தினால் அழுக்கெல்லாம் தொலைந்து தமக்கு இயற்கையில் ஏற்பட்ட நிறத்தைப் பெறுவதுபோல, மோக்ஷத்தில் விருப்பமுடைய புருஷன் உன்னைப் பணிவானாயின், இருள் வஸ்துக்களைத் தெரியவொட்டாமல் மறைப்பதுபோல ஆத்மபரமாத்மாக்களின் உண்மையை மறைக்கின்ற புண்யபாபரூபமான கர்மத்தையெல்லாம் துறந்து தனக்கு இயற்கையில் ஏற்பட்ட அபஹதபாப்மத்வம் முதலிய குணங்கள் தோன்றப்பெறுவான். அப்படிப்பட்ட ஸர்வேஶ்வரனான நீ எங்கள் அஜ்ஞானத்தைப் போக்கியருள்வாயாக. நீயே குருவுக்கும் குரு. நீயே குருவாகத் தோன்றி ஜீவாத்மாக்களை அங்கீகரிக்கின்றனை. உன்னைத் தவிர மற்றொரு குருவுமில்லை. உன்னைப் பணியாத புருஷனுக்கு மற்ற தேவதைகள் அனைவரும் ஒன்று சேர்ந்து ஹிதம் உபதேசிக்கும் குருக்களாகி அவனைக் கரையேற்றப் பார்க்கினும், அவனுக்கு உன்னுடைய அனுக்ரஹத்தின் பதினாயிரத்தில் ஒருபாகத்தையும் செய்யமாட்டார்கள். அத்தகைய ஸர்வேஶ

வரனான உன்னையே நான் சரணம் அடைகின்றேன். கண் தெரிந்தவன் கண்தெரியாதவனுக்கு முன்னின்று வழி காட்டுவதுபோல, தம்மைக் காத்துக்கொள்வதற்கு வேண்டிய அறிவுமற்றிருக்கிற ப்ரஹ்மதேவன் முதலிய ஸமஸ்த ஜீவாத்மாக்களுக்கும் நீயே அஜ்ஞானத்தைப் போக்குங் குரு. நீ ஸூர்யகிரணம் போன்ற அறிவுடையவன். ஒளியுடைய வஸ்துக்களுக்கும் நீயே ஒளி கொடுக்கின்றனை. நற்கதியை அறிய விரும்புகின்ற நாங்கள் அத்தகைய உன்னையே குருவாகப் பற்றினோம். எங்களை அருள்வாயாக. ஜன்ம ஜரா மரணாதிகளில் வருந்துகிற ஸம்ஸாரி ஜீவன் தன்னைத் தான் குருவாகப் பாவித்துக்கொண்டு தன்னைப்போன்ற மற்றொரு ஸம்ஸாரி ஜீவனுக்கு அர்த்தகாமாதிகளைக் கைகூட்டுவிக்கவல்ல ஆபாஸ உபாயங்களை உபதேசிக்கிறான், அவன் அந்த உபாயத்தினால் கடைசியில் கடக்கமுடியாததும் ஆத்ம பரமாத்மாக்களின் உண்மையை மறைப்பதுமாகிய ஸம்ஸாரமாகிற இருளையே மேன்மேலும் விளைத்துக்கொள்கிறான். நீயோவென்றால், அழிவற்றதும் மஹாநந்தரூபமுமான மோக்ஷமாகிற பெரும்பயனைத் தவறாமல் விளைவிக்கவல்ல ஆத்ம பரமாத்மாக்களின் உண்மையைப் பற்றின ஜ்ஞானத்தை உபதேசிக்கின்றனை. அந்த ஜ்ஞானம் பெற்ற ஸம்ஸாரி ஜனங்கள் ஸுகமாக உன் ஸ்தானமாகிய பரம பதத்தை அடைகின்றார்கள். நீ ஸமஸ்த லோகங்களுக்கும் ஹிதத்தைத் தேடுபவன்; ப்ரீதிக்கிடமானவன்; உள்ளே புகுந்து நியமித்துக் கொண்டிருப்பவன்; ஹிதோபதேசம் செய்பவன்; ஜ்ஞானத்திற்கு ப்ரவர்த்தகன்; அபீஷ்ட ஸித்தியைக் கொடுப்பவன். இப்படிப்பட்ட நீ ஸமஸ்த ப்ராணிகளுடைய ஹ்ருதய கமலங்களிலும் வாஸம் செய்கின்றனை. ஆயினும், உலகத்திலுள்ள

வர் அனைவரும் தேஹம் தேஹத்தைத் தொடர்ந்த பந்துக்கள் அர்த்தம் காமம் ஆகிய இவற்றையே புருஷார்த்தமாக நினைத்துச் சப்தாதி விஷயங்களைப் பெறவிரும்பி அத்தகைய உன்னை அறிகிறதில்லை. அப்படிப்பட்ட மஹானுபாவனும் தேவர்களுக்கும் மேலான தேவனும் வேண்டிப்பெறத் தகுந்தவனுமாகிய உன்னை நான் ஆத்ம பரமாத்மாக்களின் உண்மையை அறியவிரும்பிச் சரணம் அடைகின்றேன். பகவானே! ஆகையால் பரமபுருஷார்த்த ரூபமான பரமாத்ம ஸ்வரூபத்தை வெளியிடுகின்ற உரைகளால் என் ஹ்ருதயத்திலுள்ள தேஹாத்மாபிமானம் முதலிய அஜ்ஞானங்களாகிற முடிச்சுகளை அறுத்து உன் ஸ்வரூபத்தை எனக்கு வெளியிடுவாயாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஷாட்குண்ய பூர்ணனும் ஆதி புருஷனுமாகிய மத்ஸ்யபகவான் இங்ஙனம் ப்ரார்த்திக்கின்ற மன்னவனுக்கு ப்ரளய ஸமுத்ரத்தில் விளையாடிக்கொண்டே தத்வங்களை வெளியிடுகின்ற புராணத்தை உபதேசித்தான். தேவஶ்ரேஷ்டனாகிய தன் ஸ்வரூபத்தை அறிவிப்பதும் தன்னால் இயற்றப்பட்டதும் ப்ரக்ருதியைக்காட்டிலும் விலக்ஷணனான ஆத்மாவின் ஸ்வரூபத்தையும் பகவத் பக்தியோகத்தையும் நித்யம் நைமித்திகம் முதலிய கர்மயோகத்தையும் தெளிவுற வெளியிடுவதுமாகிய மத்ஸ்யபுராண ஸம்ஹிதையையும் தன்னுடைய ரஹஸ்யத்தையும் முழுவதும் ஸத்யவ்ரதனுக்கு உபதேசித்தான். இங்ஙனம் பகவான் உபதேசித்த ஜீவாத்ம ஸ்வரூபத்தையும் ஸநாதன ப்ரஹ்மமாகிய அந்தப் பரம புருஷனுடைய ஸ்வரூபத்தையும் ரிஷிகளுடன் ஓடத்தில் உட்கார்ந்திருக்கின்ற ஸத்யவ்ரதன் ஸம்சயங்களெல்லாம் தீரும்படி கேட்டான். அப்பால் அந்த மத்ஸ்யபகவான் கீழ்நடந்த ப்ரளயத்தின்முடிவில் உறங்கியெழுந்த ப்ரஹ்ம

தேவனுக்கு ஹயக்ரீவாஸுரனைக் கொன்று வேதங்களை மீட்டுக்கொடுத்தான். அப்பால் அந்த ஸத்யவ்ரதன் ஜ்ஞான விஜ்ஞானங்கள் அமையப்பெற்று ஸ்ரீமஹாவிஷ்ணுவின் அனுக்ரஹத்தினால் இந்தக் கல்பத்தில் வைவஸ்வதமனுவானான். (விவஸ்வானுக்குப் பிள்ளையாகப்பிறந்து ச்ராத்ததேவனென்னும் பெயர் பெற்றானென்று முன்னமே மொழிந்தேனல்லவா?) தன் ஸங்கல்பத்தினால் அற்புதமான மத்ஸ்ய உருவங்கொண்ட பகவானுக்கும் ஸத்யவ்ரதனென்கிற ராஜர்ஷிக்கும் நடந்த ஸம்வாத ரூபமான இந்தப் பெரிய இதிஹாஸத்தைக் கேட்கும் புருஷன் ஸமஸ்த பாபத்தினின்றும் விடுபடுவான். இந்தப் பகவானுடைய மத்ஸ்யாவதார வ்ருத்தாந்தத்தைத் தினந்தோறும் கீர்த்தனம் செய்பவனுடைய மனோரதங்களெல்லாம் ஸித்திக்கும். தேஹாவஸானத்தில் அவன் பரம கதியான மோக்ஷத்தையும் பெறுவான். உறக்கம் தலைக்கொண்டமையால் ஸ்ருஷ்டிக்குந்திறமை மறையப்பெற்ற ப்ரஹ்ம தேவனுடைய முகத்தினின்றும் வேதங்களைப் பறித்துக் கொண்டுபோன ஹயக்ரீவாஸுரனைக் கொன்று ப்ரஹ்ம தேவனுக்கு அவ்வேதங்களை மீட்டுக் கொடுத்தவனும் ஸத்யவ்ரதனுக்கும் ரிஷிகளுக்கும் பரப்ரஹ்மமாகிய தன் ஸ்வரூபத்தை உள்ளபடி அறிவிப்பதான மத்ஸ்யபுராணத்தை உபதேசித்தவனும் ஸகலஜகத்காரணனும் மாயையினால் மத்ஸ்யத்தின் உருவங்கொண்டவனுமாகிய பகவானை வணங்குகின்றேன். இருபத்து நான்காவது அத்யாயம் முற்றிற்று.

## அஷ்டமஸ்கந்தமும் முற்றுப்பெற்றது.

ஸ்ரீக்ருஷ்ணாய நம:



# ஸ்ரீபாகவதம்.

## நவமஸ்கந்தம்

வைவஸ்வத மனுவின் பிள்ளையான ஸுத்யும்னன் ஒரு வனத்தில் ப்ரவேசித்துப்பெண்ணுருவம் பெறுதலும், அவ்வனத்தில்ப்ரவேசித்தவர் அனைவரும் பெண்ணுருவம் பெறுதற்குக் காரணங் கூறுதலும்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான் :—மஹானுபாவரே! மன்வந்தரங்களை யெல்லாம் கேட்டேன். அளவற்ற வீரச்செயல்களையுடைய பகவான் அம்மன்வந்தரங்களில் செய்த வீர்யங்களையும் சொல்லக்கேட்டேன். ஸத்யவ்ரதனென்னும் ராஜர்ஷி த்ரமிடதேசங்களுக்கு ப்ரபுவாயிருந்தானென்றும், அவன் முன்கல்பத்தின் முடிவில் பரமபுருஷனைப் பணிந்து ஜ்ஞானம் பெற்றானென்றும். அவன் இக்கல்பத்தில் விவஸ்வானுடைய பிள்ளையாகப் பிறந்து ச்ராத்ததேவனென்னும் பெயர் பெற்று மனுவாயிருக்கும் அதிகாரத்தைப் பெற்றானென்றும், அவனே வைவஸ்வதமனுவென்றும் வழங்கி வருகிறானென்றும், இக்ஷ்வாகு முதலிய மன்னவர்கள் அவனுடைய பிள்ளைகளென்றும் நீர் சொல்லக் கேட்கலானேன். ப்ரஹ்மரிஷியே! தனித்தனியே அவர்களுடைய வம்சங்களையும் அவ்வம்சங்களைத் தொடர்ந்த சரித்ரங்களையும் எங்களுக்குச் சொல்ல வேண்டும். மஹாபாகரே! நாங்கள் அதனைக் கேட்கவேண்டுமென்று விருப்பமுற்றிருக்கிறோம். அந்த வைவஸ்வதமனுவின்வம்சத்தில் புண்யமான புகழுடையவர்களும் பெரி

யவர்களுமாக முன்பு எவரெவர் கழிந்தார்களோ, இனி எவரெவர் பிறக்கப்போகிறார்களோ, இப்பொழுது எவரெவர் இருக்கிறார்களோ. அவர்களுடைய ஸமஸ்தமான விக்ரமங்களையும் எங்களுக்குச் சொல்வீராக.

ஸ்ரீஸூதர் சொல்லுகிறார்:—ப்ரஹ்மவித்துக்களான அந்தணர்களின் ஸபையில் மேலான தர்மங்களை அறிந்த மஹானுபாவராகிய சுகமுனிவர் பரீக்ஷித்து மன்னவனால் இங்ஙனம் வினவப்பெற்று மேல் வருமாறு கூறினார்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—சத்ருக்களை அழிக்குந்தன்மையனே! வைவஸ்வதமனுவின் வம்சத்தைப் பெரும்பாலும் சொல்லுகிறேன். கேட்பாயாக. விஸ்தாரமாகச் சொல்லவேண்டுமென்றால், பல நூறுவர்ஷங்கள் வரையில் சொல்லினும் சொல்லி முடியாது. இதோ புலப்படுகின்ற ஸ்தூல சேதனாசேதன ரூபமான ப்ரஹ்மதேவன் முதல் பூச்சிபுழுவரையிலுமுள்ள ப்ரபஞ்சமெல்லாம் கல்பத்தின் முடிவில் மேன்மையும் தாழ்மையுமுள்ள பலவகையான பூதங்களுக்கும் அந்தராத்மாவாயிருப்பவனும் ப்ரக்ருதியைக் காட்டிலும் விலக்ஷணனுமான பரமபுருஷஸ்வரூபமாகவே யிருந்தது. அப்பொழுது அப்பரமபுருஷனைத் தவிர மற்றொன்றும் புலப்படவில்லை. அவனைப்போன்ற மற்றொரு காரண வஸ்துவும் இல்லை. அவனொருவனே இருந்தான். காரணதசையை அடைந்திருக்கின்ற அந்தப் பரமபுருஷனுடைய நாபியினின்றும் ஸ்வர்ணம்போல மிகுந்த ஒளியுடன் விளங்குகின்ற ப்ரபஞ்சரூபமான ஒரு தாமரைமலர் தோன்றிற்று. மஹாராஜனே! அதினின்றும்பூதங்களைப் படைக்குந் தன்மையனான ப்ரஹ்மதேவன் உண்டானான். அவனுடைய மனத்தினின்று மரீசியும், அந்த மரீசிக்குக் கஸ்யபரும் பிறந்தார்கள். அந்தக் கஸ்யபருக்குத் தக்ஷருடைய புதல்வியும் தம் பார்யையுமாகிய அதிதியி

டத்தில் விவஸ்வானென்னும் புதல்வன் உண்டானன். அப்பால் அந்த விவஸ்வானுக்குத் தன் பார்யையாகிய ஸம்ஜ்ஞையிடத்தில் ச்ராத்ததேவனென்னும் பிள்ளை பிறந்தான். அவனே வைவஸ்வத மனுவானன். அந்த வைவஸ்வத மனு தன் பார்யையாகிய ச்ரத்தையிடத்தில் இக்ஷ்வாகு ந்ருகன் ஸர்யாதி திஷ்டன் த்ருஷ்டன் கரூஷகன் நரிஷ்யந்தன் வ்ருஷத்ரன் நபகன் கவி என்னும் பத்துப் புதல்வர்களைப் பெற்றான். இந்த இக்ஷ்வாகு முதலியவர் பிறப்பதற்கு முன்பு ஸந்ததியற்றிருந்த வைவஸ்வத மனுவுக்கு ஸந்ததி உண்டாகும் பொருட்டு அம்மனுவின் ஆசார்யராகிய வஸிஷ்டமுனிவர் மித்ராவருணர்களைத் தேவதையாகவுடைய ஒரு யாகத்தை நடத்தினர். அந்த யாகம் நடந்துகொண்டிருக்கையில் பாலையே ஆஹாரமாகப் புசித்து நியமத்துடனிருக்கிற மனுவின் பத்னியாகிய ச்ரத்தை ருத்விக்குக்களில் ஒருவராகிய ஹோதாவினிடம் சென்று நமஸ்கரித்து எனக்குப் பெண் பிறக்கும்படி யாகம் செய்யவேண்டுமென்றுவேண்டிக்கொண்டாள்; அனந்தரம் அத்வர்யுவால் தூண்டப்பட்ட ஹோதா அவள் ப்ரார்த்தித்ததை நினைத்து மனவூக்கத்துடன் வாயால் வஷட்காரத்தை உச்சரித்துக்கொண்டு கையிலெடுத்த ஹவிஸ்ஸை ஹோமம் செய்தான். ஹோதா அங்ஙனம் யஜமானனுடைய எண்ணத்திற்கு விபரீதமாக நினைத்து ஹோமம் செய்த அபசாரத்தினுல் இளையென்று ப்ரஸித்தி பெற்ற ஒரு பெண் பிறந்தாள். அதைக் கண்டு மன்னவன் தான் நினைத்தபடி பிள்ளை பிறவாமையால் அதிக ஸந்தோஷம் அடையாமல் குருவாகிய வஸிஷ்டரை நோக்கி இங்ஙனம் மொழிந்தான்.

மனு சொல்லுகிறான்:—மஹானுபாவரே! ப்ரஹ்மவித்துக்களான நீங்கள் செய்த கார்யம் ஏன் இப்படி

விபரீதமாயிற்று? இஃதென்ன வருத்தம்? மந்த்ரங்களின் சக்தி இப்படி விபரீதமாகக் கூடுமா? நீங்கள் மந்த்ரங்களின் ஸ்வருபத்தையும் அவற்றின் உபயோகத்தையும் அவற்றின் பொருள்களையும் அறிந்தவர்கள். மனவூக்கத்துடன் கார்யம் செய்யுந்தன்மையுடையவர்கள். தவத்தினால் பாபங்கள் பஸ்மமாகப் பெற்றவர்கள். தேவதைகளிடத்தில் பொய் பிறப்பதுபோல அப்படிப்பட்ட உங்கள் நினைவு இப்படி ஏன் விபரீதமாயிற்று?

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—எங்கள் கொள்பாட்டனாராகிய வஸிஷ்டமுனிவரும் அந்த மனுவின் வசனத்தைக் கேட்டு ஜ்ஞானதிகுணங்களெல்லாம நிறைந்தவராகையால் ஹோதா விபரீதமாக நினைத்து ஹோமம் செய்த அபசாரத்தினால் விளைந்ததென்பதை அறிந்து வைவஸ்வத மனுவைக் குறித்து மொழிந்தார்.

வஸிஷ்டர் சொல்லுகிறார்:—மனுவே! ஹோதாவின் பிசகினால் உன் நினைவுக்கு விபரீதமான பலன் உண்டாயிற்று. ஆயினும் நான் அதை என் தவமஹிமையினால் மாற்றி உனக்கு நற்பிள்ளை உண்டாகும்படி செய்கிறேன்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ராஜனே! பெரும்புகழுடையவரும் மஹானுபாவருமாகிய அந்த வஸிஷ்டமுனிவர் இங்ஙனம் நிச்சயித்துக்கொண்டு இளையென்னும் அப்பெண்ணுக்கு ஆண்மை உண்டாக விரும்பி ஆதிபுருஷனாகிய பகவானை ஸ்தோத்ரம் செய்தார். அப்பால், ஸர்வேஸ்வரனும் தன்னைப் பற்றினருடைய வருத்தங்களைப் போக்குந் தன்மையனுமாகிய பகவான் அவருடைய ஸ்தோத்ரத்தினால் ஸந்தோஷம் அடைந்து கருணைகூர்ந்து அவருடைய இஷ்டத்தை நிறைவேற்றினான். அதனால், அந்த இளை யென்னும் பெண் ஸுத்யும்னனென்னும் பேர் பூண்ட சிறந்த புருஷனானன். மஹாராஜனே! வீரனாகிய




1873. ருத்ரன் பார்வதியோடு கூடியிருக்க
ஸுத்யும்னன் காணுதல்.

அந்த ஸுத்யும்னன் ஒருகாலத்தில் வேட்டையாடுவதற்காக வனம் செல்ல விரும்பிச் சில மந்த்ரிகளுடன் கூடி ஸிந்துதேசத்தில் பிறந்த சிறப்புடைய குதிரையின் மேல் ஏறி உறுதியும் அழகும் அமைந்த வில்லையும் மிகவும் அற்புதமான பாணங்களையும் தரித்துக் கவசம்பூண்டு ம்ருகத்திற்காக வடதிசையில் சென்றான். இங்ஙனம் திரிகின்ற அந்த ராஜகுமாரனாகிய ஸுத்யும்னன் மேருபர்வதத்தின் அடிவாரத்திலுள்ள ஒரு வனத்திற்குள் நுழைந்தான். அவ்வனத்தில் ருத்ரன் பார்வதியுடன் கலந்து விளையாடிக்கொண்டிருக்கிறான். சத்ருக்களை அழிக்குந் திறமையுடைய அந்த ஸுத்யும்னன் அவ்வனத்தில் நுழைந்த மாத்ரத்தினால் தான் பெண்ணாகவும் தன் குதிரை பெண் குதிரையாகவும் இருக்கக் கண்டான். அப்பொழுது அந்த ஸுத்யும்னனைத் தொடர்ந்து வந்தவர்கள் அனைவரும் பெண்ணுருவமாகிவிட்டார்கள். அவர்கள் அதைக்கண்டு 'ஆ! இஃதென்ன! நமக்கு இப்படி நேர்ந்ததே!' என்று மனவருத்தமுற்றார்கள்.

பரீக்ஷித்து சொல்லுகிறான்:—மஹானுபாவரே! இப்படித் தன்னிடத்தில் நுழைந்த மாத்ரத்தில் புருஷனைப் பெண்ணாக்கவல்ல தேசம் எப்படி உண்டாயிருக்கக்கூடும்? ஒருகால்உண்டாயிருப்பினும், அது யாவரால் ஏற்படுத்தப்பட்டது? இப்படியும் ஓரிடம் உண்டாயிருக்குமென்று எமக்குத் தோற்றவில்லை. ஆகையால், அதைப்பற்றிக் கேட்கிறோம். இந்தக் கேள்விக்கு மறுமொழி கூறுவீராக. எங்களுக்கு இவ்விஷயத்தில் பெருங் குதூஹலம் உண்டாயிருக்கின்றது.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மனவுறுதியுடன் அழகிய வ்ரதங்களை அனுஷ்டிக்குந் தன்மையரான முனிவர்கள் ருத்ரனைக் காண விரும்பித் தங்கள் தேஹகாந்தியினால்

திசைகளையெல்லாம் இருளற்று விளங்கும்படி செய்து கொண்டு இளாவ்ருதவர்ஷத்திலுள்ள அவ்வனத்திற்குச் சென்றார்கள். அங்குத் தன் கணவனுடன் கலந்து ஆடையின்றியிருக்கும் பார்வதி ரிஷிகள் வந்திருப்பதைக் கண்டு மிகவும் வெட்கிப் பர்த்தாவான ருத்ரனுடைய மடியினின்றும் விரைவுடன் எழுந்து வஸ்த்ரத்தை உடுத்திக் கொண்டாள். ரிஷிகளும் க்ரீடித்துக் கொண்டிருக்கின்ற பார்வதீ பரமேஶ்வரர்கள் ஸம்போக ஸுகத்தில் மிகவும் ஆழ்ந்திருப்பதை ஆலோசித்து அவ்வனத்தினின்றும் திரும்பி நரநாராயணாஶ்ரமத்திற்குச் சென்றார்கள். அப்பொழுது மஹானுபாவனாகிய ருத்ரன் தன் காதலியான பார்வதிக்கு ப்ரியத்தைச்செய்ய விரும்பி 'இவ்விடத்தில் நுழைகின்றவன் பெண்ணாகக் கடவன்' என்று மொழிந்தான். அந்த ருத்ரசாபத்திற்குப் பின்பு அவ்விடத்தில் புருஷர்கள் நுழைவதில்லை. இது ப்ரஸித்தம். பெண்ணுருவம் பெற்ற அம்மன்னவனும் தன்னைப் போலவே பெண்ணுருவம் பெற்ற தன் பரிவாரங்களுடன் அவ்விடத்தில் காடுகாடாகத் திரிந்து கொண்டிருந்தான். அப்பால் சந்த்ரனுடைய பிள்ளையும் மஹானுபாவனுமாகிய புதன் தன் ஆஶ்ரமத்திற்கு அருகாமையில் பல மடந்தைகளுடன் உலாவுகின்ற அம்மடந்தையர்மணியைக் கண்டு அவளைப் புணர விரும்பினான். அழகிய புருவங்கள் அமைந்த அப்பெண்மணியும் அங்ஙனமே ஸோமராஜன் பிள்ளையாகிய புதனைக் கண்டு புணர விரும்பினாள். அதனால், அந்தப் புதன் அவளுடன் கலந்து அவளிடத்தில் புரூரவஸ்ஸென்னும் பேருடைய ஒரு புதல்வனைப் பெற்றான். இங்ஙனம் பெண்ணுருவம் பெற்ற மனுவின்புதல்வனாகிய ஸுத்யும்னன் தன் குலாசார்யராகிய வஸிஷ்டரை நினைத்தானென்று கேள்விப்பட்டிருக்கிறோம். வஸிஷ்

டரும் அவனுக்கு அத்தகைய நிலைமை நேரிட்டிருப்ப தைக் கண்டு க்ருபையினால் மிகவும் வருந்தி அவனுக்கு ஆண் தன்மை உண்டாகவேண்டுமென்று விரும்பி ருத்ரனை ஸ்தோத்ரம் செய்தார். மஹானுபாவனாகிய அந்த ருத்ரனும் அவருடைய ஸ்தோத்ரத்தினால் ஸந்தோஷம் அடைந்து வஸிஷ்டருக்கு ப்ரீதியை விளைக்கவும், தன் வார்த்தையை ஸத்யமாகச் செய்யவும் முயன்று இங்ஙனம் மொழிந்தான்.

ருத்ரன் சொல்லுகிறான்:—இந்த ஸுத்யும்னமன்னவன் உம்முடைய தவமஹிமையால் ஒரு மாதம் புருஷனாகவும், என் வார்த்தை மெய்யாவதற்காக ஒரு மாதம் பெண்ணாகவும் இருக்கப் போகிறான். இங்ஙனம் பெண் தன்மையும் ஆண் தன்மையும் மாறிமாறி நிலைநின்றிருக்கப் பெற்று யதேஷ்டமாகப் பூமியைப் பாதுகாத்து வருவானாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் ஆசார்யரான வஸிஷ்டருடைய அநுக்ரஹத்தினால் ஸுத்யும்னன் தான் ஆசைப்பட்ட ஆண்தன்மை ஒருமாதம் விட்டு ஒரு மாதமாக மாறிமாறி வருகையாகிற நிலைமையைப் பெற்று உலகத்தைப் பாதுகாத்துவந்தான். ஆயினும் அவன் இடையிடையில் ஒருமாதம் பெண்ணுருவம் பெற்று வெட்கத்தினால் மறைந்திருந்தானாகையால் ப்ரஜைகள் அவன் மன்னவனாயிருப்பதை அவ்வளவாக அபிநந்திக்கவில்லை. அம்மன்னவனுக்கு உத்கலன் கயன் விமலன் என்று மூன்று பிள்ளைகள் பிறந்தார்கள். தர்மத்தில் மிகுதியும் விருப்பமுடைய அவர்கள் மூவரும் தக்ஷிண தேசங்களுக்கு ப்ரபுக்களாயிருந்தார்கள். அப்பால், சில காலம் செல்கையில் பூமண்டலத்திற்கெல்லாம் ப்ரபுவாகிய ஸுத்யும்னன் ஜிதேந்த்ரியனாயிருந்து தான் பெண்ணாயிருந்த பொழுது தனக்குப் புதனிடத்தினி

ருந்து பிறந்த பிள்ளையாகிய புரூரவஸ்ஸுக்குப் பூமண்டலத்தை யெல்லாம் கொடுத்துத் தான் தவம் செய்ய விரும்பி வனத்திற்குச் சென்றான். முதல் அத்யாயம் முற்றிற்று.

---

கருஷகன் முதலிய மனுபுத்ரர்கள் ஐவரின் வம்சங்களைக் கூறுதல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் தன் பிள்ளையாகிய ஸுத்யும்னன் வனத்திற்குப் போகையில், வைவஸ்வத மனு பிள்ளைகள் பிறக்கவேண்டுமென்று விரும்பி யமுனா நதிக்கரையில் நூறாண்டுகள் தவம் செய்தான். அப்பால், அந்தமனு பிள்ளைக்காக ஸர்வேஸ்வரனும் ஸ்வதந்த்ரனும் தேவதேவனும் தன்னைப் பற்றினவருடைய வருத்தங்களைப் போக்குந் தன்மையனுமாகிய பகவானை ஆராதித்தான். அனந்தரம் தன்னோடொத்தவர்களான இக்ஷ்வாகு முதலிய பத்துப் பிள்ளைகளைப் பெற்றான். அவர்களில் வ்ருஷத்ரனென்பவன் தன் குருவினால் பசுக்களைப் பாதுகாக்கும்படி ஏற்படுத்தப்பட்டான். அவனும் அப்படியே ராத்ரியில் வீராஸனத்தில் உட்கார்ந்து மனவூக்கத்துடன் கையில் கத்தியை ஏந்திப் புலி முதலிய துஷ்ட ஜந்துக்களிடத்தினின்று பசுக்களைப் பாதுக்காத்து வந்தான். இப்படியிருக்கையில், ஒருநாள் ராத்ரியில் மேகம் மழைபெய்துகொண்டிருக்க, ஒரு பெரும் புலி தொழுவத்தில் நுழைந்தது. அப்பொழுது அதைக்கண்டு படுத்துக்கொண்டிருக்கும் பசுக்கள்பயந்து எழுந்து தொழுவத்தில் திரியத்தொடங்கின. பலிஷ்டமாகிய அந்தப் புலி ஒரு பசுவைப்பிடித்துக்கொண்டது. பிடியுண்ட பசு வருந்திக்கதற விட்டது. வ்ருஷத்ரன் அந்தப் பசுவின் கதறலைக் கேட்டு அருகே சென்றான். ராத்ரியில் மேகங்கள் மூடிக்கொண்டி

ருந்தபடியால் நக்ஷத்ரங்களும் தோன்றாமல் மறைந்திருக்கும் தருணத்தில் அவன் இது பசுவென்றும் இது புலியென்றும் அறியாமல் புலியென்னும் எண்ணத்தினால் கபிலநிறமுடைய பசுவின் தலையைக் கத்தியைக் கொண்டு பலத்தினால் வெட்டினான். பசுவின் தலையில் கத்தியை நோக்கி அடிக்கும்பொழுது அந்தக்கத்தியின் நுனியானது பட்டுப் புலியின் காது அறுப்புண்டது. புலி அதனால், மிகவும் பயந்து வழியெல்லாம் ரக்தத்தைப் பெருக்கிக்கொண்டு தொழுவத்தினின்றும் ஓடிப்போயிற்று. அப்பால் சத்ருவீரர்களை அழிக்குந் திறமையமைந்த வ்ருஷத்ரன் புலி அடியுண்டு மாண்டதென்று நினைத்துக்கொண்டிருக்கையில், பொழுது விடிந்து உதயமான பின்பு தன்னால் அடியுண்டு மாண்டு விழுந்திருக்கின்ற பசுவைக் கண்டு மிகவும் வருந்தினான். அவன் செய்யவேண்டுமென்ற எண்ணமின்றி அறியாமையால் அபராதம் செய்திருப்பினும் குலாசார்யரான வஸிஷ்டர் அவனைப் பார்த்து 'நீ க்ஷத்ரியாதமன். இனி க்ஷத்ரியாதமனாகவுங்கூட நீ இருக்கமாட்டாய். நீ இந்தப் பாபத்தினால் சூத்ரனாயாகக் கடவாய்' என்று சபித்தார். இங்ஙனம் தன் குருவினால் சபிக்கப்பட்ட வ்ருஷத்ரன் கைகளைக் குவித்து அப்படியே அந்தச் சாபத்தைப் பெற்றுக்கொண்டான். அப்பால் வீரனாகிய வ்ருஷத்ரன் ஜிதேந்த்ரியனாகி முனிவர்களுக்கு இஷ்டமான பகவதுபாஸனமாகிற வ்ரதத்தை ஏற்றுக்கொண்டான். அவன் சிலநாட்களில் ஸர்வபூதங்களுக்கும் அந்தராத்மாவாயிருப்பவனும் ஸமஸ்த தோஷங்களும் தீண்டப்பெறாதவனும் பரப்ரஹ்மமென்று கூறப்படுகின்றவனுமாகிய பரமபுருஷனிடத்தில் சிறந்த ஜ்ஞானநிஷ்டை உண்டாகப்பெற்று ஸமஸ்தபூதங்களுக்கும் நண்பனாகி ஸுகதுக்கங்களிரண்டையும் துல்யமாகப்

பாவிக்குந் தன்மையனுனன். இஹலோகபோகங்களிலும் பரலோகபோகங்களிலும் பற்றற்று ராகம் முதலிய தோஷங்களால் மனம் கலங்கப்பெருமல் இந்த்ரியங்களெல்லாம் நினைத்தபடி அடங்கப்பெற்றுத் தேஹத்தையொழிய அதைச் சேர்ந்த மற்ற ப்ரிக்ரஹங்களெவையுமின்றித் தெய்வாதீனமாய்க் கிடைத்த அன்னுதிகளால் தேஹதாரணம் பண்ணிக்கொண்டிருந்து பரமாத்மாவினிடத்தில் ஆத்மாவை அர்ப்பணம் செய்து தான் பரமாத்மாவுக்குச் சேஷப்பட்டவனென்றும் தன்னுடைய ஸத்தாதிகளெல்லாம் அந்தப் பரமாத்மாதீனமென்றும் அனுஸந்தித்து மஹாநந்த ரூபமான பகவதுபாஸனமாகிற ஜ்ஞானத்தினுல் ஸந்தோஷம் அடைந்து மற்ற விஷயங்களில் சிறிதும் விருப்பின்றி மனவூக்கமுற்று மாருதபக்தியோகத்தில் நிலைநின்று மூடர் குருடர் செவிடர் இவர்களின் ஆகாரமுடையவனுகி இப்பூமியில் திரிந்துகொண்டிருந்தான். இத்தகைய நடத்தையோடிருந்த முனிவனுகிய அந்த வ்ருஷத்ரன் சரீராவஸானகாலம் நேரப்பெற்று ஒருகால் காட்டுக்குள் நுழைந்து அங்குக் கிளர்ந்தெரிகின்ற காட்டுத்தீயைக் கண்டு அதில் ப்ரவேசித்து அவ்வக்னியில் கைகால்முதலிய கரணங்களெல்லாம்[1] தக்தமாகப்பெற்றுப் பரப்ரஹ்மத்தை அடைந்தான். இக்ஷ்வாகு முதலிய மனுபுத்ரர்கள் அனைவர்க்கும் பின் பிறந்தவனுகிய கவியென்பவன் சப்தாதிவிஷயங்களில் விருப்பமின்றி ராஜ்யம் பந்துக்கள் க்ருஹம் இவையெல்லாவற்றையும் துறந்து ஸ்வயம்ப்ரகாசனும் இயற்கையில் ஏற்பட்ட பேரொளியுடையவனுமாகிய பரமபுருஷனை மனத்தில் நிறுத்திக்கொண்டு இளமையிலேயே பரமகதியான மோக்ஷத்தை அடைந்தான். மனுவின் பிள்ளையாகிய கரூஷனுக்கு

1. எரியப்பெற்று.

மூன்று பிள்ளைகள் பிறந்தார்கள். க்ஷத்ரியஜாதியர்களான அம்மூவரும் காருஷர்ளென்று பெயர்பெற்று உத்தர தேசங்களைப் பாதுகாத்துக்கொண்டிருந்தார்கள். அவர்கள் ப்ராஹ்மணர்களிடத்தில் பக்ஷபாதமுடையவர்கள். அவர்கள் விரும்பினவற்றை நிறைவேற்றிக் கொடுக்குந்தன்மையர்கள்; தர்மத்திற்கு அநுகூலமான வாத்ஸல்யமுடையவர்கள். த்ருஷ்டனுக்குத் தார்ஷ்டர்களென்னும் சில க்ஷத்ரியர்கள் பிறந்தார்கள். அவர்கள் பரப்ரஹ்மத்தை உபாஸித்து மோக்ஷத்தை அடைந்தார்கள். ந்ருகனுக்கு ஸுமதியென்பவன் பிறந்தான். ஸுமதிக்குப் பூதஜ்யோதியென்பவன் பிறந்தான். பூதஜ்யோதிக்கு வஸுவும் வஸுவுக்கு ப்ரதீகனும், ப்ரதீகனுக்கு ஓகவானும் பிறந்தார்கள். அந்த ஓகவானுக்கு ஓகவானென்றுபேருடைய ஒரு பிள்ளையும், ஓகவதியென்னும் பெண்ணும் பிறந்தார்கள். அந்த ஓகவதியை ஸுதர்சனனென்பவன் மணம் புரிந்தான். மனுபுத்ரர்களில் ஒருவனாகிய நரிஷ்யந்தனுக்குச் சித்ரஸேனனும், சித்ரஸேனனுக்குத் தக்ஷனும், தக்ஷனுக்கு மீட்வானும் மீட்வானுக்குக் கூர்ச்சனும், கூர்ச்சனுக்கு இந்த்ரஸேனனும், இந்த்ரஸேனனுக்கு வீதிஹோத்ரனும், வீதிஹோத்ரனுக்கு ஸத்யச்ரவஸ்ஸும், ஸத்யச்ரவஸ்ஸுக்கு உருச்ரவஸ்ஸும், அவனுக்குத் தேவதத்தனும் பிறந்தார்கள். அந்தத் தேவதத்தனுக்கு ஒன்றான அக்னிபகவான் தானே பிள்ளையாகப் பிறந்தான். அவன் கானீனனென்று ப்ரஸித்தி பெற்ற மஹர்ஷியானான். அவனுக்கு அக்னிவேச்யனென்றும் ஜாதுகர்ண்யனென்றும் வேறு இரண்டு பெயர்கள் உண்டு. அந்தக் கானீன மஹர்ஷியிடத்தினின்று ப்ராஹ்மணகுலம் உண்டாயிற்று. அந்த ப்ராஹ்மணகுலம் அக்னிவேச்யகோத்ரமென்று

வழங்கிவந்தது. இங்ஙனம் நரிஷ்யந்தன் முதலியவர்களைச் சொன்னேன். இனி மனுபுத்ரனாகிய திஷ்டனுடைய வம்சத்தைச் சொல்லுகிறேன், கேட்பாயாக. த்ருஷ்டனுடைய பிள்ளை நாபாகன். இவன் க்ருஷி கோரக்ஷம் வாணிஜ்யம் முதலிய தொழிலினால் வைஸ்யத்தன்மையை அடைந்தான். மனுவின் பெயரனாகிய நாபாகனைக்காட்டிலும் இவன் வேறுபட்டவன். நாபாகனுடைய பிள்ளை ஹலந்தனன். அவனுடைய பிள்ளை வத்ஸப்ரீதி. அவனுடைய பிள்ளை ப்ராம்சு. அவன் பிள்ளை ப்ரமிதி. அவன் பிள்ளை கமித்ரன். அவன் பிள்ளை சக்ஷுஷன். அவன் பிள்ளை விவிம்சதி. அவன் பிள்ளை தம்பன். அவன் பிள்ளை கனிநேத்ரன். அவன் தார்மிகனாயிருந்தான். அவன் பிள்ளை கரந்தமன். அவன் மஹாராஜனாயிருந்தான். அவனுடைய பிள்ளை அவிக்ஷித்தென்பவன். அவனுடைய பிள்ளை மருத்தன். அவன் சக்ரவர்த்தியாயிருந்தான். அங்கிரஸ்ஸின் புதல்வரும் மஹாயோகியுமாகிய ஸம்வர்த்தரென்பவர் அந்த மருத்தனுக்கு யாகம் செய்வித்தார். மருத்தனுடைய யாகம்போன்ற யாகம் இப்பூமண்டலத்தில் ஒருவனும் செய்யவில்லை. அவனுடைய யாகத்தில் வேண்டிய கருவிகளெல்லாம் ஸ்வர்ணமயமாயிருந்தன. அந்த யாகத்தில் இந்த்ரன் ஸோமரஸத்தைப் பருகி மிகவும் ஸந்தோஷம் அடைந்தான். ப்ராஹ்மணர்களும் தக்ஷிணைகளால் ஸந்தோஷம் அடைந்தார்கள். மற்றும், அந்த யாகத்தில் மருத்துக்கள் புசிக்கின்றவர்களுக்கு அன்னாதிகளையெடுத்துப் பரிமாறினார்கள். விஸ்வதேவதைகள் ஸபிகர்களாயிருந்தார்கள். மருத்தனுடைய பிள்ளை தமன். அவன் பிள்ளை ராஜவர்த்தனன். அவன் பிள்ளை ஸுத்ருதி. அவன் பிள்ளை நரன். அவனுக்கு ஸௌத்ருதேயனென்று மற்றொரு பேரும் உண்டு. அவன் பிள்ளை பிந்து.

அவன் பிள்ளை த்ருணபிந்து. அவன் பெரிய மன்னவனு யிருந்தான். அவன் பணிவதற்குரிய பல நற்குணங்கள் அமைந்தவன். அப்ஸரமடந்தைகளில் சிறந்தவளும் இந்த்ரனுக்கு இனியவளுமாகிய அலம்புஸையென்னும் அப்ஸரமடந்தை அம்மன்னவனை அநுஸரித்திருந்தாள். அந்த த்ருணபிந்துவுக்கு அவ்வலம்புஸையிடத்தில் சில பிள்ளைகளும் இலபிலையென்னும் ஒரு கன்னிகையும் பிறந்தார்கள். அந்த இலபிலையிடத்தில் விஶ்ரவஸ்ஸு குபேரனைப் பிள்ளையாகப் பெற்றான். அந்த த்ருணபிந்து யோகேஶ்வரரும் ரிஷியுமாகிய தன் தந்தையிடத்தினின்று மேலான வித்யையைப் பெற்றான். தருணபிந்துவுக்கு விசாலன் ஶூந்யபந்து தூம்ரகேது என்று மூன்று பிள்ளைகள். அவர்களில் விசாலமன்னவன் வம்சத்தை வளர்ப்பவனாகி வைசாலியென்னும் பட்டணத்தை நிர்மித்தான். அந்த விசாலனுடைய பிள்ளை ஹேமசந்த்ரன். அவனுடைய பிள்ளை தூம்ராக்ஷன். அவன்பிள்ளை ஸஹதேவன். அவன் பிள்ளை க்ருஶாஶ்வன். அவன்பிள்ளை ஸோமதத்தன். அவன் இடாஹோமங்களால் ஆராதிக்கத்தகுந்தவனும் ஜகத்திற்கெல்லாம் ப்ரபுவுமாகிய பரமபுருஷனை ஆராதித்து யோகேஶ்வரர்கள் ப்ரார்த்திக்கிற பரமகதியாகிய மோக்ஷத்தை அடைந்தான். ஸோமதத்தனுடைய பிள்ளை ஸுமதி. அவன்பிள்ளை ஜனமேஜயன். விசாலனுடைய வம்சத்திற்பிறந்த இம்மன்னவர்கள் தங்கள் கூடஸ்தனாகிய த்ருணபிந்துவுக்குப் புகழை வளர்க்குந் தன்மையர்கள். இரண்டாவது அத்யாயம் முற்றிற்று.

சர்யாதியின் வம்சத்தைக் கூறுதல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மனுவின் பிள்ளையாகிய சர்யாதியென்னும் மன்னவன் வேதங்களின் பொருள்

களை ஆராய்ந்தறிவதில் ஊக்கமுடையவனுயிருந்தான். அவன் ஆங்கிரஸர்களின் ஸத்ரத்தில் இரண்டாவது நாள் செய்யவேண்டிய கர்மத்தை யெல்லாம் சொன்னுன். அவனுக்குத் தாமரையிதழ்போன்ற கண்களுடைய ஸுகன்யை யென்னும் ஒரு கன்னிகை இருந்தாள். அவன் அக்கன்னிகையுடன் வனத்திற்குச் சென்று அங்கு ச்யவனருடைய ஆஶ்ரமத்திற்குப் போனுன். அந்த ஸுகன்யை ஸகிகளால் சூழப்பட்டு வனத்தில் வ்ருக்ஷங்களைத் தேடிக்கொண்டு திரிகையில் ஒரு புற்றின் வாயில் மின்மினிப்பூச்சிகள் போன்ற இரண்டு தேஜஸ்ஸுக்களைக் கண்டாள். இளம்பருவமுடைய அந்த ஸுகன்யை ஸகிகளால் தூண்டப்பட்டு அறியாமையினுல் அந்தத்தேஜஸ்ஸுக்களை முள்ளால் குற்றினுள். அப்பொழுது அந்தப் புற்றின் வாயினின்று வெகுவாக ரக்தம் பெருகிற்று. அந்த க்ஷணமே ஸைன்யங்களுக்கெல்லாம் மலமூத்ரங்கள் தடைபடப்பெற்றது. அதைக் கண்டு ராஜர்ஷியாகிய சர்யாதி வியப்புற்றுத் தன் வேலைக்காரர்களைப் பார்த்து மொழிந்தான்.

ஶர்யாதி சொல்லுகிறுன்:—நீங்கள் பார்க்கவராகிய ச்யவனருக்கு ஏதேனும் அபராதம் செய்தீர்களா? நம்மைச்சேர்ந்த ப்ராணி எதுவாயினும் ஆஶ்ரமத்திற்கு ஏதேனும் கெடுதி செய்திருக்கவேண்டும். இது நிச்சயம். இல்லாதபக்ஷத்தில் இப்படிப்பட்ட உபத்ரவம் உண்டாக மாட்டாது.

ஸ்ரீ சுகர் சொல்லுகிறுர்:—இங்ஙனம் ஶர்யாதிமன்னவன் வினவிக் கொண்டிருக்கையில் அவன் பெண்ணுகிய ஸுகன்யை பயந்து தந்தையைப்பார்த்து மொழிந்தாள்.

ஸுகன்யை சொல்லுகிறுள்:—நான் சிறிது அபராதம் செய்தேன். அஃது யாதெனில், ஒரு புற்றின் வாயில் இரண்டு தேஜஸ்ஸுக்களைக் கண்டேன். நான் அவற்றை

இன்னவை யென்று ஆராய்ந்தறியாமல் முள்ளினால் குற்றினேன்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—புதல்வி மொழிந்த அவ்வார்த்தையைக் கேட்டுச் சர்யாதிமன்னவன் பயந்து புற்றில் மறைந்திருக்கின்ற ச்யவனமுனிவரை அருள் புரிவித்துக் கொண்டான். அப்பால் அம்முனிவருடைய அபிப்ராயத்தை அறிந்து தன் புதல்வியை அவருக்குக் கொடுத்து வருத்தம் நீங்கப்பெற்று அம்முனிவரிடம் விடைபெற்றுக்கொண்டு பரிவாரங்களுடன் பட்டணம் போய்ச் சேர்ந்தான். அனந்தரம் ஸுகன்யை பெருங்கோபமுடைய ச்யவனரைப் பதியாகப்பெற்று அவருடைய அபிப்ராயத்தை அறிந்து மனவூக்கத்துடன் அனுஸரித்து அவரை மனக்களிப்புறும்படி செய்தாள். அப்பால் சில காலம் கழிகையில், ச்யவனமஹர்ஷி தன் ஆஶ்ரமத்திற்கு வந்து அஶ்விதேவதைகளை நன்கு பூஜித்து இங்ஙனம் மொழிந்தார்.

ச்யவனர் சொல்லுகிறார்:—திறமையமைந்த தேவர்களே! முதுமை மூடிக்கிடக்கிற எனக்கு நீங்கள் யௌவனவயதைக் கொடுப்பீர்களாக. யஜ்ஞத்தில் ஸோமபானமற்ற உங்களை நான் ஸோமயாகத்தினால் ஆராதித்து உங்களுக்கு ஸோமரஸம் நிறைந்த பாத்ரத்தைக் கொடுக்கிறேன். ஆகையால் ஸ்த்ரீகள் விரும்பும்படியான யௌவனவயதையும் அவர்கள் மேல் விழுந்து விரும்பும்படியான ஸௌந்தர்யத்தையும் எனக்குக் கொடுப்பீர்களாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஸ்வர்க்கலோகத்து வைத்யஶ்ரேஷ்டர்களான அந்த அஶ்விதேவதைகள் இங்ஙனம் மொழிந்த அம்முனிவருடைய வார்த்தையைக் கேட்டு அபிநந்தித்து ப்ராஹ்மணஶ்ரேஷ்டரை நோக்கி அப்படி

யே ஆகட்டுமென்று அங்கீகரித்து 'ஸித்தர்களால் ஏற்படுத்தப்பட்ட இந்த மடுவில் நீர் முழுகுவீராக' என்றார்கள். உடம்பெல்லாம் கிழத்தனம் மூடப்பெற்று நரம்புகள் மேலே கிளம்பி மயிர்கள் நரைத்துச் சதைகள்சுருங்கி மடிந்து பார்க்கவழங்காதிருக்கிற அம்முனிவரைப் பிடித்துக்கொண்டு அந்த அஸ்விதேவதைகளும் அம்மடுவில் இறங்கி முழுகினார்கள். அப்பால் அந்த மடுவினின்று மூன்று புருஷர்கள் கிளம்பினார்கள். அவர்கள் மிகுந்த அழகுடையவர்களும் ஸ்த்ரீகளுக்கு ஆசைப்படத்தகுந்தவர்களும் தாமரைமாலை அணிந்து அழகிய ஆடை உடுத்துக் குண்டலந்தரித்து ஒருவரோடொருவர் ஒத்த உருவடையவர்களுமாயிருந்தார்கள். ஸர்வாங்க ஸுந்த்ரியான அந்த ராஜகுமாரத்தி மடுவினின்றும் கிளம்பின புருஷர்கள் மூவரும் ஸூர்யன்போல ப்ரகாசித்துக்கொண்டு உருவத்தில் ஒத்திருக்கையினால் அவர்களில் தன் கணவன் இன்னானென்று அறியமுடியாமல் தயங்கிப் பதிவ்ரதையாகையால் அஸ்விதேவதைகளைச் சரணம் அடைந்தாள். அப்பால் அந்த அஸ்விதேவதைகள் அவளுடைய பாதிவ்ரத்யத்திற்கு ஸந்தோஷம் அடைந்து அவளுக்குப் பர்த்தாவைத் தெரியும்படி காட்டி மஹர்ஷியிடம் விடைபெற்றுக்கொண்டு அவரால் துதி செய்யப்பெற்று ஸ்வர்க்கலோகம் போய்ச் சேர்ந்தார்கள். பிறகு ஒருகாலத்தில் யாகம் செய்ய முயன்ற சர்யாதி மன்னவன் மணவாளராகிய ச்யவனமஹர்ஷியின் ஆஸ்ரமத்திற்கு வந்து அவ்விடத்தில் தன் புதல்வியின் பக்கத்தில் ஸூர்யன்போல ஒளியுடன் திகழ்கின்ற புருஷனைக் கண்டான். அப்பொழுது தன்னைக் கண்ட மாத்ரத்தில் எழுந்து வந்து தன் பாதத்தில் விழுந்து வந்தனஞ்செய்து நிற்கின்ற புதல்வியைக் கண்டும் ஆசீர்வாதம் செய்யாமல்

மனத்தில் அவ்வளவு ஸந்தோஷம் உண்டாகப்பெறு தவனாகி இங்ஙனம் மொழிந்தான்.

சர்யாதி சொல்லுகிறான்:—பெண்ணே! இஃதென்ன செய்தனை? உலகங்களெல்லாம் வணங்கும்படியான மஹிமையுடையவரும் உன் கணவனுமாகிய ச்யவனமஹர்ஷியை நீ ஏமாற்றினை. ஏனென்றால், கணவன் கிழத்தனம் மூடப்பெற்று மனத்திற்கு இனியனாகிலனென்று அவனைத் துறந்து எவனோ ஒரு வழிப்போக்கனை இங்ஙனம் பக்கத்தில் உட்காரவைத்துக்கொண்டு அவனைப் பணிகின்றனை. ஆகையால் நீ கெடுமதியளாயிருக்கின்றனை. இதைவிட நீ என்ன அக்ருத்யம் செய்யவேண்டும். நீ ஸத்புருஷர்களின் குலத்தில் பிறந்தவள். உன் புத்தி ஏன் இப்படி விபரீதமாயிருக்கின்றது. உனக்கு இந்த மதிகேடு எப்படி உண்டாயிற்று? வெட்கமின்றிக் கள்ளபுருஷனை அனுஸரித்திருக்கின்றனையே. இதனால் நீ குலத்தையெல்லாம் பாழ்செய்தனை. மற்றும், தந்தை கணவன் ஆகிய இருவர்குலத்தையும் நரகத்தில் தள்ளுகின்றனை.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—பரிசுத்தமான புன்னகையுடைய அந்த ஸுகன்யை சிரித்துக்கொண்டு இங்ஙனம் மொழிகின்ற தந்தையைநோக்கி 'தந்தையே! என்பக்கத்திலிருக்கிற இவர் உன்மணவாளரும் பார்க்கவருமான ச்யவனமஹர்ஷியே' என்று மொழிந்தாள். அரசன் மீளவும் 'ஆனால் கிழவராயிருந்த அவருக்கு இப்படிப்பட்ட வயதும் உருவமும் எப்படி கிடைத்தது?' என்று வினவ அவர்க்கு வயதும் உருவமும் நேர்ந்த விதத்தையெல்லாம் பின் ஸவிஸ்தரமாகச் சொன்னாள். அப்பால் சர்யாதி மன்னவன் வியப்புற்று மிகவும் ஸந்தோஷம் அடைந்து புதல்வியை அணைத்துக் கொண்டான். பிறகு ச்யவனமஹர்ஷி வீரனாகிய ஶர்யாதிமன்னவனுக்கு ஸோமயாகம்

செய்வித்தார். ச்யவனர் தன் ப்ரபாவத்தினால் அந்த யாகத்தில் ஸோமபானமற்ற அச்விதேவதைகளுக்கு ஸோமரஸம் நிறைந்த பாத்ரத்தைக் கொடுத்தார். அங்ஙனம் ஸோம யாகத்தினால் அச்விதேவதைகளை ஆராதிக்கின்ற சர்யாதிமன்னவன்மேல் இந்த்ரன் கோபமுற்று அவனை வதிக்க வஜ்ரத்தை எடுத்தான். அப்பொழுது ப்ருகு வம்சத்தில் பிறந்தவராகிய ச்யவனமஹர்ஷி இந்த்ரனுக்குக் கை ஸ்வாதீனமாக வொட்டாமல் அதை ஸ்தம்பனம் செய்தார். அச்விதேவதைகள் வைத்யர்களென்று முன்பு யஜ்ஞஞ்செய்பவர்களால் ஸோமயாகத்தில் பஹிஷ்காரம் செய்யப்பட்டார்கள். ச்யவனர் ஸோமயாகத்தினால் அவர்களை ஆராதித்தவன்று முதல் அவர்களுக்கும் ஸோமரஸம் கொடுப்பதை எல்லாரும் அங்கீகரித்தார்கள். சர்யாதிக்கு உத்தானபர்ஹி ஆநர்த்தன் பூரிஷேணன் என்று மூன்று பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களில் ஆனர்த்தனுக்கு ரைவதனென்பவன் பிறந்தான். அவன் ஸமுத்ரத்தினிடையில் குசஸ்தலியென்னும் பட்டணத்தை ஏற்படுத்தி அதில் வாஸம் செய்துகொண்டு சத்ருக்களை அழிப்பவனாகி ஆனர்த்தம் முதலிய தேசங்களை அநுபவித்து வந்தான். அந்த ரைவதனுக்கு நூறு பிள்ளைகளும் ஒரு பெண்ணும் பிறந்தார்கள். பிள்ளைகளில் முதல்வன் ககுத்மியென்று ப்ரஸித்தனாயிருந்தான். அவன் ரேவதியென்னும் பேருடைய தன் பெண்ணை அழைத்துக்கொண்டு அவளுக்கு வரன் யாரென்று ப்ரஹ்மதேவனைக் கேட்கும்பொருட்டுத் தடையில்லாமல் ப்ரஹ்மலோகம் போய்ச் சேர்ந்தான்: அங்கு ப்ரஹ்மாவின் ஸந்நிதானத்தில் ஸங்கீதம் நடந்து கொண்டிருந்தபடியால் கேள்விக்கு அவகாசம் நேரப்பெறாமல் க்ஷணகாலம் வெறுமனே இருந்து கானத்தின் முடிவில் ஆதிபுருஷனை

கிய அந்த ப்ரஹ்மதேவனை நமஸ்கரித்துத் தன் பெண்ணுக்குக் கணவன் யாரென்று தெரிந்துகொள்ளவதற்காகத் தான் வந்திருப்பதை விண்ணப்பம் செய்தான். ப்ரஹ்மதேவனும் அதைக் கேட்டுச் சிரித்து ரைவதனைப் பார்த்து மொழிந்தான்.

ப்ரஹ்மதேவன் சொல்லுகிறான்:—மன்னவனே! நீ வரும்பொழுது எவரெவர்களைப் பார்த்து மனத்தில் உத்தேசித்திருந்தனையோ, அவர்கள் அனைவரும் காலத்தினால் முடிக்கப்பட்டார்கள். அவர்களுடைய பிள்ளைகளின் பேரன்மார்களுடைய கொள்பேரன்மார்களின் வம்சங்களுங்கூட இப்பொழுது செவிப்படமாட்டா. என்னுடைய க்ஷணகாலத்திற்குள் அவ்விடத்தில் வெகுகாலம் கழிந்துவிட்டது. இப்பொழுது பூலோகத்தில் க்ருதம் த்ரேதை த்வாபரம் கலியென்கிற இந்நான்கு யுகங்கள் இருபத்தேழுதரம்சுற்றிவந்துவிட்டன. (இருபத்துஏழுசதுர்யுகங்கள் கடந்தன) ஆகையால் நீ பார்த்தவர்கள் ஒருவரும் இல்லை. இப்பொழுது தேவர்களுக்கும் தேவனான பகவானுடைய அம்சமாகிய மஹாபலமுடைய அனந்தன் பலராமனாய் அவதரித்திருக்கிறான். ஆகையால் நீ புறப்பட்டுப்போய் இப்பெண்மணியை மனுஷ்யர்களில் சிறந்த அந்தப் பலராமனுக்குக் கொடுப்பாயாக. கேட்ட மாத்ரத்தில் புண்யத்தைத் விளைக்கும்படியான நாமஸங்கீர்த்தனத்தையுடையவனும் ப்ராணிகளுக்கு க்ஷேமத்தை விளைப்பவனுமாகிய பகவான் தன்னுடைய அம்சமாகிய பலராமனுடன் பூபாரத்தை நீக்கும்பொருட்டு அவதரித்திருக்கிறான்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ரைவதமன்னவன் இங்ஙனம் கட்டளையிடப்பெற்று ப்ரஹ்மதேவனை நமஸ்கரித்துத் தன் பட்டணத்திற்குச் சென்றான். அம்மன்னவனுடைய புதல்வர்களான ககுத்மி முதலிய அண்ணன் தம்பிகள்

யக்ஷர்களிடத்தினின்றும் பயந்து முன்னமே அப்பட்டணத்தைத் துறந்து திசைகளைப் பற்றி யோடிப்போனார்கள். மன்னவனே! ரைவத மஹாராஜன் ஸர்வாங்க ஸுந்தரியான தன் புதல்வியை மஹாபலமுடைய பலராமனுக்குக் கொடுத்துத் தான் தவம் செய்ய விரும்பிப் பதரியென்னும் பேருடைய நரநாராயணாஸ்ரமத்திற்குச் சென்றான். மூன்றாவது அத்யாயம் முற்றிற்று.

—•• ◆ { மனுவின் பேரனான நாபாகனுடைய வ்ருத்தாந்தமும், அவன் பிள்ளையான அம்பரீஷனுடைய வ்ருத்தாந்தமும் } ◆ ••—

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—வைவஸ்வதமனுவின் பிள்ளைகளில் ஒருவனாகிய நபகனுடைய பிள்ளை நாபாகனென்பவன். அவனுக்கு மற்றும் பலபுதல்வர்கள் இருந்தார்கள். அவர்களில் நாபாகன் எல்லார்க்கும் பின் பிறந்தவன். அவன் வெகுகாலம் குருகுலவாஸம் செய்து வந்தான். அவனுடைய ப்ராதாக்கள் அவன் ப்ரஹ்மசாரியும் ஜ்ஞானியுமாயிருக்கிறானென்று நினைத்துத் தந்தை ஸம்பாதித்து வைத்திருக்கும் ஸொத்தை அவனுக்குக் கொடாமல் தாங்கள் மாத்திரம் பங்கிட்டுக்கொண்டார்கள். அப்பால் நாபாகன் தன் ப்ராதாக்களை நோக்கி 'எனக்கு எதைப் பங்கிட்டுக்கொடுத்தீர்கள்' என்று வினவினான். அவர்கள் 'அப்பொழுது நாங்கள் மறந்துபோனோம். இப்பொழுது நாங்கள் பங்கிட்டுக் கொடுக்கமுடியாது. உனக்கு விருப்பம் உள்ளதாயின், பங்கிட்டுக் கொடுக்கவேண்டியவராகிய தந்தையிடம் போவோம். பங்கிட்டுக்கொடுங்களென்று அவர் சொல்வாராயின் பாகங் கொடுக்கிறோம்'. என்றார்கள். அப்பால் நாபாகன் தந்தையிடம் சென்று 'அப்பனே! என் ஜ்யேஷ்ட ப்ராதாக்கள் எனக்கு என்ன

பங்கிட்டுக் கொடுத்தார்கள்?' என்று வினவினான். அதற்குத் தகப்பனும் 'பிள்ளாய்! நீ அந்தப் பாகத்தில் விருப்பம் செய்யவேண்டாம். இதோ சிறந்த மதியுடைய அங்கிரஸர்கள் இப்பொழுது ஸத்ரயாகம் செய்கின்றார்கள். அவர்கள் ஆறுவதுநாளில் செய்யவேண்டியகார்யத்தில் வகை தெரியாமல் தடுமாறுவார்கள். அறிஞனே! வைஶ்வதேவ கர்மத்தில் விஶ்வதேவதேவதைகளை அறிவிப்பவைகளான இரண்டு ஸூக்தங்கள் அவர்களுக்குத்தெரியாது. மிகுந்தமதியுடையவர்களாயினும் அந்தஸூக்தங்களை அறியாமல் தடுமாறுகிற அவர்களுக்கு நீ அவற்றைச் சொல்லுவிப்பாயாக. அப்பால் யாககார்யம் முடிந்த பின்பு ஸ்வர்க்கம்போகிற அவ்வங்கிரஸர்கள் தங்கள் ஸத்ரயாகத்தில் மிகுந்த பணத்தை உனக்குக் கொடுப்பார்கள். ஆகையால் நீ அவ்விடம் செல்வாயாக' என்றான். அப்பால் நாபாகனும் தந்தை சொன்ன வண்ணமே செய்தான். பிறகு ஆங்கிரஸர்களும் ஸத்ரத்தில் மிகுந்த பணத்தையெல்லாம் அந்த நாபாகனுக்குக் கொடுத்து ஸ்வர்க்கம் போனார்கள். அதன் பிறகு நாபாகன் அந்தப் பணத்தை எடுத்துக்கொள்ள முயற்சிசெய்கையில் கறுத்த உருவமுடைய ஒரு புருஷன் வடதிசையினின்றும் வந்து 'யஜ்ஞபூமியில் இருக்கிற இந்தப் பணம் என்னுடையது' என்றான். அப்பொழுது நாபாகனும் 'ரிஷிகளாகிய அங்கிரஸர்கள் இந்தப் பணத்தை எனக்கே கொடுத்தார்கள்' என்றான். மீளவும் அப்புருஷன் 'ஆனால் இவ்விஷயத்தை உங்கள் தந்தையைக் கேட்போம்' என்றான். அப்பால் நாபாகன் தந்தையிடம் சென்று கேட்கத் தந்தையும், 'யாகபூமியில் இருப்பதும் யாகத்தில் மிகுந்ததுமாகிய தனம் முழுவதும் ருத்ரனுடைய பாகமென்று ஒரு காலத்தில் ரிஷிகள் ஏற்படுத்தினார்கள். ஆகையால்

அவையாவும் அவனுக்கே சேரவேண்டும்' என்றான். அப்பால் நாபாகன் தந்தையின் வார்த்தையைக் கேட்டு அந்தப் பணத்தைத் தான் எடுத்துக்கொள்ள வேறு உபாயம் ஒன்றும் தோன்றாமல் ருத்ரனை நமஸ்கரித்து 'ஓ ஈசனே! என் தந்தை யஞ்ஜபூமியிலுள்ள பணம் உன்னுடையதென்றே மொழிந்தார். ஆயினும், ப்ராஹ்மணனே! உன்னை நான் தலையால்வணங்கி வேண்டுகிறேன்' என்றான். அதைக் கேட்ட ருத்ரனும் அந்த நாபாகனைப் பார்த்து 'உன் தந்தை தர்மத்தையே மொழிந்தானாகையாலும், அதை நீயும் அப்படியே ஒளிக்காமல் ஸத்யம் பேசினையாகையாலும் உன்னிடத்தில் நான் ஸந்தோஷம் அடைந்தேன். வைஶ்வதேவ மந்த்ரங்களை அறிந்த உனக்கு ஸனாதன ப்ராஹ்மஜ்ஞானத்தை உபதேசிக்கிறேன். ஆகையால் எப்படிப்பட்ட ஆபத்து நேரிடினும் ஒருகாலும் பொய் பேசலாகாது. நான் ஸத்யத்தினால் ஸந்தோஷம் அடையுந்தன்மையன். ஸத்யம் பேசுகிறவன் எனக்கு இஷ்டனாவான். யாகத்தில் மிகுந்த பணத்தை உனக்குக் கொடுத்தேன். எடுத்துக் கொள்வாயாக' என்று மொழிந்து ஸத்யத்தில் ப்ரீதியுடைய மஹானுபாவனான அந்த ருத்ரன் அவ்விடத்திலேயே மறைந்தான். எவன் இந்த உபாக்யானத்தைக் காலை மாலை இரண்டு வேளைகளிலும் மன ஊக்கத்துடன் நினைக்கின்றானோ, அவன் சாஸ்த்ரஜ்ஞானமுடையவனாகி மந்த்ரங்களை உணர்ந்து ஆத்ம பரமாத்மாக்களின் உண்மையையும் உணர்வான். நாபாகனிடத்தினின்று அம்பரீஷன் பிறந்தான். அவன் மஹாபாகவதனாயிருந்தான்; அபராதம் செய்தவர்களுக்கும் உபகாரம் செய்யுந்தன்மையன். ஓரிடத்திலும் ஒருகாலும் தடைபடாத ப்ராஹ்மண சாபங்கூட அவனைத் தீண்டவில்லை.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான் :—மஹானு

பாவரே! மிகுந்த மதியுடையவனும் ராஜர்ஷியுமாகிய அவ்வம்பரீஷனுடைய வ்ருத்தாந்தத்தைக் கேட்க விரும்புகிறேன் 'ப்ராஹ்மணனால் ஏற்படும் தண்டம் ஒருவராலும் கடக்கமுடியாதது. அதுவுங்கூட அவனைப் பாதிக்க முடியவில்லை' என்றீர்கள். ஆகையால் அவனுடைய சரித்ரத்தைக் கேட்க விரும்புகிறேன்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மிகுந்த மதியுடையவனும் மஹா பாக்யசாலியுமாகிய அம்பரீஷ மன்னவன் ஏழு த்வீபங்களோடுகூடின பூமண்டலத்தையும் அழிவற்ற செல்வத்தையும் நிகரில்லாத ஐஶ்வர்யத்தையும் பெற்று அவற்றையெல்லாம் பாதுகாத்து மேன்மேலும் வளர்த்திக் கொள்ள வல்லவனாயினும், ஐஶ்வர்யங்களெல்லாம் அழியுந்தன்மையுடையவையென்றும் நரகத்தில் கொண்டு போய்த் தள்ளவல்லவையென்றும் அறிந்தவனாகையால் பிறர்க்கு வருந்தியும் கிடைக்கமுடியாத அந்த விபவங்களையெல்லாம் ஸ்வப்னத்தில் கண்ட வஸ்துக்களைப்போல நினைத்தான். மற்றும், அவன் ஷாட்குண்ய பூர்ணனாகிய பரமபுருஷனிடத்திலும் ஸாதுக்களான அவன்பக்தர்களிடத்திலும் பக்திரூபமான நல்ல பாவனை உண்டாகப் பெற்றிருந்தான். அதனால் அவன் இந்த ப்ரபஞ்சத்தையெல்லாம் ஒரு மண்ணாங்கட்டிபோல நினைத்திருந்தான். அவன் மனத்தை ஸ்ரீக்ருஷ்ணனுடைய பாதாரவிந்தங்களிலும், வாக்கை அவன்குணங்களைச் சொல்லுவதிலும், கைகளை அந்தப் பகவானுடைய ஆலயங்களை மெழுகி விளக்குவதுமுதலிய வ்யாபாரங்களிலும், காதுகளை ஆச்சர்யமான அவனுடைய ஸத்கதைகளைக் கேட்பதிலும், கண்களை அவனுடைய திருவுருவங்கள் அவன் எழுந்தருளியிருக்கும் திருப்பதிகள் ஆகிய இவற்றைக் காண்பதிலும், தன் தேஹத்தை (த்வகிந்த்ரியத்தை)

அவன் பக்தர்களின் தேஹத்தைத் தொடுவதிலும், க்ராணேந்த்ரியத்தை அவன் பாதாரவிந்தங்களின் ஸ்பர்சத்தினால் மிகுந்த பரிபளமுடைய அழகிய துளஸியை மூகருவதிலும், ரஸனேந்த்ரியத்தை அவனுக்கு நிவேதனம் செய்த அன்னாதிகளிலும், பாதங்களைத் திருவேங்கடம் முதலிய திவ்யக்ஷேத்ரங்களுக்குப்போகும் வழி நடப்பதிலும், தலையை அவன் பாதங்களைப் பணிவதிலும் உபயோகப்படுத்திக்கொண்டிருந்தான். பகவானுக்கு உபயோகப்படுத்திக் களைந்த சந்தனம் புஷ்பம் முதலியவற்றைத் தாஸ்யத்திற்காக அங்கீகரித்தானேயன்றி விஷயங்களை அநுபவிக்க வேண்டுமென்னும் விருப்பத்தினால் அங்கீகரிக்கவில்லை. அவன் இவற்றையெல்லாம் உத்தமஸ்லோகனை அந்தப் பகவானுடைய பக்தர்கள் வரையில் ப்ரீதி வளர்ந்து வருமாறு நடத்திக்கொண்டு வந்தான். இங்ஙனம் அவன் ஸர்வகாலத்திலும் தான் செய்யுங்கர்மங்களையெல்லாம் மனவாக்குக்காயங்களென்கிற மூன்று கரணங்களாலும் யஜ்ஞங்களுக்கு நிர்வாஹகனும் ஷாட்குண்யபூர்ணனும் இந்த்ரியங்களுக்கு விஷயமாகாதவனுமாகிய பரமபுருஷனிடத்தில் அர்ப்பணஞ்செய்து அவன் ஸர்வாந்தராத்மாவாயிருப்பதையும் மாறாமல் அநுஸந்தித்துக்கொண்டு அந்தப் பரமபுருஷனிடத்தில் நிலைநின்ற மனமுடைய வஸிஷ்டாதிகளான அந்தணர்கள் சொல்லும்படி இந்தப் பூமண்டலத்தையெல்லாம் பரிபாலித்துவந்தான். இங்ஙனம் பெரிய ஐஸ்வர்யம் அமைந்திருக்கையால் அங்கங்களும் தக்ஷிணைகளும் வளர்ந்து நடத்தப்பெற்றவைகளும் வஸிஷ்டர் அஸிதர் கௌதமர்முதலிய மஹர்ஷிகள் முன்னின்று நடத்துகையால் குறைவற்றவைகளுமான அஸ்வமேத யாகங்களால் யஜ்ஞ நிர்வாஹகனை ஸர்வேஸ்வரனை ஆராதித்தான். அத்தேசம் ஜல

மற்றிருக்கையால் யாகம் செய்வதற்காக அவன் ஸரஸ்வதிநதிக்குப் போனான். அவனுடைய அச்வமேத யாகங்களில் ஸபிகர்களும் ருத்விக்குக்களும் மற்ற ஜனங்களும் தேவதைகளோடொத்த உருவமுடையவர்களாகப் புலப்பட்டார்கள். இந்த்ரன் முதலிய தேவதைகள் அழகிய ஆடை யாபரணம் முதலியன உடையவர்களாகப் புலப்பட்டார்கள். அந்த மன்னவனோடு ஸம்பந்தமுடைய ஜனங்களெல்லாம் உத்தமச்லோகனான பகவானுடைய சரித்ரங்களைக் கேட்பதும் பாடுவதுமாயிருந்துகொண்டு தேவதைகளுக்கு ப்ரியமான ஸ்வர்க்கத்தையுங்கூட விரும்பவில்லை. போகமோக்ஷங்களைக் கொடுக்கவல்ல பரமபுருஷனை மனத்தில் உபாஸித்துக் கொண்டிருக்கிற அவனுடைய ஜனங்கள் யோகீச்வரர்களுக்கும் கிடைக்க அரியவைகளான அணிமாதி ஸித்திகள் பரப்ரஹ்ம ஸ்வரூபனான ஆத்மாவின் அனுபவத்தினால் நேர்ந்திருப்பினும் அவற்றால் சிறிதும் ஸந்தோஷம் அடையவில்லை. அணிமாதி ஸித்திகளுங்கூட அவர்களுக்கு ஸந்தோஷத்தை விளைக்கவில்லையென்றால், ஸ்வர்க்கத்தில் அவர்களுக்கு விருப்பம் உண்டாகவில்லையென்பதைப்பற்றிச் சொல்ல வேண்டுமோ? அப்படிப்பட்ட மஹானுபாவனாகிய அவ்வம்பரீஷ மன்னவன் ஜ்ஞானயோகத்தினாலும் தன் வர்ணாச்ரம தர்மங்களை அனுஷ்டிக்கையாகிற கர்மயோகத்தினாலும் பக்தி யோகத்தினாலும் பகவானை ஆராதித்துக்கொண்டிருந்து மெல்லமெல்லப் பற்றுக்களையெல்லாம் துறந்தான். வீடு பெண்டிர் பிள்ளை பந்துக்கள் யானை தேர் குதிரை காலாட்கள் முதலியவற்றிலும் அழிவற்ற ஆடை ஆபரணம் ஆயுதம் முதலியவற்றிலும் அளவிறந்த பொக்கிஷங்களிலும் இவையெல்லாம் அநித்யங்கள் துறக்கத்தக்கவைகளென்னும் மதி உண்டாகப் பெற்றான். தன்னைப் பற்றி

ருடைய வருத்தங்களைப் போக்குந்தன்மையுடைய பகவான் அனன்யப்ரயோஜனமான அவனுடைய பக்தியோகத்திற்கு ஸந்தோஷம் அடைந்து பயந்தவர்களைப் பாதுகாப்பதும் தன்னைப் பற்றினாருடைய சத்ருக்களுக்குப் பயத்தை விளைப்பதுமாகிய ஸுதர்சன சக்ரத்தை அவனுக்குக் கொடுத்தான். மனவுறுதியுடைய அவன் பகவானை ஆராதிக்கவிரும்பித் தன்னோடொத்த ஸ்வபாவமுடைய பார்யையுடன்கூடி ஒரு ஸம்வத்ஸரம் வரையில் த்வாதசீவ்ரதத்தை அநுஷ்டித்து வந்தான். இங்ஙனம் ஒரு ஸம்வத்ஸரம் நடத்தி வ்ரதத்தின் முடிவில் கார்த்திக மாதத்தில் நவமி தசமி ஏகாதசி ஆகிய மூன்று ராத்ரிகள் உபவாஸமிருந்து த்வாதசியினன்று யமுனையில் ஸ்நானம் செய்து மதுவனத்தில் ஆராதனத்திற்கு வேண்டிய கந்தம் புஷ்பம் தூபம் தீபம் முதலிய கருவிகளெல்லாம் அமையப்பெற்ற மஹாபிஷேக விதியின்படி பகவானுக்கு அபிஷேகம் செய்து சிறந்த ஆபரணம் சந்தனம் பூமாலை அர்க்யம்முதலியவற்றால் அவனை ஆராதித்தான். அவன் ப்ரஹ்ம ருத்ராதிகளுக்கு ப்ரபுவும் அழகிய அங்கங்களுடையவனுமாகிய பகவானையும், பகவத் பக்தியால் ப்ரயோஜனம் கைகூடப்பெற்று மஹாபாக்யசாலிகளாயிருக்கிற ப்ராஹ்மணர்களையும் மிகுந்த பக்தியுடன் பூஜித்தான். மற்றும், கொம்புகளில் பொன்னாலும் கால்களில் வெள்ளியாலும் அலங்காரம் செய்யப்பெற்றவைகளும் அழகிய ஆடைகளால் போர்வையிடப் பெற்றவைகளும் நன்றாகப் பால் கறப்பவைகளும் நல்லியற்கையுடையவைகளும் வயது உருவம் இவை அமைந்தவைகளும் கன்றுகளோடுகூடினவைகளும் பால் கறக்கும் பாத்ரம்முதலிய கருவிகள் நிறைந்து ஸம்ருத்திகளெல்லாம் பொருந்தினவைகளுமான அறுபது கோடி பசுக்களை ப்ராஹ்மணர்களுக்குக் கொடுத்தான்.

அப்பால் நல்ல ருசியுடையதும் அறுசுவைகளும் அமைந்து மனத்திற்கினியதுமான அன்னத்தினால் முதலில் ப்ராஹ்மணர்களைப் புஜிப்பித்துத் தக்ஷிணை முதலியவைகளால் விருப்பங்களெல்லாம் நிறைவேறப் பெற்ற அந்த ப்ராஹ்மணர்களால் அநுமதி கொடுக்கப் பெற்றுப் பாரணைசெய்யத் தொடங்கினான். அப்பொழுது மஹானுபாவராகிய துர்வாஸமுனிவர் அவ்வம்பரீஷமன்னவனுக்குத் தெய்வாதீனமாக அதிதியாய் வந்து எதிரே நின்றார். அங்ஙனம் வந்திருக்கின்ற அதிதியை எதிர்கொண்டு ஆஸனம் அளித்து அர்க்யம் முதலியவற்றால் நன்கு பூஜித்துப் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்துப் போஜனம் செய்யவேண்டுமென்று ப்ரார்த்தித்தான். அப்பால் அந்தத் துர்வாஸமுனிவரும் அவனுடைய ப்ரார்த்தனையை அபிநந்தித்து அவஶ்யமாக அனுஷ்டிக்கவேண்டிய நித்யகர்மங்களை முடித்துக் கொண்டுவருவதற்காகச் சென்று பரிசுத்தமான யமுனையின் ஜலத்தில் பெருமை அமைந்த பரப்ரஹ்மத்தைத்யானித்துக்கொண்டு நெடுநேரம் முழுகியிருந்தார். அப்பொழுது தர்மத்தை அறிந்த அம்பரீஷ மன்னவன் த்வாதசி அரைமுஹூர்த்தகாலமே மிகுந்திருப்பதையும் அதற்குள் பாரணை செய்யவேண்டியதையும் துர்வாஸமுனிவர் வருவதற்குள் த்வாதசி தவறிப்போகும் போலிருப்பதையும் அவருக்கு முன்னே தான் பாரணைசெய்யக்கூடாமையையும் தனக்குள் நினைத்துப் பாரணை விஷயத்தில் நேர்ந்த ஸங்கடத்தைப் பற்றி ப்ராஹ்மணர்களுடன் கலந்தாலோசித்தான்.

அம்பரீஷன் சொல்லுகிறான்:—அதிதியாக வந்த ப்ராஹ்மணரைப் போஜனத்திற்கு அழைத்து அவர் வருவதற்கு முன்னமே அவரை அநாதரித்து நான் புஜிப்பேனாயின், அது பெருந்தோஷமாம். த்வாதசி கடப்பதற்

குள் பாரணை செய்யாது போவேனாயின், வ்ரதம் கெட்டுப் போமாகையால் அதுவும் தோஷமே. எனக்கு இப்படிப் பட்ட ஸங்கடம் நேர்ந்திருக்கின்றது. எப்படிச் செய்தால் எனக்குத் தர்மம் நேருமோ, அதர்மமும் என்னைத் தீண்டாதிருக்குமோ, அப்படிப்பட்ட உபாயத்தை எனக்குச் சொல்லீர்களாக. நான் வெறும் ஜலத்தினால் பாரணை செய்கிறேன். இதனால் வ்ரதத்திற்கும் கெடுதியில்லை. போஜனம் செய்யாமையால் அதிதியை அநாதரித்த தோஷமும் நேரிடாது. ஓ அந்தணர்களே! ஜலத்தைப் பருகுவது சாப்பிட்டாற்போலவும் சாப்பிடாததுபோலவும் ஆமென்று ஸ்ருதிகள் சொல்லுகின்றனவல்லவா? ஆகையால் நான் அங்ஙனம் செய்கின்றேன்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—குருஸ்ரேஷ்டனே! ராஜர்ஷியாகிய அவ்வம்பரீஷன் ப்ராஹ்மணர்களுடன் கலந்து ஆலோசித்து இங்ஙனம் நிச்சயித்துக்கொண்டு மனத்தில் அச்சுதனை த்யானித்துக்கொண்டு ஜலத்தைப் புசித்து ப்ராஹ்மண ஸ்ரேஷ்டரான துர்வாஸருடைய வரவையே எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். அப்பால் துர்வாஸமுனிவர் நித்யகடன்களைச்செய்து முடித்து யமுனைக்கரையினின்று வர, அம்பரீஷ மன்னவனும் முனிவரை அபிநந்திக்க, முனிவர் ஸூக்ஷ்மபுத்தியால் அவன் ஜலபாரணை செய்த செய்தியை அறிந்துகொண்டார். அனந்தரம் அம்முனிவர் கோபத்தினால் உடம்பெல்லாம் சலிக்கவும் புருவ நெருப்புக்களால் முகம் குடிலமாகவும் பெற்று மிகவும் பசியுடையவராகித் தன் னெதிரில் அஞ்சலித்துக்கொண்டு நிற்கின்ற மன்னவனைக் குறித்து மொழிந்தார்.

துர்வாஸர் சொல்லுகிறார்:—ஓ ஜனங்களே! இந்த க்ஷத்ரியன் தர்மத்தைக் கடந்து செய்த கார்யத்தைக்

கண்டீர்களா? இவன் கொடுந்தன்மையுடையவன். செல்வப்பெருக்கினால் கர்வங்கொண்டிருக்கிறான். இவன் உண்மையில் விஷ்ணுவினிடத்தில் பக்தியுடையவனல்லன்; ஆயினும் தானே தன்னை அவனுக்குப் பக்தனாகப்பாவித்துக் கொண்டிருக்கிறான். இவன் அதிதியாக வந்த என்னை விருந்துண்ணும்படி அழைத்து எனக்குக் கொடாமலே தான் புசித்துவிட்டான். இதுவே இவன் செய்த தர்மக்கேடு. அடா மூடனே! நீ செய்த அறக்கேட்டின் பலனை உனக்கு இப்பொழுதே காட்டுகிறேன்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— அம்முனிவர் இங்ஙனம் மொழிந்துகொண்டே கோபத்தினால் ஜ்வலிக்கின்ற தன் ஜடையை அவிழ்த்து அதினின்றும் அம்பரீஷனைக்கொல்லும்பொருட்டு ப்ரளயகாலாக்னிபோல ஜ்வலிக்கின்ற ஒரு தேவதையை நிர்மித்தார். உருவின கத்தியைக் கையிலேந்தி அடிவைப்பினால் பூமியை நடுங்கச்செய்துகொண்டு வருவதும் ஜ்வலிப்பதுமாகிய அந்தத் தேவதையை நன்றாகக் கண்டும் அம்மன்னவன் சிறிதும் சலியாதிருந்தான். அப்பொழுது தன் ப்ருத்யர்களைப் பாதுகாப்பதில் ஆழ்ந்த மனமுடைய பரமபுருஷன் தன் ஸுதர்சனசக்ரத்தைத் தூண்ட, அதுவும் அவ்விடம் வந்து காட்டுத்தீ கோபித்துக்கொண்டிருக்கின்ற ஸர்ப்பத்தைத் தஹிப்பதுபோலத், துர்வாஸரால் நிர்மிக்கப்பட்ட அந்தத் தேவதையைக் கொளுத்திப் பஸ்மம் செய்துவிட்டது. அப்பால் துர்வாஸமுனிவர் அந்த ஸுதர்சன சக்ரம் அவ்வளவோடு போகாமல் தன்னை எதிர்த்து வருவதையும் தன் ப்ரயாஸம் வீணானதையும் கண்டு பயந்து ப்ராணனோடு தப்பித்துப் பிழைக்க விரும்பித் திசைகளைப்பற்றி ஓடினார். ஜ்வாலைகள் மேற்கிளம்பி யெரியப்பெற்ற காட்டுத்தீ ஸர்ப்பத்தைத் தொடர்ந்தோடுவதுபோலப், பகவா

னுடைய ஸுதர்சன சக்ரம் அங்ஙனம் பயந்தோடுகிற அந்தத் துர்வாஸரைத் தொடர்ந்தோடிற்று. அப்பொழுது அம்முனிவர் மேருபர்வதத்தின் குஹையில் போய்ப் புகுந்துகொள்ள விரும்பி ஓடினார். மற்றும், அவர் திசைகளையும் ஆகாயத்தையும் அதலாதிலோகங்களையும் ஸமுத்ரங்களையும் லோகபாலர்களோடு கூடின லோகங்களையும் ஸ்வர்க்கத்தையும் குறித்தோடினார். அம்முனிவர் தான் எங்கெங்கு ஓடிப்போனாரோ அவ்வவ்விடங்களிலெல்லாம் வருந்தியும் பொறுக்கமுடியாத அந்த ஸுதர்சன சக்ரம் தன்னைத் தொடர்ந்துவரக் கண்டார். அப்பால் அந்தத் துர்வாஸமுனிவர் எங்கும் தன்னைப் பாதுகாக்கும் கதி நேரப்பெறாமல் பயந்தமனமுடையவராகித் தனக்கு ரக்ஷகனை விரும்பி ப்ரஹ்மதேவனிடம் சென்று 'ப்ரஹ்மதேவனே! ஸ்வயம்புவே! பகவானுடைய தேஜஸ்ஸாகிய ஸுதர்சன சக்ரத்தினின்றும் என்னைப் பாதுகாக்க வேண்டும்' என்றார்.

ப்ரஹ்மதேவன் சொல்லுகிறான்:—அந்தணனே! இந்த என் வாஸஸ்தானமாகிய ஸத்யலோகமும் மற்றுமுள்ள இந்தப்ரபஞ்சமும் ஆகிய இவையெல்லாவற்றையும் ஸ்ருஷ்டிமுதலிய வ்யாபாரங்களாகிற தன்விளையாட்டை முடிக்கவிரும்பி இரண்டு பரார்த்தங்கள் அடங்கின கல்பத்தின் கடைசியில் ஸம்ஹரிக்கமுயன்றவனும் காலத்தைச் சரீரமாகவுடையவனுமாகிய எவனுடைய புருவ நெரிப்பு மாத்ரத்தினால் ஒரேகாலத்தில்அழியப்போகின்றனவோ, அப்படிப்பட்ட பகவானுடைய தேஜஸ்ஸினின்று உன்னைப் பாதுகாக்க நான் வல்லவனல்லேன். நீ அவனையே சரணம் அடைவாயாக. நான் ருத்ரன் தக்ஷர் ப்ருகு முதலியவர் மரீசி முதலிய ப்ரஜாபதிகள் பூதபதிகள் இந்த்ரன் முதலிய தேவதைகள் ஆகிய நாங்கள் அனை

வரும் எவனுடைய ஆஜ்ஞையைப் பெற்று உலகங்களுக் கெல்லாம் ஹிதமான அதைத் தலையால் தாங்கி எங்கள் கார்யத்தை நடத்துகின்றோமோ அப்படிப்பட்ட பகவானுடைய தேஜஸ்ஸினின்றும் நாங்களனைவரும் உன்னைக் காக்கவல்லவர்களல்லோம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் ப்ரஹ்மதேவனால் கைவிடப்பெற்று ஸ்ரீவிஷ்ணு சக்ரத்தினாலும் தபிக்கப்பெற்று வருந்துகின்ற துர்வாஸமுனிவர் கைலாஸபர்வதத்தில் வாஸம் செய்கின்ற ருத்ரனிடஞ்சென்று அவனைச் சரணம் அடைந்தார்,

ருத்ரன் சொல்லுகிறான்:—அப்பா! நாங்கள் பகவானுடைய சக்ரத்தினின்று உன்னைக் காக்கவல்லவர்களல்லோம். ஏனென்றால், எங்களுக்கும் அவன் சரணம்அடையத்தகுந்தவன். மற்றும், நாங்கள் புழுக்கள் போலச் சுற்றுகின்ற இந்த ப்ரஹ்மாண்டம் போன்ற பலவாயிரம் ப்ரஹ்மாண்டங்கள் அவன் ஸ்ருஷ்டிக்கவேண்டுமென்று ஸங்கல்பிக்கும்பொழுது அவனிடத்தினின்றும் உண்டாகின்றன; அழிக்கவேண்டுமென்று ஸங்கல்பிக்கும்பொழுது அவனிடத்தில் மறைகின்றன. நான், ஸனத்குமாரர் மஹானுபாவராகிய நாரதர் மேன்மையுடைய ப்ரஹ்மதேவன் கபிலர் அபாந்தரதமர் தேவலர் தர்மர் ஆஸுரி மரீசி முதலியவர்கள் ஸர்வஜ்ஞர்களான மற்றுமுள்ள ஸித்தஶ்ரேஷ்டர்கள் ஆகிய நாங்களனைவரும் பகவானுடைய மாயையினால் மதிமயங்கப்பெற்று அவனை அறிய முடியாமல் அந்த ப்ரஹ்மாண்டத்திற்குள் சுழன்றுகொண்டிருக்கிறோம். அப்படிப்பட்ட மஹிமையுடையவனும் ஸர்வேஶ்வரனுமாகிய அந்தப் பகவானுடைய அஸ்த்ரமான இந்த ஸுதர்சனசக்ரம் எங்களுக்குங்கூடப் பொறுக்க முடியாதது. பொறுக்கவுங்கூட வல்லரல்லாத நாங்

கள் அதை எங்ஙனம் தடுக்கவல்லர்களாவோம். ஆகை யால் மிகுந்த மஹிமைகள் அமைந்தவனும் சரணாகத ரக்ஷகனுமாகிய அந்தப் பகவானையே சரணம் அடைவா யாக. சரணம் அடைந்தவர்களின் துக்கங்களைப் போக்க வல்ல அந்தப் பகவான் உனக்கு ஸுகத்தை விளைப் பான்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—சங்கரனால் இங்ஙனம் சொல்லப்பட்ட அந்தத் துர்வாஸமுனிவர் ஆசையற்றுக் கைலாஸபர்வதத்தினின்றும் புறப்பட்டு, ஸ்ரீநிவாஸனாகிய பகவான் ஸ்ரீமஹாலக்ஷ்மியுடன் நித்யவாஸம் செய்யப் பெற்ற விஷ்ணுலோகத்திற்குச் சென்றார். பகவானு டைய ஸுதர்சனாஸ்த்ரத்தின் ஜ்வாலையால் தஹிக்கப் பட்டு வருந்துகின்ற துர்வாஸமுனிவர் அவ்விடம் சென்று பயத்தினால் உடம்பெல்லாம் நடுங்கப்பெற்று அந்தப் பக வானுடைய பாதங்களில் விழுந்து மேல்வருமாறு கூறினார்.

துர்வாஸர் சொல்லுகிறார்:—அச்சுதனே! (பற்றின வர்களைக் கைவிடாதவனே!) அளவற்ற மஹிமையுடைய வனே! பக்தர்களுக்கு மிகவும் அன்பனே! தன்னைப் பற் றினவர்களுடைய வருத்தங்களைப் போக்கவல்லவனே! சரணம் அடைந்தவர்களின் அபராதங்களைப் பாராமல் அவர்களைப் பாதுகாக்குந் தன்மையனே! சேதனாசேதன ரூபமான ப்ரபஞ்சத்தை யெல்லாம் படைப்பவனே! அப ராதஞ் செய்துவருந்துகின்ற என்னைப் பாதுகாக்கவேண் டும். அளவற்றதாகிய உன் ப்ரபாவத்தை அறியாமல் நான் உன் பக்தர்கள் விஷயத்தில் அபராதம் செய்தேன். அந்த அபராதத்தைப் பொறுத்து என்னைப் பாதுகாக்க வேண்டும். உன் பேரைச் சொன்னமாத்ரத்தில் நரகத் தில் விழுந்து துக்கங்களை அநுபவிக்கின்ற பாபிஷ்டனும்

அந்தப் பாபத்தினின்றும் விடுபடுவான். இனி நேரே உன்னைச் சரணம் அடைந்தவனுடைய பாபம் போவதற்குச் சொல்லவேண்டுமோ?

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—ஓ அந்தணனே! நான் பக்தபராதீனன். நான் ஸ்வதந்த்ரனல்லேன். என் ஹ்ருதயம் மனவாக்குக் காயங்களென்கிற மூன்று கரணங்களாலும் எனக்கு உபகாரம் செய்கிற என் பக்தர்களுக்கு உட்பட்டிருக்கின்றது. என் பக்தர்கள் எனக்கு மிகவும் அன்பிற்கிடமாயிருப்பவர்கள். நானும் அவர்களுக்கு மிகவும் அன்பிற்கிடமாயிருப்பவன். ப்ராஹ்மணனே! பக்தர்களுக்கு அன்பனுகிய நான் ஸாதுக்களான என் பக்தர்களைப் பிரிந்து என் சரீரத்தையாவது அளவற்ற ஐச்வர்யத்தையாவது என்றும் என்னை விட்டுப்பிரியாத ஸ்ரீமஹா லக்ஷ்மியையாவது விரும்பமாட்டேன். அவர்கள் என்னையே மேலான கதியாக நினைத்திருப்பவர்கள். என்னை யொழிய மற்ற எவற்றையும் உபாயமாக நினைக்கமாட்டார்கள். என்னை யொழிய மற்றொன்றையும் தங்களுக்குப் புருஷார்த்தமாகவும் விரும்பமாட்டார்கள். மற்றும், அவர்கள் பெண்டிர் வீடு பிள்ளை ப்ராணன் பணம் இஹலோக ஸுகம் பரலோகஸுகம் ஆகிய இவையெல்லாவற்றையும் துறந்து என்னையே சரணம் அடைந்தவர்கள். ஆகையால் நான் அவர்களை எப்படி விடவல்லவனுவேன்? என்னிடத்தில் அவர்களுடைய மனம் அன்புவெள்ளத்தினுல் கட்டுண்டிருக்கின்றது. அவர்கள் தம்மை அழித்தாயினும் பிறர்கார்யத்தை நிறைவேற்றுந் தன்மையுடையவர்கள்; அவர்கள் எல்லாம் என்னுடைய உருவங்களேயென்னும் புத்தியால் எல்லாவற்றையும் ஸமமாகப் பார்க்குந் தன்மையர்கள். பதிவ்ரதைகளான பெண்டிர்கள் தங்கள்உபசாரங்களினுல் குண

முள்ள தங்கள் கணவர்களை ஸ்வாதீனப் படுத்திக்கொண்டிருப்பதுபோல அவர்கள் என்னைத் தங்கள் பக்தியினால் ஸ்வாதீனப்படுத்திக்கொண்டிருக்கிறார்கள். அந்த என் பக்தர்கள் எனக்குச் சேஷமாயிருந்து என்னையே அனுபவிக்கையாகிற பக்தியினால் மனக்களிப்புற்று அந்தப் பக்தியோக மஹிமையினால் நேரிட்டிருக்கின்ற ஸாலோக்யம் ஸாமீப்யம் ஸாயுஜ்யம் ஸார்ஷ்டி என்கிற மோக்ஷங்களையுங்கூட விரும்பமாட்டார்கள் என்றால், காலக்ரமத்தில் அழியக்கூடிய இந்த்ராதிகளின் ஐஶ்வர்யத்தை எங்ஙனம் விரும்புவார்கள்? என் பக்தர்கள் எனக்கு ஹ்ருதயம் போன்றவர்கள். நானும் அவர்களுக்கு ஹ்ருதயம்போன்றவன். அவர்கள் என்னைக் காட்டிலும் மற்றொன்றையும் ப்ரியமாக நினைக்கமாட்டார்கள். நானும் அவர்களைக் காட்டிலும் மற்றொன்றையும் சிறிதும் ப்ரியமாக நினைக்கமாட்டேன். ஆகையால் அவர்கள்விஷயத்தில் பட்ட அபராதத்தை நான் பொறுக்கமாட்டேன். அந்தணனே! உனக்கு ஒரு உபாயம் சொல்லுகிறேன். கேட்பாயாக. நீ எவனிடத்தில் இந்த அபராதத்தைச் செய்தாயோ, அந்த அம்பரீஷ மன்னவனையே சரணம் அடைவாயாக. உலகத்தில் நல்லியற்கையுடையவர்களான என் பக்தர்களிடத்தில் ஒருவன் தன் திறமையை உபயோகப்படுத்துவானாயின், அது அவர்களிடத்தில் பலிக்காமல் உபயோகப்படுத்தினவனுக்கே கெடுதியை விளைவிக்கும். தவம் வித்யை இவையிரண்டும் வணக்கமுடைய அந்தணர்களுக்கே நன்மையை விளைக்கும். வணக்கமில்லாதவன் தவம் வித்யை முதலியவைகள் அமைந்திருப்பினும், நிரபராதிகளிடத்தில் அபராதப்படுவானாயின், அவை அவனுக்கே அநர்த்தத்தை விளைக்கும். ப்ராஹ்மண ஶ்ரேஷ்டனே! ஆகையால் நாபாகனுடைய பிள்ளையாகிய அம்பரீஷமன்



1903. துர்வாஸர் அம்பரீஷனுடைய பாதங்களில் விழுந்து மன்னிக்க வேண்டுதல்.

னவனிடத்திற்கே போவாயாக. உனக்கு க்ஷேமம் உண்டாகும். பிறருடைய அபராதங்களில் கண்வையாத மஹானுபாவனாகிய அம்மன்னவனையே உன்னபராதத்தைப் பொறுக்கும்படி வேண்டிக்கொள். உனக்கு ஸுகம் உண்டாகும். நான்காவது அத்யாயம் முற்றிற்று.

அம்பரீஷன் தன் பாதங்களில் விழுந்து வேண்டுகிற தூர்வாஸ முனிவரைச் சக்ரத்தினின்றும் விடுவித்து அவரைப் புசிப்பித்தலும், கடைசியில் வனத்திற்குப் போதலும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் பகவானால் உபாயம் உபதேசிக்கப் பெற்ற தூர்வாஸமுனிவர் சக்ரத்தினால் தபிக்கப்பட்டவராகவே அம்பரீஷனிடம் சென்று மனவருத்தத்துடன் அவனுடைய பாதங்களைப் பிடித்துக்கொண்டார். அம்பரீஷனும் அந்தத் தூர்வாஸருக்கு நேர்ந்த அப்படிப்பட்ட துக்கத்தைக் கண்டு அவர் தன் பாதங்களைப் பிடித்துக் கொண்டதற்கு மிகவும் வெட்கமுற்று மனஇரக்கத்தினால் மிகவும் பரிதபித்து ப்ராஹ்மணரைப் பின் தொடர்ந்திருக்கின்ற பகவானுடைய சக்ரத்தை ஸ்தோத்ரம் செய்தான்.

அம்பரீஷன் சொல்லுகிறான்:—ஸுதர்சனமென்றும் ஸஹஸ்ராரமென்றும் பெயர்பெற்ற சக்ரராஜனே! மஹானுபாவனாகிய அக்னியும் நீயே. ஸூர்யனும் நீயே. நக்ஷத்திரங்களுக்கு ப்ரபுவான சந்த்ரனும் நீயே. ஜலம் பூமி ஆகாயம் காற்று தன்மாத்ரங்கள் இந்த்ரியங்கள் இவையெல்லாம் நீயே. அச்சுதனுக்கு அன்பனே! ஸமஸ்தமான அஸ்த்ரங்களையும் அழிக்குந்திறமை யுடையவனே! ஜகத்திற்கெல்லாம் ப்ரபுவே! உனக்கு நமஸ்காரம். இந்த ப்ரா

ஹ்மணனுக்கு மங்களத்தை விளைப்பாயாக. நீயே தர்ம ஸ்வரூபன்; தர்மத்தை நிறைவேற்றுகின்றவன். அழிவற்ற தைர்யமும் நீயே. ஸமஸ்தயஜ்ஞங்களுக்கு நிர்வாஹகனும் அவற்றால் ஆராதிக்கப்படுகிறவனும் நீயே. யஜ்ஞங்களில் கொடுக்கின்ற ஹவிஸ்ஸுக்களைப் புசிக்கின்றவனும் அவற்றிற்குப் பலன்கொடுப்பவனும் நீயே. ஸர்வ ஸ்வரூபனே! நீயே உலகங்களையெல்லாம் பாதுகாக்கின்றனை. சத்ருக்களை அழிக்கும் ஸங்கல்பரூபமான பரம புருஷனுடைய ஸாமர்த்யமும் நீயே. அழகிய நாபியுடையவனே! உனக்கு நமஸ்காரம். உன்னைத் துதிக்கவல்லனல்லேன். நீ ஸமஸ்த தர்ம மர்யாதைகளையும் பாதுகாக்கின்றனை. அதர்மமே தொழிலாயிருக்கின்ற அஸுரர்களுக்குத் தூமகேதுவைப் போல அநர்த்தங்களை விளைக்கின்றனை. நீ மூன்று லோகங்களையும் பாதுகாக்கின்றனை. நீ பரிசுத்தமான தேஜஸ்ஸுடையவன். மனத்தின் வேகமுடையவன். உன் செயல்கள் அற்புதமாயிருக்கும். உனக்கு நமஸ்காரம் செய்கிறேன். தர்மஸ்வரூபமான உன் தேஜஸ்ஸினால் மஹானுபாவர்களான பெரியோர்களின் ஜ்ஞானத்தைத் தடுப்பதாகிய அஜ்ஞானத்தையெல்லாம் அழித்து ஜ்ஞான ப்ரகாசமும் கொடுக்கப்பட்டது. ஸூர்யன் முதலிய தேஜஸ்ஸுக்களின் ப்ரகாசமும் உன்னுடையதே. மேன்மை தாழ்மைகளுக் கிடமாயிருப்பதும் சேதநாசேதன ரூபமுமாகியஇந்த ஜகத்தெல்லாம் உன்னுடைய உருவமே. வேதவாக்யங்களால் புகழப்படும் பெருமையுடையவனே! இப்படிப்பட்ட உன்மஹிமை எல்லையற்றது. கெட்ட குணங்கள் எவையும் தீண்டப்பெறாத பரமபுருஷனால் தூண்டப்பட்டுப் பலிஷ்டர்களான தைத்யர்களும் தானவர்களும் நிறைந்த சத்ரு ஸைன்யத்தில் புகுந்து கை வயிறு தொடை கால் கழுத்து இவைகளைச் சேதித்துக்

கொண்டு யுத்தத்தில் மிகவும் விளங்குகின்றனை. அப்படிப்பட்ட நீ ஸாதுலோகத்தைப் பாதுகாப்பதற்காகவும் துஷ்டர்களை அழிப்பதற்காகவும் பகவானுல் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றனை. நீ சரணுகதர்களின் அபராதங்களை யெல்லாம் பொறுக்குந் தன்மையன். அப்படிப்பட்ட நீ என் குலத்தின் க்ஷேமத்திற்காக இந்த ப்ராஹ்மணனுக்கு மங்களத்தைச் செய்வாயாக. (இவனை ப்ராணன்களோடு விடுவாயாக.) இதுவே நீ எனக்குச் செய்ய வேண்டிய அநுக்ரஹம். நான் தானுதி தர்மங்களையும் யாகாதி தர்மங்களையும் எனக்கு ஏற்பட்ட வர்ணுஸ்ரம தர்மங்களையும் நன்ருக அநுஷ்டித்திருப்பேனுயின், எங்கள் குலம் ப்ராஹ்மணர்களையே தெய்வமாக நினைத்திருப்பது உண்மையாயின், இந்த ப்ராஹ்மணன் வருத்தம் தீர்ந்து ஸுகமாயிருப்பானுக. என்னுடைய தானுதி தர்மங்களால் ஸுதர்சன பகவான் ஸந்தோஷ முற்றிருப்பானுயின், ப்ராஹ்மணனை ப்ராண பயத்தினின்றும் பாதுகாப்பானுக. இணையெதிரில்லாதவனும் ஸமஸ்தகல்யாண குணங்களுக்கும் இருப்பிடமாயிருப்பவனுமாகிய பகவான் 'அவன் ஸமஸ்தபூதங்களுக்கும் அந்தராத்மாவாகையால் அவையெல்லாம் அவனே' என்கிற எண்ணத்துடன் பணிந்து வருகின்ற என்னுடைய மனேபாவத்தினுல் ஸந்தோஷமுற்றிருப்பானுயின், அதனுல் இந்த ப்ராஹ்மணன் மனக்கவலை தீர்ந்து ஸுகமாயிருப்பானுக.

ஸ்ரீசுகர் சொல்லுகிருர்:—இங்ஙனம் அம்பரீஷ மன்னவன் ஸ்தோத்ரம் பண்ணிக் கொண்டிருக்கையில், அந்த விஷ்ணுவின் ஸுதர்சன சக்ரம் நாற்புறத்திலும் ஜ்வாலைகள் அடங்கப்பெற்று, அம்மன்னவனுடைய வேண்டுகோளுக்காகத் துர்வாஸ முனிவரை விட்டுப் போயிற்று. துர்

வாஸமுனிவரும் ஸுதர்சனுக்னியின் தாபத்தினால் விடு பட்டு க்ஷேமம்பெற்று மனக்கவலை தீர்ந்து அம்மன்னவ னுக்கு மேலான ஆசீர்வாதங்கள் செய்து அவனைப் புகழ்ந்தார்.

துர்வாஸர் சொல்லுகிறார் :—ஆ! பகவானுடைய பக்தர்களின் மஹிமையை நான் இப்பொழுது கண்டேன். அம்பரீஷமன்னவனே! நான் அபராதம் செய்திருப்பினும் எனக்கு க்ஷேமங்கள் உண்டாகவேண்டுமென்று விரும்பு கின்றனை. பகவானுடைய பக்தர்களுக்கு எதுதான்செய்ய முடியாத கார்யம். நிக்ரஹம் அநுக்ரஹம்முதலிய அனைத் தும் அவர்களுக்கு அதீனமாகவே யிருக்கின்றது. அவர் களுக்கு எது தான் துறக்கமுடியாதது? நீ எனக்காகத் தானுதி தர்மங்களையெல்லாம் துறந்தாயல்லவா? தன்பக் தர்களுக்கு அன்பனும் அவர்களுடைய வருத்தங்களைப் போக்குந்தன்மையனுமாகிய பகவான்அவர்களுக்கு ஸ்வா தீனமாயிருக்கிறான். ஆகையால் அவர்களுக்கு எதுவும் அஸாத்யமன்று. எவனுடைய நாமத்தைக் கேட்ட மாத் ரத்தில் புருஷன் பாபங்களெல்லாம் தொலைந்து பரிசுத்த னுகிறானோ, எவனுடைய பாதாரவிந்தங்களினின்றும் கங் காதி புண்யதீர்த்தங்கள் உண்டாயினவோ, அப்படிப் பட்ட பகவானுடைய பக்தர்களுக்கு எது தான் கிடைக்க அரிதாயிருக்கும்? மன்னவனே! பெருங்கருணையமைந்த மனமுடைய உன்னால் நான் அநுக்ரஹம் செய்யப்பெற் றேன். நீ என் அபராதத்தையெல்லாம் பொருள் செய் யாமல் மறந்து என் ப்ராணனைப் பாதுகாத்துக்கொ டுத்தனையல்லவா?

ஸ்ரீசுகர் சொல்லுகிறார் :—அவர் திரும்பி வருவா ரென்று ஆஹாரம் செய்யாமலேயே எதிர் பார்த்துக் கொண்டிருந்த அம்மன்னவன் அந்தத் துர்வாஸருடைய

பாதங்களைப் பிடித்துக்கொண்டு அவரை அருள்புரிவித்துப் புசிப்பித்தான். துர்வாஸரும் விரும்பத்தகுந்த அறுசுவைகளும் அமைந்து பெரிய ஆதரவுடன் கொண்டுவந்து கொடுக்கப் பெற்றவைகளுமான அம்மன்னவனுடைய விருந்துணவைப் புசித்து மனக்களிப்புற்று மன்னவனை நோக்கிப் 'புசிப்பாய் புசிப்பாய்' என்று மொழிந்தார்.

துர்வாஸர் சொல்லுகிறார்:—பரமாத்மாவினிடத்தில் நிலைநின்ற மனமுடைய உன்னுடைய விருந்துணவால் நான் மிகவும் த்ருப்தி அடைந்தேன். பகவத் பக்தனுகிய நீ எனக்குத் தர்சனம் கொடுத்து என்னை உன் பவித்ரமான ஹஸ்தத்தினால் ஸ்பர்சித்து இனிய உரைகளைப் பேசி என்னை அநுக்ரஹித்தனை. பரிசுத்தமான உன்னுடைய இச்செயலை ஸ்வர்க்கலோகத்தில் தெய்வமடந்தையர்கள் அடிக்கடி பாடப்போகிறார்கள். மற்றும், மிகவும் பரிசுத்தமான உன் புகழை இப்பூலோகத்திலுள்ளவர்களும் பாடப்போகிறார்கள்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—துர்வாஸமுனிவர் இங்ஙனம் அம்பரீஷமன்னவனைப் புகழ்ந்து அவனால் பூஜிக்கப்பெற்று மிகுந்த ஸந்தோஷம் அடைந்து அம்மன்னவனிடம் விடைபெற்றுக் கொண்டு ஆகாசமார்க்கத்தினால் புறப்பட்டுச் சென்று நைமித்திகப்ரளயாதிகளால் அழியாததான ப்ரஹ்மதேவனுடைய லோகம் போய்ச் சேர்ந்தார். த்வாதசியினன்று வந்த துர்வாஸமுனிவர் எவ்வளவுகாலம் திசைகளில் ஓடித்திரிந்து திரும்பி வராதிருந்தாரோ, அவ்வளவில் ஒரு ஸம்வத்ஸரகாலம் கடந்தது. அம்மன்னவன் அந்த த்வாதசிமுதல் துர்வாஸமுனிவர் திரும்பிவரும் வரையில் அம்முனிவருடைய தர்சனத்தையே எதிர் பார்த்துக்கொண்டு ஜலத்தை ஆஹாரமாக உட்கொண்டிருந்தான். அந்தத் துர்வாஸமுனிவர் வந்து

திரும்பிப்போனபின்பு அவ்வம்பரீஷமன்னவன் ப்ராஹ்மணர் புசித்து மிகுந்தமையால் மிகவும் பரிசுத்தமான அந்த அன்னத்தைப் புசித்தான். அப்பால் துர்வாஸ முனிவர்க்குச் சக்ரத்தினால் நேர்ந்த வருத்தத்தையும், அதினின்று அவரை விடுவித்ததையும் தன்னுடைய தைர்யம் முதலிய வீர்யத்தையும் மனத்தில் ஆராய்ந்து எல்லாம் பரமபுருஷனுடைய ப்ரபாவமென்று நினைத்தான். இப்படிப்பட்ட பல குணங்களையுடைய அவ்வம்பரீஷ மன்னவன் பரப்ரஹ்மமென்று ஓதப்படும் பெருமையுடைய வாஸுதேவனிடத்தில் தன் வர்ணாஸ்ரமங்களுக்கு ஏற்பட்ட பற்பல கர்மங்களால் உதவி செய்யப்பெற்றதும் மற்ற ப்ரயோஜனங்களை எதிர் பாராததுமான பக்தியோகத்தை அனுஷ்டித்துக்கொண்டு வந்தான். அதனால் அவன் ப்ரஹ்மலோகம் வரையிலுமுள்ள போகங்களையெல்லாம் நரக ப்ராயமாக நினைத்தான். அப்பால் ஜிதேந்த்ரியனாகிய அவ்வம்பரீஷமன்னவன் தன்னையொத்த சீலமுடைய தன் பிள்ளைகளிடத்தில் ராஜ்யத்தை வைத்து வனத்திற்குச் சென்றான். அங்கும் அவன் அந்தராத்மாவான வாஸுதேவனிடத்தில் மனத்தை நிலைநிறுத்திக்கொண்டிருந்து ஸத்வாதிகுணங்களின் பரிணாமமான ஸம்ஸாரம் தொலையப்பெற்று மோக்ஷத்தை அடைந்தான். இங்ஙனம் அம்பரீஷமன்னவனுடைய சரித்ரமாகிற பரிசுத்தமான இந்த உபாக்யானத்தை மொழிந்தேன். இதைப்பக்தியுடன் வாயால் மொழிந்து நெஞ்சால் நினைக்கும் புருஷன் பகவானிடத்தில் பக்தியுடையவனாவான்.

ஐந்தாவது அத்யாயம் முற்றிற்று.

### அம்பரீஷனுடைய வம்சத்தைச் சொல்லி முடித்து இக்ஷ்வாகுவின் வம்சத்தைச் சொல்லுதல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அம்பரீஷனுக்கு விரூபன் கேதுமான் சம்பு என்று மூன்று பிள்ளைகள். அவர்களில் விரூபனுடையபிள்ளை ப்ருஷதஸ்வன். அவன்பிள்ளை ரதீதரன். அவன் பிள்ளையற்றிருக்கையில், ஸந்ததி அழியாதிருக்கும்பொருட்டு அங்கிரஸமஹர்ஷி அவனுடைய பார்யையிடத்தில் ப்ரஹ்மதேஜஸ்ஸுடன் கூடின ஒருபிள்ளையைப் பிறப்பித்தார். இவர்கள் ரதீதரன் க்ஷேத்ரத்தில் பிறந்தவர்களாயினும் அங்கிரஸ மஹர்ஷியின் பீஜத்திற்குப் பிறந்தவர்களாகையால் ஆங்கிரஸர்களுமானார்கள். ஆகையால், ரதீதரனுடையபிள்ளைகளும் அவர்களுடைய ஸந்ததியில் பிறந்தவர்களும் க்ஷத்ரியகோத்ரமும் ப்ராஹ்மண ப்ரவரமும் உடையவர்களானார்கள். வைவஸ்வதமனு தும்மும்பொழுது அவனுடைய மூக்கினின்றும் இக்ஷ்வாகுவென்று ப்ரஸித்திபெற்ற ஒரு புதல்வன் பிறந்தான். அவனுக்கு நூறு பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களில் முதல் மூவர் விகுக்ஷி நிமி தண்டனென்பவர்கள். அந்த நூறுபெயர்களில் இருபத்தைந்து பெயர்கள் கிழக்குத்திக்கில் ஹிமவத்பர்வதத்திற்கும் விந்த்யபர்வதத்திற்கும் நடுவிலுள்ள ஆர்யாவர்த்தமென்னும் தேசத்தை ஆண்டுவந்தார்கள். இருபத்தைந்து பெயர்கள் மேற்குத் திக்கில் உள்ள ஆர்யாவர்த்ததேசத்தை ஆண்டுவந்தார்கள். முதல் மூவரான விகுக்ஷி முதலியவர்கள் இடையிலுள்ள ஆர்யாவர்த்த தேசத்தை ஆண்டு வந்தார்கள். மற்றவர்கள் தெற்குவடக்குமுதலிய திசைகளைப் பாதுகாத்துக்கொண்டு வந்தார்கள். அந்த இக்ஷ்வாகு மன்னவன் ஒருகால் அஷ்டகஸ்ராத்தத்திற்காகத் தன் பிள்ளைகளில் விகுக்ஷியென்பவனைப் பார்த்து 'விகுக்ஷீ! பரிசுத்தமான மாம்ஸங்கொண்டு

வருவாயாக. சீக்ரம்போ. விளம்பிக்கவேண்டாம்' என்று கட்டளை யிட்டனுப்பினன். அந்த விகுக்ஷியும் அப்படியே கொண்டு வருகிறேனென்று சொல்லி வனத்திற்குச் சென்று ஸ்ராத்தத்திற்குரிய ம்ருகங்களைக் கொன்று இளைத்துப் பசித்து 'ஸ்ராத்தத்திற்காகக் கொன்ற ம்ருகங்களை நாம் பக்ஷிக்கலாகாது' என்னும் புத்தியை மறந்து வீரனாகிய அந்த விகுக்ஷி அவற்றில் ஒருமுயலைப் பக்ஷித்தான். அப்பால் அவன் தான் பக்ஷித்து மிகுந்த மாம்ஸத்தைத் தன் தந்தையிடம் கொண்டுபோய்ச்சேர்த்தான். இக்ஷ்வாகு அந்தமாம்ஸத்தை ப்ரோக்ஷித்துச் சுத்தி செய்யும்படி தன் குருவுக்குச் சொன்னன். குருவாகிய வஸிஷ்டமஹர்ஷி 'இந்த மாம்ஸம் சாப்பிட்டுமிகுந்ததாகையால் துஷ்டமாயிற்று. ஆகையால் இது ஸ்ராத்தத்திற்கு உபயோகப்படாது' என்றார். பிறகு இக்ஷ்வாகு மன்னவன் குருவின்வசனத்தைக் கேட்டுத் தன் பிள்ளையாகிய விகுக்ஷி செய்த கார்யத்தை அறிந்து நியமங்களைத் துறந்து கோபத்தினல் பிள்ளையைத் தேசத்தினின்றும் துரத்திவிட்டான். அனந்தரம் அவ்விக்ஷ்வாகுமன்னவன் தவத்தில் இறங்கி ப்ராஹ்மணருடன் பகவானுடைய குணங்களைப் பற்றி ஸம்வாதம் பண்ணிக்கொண்டிருந்தான். அவன் அதனல் ராஜ்யபோகத்தில் வைராக்யமுற்று ப்ராரப்தகர்மத்தின் முடிவில் தேஹத்தைத் துறந்து பரப்ரஹ்மத்தை அடைந்தான். இங்ஙனம் தந்தையாகிய இக்ஷ்வாகு மன்னவன் காலஞ்சென்றுபோகையில், விகுக்ஷி தன் தேசத்திற்கு வந்து இப்பூமண்டலத்தையெல்லாம்பாதுகாத்துக்கொண்டு யஜ்ஞங்களால் பகவானை ஆராதித்தான். அவன் ஸ்ராத்தத்திற்காகக் கொன்ற முயலைப் பக்ஷித்தானகையால் [1] சசா

1. சசமென்றால் முயல். 'அஶ ஜ்ஷணே' என்ற தாதுவின்மேல்

தனென்றும் ப்ரஸித்தி பெற்றான். அந்த விகுக்ஷியின் பிள்ளை புரஞ்சயன். அவனை இந்த்ரவாஹன னென்றும் ககுத்ஸ்தனென்றும் வழங்கி வந்தார்கள். அவனுக்கு அந்தப்பெயர் அவன் செயல்களால் ஏற்பட்டது. அது ஏற்பட்டவிதம் சொல்லுகிறேன், கேட்பாயாக. முன்பு தேவதைகளுக்குத் தானவர்களுடன் யுத்தம் நடந்தது. அப்பொழுது தைத்யர்களிடம் தோல்வியடைந்த தேவதைகள் ஜகதீஶ்வரனான ஸ்ரீமஹாவிஷ்ணுவின் வசனத்தினால் புரஞ்சயனைத் தங்களுக்கு ஸஹாயமாக வரும்படி வேண்டினார்கள். புரஞ்சயனும் இந்த்ரனைத் தனக்கு வாஹனமாயிருக்கும்படி வேண்ட, இந்த்ரன் பெரிய வ்ருஷபத்தின் உருவந்தரித்து அவனுக்கு வாஹனமாயிருந்தான். அப்பால் புரஞ்சயன் அந்தப் பெரிய வ்ருஷபத்தின்மேல் ஏறி அதன் முசுப்பில் உட்கார்ந்து தேவதைகளால் புகழப்பெற்று யுத்தஞ்செய்ய விரும்பிக் கவசம் அணிந்து திவ்யமான தனுஸ்ஸையும் கூரான பாணங்களையும் எடுத்துக்கொண்டு மஹானுபாவனான பரமபுருஷனுடைய தேஜஸ்ஸினால் பலம் வளரப்பெற்றுத் தேவதைகளுடன் மேற்குத் திக்குக்குச் சென்று தைத்யர்களின் பட்டணங்களைத் தகைந்தான். அப்பால் அந்தத் தைத்யர்களுக்கும் புரஞ்சயனுக்கும் அதிகமான யுத்தம் நடந்தது. அது பார்க்கின்றவர்களுக்கும் கேட்கின்றவர்களுக்கும் மயிர்க்கூச்சம் உண்டாகும்படி மிகவும் பயங்கரமாயிருந்தது. அந்த யுத்தத்தில் புரஞ்சயமன்னவன் எதிர்த்து வந்த அஸுரர்களையெல்லாம் பல்லபாணங்களால் அடித்து யமலோகத்திற்கு அனுப்பினான். அடிபட்டு மிகுந்தவர்கள். அந்தப்புரஞ்சயனுக்கெதிரே வந்து அவனுடைய

---

சசாதனென்று பதமாகிறது. முயலைப் பக்ஷித்தவனென்று பதத்தின் பொருள். ஆகையால் அவனுக்கு அது காரணப் பெயராயிற்று.

பாணங்களின் அடி ப்ரளயகாலாக்னிபோலப் பொறுக்க முடியாதிருப்பதைக் கண்டு அவனால் அடிக்கப்பட்டுத் தங்கள் வாஸஸ்தானமாகிய பாதாளலோகத்திற்கு ஓடிப் போனார்கள். அப்பால் அந்த ராஜர்ஷியாகிய புரஞ்சயன் தைத்யர்களை வென்று பட்டணம் பணம் எல்லாவற்றையும் ப்ரீதியுடன் இந்த்ரனுக்குக் கொடுத்தான். தைத்யர்களின் பட்டணத்தை ஜயித்தானாகையால் புரஞ்சயனென்றும், வ்ருஷபத்தின் முசுப்பில் உட்கார்ந்தானாகையால் ககுத்ஸ்தனென்றும் இந்த்ரனை வாஹனமாகப் பெற்றானாகையால் இந்த்ரவாஹனனென்றும் பெயர்களைப்பெற்றுத் தன்தேசத்திற்குத் திரும்பிச்சென்றான். புரஞ்சயனுடைய பிள்ளை அனேனஸ்ஸென்பவன். அவனுடைய பிள்ளை ப்ருது. அவனுடைய பிள்ளை விஸ்வகந்தன். அவனுடைய பிள்ளை சந்த்ரன். அவன் பிள்ளை யுவனாஸ்வன். அவன்பிள்ளை சாபஸ்தி. அவன் சாபஸ்தியென்னும் பட்டணத்தை நிர்மித்தான். அவன் பிள்ளை ப்ருஹதஸ்வன். அவன்பிள்ளை குவலயாஸ்வன். அவனுக்கு இருபத்தோராயிரம் பிள்ளைகள் பிறந்தார்கள். அந்தக் குவலயாஸ்வன் உதங்கமஹர்ஷிக்கு ப்ரியம் செய்யவிரும்பித் துந்துவென்னும் அஸுரனைத் தானும் தன் பிள்ளைகள் இருபத்தோராயிரம் பேர்களுமாகச் சேர்ந்து எதிர்த்து வதித்தான். அதனால் அவன் துந்துமாரனென்னும் பெயர் பெற்றான். அவனுடைய பிள்ளைகள் அனைவரும் துந்துவினுடைய முகாக்னியால் எரிக்கப்பட்டு மாண்டார்கள். பாதவம்சாலங்காரனே! அவர்களில் த்ருடாஸ்வன் கபிலாஸ்வன் பத்ராஸ்வனென்று மூன்றுபேர்கள் மாத்ரம் மிகுந்தார்கள். த்ருடாஸ்வனுடைய பிள்ளை ஹர்யஸ்வன். அவன் பிள்ளை நிகும்பன். அவன் பிள்ளை பர்ஹிணாஸ்வன். அவன் பிள்ளை க்ருதாஸ்வன். அவன்பிள்ளை ஸேனஜித்து

அவன் பிள்ளை யுவனாஸ்வன். அவன் ஸந்ததியில்லாமையால் மனவெறுப்புற்று நூறு பார்யைகளுடன் வனத்திற்குச் சென்றான். அங்குள்ள முனிவர்கள் அவன்மேல் மனஇரக்கமுற்று அவனுக்கு ஸந்ததி உண்டாகும்பொருட்டு மனவூக்கத்துடன் இந்த்ரனைத் தேவதையாகவுடைய புத்ரகாமேஷ்டியை நடத்தினார்கள். அப்பொழுது யுவனாஸ்வ மன்னவன் ராத்ரியில் தண்ணீர் தாஹம் உண்டாகப்பெற்று யாகசாலையிற் சென்று அங்கு ப்ராஹ்மணர்கள் படுத்துறங்குவதைக் கண்டு அவன் பத்னிக்குக் கொடுப்பதற்காக மந்த்ரித்து வைத்திருக்கும் ஜலத்தை யெடுத்துப் பருகினான். அப்பால் அந்த ப்ராஹ்மணர்கள் விழித்துக்கொண்டு கலசம் ஜலமின்றிச் சூன்யமாயிருப்பதைக் கண்டு 'மன்னவனே! இது யாருடைய கார்யம்! புத்ரோத்பத்திக்குக் காரணமான இந்த ஜலத்தை யார் பருகினது?' என்று வினவினார்கள். தெய்வத்தினால் தூண்டப்பட்ட அந்த மன்னவன்தான் அந்த ஜலத்தைப் பருகினானென்று தெரிந்துகொண்டு ரிஷிகள் 'ஆ! தெய்வபலமே முக்யமானபலம். புருஷபலம் ஒன்றுக்கும் உபயோகப்படாது' என்று சொல்லி ஈஸ்வரனுக்கு நமஸ்காரம் செய்தார்கள். அப்பால், பிள்ளை பிறக்கவேண்டியகாலம் ஸமீபத்திருக்கையில், யுவனாஸ்வனுடைய வலவயிற்றைப்பிளந்துகொண்டுசக்ரவர்த்தியாகக்கூடிய லக்ஷணங்கள் அமைந்த ஒரு புதல்வன் பிறந்தான். அப்பொழுது ப்ராஹ்மணர்கள் 'இந்தக் குழந்தை ஸ்தன்யத்திற்காக அழுகிறான். இவன் யாரைப் பானம் செய்வான்?' என்று வருந்திச் சொல்லிக்கொண்டிருக்கையில், அந்த யாகத்தில் ஆராதிக்கப்பட்ட தேவேந்த்ரன் தோன்றி 'இந்தக் குமாரன் என்னைப் பானம் செய்யப்போகிறான்' என்று சொல்லி, அந்தக் குழந்தையைப் பார்த்துக் 'குழந்

தாய்! அழாதே' என்று மொழிந்துகொண்டு அம்ருதப் பெருக்குடைய தன் [1]தர்ஜனிவிரலை அக்குழந்தையின் வாயில் வைத்தான். இந்த்ரன் அந்தக் குழந்தையை நோக்கி[2]'மாந்தாதா' என்று மொழிந்தானாகையால் அவன் மாந்தாதாவென்று பெயர் பெற்றான். அந்தக் குழந்தையின் தந்தையான யுவனாஸ்வன் ப்ராஹ்மணர்களின் அநுக்ரஹத்தினாலும் தெய்வத்தின்[3]ப்ரஸாதத்தினாலும் மரணம் அடையவில்லை. அப்பால் அவன் அவ்விடத்திலேயே இருந்து தவஞ்செய்து மோக்ஷஸித்தியைப் பெற்றான். மன்னவனே! தேவேந்த்ரன் அந்தக் குமாரனை நோக்கி 'ராவணன் முதலிய துஷ்டர்கள் இவனிடத்தில் பயப்படப்போகிறார்கள். ஆகையால் இவன் [4] த்ரஸதஸ்யுவென்று ப்ரஸித்தி பெறப்போகிறான்' என்று மொழிந்துகொண்டே அவனுக்கு த்ரஸதஸ்யுவென்று பெயர் இட்டான். யுவனாஸ்வனுடைய பிள்ளையாகிய அந்த மாந்தாதாவும் ஸமர்த்தனாகையால் சக்ரவர்த்தியாகி ஏழு த்வீபங்கள் அடங்கின பூமண்டலத்தையெல்லாம் தானொருவனே அழிவற்றதான பகவானுடைய தேஜஸ்ஸினால் பாதுகாத்துவந்தான். தேஹத்தைக் காட்டிலும் விலக்ஷணனான ஆத்மாவின் உண்மையை அறிந்த அம்மன்னவன் அளவற்ற தக்ஷிணைகளையுடைய பற்பல யாகங்களால் யஜ்ஞஸ்வரூபனும் ஸமஸ்ததேவஸ்வரூபனும் ஸர்வாந்தராத்மாவும் ப்ராக்ருதமான இந்த்ரியங்களுக்கு

1. ஆள்காட்டி விரலை.

2. 'மா யாதா' மாம் என்னை. யாதா பானஞ் செய்வான். என்று பொருள்.

3. ப்ரஸாதம் - அருள்.

4. த்ரஸந்தி தஸ்யவோ யஸ்மாத் ஸঃ த்ரஸதஸ்யுঃ. யஸ்மாத் எவனிடத்தினின்று, தஸ்யவঃ துஷ்டர்கள், த்ரஸந்தி பயப்படுகிறார்களோ, ஸঃ அவன் த்ரஸதஸ்யு.

விஷயமாகாதவனுமாகிய பகவானை ஆராதித்தான். மற்றும், சரு புரோடாசம் முதலிய த்ரவ்யம் மந்த்ரம் விதி யஜ்ஞும் யஜமானன் ருத்விக்குகள் தர்மம் தேசம் காலம் ஆகிய இவையெல்லாம் எவனுடைய உருவங்களோ, அத்தகைய பரமபுருஷனை அம்மன்னவன் யாகங்களால் ஆராதித்தான். ஸூர்யன் எங்கெங்கு உதித்து எங்கெங்கு அஸ்தமிக்கின்றானோ அது வரையிலுமுள்ள பூமண்டலம் முழுவதும் யுவனாச்வனுடைய பிள்ளையாகிய மாந்தாதாவின் க்ஷேத்ரமென்று சொல்லுகிறார்கள். அம்மன்னவன் சதபிந்துவின் புத்ரியாகிய பிந்துமதியென்கிற தன் பார்யையிடத்தில் புருகுத்ஸன் அம்பரீஷன் முசுகுந்தனென்று மூன்று பிள்ளைகளைப் பெற்றான். அவர்களில் முசுகுந்தன் யோகியாயிருந்தான். அவர்களுக்கு உடன் பிறந்த பெண்பிள்ளைகள் ஐம்பது பெயர்கள். அவ்வைம்பதின்மரும் ஸௌபரியை மணம்புரிந்தார்கள். பெருந்தவமுடைய அந்த ஸௌபரிமுனிவர் யமுனையின் ஜலத்திற்குள் முழுகித் தவம் செய்துக் கொண்டிருக்கையில், ஆணும் பெண்ணுமாய்க் கலந்து களிக்குந்தன்மையுடைய ஒரு மீனராஜத்தின் மைதுனஸுகத்தைக் கண்டு ப்ராஹ்மண ஸ்ரேஷ்டராகிய அந்த ஸௌபரி தானும் மைதுன ஸுகத்தில் விருப்பம் உண்டாகப்பெற்று மாந்தாதாமன்னவனிடம் வந்து தனக்கு ஒரு பெண் கொடுக்கும்படி வேண்டினார். அம்மன்னவனும அவருடைய குரூபத்தனத்தையும் கிழத்தனத்தையும் கண்டு 'ப்ராஹ்மணரே! ஸ்வயம்வரம் ஏற்படுத்துகிறேன். அதில் உம்மிஷ்டப்படி என் பெண்ணை மணம்புரியலாம்' என்றான். ப்ராஹ்மண ஸ்ரேஷ்டரான அந்த ஸௌபரியும் அதைக் கேட்டு "இம்மன்னவன்' இவன் கிழவன்! இவனுடம்பெல்லாம் சதைகள் மடிந்திருக்கின்றன. மூப்பினால் இவன் தலை நடுங்குகின்

றது. ஆகையால் பெண்கள் இவனை விரும்பமாட்டார்கள். ஸ்வயம்வரத்தில் இவனை வரிக்க ப்ரஸக்தியில்லை' என்று நினைத்து என்னை இங்ஙனம் ஸ்வயம்வரமென்னும் வ்யாஜத்தினால் நிராகரித்தான். நான் என்னைத் தெய்வமடந்தைகளும் விரும்பும்படியான அழகுடையவனாக என் யோக ப்ரபாவத்தினால் செய்துகொள்கிறேன். அப்பால் மானிடப்பெண்கள் என்னை மேல்விழுந்து விரும்புவார்களென்பதைப்பற்றிச் சொல்லவேண்டுமோ?'' என்று தனக்குள் நிச்சயித்துக்கொண்டு ஸமர்த்தராகிய அந்த ஸௌபரிமுனிவர் அப்படியே ஒப்புக்கொண்டு மன்னவனுடைய ஆஜ்ஞையால் ஸூதன் அழைத்துக் கொண்டுபோக ஸம்ருத்திகளெல்லாம் நிறைந்த அந்தப்புரத்திற்குள் சிறந்த ஸௌந்தர்யத்துடன் நுழைகையில் ஐம்பது ராஜகன்னிகளும் அவரொருவரையே தங்களுக்கு மணவாளனாகும்படி வரித்தார்கள். அப்பொழுது அந்த ராஜ கன்னிகைகள் மிகவும் அழகாயிருக்கின்ற அந்த ஸௌபரியிடத்தில் மனம் குடிகொள்ளப் பெற்று உடன் தோன்றினமையைப்பற்றி ஏற்பட்ட ஸ்நேஹத்தையும் மறந்து 'நானே இவரை வரிப்பேன். இவர் எனக்குத்தான் தகுந்த கணவர். உங்களுக்குத் தகுந்த வரன்று' என்று அந்த ஸௌபரிக்காகப் பெருங்கலஹம் செய்தார்கள். பஹ்வ்ருசஸாகாத்யயனம் செய்பவரும் பல மந்த்ரங்களை உணர்ந்தவருமாகிய அந்த ஸௌபரி எல்லையில்லாததான தன் தவப்பெருக்கின் மஹிமையால் ஏற்பட்ட விலையற்ற பல கருவிகள் நிறைந்து பலவகையான உத்யானங்களும் நிர்மலமான ஜலமுடைய தாமரைத்தடாகங்களும் செங்கழுநீர்க் காடுகளும் அமைந்து ரமணீயமாயிருக்கின்ற மாளிகைகளில் அப்பெண்மணிகளுடன் க்ரீடித்துக் கொண்டிருந்தார். அந்த மாளிகைகளில்

புருஷர்களும் ஸ்த்ரீகளும் நன்றாக அலங்கரித்து உலாவிக் கொண்டிருந்தார்கள். ப்ராஹ்மணர்களும் வண்டுகளும் ஸ்துதிபாடகர்களும் அங்குப் பாடிக்கொண்டிருந்தார்கள். மற்றும், அம்முனிவர் விலையுயர்ந்த படுக்கைகளும் ஆஸனங்களும் ஆடைகளும் ஆபரணங்களும் ஸ்னானத்திற்கு வேண்டிய கருவிகளும் சந்தனம் குங்குமம் கஸ்தூரி முதலிய அங்கராகங்களும் ஆஹாரங்களும் பூமாலைகளும் மற்றும் பல போகவஸ்துக்களும் உடையவராகி அப்பெண் மணிகளுடன் க்ரீடித்துக் கொண்டிருந்தார். ஏழு தீவுகளோடுகூடின பூமண்டலத்திற்கெல்லாம் ப்ரபுவும் ஸார்வபௌமச் செல்வக்கீர்த்தி யுடையவனுமாகிய மாந்தாதாமன்னவன் அந்த ஸௌபரிமுனிவரின் க்ருஹஸ்தாஶ்ரமநிலைமையைக் கண்டு வியப்புற்றுக் கர்வத்தையெல்லாம் துறந்தான். இங்ஙனம் க்ருஹஸ்தாஶ்ரம ஸுகங்களில் ஆழ்ந்திருக்கிற அந்த ஸௌபரிமுனிவர் பல சரீரங்களை ஏற்றுக்கொண்டு பல இந்த்ரியங்களால் சப்தாதிவிஷயங்களை அனுபவித்துக்கொண்டிருப்பினும் நெய்த்துளிகள் விடப்பெற்ற அக்னிபோலச் சிறிதும் த்ருப்தி அடையவில்லை. பஹ்வ்ருசர்களுக்கு ஆசார்யராகிய அந்த ஸௌபரி ஒருகால் உட்கார்ந்திருக்கும்பொழுது மீன்களோடு ஸஹவாஸத்தினால் தமக்கு நேரிட்டிருப்பதும் ஸ்வரூபானுஸந்தானத்தைத் தடுப்பதுமாகிய விஷயசாபலத்தைப் பற்றி மனத்தில் சிந்தித்தார். 'ஓ உலகத்தவர்களே! தவத்தில் நிலைநின்று நன்மனத்துடன் வ்ரதங்களைத் திடமாக அனுஷ்டித்துக்கொண்டிருந்த எனக்கு நேர்ந்த விநாசத்தைக் காண்பீர்களாக. நான் ஜலத்திற்குள் உலாவிக்கொண்டிருந்த மத்ஸ்யத்தினுடைய ஸஹவாஸத்தினால் நெடுநாள் த்யானித்துக் கொண்டு வந்த பரப்ராஹ்மத்தை மறந்தேன். மோக்ஷத்

தில் விருப்பமுடையவன் மூன்று கரணங்களாலும் தாம்பத்ய தர்மமுடையவர்களுடைய ஸஹவாஸத்தைத் துறக்கவேண்டும். இந்த்ரியங்களைச்சப்தாதிவிஷயங்களில் தொடரவிடலாகாது. தனியனாகவே ஸஞ்சரிக்கவேண்டும். ஏகாந்தத்தில் இருந்து அளவற்ற மஹிமைகளுடைய பகவானிடத்தில் மனத்தை நிலைநிறுத்தவேண்டும். எங்கும் மனப்பற்று செய்யலாகாது. எங்கேனும் மனப்பற்று நேருமாயின், அந்தப் பகவானிடத்தில் மனம் செல்லப்பெற்று அவன்மனத்திற்கினிய வ்ரதங்களை அனுஷ்டிக்குந்தன்மையரான ஸாதுக்களிடத்தில் மாத்ரமே செய்யலாமன்றி மற்ற எதிலும் மனப்பற்று செய்யலாகாது. முதலில் நான் ஸஹாயமின்றித் தனியனாகவே தவஞ்செலுத்திக்கொண்டிருந்தேன். அப்பால் நான் ஜலத்தில் விளையாடிக்கொண்டிருந்த மத்ஸ்யத்தினிடத்தில் மனப்பற்று செய்தமையால் ஐம்பது பார்யைகளையும் ஒரே ஸமயத்தில் அனுபவிப்பதற்காக ஐம்பது சரீரங்களை ஏற்றுக்கொண்டேன். அப்பால் பிள்ளைகளின் உருவங்களால் ஐயாயிரம் பேர்களானேன். ஆயினும் நான் ஆணும் பெண்ணுமாய்க் கலந்தனுபவிக்கும் ஸுகங்களில் த்ருப்தி அடையவில்லை. அந்த ஸுகங்களையே மேன்மேலும் பற்பலவாறு அனுபவிக்கவேண்டுமென்று ஆசைப்பட்டுக்கொண்டிருக்கிறேன். மற்றும் ப்ரக்ருதியின் குணங்களான மோஹாதிகளால் மதி கலங்கப் பெற்றுச் சப்தாதிவிஷயங்களையே பரமபுருஷார்த்தமாக நினைத்திருக்கின்றேன்' என்று ஸௌபரி முனிவர் தன் மனத்திற்குள் சிந்தித்து வெறுத்தார். அம்முனிவர் இங்ஙனம் இல்லறவாழ்க்கையில் நெடுங்காலம் வஸித்துக் கொண்டிருந்து அப்பால் அதில் விரக்தி உண்டாகப்பெற்றுக் காம்யகர்மங்களை அனுஷ்டிக்குந் தன்மையைத் துறந்து தவம் செலுத்தும்பொருட்டு வனத்திற்குச்

சென்றார். கணவனையே தெய்வமாக நினைத்துக்கொண்டிருக்கிற அந்த ஸௌபரியின் பத்னிகளும் வனத்திற்குச் செல்கின்ற அம்முனிவரைத் தொடர்ந்து சென்றார்கள். அவ்வனத்தில் ஆத்ம ஸ்வரூபத்தின் உண்மையை ஆராய்வதில் மனவூக்கமுற்றிருக்கிற அம்முனிவர் சரீரத்தை இளைக்கச் செய்வதான கொடுந்தவம் செலுத்தி ஆஹவனீயாதி அக்னிகளுடன் தன்னைப் பரமாத்மாவினிடத்தில் மறைந்ததாக அநுஸந்தித்து மோக்ஷத்தை அடைந்தார். அவருடைய பத்னிகளான அப்பெண்மணிகளும் தங்கணவரான அம்முனிவர் பரமாத்மஸாரூப்யமாகிற மோக்ஷஸித்தி பெற்றமையை அறிந்து அக்னி அணையும் பொழுது அதன் ஜ்வாலைகளும் அத்துடன் மறைவது போலத் தாங்களும் அவர் செய்த பரமாத்மோபாஸனத்தின் ப்ரபாவத்தினால் அவரையே பின்றொடர்ந்து மோக்ஷஸித்தியைப் பெற்றார்கள். ஆறுவது அத்யாயம் முற்றிற்று.

—••◆{ மாந்தாதாவின் வம்சமும், அவ்வம்சத்தில் பிறந்த புருகுத்ஸ ஹரிச் சந்த்ரர்களின் உபாக்யானமும். }◆••—

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மாந்தாதாவின் பிள்ளைகளில் அம்பரீஷனென்பவன் ஒருவனென்று முன்னமே மொழிந்தேன். அவன் சிறப்புடைய வனாயிருந்தான். அவனை அவன் பாட்டனாகிய யுவனாஶ்வன் தனக்குப் பிள்ளையாக ஸ்வீகரித்தான். ஆதலால்தான் அவ்வம்பரீஷனுடைய பிள்ளை யுவனாஶ்வனென்னும்பெயர் பெற்றான். யுவனாஶ்வனுடைய பிள்ளை ஹரிதன். இந்த அம்பரீஷயுவனாஶ்வ ஹரிதர்கள் மாந்தாதாவின் ஸந்ததியைச் சேர்ந்தவர்கள். நாகர்களின் உடன் பிறந்தவளான நர்மதையென்பவள் தன் ப்ராதாக்களால் புருகுத்ஸனுக்குக் கொடுத்து

மணம் செய்விக்கப்பட்டாள். அவள் தன் ப்ராதாக்களால் ஆண்டப்பட்டுப் புருகுத்ஸனைப் பாதாளத்திற்கு அழைத்துக்கொண்டு போனாள். அவன் பகவானால் பலங்கொடுக்கப்பெற்று ஒருவர்க்கும் வதிக்கமுடியாத கந்தர்வர்களை வதித்தான். நாகேந்த்ரன் அதற்கு ஸந்தோஷம் அடைந்து 'இந்த உன்வ்ருத்தாந்தத்தை நினைப்பவர்களுக்கு ஸர்ப்பத்தினின்று பயம் உண்டாகாது' என்று புருகுத்ஸனுக்கு வரங் கொடுத்தான். புருகுத்ஸனுடைய பிள்ளை த்ரஸதஸ்யு. அவன்பிள்ளை அநரண்யன். அவன்பிள்ளை ஹர்யச்வன். அவன் பிள்ளை அருணன். அவன் பிள்ளை த்ரிபந்துரன். அவன்பிள்ளை ஸத்யவ்ரதன். அவனே த்ரிசங்குவென்று ப்ரஸித்திபெற்றவன். அவன் தன்குருவான வஸிஷ்டமஹர்ஷியின் சாபத்தினால் சண்டாளத் தன்மையை அடைந்தான். பின்பு விஸ்வாமித்ரருடைய தவமஹிமையால் சரீரத்துடன் ஸ்வர்க்கஞ்சென்று இப்பொழுதும் ஆகாயத்தில் நக்ஷத்ரரூபியாய்ப் புலப்படுகின்றான். வஸிஷ்ட சாபத்தினால் சண்டாளத்தனம் அடைந்த அந்த த்ரிசங்குவை விஸ்வாமித்ரர் தன் தவமஹிமையால் ஸ்வர்க்கத்திற்கு ஏற்றும்பொழுது அவன் அங்குள்ள தேவதைகளால் தலைகீழாகத் தள்ளுண்டு விழ, மீளவும் விஸ்வாமித்ரர் தன் தவமஹிமையினால் தானே பலாத்காரமாக அவனை ஆகாயத்திலேயே நிலைநிற்கும்படி செய்தார். த்ரிசங்குவின் பிள்ளை ஹரிச்சந்த்ரன். அவன்நிமித்தமாக விஸ்வாமித்ரரும் வஸிஷ்டரும் ஒருவர்க்கொருவர் சாபமிட்டுக்கொண்டு பக்ஷிகளாகிப் பலவாண்டுகள்வரையில் சண்டைசெய்து கொண்டிருந்தார்கள். அந்த ஹரிச்சந்த்ரன் பிள்ளையில்லாமையால் வருந்தி நாரதருடைய உபதேசத்தினால் வருணனைச் சரணம் அடைந்தான். 'ப்ரபூ! எனக்குப் பிள்ளை பிறக்கவேண்டும். அங்ஙனம் அனுக்ர

றம் செய்வாயாக. மஹாராஜனே! எனக்கு வீரனாகிய புதல்வன் பிறப்பானாயின், அவனையே நரபசுவாகக் கொண்டு உன்னை ஆராதிக்கிறேன்' என்று அம்மன்னவன் வருணனை வேண்டிக்கொண்டான். அவ்வருணனும் அப்படியே ஒப்புக்கொண்டு அவனுக்குப் பிள்ளை பிறக்கும்படி அனுக்ரஹம் செய்தான். அதனால் அந்த ஹரிச்சந்த்ரனுக்கு ஒரு பிள்ளை பிறந்தான். அவன் ரோஹிதனென்று ப்ரஸித்தனாயிருந்தான். அப்பால் வருணன் அம்மன்னவனை நோக்கி 'உனக்குப் பிள்ளை பிறந்தான். அவனை நரபசுவாகக் கொண்டு என்னை ஆராதிப்பாயாக' என்றான். அதைக் கேட்ட ஹரிச்சந்த்ரனும் 'பசு பிறக்குமாமாயின், பத்து நாள்கள் கழிந்தபின்புதான் அது பரிசுத்தமாகும். அப்பால்தான் அதைக்கொண்டு யாகம்செய்யலாம்' என்றான். வருணனும் அதற்கு ஒப்புக்கொண்டு பத்து நாட்கள் கழிந்த பின்பு மீளவும் வந்து மன்னவனைப் பார்த்து 'யாகம் செய்வாய்' என்றான். ஹரிச்சந்த்ரன் 'இந்த நரபசுவுக்குப் பற்கள் முளைக்குமாயின் அப்பொழுது தான் பரிசுத்தமாம்' என்றான். அப்பால் வருணன் அப்படியே ஆகட்டுமென்று பற்கள் முளைத்த பின்பு மீளவும் வந்து 'இவனுக்குப் பற்கள் முளைத்தன. யாகஞ்செய்யலாம்' என்றான். அதற்கு ஹரிச்சந்த்ரன் 'இந்த நரபசுவுக்குப் பற்கள் எப்பொழுது விழுகின்றனவோ, அப்பொழுது தான் இது பரிசுத்தமாம்' என்றான். வருணன் அப்படியே ஆகட்டுமென்று மொழிந்துபோய் அப்புதல்வனுக்குப் பற்கள் விழக்கண்டு மீளவும் வந்து 'இவனுக்குப் பற்கள் விழுந்து மீளவும் முளைத்தன. எனக்கு யாகம் செய்வாயாக' என்றான். அப்பால் ஹரிச்சந்த்ரன் வருணனைப் பார்த்து 'ஓ வருணராஜனே! இவன் க்ஷத்ரியவம்சத்தில் பிறந்தவன். இவன் ஆயுதமெடுத்துச் சண்டைசெய்

வதற்குரியவனுவானுயின், அப்பொழுது தான் யாகபசு வாயிருப்பதற்குரிய சுத்தி யுடையவனுவான்' என்றான் இங்ஙனம் பிள்ளையினிடத்தில் மிகுந்த ப்ரீதியுடையவனுகி அந்த ப்ரீதியினுல் மனம் இழுக்கப்பெற்று அவ்வப்பொழுது சொன்ன காலங்களையெல்லாம் ஏமாற்றிக்கொண்டு வருகிற ஹரிச்சந்த்ரமன்னவன் மொழிந்ததைக் கேட்டு வருணதேவன் அப்படியே அவன் பிள்ளைக்கு ஆயுதமெடுக்குந்தசைநேரிடுங்காலத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். இப்படியிருக்கையில் அப்பொழுது ரோஹிதன் தன் தந்தை தன்னைப் பசுவாகக்கொண்டு வருணனுக்கு யாகம் செய்யப்போகிறுனென்பதை அறிந்து ப்ராணன்களோடு தப்பித்துக்கொள்ள விரும்பிக் கையில் தனுஸ்ஸை ஏந்திக்கொண்டு வனத்திற்குச் சென்றான். அப்பால் வருணன் கோபித்து ஹரிச்சந்த்ரமன்னவனுக்கு மஹோதர வ்யாதியை உண்டாக்கினுன். தந்தை வருணனிடம் அகப்பட்டு வ்யாதியினுல் வருந்துவதைக் கேட்டு ரோஹிதன் ஊருக்குப் போகமுயன்றான். இந்த்ரன் அவனைப் போக வேண்டாமென்று தடுத்துப் புண்யதீர்த்தங்களையும் புண்யக்ஷேத்ரங்களையும் ஸேவித்துக் கொண்டு பூமியெல்லாம் சுற்றிப் பொய்பேசின தோஷத்தினுல் தந்தைக்கு நேர்ந்திருக்கிற மஹோதரவ்யாதியைப் போக்கும்படி சொன்னுன். ரோஹிதனும் இந்த்ரன் சொன்னபடி புண்ய தீர்த்தங்களையும் புண்யக்ஷேத்ரங்களையும் ஸேவித்துக்கொண்டு சில வர்ஷங்கள் அரண்யத்தில் ஸஞ்சரித்துக்கொண்டிருந்தான். இந்த்ரன் இரண்டாம் வர்ஷம் மூன்றும் வர்ஷம் நான்காம் வர்ஷம் ஐந்தாம்வர்ஷம் ஆகிய வர்ஷங்கள் தோறும் ஒரு கிழ ப்ராஹ்மணனுய் வந்து 'ஊருக்குப் போகவேண்டாம். பூமண்டலத்தில் ஸஞ்சரித்துக்கொண்டிருப்பாயாக' என்று தடுத்தான்.

அப்பால் ரோஹிதன் ஆறும் வர்ஷம் திரிந்து திரும்பிப் பட்டணம் போகும்பொழுது பார்க்கவவம்சத்தில் பிறந்த அஜீகர்த்தரிடத்தினின்று அவர் பிள்ளைகளில் நடுப்பிள்ளையாகிய சுனச்சேபனை விலைக்கு வாங்கிக்கொண்டு வந்து அவனைத் தனக்குப் பதில் பசுவாகத் தன் தந்தையாகிய ஹரிச்சந்த்ரனுக்குக் கொடுத்துத் தான் ஸுகமாயிருந்தான். அப்பால் பெரும்புகழனும் மஹாராஜனுமாகிய ஹரிச்சந்த்ரன் புருஷமேதயாகத்தினால் வருணன் முதலிய தேவதைகளை ஆராதித்து மஹோதரவ்யாதியினின்று விடுபட்டான். அந்தப் புருஷமேதயாகத்தில் விஸ்வாமித்ரர் ஹோதாவாயிருந்தார். ப்ருகுவம்சத்தில் பிறந்தவரும் ஜிதேந்த்ரியருமாகிய ஜமதக்னிமுனிவர் அத்வர்யுவாகவும், வஸிஷ்டர் ப்ரஹ்மாவாகவும், அயாஸ்ய முனிவர் உத்காதாவாகவும் இருந்தார்கள். இங்ஙனம் மஹர்ஷிகள் சேர்ந்து செய்வித்த புருஷமேதயாகத்தினால் ஆராதிக்கப்பட்ட தேவேந்த்ரன் ஸந்தோஷம் அடைந்து ஹரிச்சந்த்ரனுக்கு ஸ்வர்ணமயமான ரதத்தைக் கொடுத்தான். சுனஸ்ஸேபனுடைய மஹிமையை மேல் சொல்லப்போகிறேன். பார்யையோடுகூடிய அந்த ஹரிச்சந்த்ரமன்னவன் ஸத்யத்தில் நிலைநின்று மனவுறுதி மாறாதிருப்பதைக்கண்டு விஸ்வாமித்ரர் மிகவும் ஸந்தோஷம் அடைந்து அவனுக்கு மனவூக்கத்துடன் ஆராய்ந்தனுஷ்டிக்கவேண்டிய ஜ்ஞானயோகத்தை உபதேசித்தார். ஹரிச்சந்த்ரனும் விஸ்வாமித்ரர் உபதேசித்த ஜ்ஞானயோகநிஷ்டையின் மஹிமையினால் மனம் பூமியிலும், பூமி ஜலத்திலும், அந்த ஜலம் தேஜஸ்ஸிலும், தேஜஸ்ஸு வாயுவிலும், வாயு ஆகாசத்திலும், ஆகாசம் தாமஸாஹங்காரத்திலும், அது மஹத்தத்வத்திலும், அது ப்ரதானத்திலும் சேர்ந்தனவாகப் பா

வித்துப் பகவதுபாஸனரூபமான வித்யையில் ஊன்றி யிருக்கிற ஜ்ஞான ஸ்வரூபனான ஆத்மாவை அந்த ப்ரதானத்தில் அநுஸந்தித்து, அந்த வித்யையினால் தேஹாத்மாபிமானம் முதலிய அஜ்ஞானத்தைப் போக்கி உபாஸனத்தை நிறுத்திப் புண்ய பாபங்களாகிற பந்தங் களெல்லாம் தீரப்பெற்றுக் கேவல ஜ்ஞாநாநந்த ஸ்வரூப மாயிருப்பதும் இத்தகையதென்று நிரூபிக்க முடியாத தும் தேவன் மனுஷ்யன் முதலிய விகல்பங்களுக்கிடமல் லாததும் அபஹதபாப்மத்வம் முதலிய குணங்கள் அமை ந்ததுமாகிய தன் ஸ்வரூபம் தோன்றப்பெறுகையாகிற மோக்ஷத்தைப் பெற்றான். ஏழாவது அத்யாயம் முற் றிற்று

(ரோஹிதனுடைய வம்சமும், ஸகரபுத்ரர்கள் யாகக்குதிரையைத்தேடிச் சென்று கபிலரால் பஸ்மமாவதும், அம்சுமான் குதிரையைத் திருப்பிக்கொண்டு வருதலும்.)

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ரோஹிதனுடைய பிள்ளை ஹரிதன். அவன் பிள்ளை சம்பன். அவன் சம்பையென்னும் பட்டணத்தை நிர்மித்தான். அவன் பிள்ளை ஸுதேவன். அவன்பிள்ளை விஜயன். அவன்பிள்ளை பேருகன். அவன் பிள்ளை வ்ருகன். அவன் பிள்ளை பாஹுகன். அவன் சத் ருக்களால் பூமியும் ராஜ்யமும் பறியுண்டு பார்யையுடன் வனத்திற்குச் சென்றான். கிழவனாகிய பாஹுகன் அங் கேயே மரணம்அடைகையில், அவன்பத்னிஅநுமரணஞ் செய்ய முயன்றிருக்கையில் அவள் கர்ப்பிணியாயிருப் பதை அறிந்த ஔர்வமஹர்ஷி வேண்டாமென்று தடுத் தார். அவளுடைய சக்களத்திகள் அவள் கர்ப்பிணி யென்பதை அறிந்து அவளுக்கு அன்னத்தில் விஷத்

தைக் கலந்து கொடுத்தார்கள். அப்பால் அவளுக்கு அந்த விஷத்தோடுகூடவே பிள்ளை பிறந்தான். அதனால் அவன் ஸகரனென்று பெயர் பெற்றான். அவன் ஏழு தீவுகளுக்கும் ப்ரபுவாகிப் பெரும்புகழுடையிருந்தான். அவனுடைய பிள்ளைகள்தான் ஸமுத்ரத்தைத் தோண்டினார்கள். ஸகரர்கள் தோண்டினதால் ஸமுத்ரம் ஸாகரமென்று பெயர்பெற்றது. அந்த ஸகரன் தாலஜங்கசர் சகர் ஹைஹயர் பர்ப்பர் என்னும் பேருடைய ம்லேச்சர்களை ஆசார்யரான ஔர்வருடைய வசனத்தினால் வதிக்காமல் விரூபர்களாக்கிவிட்டான். சிலரை மொட்டைகளாகவும், சிலரைத் தாடி மீசைகள் மாத்ரம் தரிப்பவர்களாகவும் சிலரை விரிதலையர்களாகவும் சிலரைப் பாதித்தலைமொட்டைகளாகவும், சிலரை அரைத்துணியில்லாதவர்களாகவும், சிலரை மேல் துணியில்லாதவர்களாகவும் செய்தான். மற்றும் அந்த ஸகரன் ஆசார்யராகிய ஔர்வரால் உபாயம் உபதேசிக்கப் பெற்று ஸமஸ்த வேதஸ்வரூபனும் ஸமஸ்த தேவதாஸ்வரூபனும் ஸர்வாந்தராத்மாவும் ஸர்வநியாமகனுமாகிய பகவானை அச்வமேதயாகங்களால் ஆராதித்தான். அவன் நூறாவது யாகம் செய்யும்பொழுது பூர்வதக்ஷிணத்திற்கு விட்டிருந்த மேலான அச்வத்தை இந்த்ரன் பறித்துக்கொண்டு போனான். ஸகரனுக்கு ஸுமதியென்றும் கேசினியென்றும் இரண்டு பார்யைகள். அவர்களில் ஸுமதிக்கு அறுபதினாயிரம் பிள்ளைகள். அவர்கள் பலத்தினால் கொழுத்தவர்கள். அவர்கள் தந்தையினால் கட்டளையிடப்பெற்று அதை நிறைவேற்றும்பொருட்டு யாகக் குதிரையைத் தேடிக்கொண்டு சென்று எங்கும் காணாமல் நாற்புறத்திலும் பூமியைத் தோண்டினார்கள். கிழக்குத் திக்கு முதலாக நாற்றிசைகளிலும் பூமியைத்

தோண்டிக்கொண்டு போகிற அந்த ஸகரபுத்ரர்கள் வடகிழக்கு மூலையில் பாதாளத்தில் இருக்கிற கபிலருடைய அருகாமையில் இந்த்ரனால் கொண்டு விடப்பெற்று மேய்ந்து கொண்டிருக்கின்ற குதிரையைக் கண்டார்கள். அப்பால் அவர்கள் 'நங் குதிரையைப் பறித்துக்கொண்டு போன திருடன் இவனே. ஆயினும் இவன் ஒன்றுமறியாதவன்போலக் கண்களை மூடிக்கொண்டிருக்கிறான். ஆகையால் பாப புத்தியுடைய இவனைக் கொல்லுங்கள் கொல்லுங்கள்' என்று சொல்லிக்கொண்டு அந்த ஸகர புத்ரர்கள் அறுபதினாயிரம் பேர்களும் ஆயுதங்களை ஏந்திக்கொண்டு அம்முனிவரை எதிர்த்தார்கள். அப்பொழுது அந்தக் கபிலமுனிவர் கண்களைத் திறந்தார். அந்த ஸகரபுத்ரர்கள் மஹேந்த்ரனால் மனம் பறியுண்டு மஹானுபாவரான கபிலரிடத்தில் அபராதப்பட்டமையால் அழிய முயன்று தங்கள் சரீரத்திலேயே உண்டான அக்னியினால் க்ஷணத்திற்குள் பஸ்மமானார்கள். சிலர் கபிலருடைய கோபாக்னியால் கொளுத்தப்பட்டார்களென்று சொல்லுகிறார்கள். அவர்கள் உண்மையை அறிந்தவர்களல்லர். அவர்கள் சொல்லுவது நற்பேச்சன்று அவர்கள் தம்முடைய அபராதத்தினால் எரிந்து போனார்களென்பதே உண்மை. ஏனென்னில் கேவலசுத்த ஸத்வகுணத்திற்கிடமாயிருப்பவரும் ஜகத்தையெல்லாம் புனிதம் செய்யவல்ல தேஹமுடையவருமாகிய அந்தக் கபிலமுனிவரிடத்தில் கோபமாகிற தமோகுணம் உண்டாவதற்கு என்ன ப்ரஸக்தி உண்டு? பூமியின் துகள் ஆகாயத்தில் படியுமோ? பூமியினின்று கிளம்பின துகள் ஆகாயத்திற் படிந்தாற்போலத் தோன்றுமேயன்றி உண்மையில் படியாது. மீளவும் அது பூமியிலேயே வந்து சேர்ந்து விடும். அங்ஙனமே ஸகரர்க

ளின் அபராதம் கபிலரிடத்தில் உள்ளதுபோலத் தெரியாதவர்களுக்குத் தோன்றுமேயன்றி உண்மையில் அவரிடத்தில் தோஷத்திற்கு ப்ரஸக்தியே கிடையாது. மற்றும் இந்தக் கபிலமுனிவர் இவ்வுலகத்தில் ஸாங்க்ய சாஸ்த்ரமாகிற திடமான ஓடத்தை உண்டாக்கினார். ஸம்ஸாரபந்தத்தினின்று விடுபடவேண்டுமென்று விரும்புகிறவர்கள் தாண்டமுடியாததும் ம்ருத்யுபயத்தை விளைப்பதுமாகிய ஸம்ஹாரமாகிற ஸமுத்ரத்தை இந்த ஓடத்தினால் தாண்டுகிறார்கள். இத்தகைய மஹானுபாவரும் ஸர்வஜ்ஞரும் பிறரை அநுக்ரஹிப்பதிலேயே நிலைநின்ற மனமுடையவருமாகிய அம்முனிவர்க்குச் சத்ருவென்றும் மித்ரனென்றும் பேதபுத்தி எங்ஙனம் உண்டாகும்? ஸகரனுக்குக் கேசினியிடத்தில் பிறந்தவன் ஒரு புதல்வன் இருந்தான். அவனை அஸமஞ்ஜஸனென்று வழங்குவார்கள். அவனுடைய பிள்ளை அம்சுமானென்று ப்ரஸித்திபெற்றிருந்தான். அவன் தன் பாட்டனுடைய நன்மையில் ஊக்கமுற்றிருந்தான். அஸமஞ்சஸன் பூர்வஜன்மத்தில் யோகியாயிருந்து ஸங்கத்தினால் யோகத்தினின்று நழுவினான். அந்த யோகமஹிமையினால் இந்த ஜன்மத்தில் பூர்வஜன்மத்தைப் பற்றின நினைவு நேரப்பெற்று மீளவும் ஸங்கத்தினால் நாம் கெட்டுப்போகலாகாதென்று நினைத்து ஸங்கத்தைப் பரிஹரிக்கும்பொருட்டுத் தான் நற்புத்தியனாயினும் தன்னைத் துர்ப்புத்தியுடையவனாக அனைவரும் நினைக்கும்படி நடக்கமுயன்று உலகத்தவர்களால் நிந்திக்கத் தக்கதும் பந்துக்களுக்கு அனிஷ்டமுமான கார்யங்களைச் செய்வதும் ஜனங்களைப் பயப்படுத்துவதுமாயிருந்து விளையாடுகின்ற இளம் பிள்ளைகளைப் பிடித்து ஸரயூநதியில் போட்டுக்கொண்டிருந்தான். அவன் அவ்வாறு நடத்திக்கொண்டிருப்பதைக்

கண்டு தந்தையாகிய ஸகரன் அவனிடத்தில் ஸ்நேஹத்தைத் துறந்து அவனை ஊரை விட்டுப்போகும்படி துரத்தி விட்டான். அவன் தான் ஆற்றில் போட்ட பிள்ளைகளையெல்லாம் தன் யோக ப்ரபாவத்தினால் காண்பித்து மன்னவனுடைய கட்டளைப்படியே ஊரை விட்டுப் போனான். அப்பொழுது அயோத்யையிலுள்ளவர் அனைவரும் தங்கள் பிள்ளைகள் எல்லாரும் மீண்டுவரக் கண்டு வியப்புற்றார்கள். மன்னவனே! ஸகரமஹாராஜனும் 'ஆ! நான் இவன் ப்ரபாவத்தை அறியாமல் துரத்தி விட்டேனே' என்று பரிதபித்தான். பிறகு அம்சுமான் ஸகரமன்னவனால் குதிரையைத் தேடிக்கொண்டு வரும்படி அனுப்பப்பட்டுத் தன் சிற்றப்பன்மார்கள் தோண்டின வழியைத் தொடர்ந்து சென்று கடைசியில் அவர்கள் பஸ்மமாயிருப்பதையும் அருகாமையில் குதிரையையும் கண்டான். அங்குப் பகவானுடைய அவதாரமாகிய கபிலமுனிவர் உட்கார்ந்திருப்பதைக் கண்டு அம்சுமான் மிகுந்த மதியுடையவனாகையால் அவருக்கு நமஸ்காரம் செய்து கைகுவித்து மனவூக்கத்துடன் ஸ்தோத்ரம் செய்தான்.

அம்சுமான் சொல்லுகிறான்:—ஜனங்கள் அந்தராத்மாவான உன்னுடைய உண்மையை ஸமாதிமுதலிய உபாயங்களால் நன்றாக அறியமாட்டார்கள். அங்ஙனம் யோகிகளாலும் அறியமுடியாத உன்னை மற்ற நாங்கள் எப்படி அறிவோம்? நாங்கள் உன் மனம் சரீரம்புத்தி இவைகளால் ஸ்ருஷ்டிக்கப்பட்டப்ராஹ்மதேவன் முதலியவர்களால் ஸ்ருஷ்டிக்கப்பட்டவர்கள். தேஹாத்ம விவேகமற்றவர்கள்; தேஹமுடையவர்கள் அனைவரும் ஸத்வரஜஸ்தமஸ்ஸுக்களென்கிற மூன்று குணங்களுக்கு உட்பட்டுச் சப்தாதி

விஷயங்களையும் ப்ரக்ருதியின் பரிணாமமான சரீரத்தையும் நினைத்துக் கொண்டிருப்பார்களன்றித் தமக்கு அந்தராத்மாவாயிருக்கின்ற உன்னை அறியமாட்டார்கள். அவர்கள் உன் மாயையால் மதிமயங்கி மற்ற விஷயங்களையே அறிவார்கள். நீ கேவல ஜ்ஞாநாநந்த ஸ்வரூபன். பிறந்தநாள் முதற்கொண்டே தேஹாத்மப்ரமம் முதலிய அஜ்ஞானம் தீண்டப்பெறாத ஸனந்தநாதி முனிவர்களும் உன்னை வெறுமனே த்யானித்துக்கொண்டிருக்கவேண்டுமென்றி ஸாக்ஷாத்கரிக்கமாட்டார்கள். அப்படிப்பட்ட உன்னை மஹாமூடனாகிய நான் எங்ஙனம் மனத்தினால் ஆராய்ந்தறிய வல்லனாவேன்? ஆகையால் நான் உன்னை வெறுமனே நமஸ்கரிக்கிறேன். நீ ப்ரக்ருதியின் குணங்களான ஸத்வரஜஸ்தமஸ்ஸுக்களும் கர்மத்தினால் விளையும் சரீரமுமற்றவன். உனக்கு ஜாதி முதலிய தர்மங்களும் அவற்றைப் பற்றி வருகிற நாமங்களும் கிடையாது. நீ சுபாசுப பலன்களற்றவன்; சேதநாசேதனங்களுக்கு அந்தராத்மாவாயிருப்பினும் அவற்றின் தோஷங்கள் தீண்டப்பெறாதவன். நீ ஜ்ஞானோபதேசத்திற்காக இத்திருவுருவத்தை உன் ஸங்கல்பத்தினால் ஏற்றுக்கொண்டிருக்கின்றனையன்றி ஸுகதுக்கங்களை அனுபவிப்பதற்காக வன்று. நீ புராணபுருஷன். உனக்கு நமஸ்காரம். இவ்வுலகத்திலுள்ளவர் காமம் லோபம் அஸூயை மோஹம் இவைகளால் மதிமயங்கி உன்மாயையால் நிர்மிக்கப்பட்ட வீடுமுதலியவற்றைத் தங்கள் போகத்திற்குரிய கருவிகளென்று ப்ரமிக்கிறார்கள். ஸமஸ்த பூதங்களுக்கும் அந்தராத்மாவாயிருப்பவனே! ஷாட்குண்ய பூர்ணனே! இப்பொழுது உன்னுடைய காட்சியால் எனக்குச் சப்தாதிவிஷயங்கள் அவ்விஷயங்களில் விருப்பம் புண்யபாபகர்மங்கள் இந்திரியங்கள் ஆகிய இவற்றிற்கு

மூலகாரணமான தேஹாத்ம ப்ரமம் முதலிய அஜ்ஞான மாகிற திடமான பாசம் அறுந்துபோயிற்று.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் துதிக்கப்பட்ட ப்ரபாவமுடையவரும் மஹானுபாவருமான அந்தக் கபில முனிவர் அவ்வம்சுமானை மனத்தினால் அனுக்ரஹித்து இங்ஙனம் மொழிந்தார்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—குழந்தாய்! அம்சுமானே! இந்தக் குதிரை உன் பாட்டனுடைய யாகப்பசு. இதை நீ கொண்டுபோவாயாக. இதோ உன் தந்தைமார்கள் சாம்பலாயிருக்கிறார்கள். இவர்களுக்குக் கங்கா ஜலங்கொண்டு ஸகல கார்யங்களையும் நடத்தவேண்டுமே யன்றி மற்ற ஜலத்தினால் செய்யலாகாது.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அம்சுமான் இங்ஙனம் மொழிந்த கபில முனிவரை ப்ரதக்ஷிணம் செய்து சிரத்தினால் நமஸ்கரித்துக் குதிரையைக் கொண்டுவந்தான். ஸகரனும் அந்தப் பசுவைக் கொண்டு குறை யாகத்தை முடித்தான். அப்பால் ராஜ்யத்தை அம்சுமானிடத்தில் வைத்துத் தேஹத்திலும் அதைத் தொடர்ந்தவர்களிடத்திலும் அஹங்கார மமகாராதிகளைத் துறந்து ஔர்வ முனிவர் உபதேசித்த ஜ்ஞான மார்க்கத்தினால் சிறந்த கதியாகிய மோக்ஷத்தைப் பெற்றான். எட்டாவது அத்யாயம் முற்றிற்று.

கட்வாங்கன் வரையிலுள்ள அம்சுமானுடைய வம்சத்தைத் கூறுதலும், பகீரதன் கங்கையைப் பூமிக்குக் கொண்டுவந்த வ்ருத்தாந்தமும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அம்சுமான் பாட்டனால் ராஜ்யம் கொடுக்கப்பெற்றும் பித்ருக்களைக் கரையேற்று

வதற்காகக் கங்கையைக் கொண்டுவர விரும்பி வெகுகாலம் தவம்செய்தான். ஆயினும் கங்கையைக் கொண்டுவர முடியாமலே மரணம் அடைந்தான். அப்பால் அவன் பிள்ளையாகிய திலீபனும் அவனைப்போலவே தவம் செய்துகொண்டிருந்து கங்கையைக்கொண்டுவர முடியாமலே மரணம் அடைந்தான். அவன் பிள்ளை பகீரதன். அவன் அதற்காக மிகப்பெருந்தவம் செய்தான். அப்பால் அந்தத் தவத்திற்கு மனம் இரங்கிக் கங்கை அவனுக்கு ப்ரத்யக்ஷமாய் வந்து தோன்றி 'உனக்கு வரங்கொடுக்க வந்தேன்' என்று மொழியவும் மொழிந்தாள். இங்ஙனம் கங்கையினால் மொழியப்பட்ட அந்தப் பகீரத மன்னவன் அவளுக்கு நமஸ்காரம் செய்து தன் அபிப்ராயத்தைச் சொன்னான். மீளவும் அவனை நோக்கிக் கங்கை மொழிந்தாள்.

கங்கை சொல்லுகிறாள்:—நான் பூமியில் விழும்பொழுது என் வேகத்தைத் தரிப்பவர் யாவர்? ஒருவரும் தரிக்காதபக்ஷத்தில், மன்னவனே! பூமியைப் பிளந்துகொண்டு பாதாளலோகம் போய்ச் சேருவேன். மற்றும், எனக்குப் பூமியில் வந்திருக்க இஷ்டமில்லை. பூமியிலுள்ள மனிதர்கள் என்னிடத்தில் ஸ்நானம் செய்து தங்கள் பாபத்தை விட்டுப்போவார்கள். நான் அதை எங்குப்போக்கிக்கொள்வேன்? இதைப்பற்றியும் நீ உபாயம் ஆலோசிப்பாயாக.

மன்னவன் சொல்லுகிறான்:—காம்யகர்மங்களைத் துறந்தவர்களும் ஜிதேந்த்ரியர்களும் பரப்ரஹ்மத்யானத்தில் சிறந்த மனஊக்கமுடையவர்களும் உலகங்களையெல்லாம் பாவனம் செய்யவல்லவர்களுமான ஸத்புருஷர்கள் தங்கள் சரீரஸம்பந்தத்தினால் உன் பாபத்தைப் போக்குவார்கள். ஆனால் அவர்கள் அந்தப் பாபத்தை எங்குப்

போக்குவார்களென்னில், அவர்களிடத்தில் பாபங்களைப் போக்குந்திறமையுடைய பரமபுருஷன் வஸிக்கின்றான். ஆகையால் அவர்களிடத்தில் பாபம் தங்காது. மற்றும், ருத்ரன் உன் வேகத்தைத் தரிப்பான். அவன் பகவத்பக்தனாகையால் அவனுக்கு எல்லாத்திறமைகளும் உண்டு. பகவானுடைய திறமைகளைப்பற்றிச்சொல்லவேண்டியதில்லை. அவன் ப்ரஹ்மா முதல் மரம் செடிவரையிலுள்ள ஸமஸ்த பூதங்களுக்கும் உள்ளே புகுந்து நியமித்துக்கொண்டிருப்பவன். ஆயிரம் சொல்லியென்? நூலில் வஸ்த்ரம் போல இந்த ப்ரபஞ்சமெல்லாம் அவனிடத்தில் அமைந்திருக்கின்றது. இங்ஙனம் ஜகத்தையெல்லாம் அனாயாஸமாகத் தரித்துக் கொண்டிருக்கிற அப்பரமபுருஷனை ருத்ரன் ஸர்வகாலமும் மனத்தில் தரித்துக்கொண்டிருக்கிறானாகையால் அவனுக்கு உன் வேகத்தைத் தரிப்பது ஒரு பொருளன்று.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் மொழிந்த அம்மன்னவனுடைய வார்த்தையைக் கேட்டுக் கங்கை மீளவும் அவனைக் குறித்து 'ஆனால் என் ஜலத்தைத் தரிக்கும்படி அந்த ருத்ரனை வேண்டிக் கொள்வாயாக' என்றாள். அதைக் கேட்ட அம்மன்னவனும் தவத்தினால் சிவனுக்கு அந்தராத்மாவான பரமபுருஷனை ஆராதித்தான், ராஜனே! ருத்ரன் அற்பகாலத்திற்குள்ளாகவே அவனுக்கு [1]ப்ரஸன்னனானான். அப்பால் அந்த ருத்ரனைப் பகீரதன் கங்கையின் வேகத்தைத் தரிக்கும்படி வேண்டினான். ஸமஸ்தலோகங்களுக்கும் ஹிதம் செய்பவனாகிய சிவன் அப்படியே தரிக்கிறேனென்று ஒப்புக்கொண்டு மனவூக்கத்துடன் பகவானுடைய பாதங்களின் ஸம்பந்தத்தினால் பரிசுத்தமான ஜலமுடைய கங்கையைத் தரித்தான். அப்

1. ப்ரஸன்னனானான் - அருள்புரிந்தான்.

பால் ராஜர்ஷியாகிய பகீரதன் ஜகத்தையெல்லாம் பாவன மாக்கவல்ல கங்கையைத் தன் பித்ருக்களின் தேஹங்கள் பஸ்மமாயிருக்கு மிடத்திற்குக் கொண்டுபோய்ச் சேர்த் தான். வாயுவின் வேகம்போன்ற வேகமுடைய ரதத் தில் ஏறிக்கொண்டு போகிற பகீரதனைத் தொடர்ந்து செல்கின்ற கங்காநதி வழியிலுள்ள தேசங்களையும் புனி தம் செய்துகொண்டு சென்று பஸ்மமாய்க்கிடக்கிற ஸகர புத்ரர்களையும் நனைத்தது. ப்ரஹ்மர்ஷியாகிய கபிலரிடத் தில் அபராதப்பட்டமையால் நீருன ஸகரபுத்ரர்கள் தங் கள் தேஹபஸ்மத்தில் கங்காஜலம் பட்டமாத்ரத்திருல் ஸ்வர்க்கத்தை அடைந்தார்கள். இங்ஙனம் பஸ்மமான தேஹத்தில் கங்காஜலம் பட்டமாத்ரத்தில்ஸகரபுத்ரர்கள் ஸ்வர்க்கத்தை அடைந்தார்களென்றுல், ஸ்னானம் செய்கை யாகிற வ்ரதத்தை அநுஷ்டித்துக் கொண்டு அந்தக் கங்காதேவியைப் பணிகிறவர்கள் ஸ்வர்க்கம் அடைவார் களென்பதைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? அளவற்ற மஹிமையுடைய பகவானுடைய பாதாரவிந்தத்தினின்று உண்டாகி ஸம்ஸார பந்தத்தைப் போக்குந்திறமை யமைந்த கங்காநதிக்கு இப்பொழுது சொன்ன மாஹா த்ம்யம் பெரிய ஆச்சர்யமன்று. இஃதெல்லாம் பகவா னுடைய பாதாரவிந்தங்களின் மஹிமை. தூயமனத்த ரான முனிவர்கள் இந்தப் பகவானுடைய பாதாரவிந்தங் களில் ஶ்ரத்தையுடன் மனத்தை நிலைநிறுத்தித் துறக்க முடியாத ப்ரக்ருதிஸம்பந்தத்தைத் துறந்து அப்பொ ழுதே அவனோடொத்திருக்கையாகிற மோக்ஷத்தைப் பெறுகின்றார்கள். அப்படிப்பட்ட பகவானுடைய பாதார விந்தங்களினின்றுண்டான கங்கைக்கு இஃது ஒரு பெரு மையன்று. பிறகு பகீரதனிடத்தினின்று ஶ்ருதனென்ப வன் பிறந்தான். அவன்பிள்ளை யாயாவான். அவன்பிள்ளை

ஸிந்துத்வீபன். அவன் பிள்ளை அயுதாயு. அவன் பிள்ளை ருதுபர்ணன். அவன் நளமஹாராஜனுக்கு[2] அக்ஷ ஹ்ருதயத்தை உபதேசித்து அவனிடத்தினின்று அஶ்வவித்யையைப் பெற்று அவனுக்கு நண்பனுனான். அவன் பிள்ளை ஸர்வகாமன். அவன் பிள்ளை ஸுதாஸன். அவன் பிள்ளை மதயந்தியின் பர்த்தா. அவனை மித்ரஸஹனென்பார்கள். அவனையே கல்மாஷபாதனென்றும் சொல்லுவார்கள். அவன் வஸிஷ்டருடைய சாபத்தினால் ராக்ஷஸனானான். மற்றும், அவன் தன் கர்மத்தினால் ஔரஸப்பிள்ளையற்றவனானான்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:—மஹர்ஷீ! மஹானுபாவனும் ஸுதாஸகுமாரனுமாகிய மித்ரஸஹனுக்குக் குருசாபம் எதைப்பற்றி உண்டாயிற்றோ, அது ரஹஸ்யமல்லாதிருக்குமாயின், அதைச் சொல்லவேண்டும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— வேட்டையாடுந்தன்மையுடைய ஸுதாஸகுமாரனை மித்ரஸஹன் ஒருகால் வேட்டையாடச் சென்று திரிந்து கொண்டிருக்கையில் ஒரு ராக்ஷஸனைக் கொன்று அவனுடைய ப்ராதாவைக் கொல்லாமல் விட்டுவிட்டான். அவன் தன் ப்ராதாவைக் கொன்ற அபராதத்தை நினைத்து அதற்கு அபகாரம் செய்ய விரும்பி அம்மன்னவனுடைய க்ருஹத்திலுள்ள சமையற்காரனுடைய உருவந்தரித்துப் புசிக்க விரும்புகிற வஸிஷ்டருக்குப் பக்வம் செய்த மனுஷ்ய மாம்ஸத்தை எடுத்துக்கொண்டு சென்றான். அப்பால் மஹாஜ்ஞானியாகிய வஸிஷ்டர் போஜனபாத்ரத்தில் பரிமாறின

2. அக்ஷஹ்ருதயம் - சூது சதுரங்கம் முதலிய ஆட்டங்களின் ரஹஸ்யம்.

மனுஷ்யமாம்ஸத்தைக்கண்டு அது மனுஷ்யமாம்ஸமென்பதையும் புசிக்கத்தகாதென்பதையும் அறிந்து கோபித்து 'இங்ஙனம் செய்த நீ ராக்ஷஸனுக்கடவாய்' என்று அம்மன்னவனைச் சபித்தார். அப்பால் அந்த நாமாம்ஸத்தைச் சமையற்காரனுடைய உருவந்தரித்த ராக்ஷஸன் கொண்டுவந்தானேயன்றி மன்னவன் செய்வித்ததன்றென்று தெரிந்துகொண்டு தான்கொடுத்த சாபத்தைப் பன்னிரண்டு வர்ஷங்களோடு முடியும்படிசெய்தார். அப்பால் அந்த ஸௌதாஸமன்னவனும் கையில் ஜலத்தை எடுத்துக்கொண்டு குருவான வஸிஷ்டரைச் சபிக்கத் தொடங்குகையில், அவன் பத்னியான மதயந்தி வேண்டாமென்று அவனைத் தடுக்க, அவனும் திசைகள் ஆகாயம் பூமி இவ்வெல்லாம் ஜீவப்ராசுரமாயிருப்பதை ஆராய்ந்து அந்தச் சாபஜலத்தைத் தன் பாதங்களில் கொட்டிக்கொண்டான். அவன் குருவான வஸிஷ்டமஹர்ஷியின் சாபத்தினால் ராக்ஷஸத்தன்மையை அடைந்தான். சாப ஜலத்தைப் பாதத்தில் கொட்டிக் கொண்டபடியால் அதில் விகாரம் உண்டாகப்பெற்றுக் கல்மாஷபாதனென்று பெயர் பெற்றான். அவன் ஒருகால் வனத்திலேயே வாஸம் செய்பவர்களான ப்ராஹ்மண தம்பதிகள் ஸம்போக ஸுகத்தை அனுபவித்துக்கொண்டிருக்கக் கண்டு பசியினால் பீடிக்கப்பட்டிருந்தபடியால் பார்யையுடன் இணைந்திருக்கின்ற ப்ராஹ்மணனைப் பக்ஷிக்கப் பிடித்துக்கொண்டான். ப்ராஹ்மணபத்னி தன்பர்த்தாவுக்கு ஸம்போகத்தில் விருப்பம் முடியாதிருப்பதை அறிந்து ராக்ஷஸனைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தாள்.

ப்ராஹ்மணி சொல்லுகிறாள்:—நீ உண்மையில் ராக்ஷஸனல்லை. நீ இக்ஷ்வாகு வம்சத்தரசர்களில் சிறந்தவன். மதயந்தியின் பர்த்தா. வீரனே! நீ ப்ராஹ்மணனை

வதிக்கையாகிற அதர்மத்தைச் செய்வது யுக்தமன்று நான் ஸந்ததியை விரும்புகின்றேன். என் கணவனும் ப்ராஹ்மணனுமாகிய இவர் ஸம்போகவிருப்பம் ஈடேறப் பெறாதவராயிருக்கிறார். இவரை எனக்குக் கொடுப்பாயாக. மன்னவனே! இந்த மனுஷ்யதேஹம் புருஷனுக்கு ஸமஸ்த புருஷார்த்தங்களையும் ஸாதித்துக்கொடுக்கவல்லது. ஆகையால் மனுஷ்யதேஹத்தைவதித்தால் ஸமஸ்த புருஷார்த்தங்களையும்வதித்தாற்போலாகுமென்று சொல்லுகிறார்கள். மற்றும், நீ பிடித்துக்கொண்டிருக்கிற என் பர்த்தா ப்ராஹ்மணர்; வேதசாஸ்த்ரார்த்தங்களை அறிந்தவர்; தவமும் சீலமும் கோபமில்லாமை முதலிய மற்றும் பலகுணங்களும் அமைந்தவர்; ஸமஸ்த பூதங்களுக்கும் அந்தராத்மாவாய் ஸர்வஜ்ஞத்வம் முதலியகுணங்களுடன் தேவ மனுஷ்யாதி பூதங்களின் ஹ்ருதய குஹையில் மறைந்திருப்பதும் மஹாபுருஷனென்று பெயர் பெற்றதுமாகிய பரப்ரஹ்மத்தை உபாஸித்துக்கொண்டு அதில் பெரு விருப்பங்கொண்டிருப்பவர்; ப்ரஹ்மர்ஷிகளில் சிறந்தவர். அப்படிப்பட்ட இவ்வந்தணர் ராஜர்ஷிச்ரேஷ்டனும் ப்ரபுவுமாகிய உன்னிடத்தினின்று எப்படி வதம் அடையத்தகுந்தவராவார்? புதல்வன் தந்தையிடத்தினின்று வதம்பெற உரியவனோ? தர்மஜ்ஞனாகிய உனக்கு இது தெரியாதா? மற்றும், இவர் ஸாது; பாபமற்றவர்; கல்பஸூத்ரப்ரவசனங்களை ஓதியுணர்ந்தவர்; ப்ரஹ்மோபதேசம் செய்யுந் திறமையமைந்தவர்; வேதாத்யயனம் செய்விப்பவர். ஸாதுக்களால் புகழப்பட்ட நீ இத்தகையரான இவ்வந்தணருடைய வதத்தை எப்படி ஸம்மதிக்கின்றனை? நீ பசுவின் வதத்தை நெஞ்சிலும் நினைக்கமாட்டாதவன். அப்படியே இவ்வந்தணருடைய வதத்தையும் நீ ஸம்மதிக்கலாகாது. இதையெல்லாம் பொ

ருள் செய்யாமல் எப்படியாவது நீ இவரைப் பக்ஷணம் செய்வாயாயின், அப்பொழுது முதலில் என்னைப் பக்ஷிப்பாயாக. இவரை விட்டு நான் ஒரு க்ஷணமும் ஜீவிக்க மாட்டேன். ஜீவன் போனபின்பு பிணம் ஜீவிக்குமோ?

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அந்த ப்ராஹ்மணி இங்ஙனம் மனஇரக்கம் உண்டாகும்படி சொல்லி அநாதை போலப் புலம்பிக்கொண்டிருக்கையில் சாபத்தினால் மதி மயங்கின ஸௌதாஸன், புலி பசுவைப் பக்ஷிப்பது போல, ப்ராஹ்மணனைப் பக்ஷித்தான். அப்பால் ராக்ஷஸனாகிய ஸௌதாஸன் தன் கணவனைப் பக்ஷிக்கக் கண்டு ப்ராஹ்மணி தன்னைப்பற்றிச் சோகித்துக் கொண்டே கோபமுற்று அம்மன்னவனைச் சபித்தாள்.

ப்ராஹ்மணி சொல்லுகிறாள்:—நான்காம விகாரத்தினால் வருந்தியிருக்க, நிரபராதனான என் கணவனைப் பக்ஷித்தனையாகையால், விவேகமற்றவனே! உனக்கும் ஸ்த்ரீஸம்போகம் செய்யத் தொடங்கும்பொழுது மரணம் உண்டாகுமாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்.—அந்த ப்ராஹ்மணி இங்ஙனம் மித்ரஸஹனைச் சபித்துத் தன் கணவனுடைய லோகத்தைத் தானும் பெற விரும்பி அக்னியை வளர்த்திக் கிளர்ந்தெரிகின்ற அவ்வக்னியில் தன் கணவனுடைய எலும்புகளைப் போகட்டுத் தானும் குதித்துப் பர்த்தாவின் கதியை அடைந்தாள். அந்த மித்ரஸஹன் பன்னிரண்டு வர்ஷங்கள் சென்றபின்பு சாபம் கழியப் பெற்றுத் தன் பார்யையுடன் கலந்து புணரமுயன்று ப்ராஹ்மணியின் சாபத்தை நினைத்து அதைத் தன் காதலிக்குத் தெரிவிக்க அவளும் அது முதலே வேண்டாமென்று

தடுத்தாள். அதுமுதல் அந்த மித்ரஸஹன் மரணபயத்தினால் ஸ்த்ரீஸம்போகஸுகத்தைத் துறந்தான். இதைப் பற்றியே 'அவன் தன் செயலால் ஔரஸப்பிள்ளையற்றவனானான்' என்று முன்னமே மொழிந்தேன். பிறகு அந்த மித்ரஸஹனால் அநுமதிசெய்யப்பெற்ற வஸிஷ்டமஹர்ஷி மதயந்தியிடத்தில் கர்ப்பாதானம் செய்தார். அப்பால் அவள் ஏழு வர்ஷங்கள் கர்ப்பம் தரித்திருந்தாள். அப்பொழுதும் பிள்ளைபிறக்கவில்லை. அந்த மதயந்தி தன் வயிற்றைக் கல்லினால் குத்த அக்கரு உதரத்தினின்று வெளியாயிற்று. அதைப்பற்றியே அக்குழந்தை அஶ்மகனென்று பெயர் பெற்றது. அவன் பிள்ளை மூலகன். அவன் ஸ்த்ரீகளால் பாதுகாக்கப்பெற்றிருந்தானாகையால்[1] நாரீகவசனென்றும் க்ஷத்ரியர்களே இல்லாமல் அழிந்துபோகையில் அவர்களுக்கு வேர்போன்றிருந்தானாகையால் மூலகனென்றும் வழங்கி வந்தான். அவன் பிள்ளை தசரதன். அவன் பிள்ளை ஐலபிலன் அவன் பிள்ளை விஶ்வஸஹன். அவன் பிள்ளை கட்வாங்கன். அவன் சக்ரவர்த்தியாயிருந்தான். யுத்தத்தில் ஒருவராலும் வெல்லமுடியாத அம்மன்னவன் தேவதைகளால் வேண்டப்பெற்றுத் தைத்யர்களை வதித்தான். அப்பால் அவன் தேவதைகளால் வரம் வேண்டும்படி தூண்டப்பெற்றுத் தன் வாழ்நாள் இன்னம் ஒரு முஹூர்த்தகாலமாத்ரமே யிருக்கிறதென்பதை அறிந்து தன் பட்டணத்திற்கு வந்து மனத்தினால் சிந்தித்து நிச்சயித்துக்கொண்டான். 'எனக்கு ப்ராஹ்மண குலத்தைக் காட்டிலும் ப்ராணன்கள் வேறு கிடையாது. ப்ராணன்களைக் காட்டிலும் ப்ராஹ்மண குலமே எனக்கு மிகவும் அன்பிற்கிடமானது. குலதெய்வமான பகவானைக்

1. நாரிகள் - ஸத்ரீகள். அவர்களைக் கவசமாகவுடையவன். கவசமணிந்தாற்போல ஸ்த்ரீகளால் சூழப்பட்டு மறைந்திருப்பவன்.

காட்டிலும் பிள்ளைகள் செல்வம் பூமி ராஜ்யம் பெண்டிர் இவற்றில் எதுவும் ப்ரியமன்று. இவையெல்லாவற்றைக் காட்டிலும் பகவானே எனக்கு மிகவும் அன்பிற்கிடமானவன். என்புத்தி பால்யத்திலுங்கூட ஒருகாலும் அதர்மத்தில் விருப்பங்கொண்டதில்லை. இவ்வுலகத்தில் ஒரு வஸ்துவையும் நான் பரமபுருஷனைக்காட்டிலும் வேறுபட்டதாகப் பார்த்ததில்லை. மூன்று லோகங்களுக்கும் ப்ரபுக்களாகிய தேவதைகள் எனக்குக் காமபோகங்களைப் பற்றி வரங்கொடுத்தார்கள். ஆயினும் பரமபுருஷனையே பணியுந்தன்மையுடைய நான் அந்தச் சப்தாதி விஷய போகங்களை விரும்பமாட்டேன். தேவதைகள் தேஹாத்மாபிமானமுடையவர்களாகையால் ஸர்வ காலத்திலும் தங்கள் ஹ்ருதயத்தில் இருப்பவனும் ஸர்வாந்தராத்மாவும் அன்பனுமாகிய பரமபுருஷனை அறிகிறதில்லை. இனி மற்றஜனங்கள் எங்ஙனம் அறிவார்கள்? ஆகையால் நான் இவ்வுலகத்தில் பகவானுடைய மாயையினால் நிர்மிக்கப்பட்டவைகளும் கந்தர்வநகரம்போல நிலையற்றவைகளுமான சப்தாதி விஷயங்களிலும் ப்ரக்ருதியின் பரிணாமமான சரீரத்திலும் கெடுகிறாய்வேருன்றியிருக்கிற மனப்பற்றைத் துறந்து ஜகத்திற்கெல்லாம் ரக்ஷகனான பகவானிடத்தில் பக்தி செய்து அதனால் அவனை அடையப்போகிறேன்' என்று ஸ்ரீமந்நாராயணனிடத்தில் நிலைநின்ற புத்தியினால் இங்ஙனம் நிச்சயித்துக்கொண்டு தேஹாத்மாபிமானம் முதலிய அஜ்ஞானத்தைத் துறந்து சரீரஸம்பந்தமற்று அபஹதபாப்மத்வம் முதலிய குணங்கள் தோன்றப்பெறுகையாகிற தன்னியற்கையைப் பெற்று ப்ரமாணங்களால் நிரூபிக்கப்படுவதும் அளவற்ற கல்யாண குணங்களுடையதும் ப்ரபஞ்சத்திலுள்ள ஜாதி குணாதி கல்பனைகளற்றதும் பாகவதர்களால்வாஸுதேவனென்று

கூறப்படுவதுமாகிய பரப்ரஹ்மத்தை அடைந்தான். ஒன்பதாவது அத்யாயம் முற்றிற்று.

ஸ்ரீராமாவதார வ்ருத்தாந்தங் கூறுதல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—கட்வாங்கனுடைய பிள்ளை தீர்க்கபாஹு. தீர்க்கபாஹுவின் பிள்ளை ரகு. அவன்பிள்ளை தசரதன். ஸாக்ஷாத் பரப்ரஹ்மமென்று சொல்லப்படுகிற பரமபுருஷன் அவனுக்குப் பிள்ளையாகப் பிறந்தான். அவன் ராமலக்ஷ்மண பரத சத்ருக்னர்களென்று பெயர் பூண்டு தன் ஸங்கல்பத்தினால் நான்கு வகையாகப் பிறந்தான். மன்னவனே! ஸீதையின் மணவாளனாகிய அந்த ஸ்ரீராமபிரானுடைய சரித்ரத்தைக் தத்வதர்சிகளான வால்மீகி முதலிய மஹர்ஷிகள் ஸவிஸ்தாரமாக வர்ணித்திருக்கிறார்கள். நீயும் அதைப் பலவாறு கேட்டிருப்பாய். ஆகையால் நான் அதை விரித்துச் சொல்லவேண்டிய அவச்யமில்லை. ஆயினும் சுருக்கமாகச் சொல்லுகிறேன்' கேட்பாயாக. அந்த ஸ்ரீராமபிரான் தந்தையின் வார்த்தையைப் பாதுகாக்கும் பொருட்டு ராஜ்யத்தைத் துறந்து தன்காதலியான ஸீதையின் கை படுவதையும் பொறுக்கமாட்டாதவைகளும் தாமரைமலர்போல மிக்க ஸுகுமாரங்களுமான தன் பாதங்களால் நடந்து வனத்திற்குச்சென்று ஸுக்ரீவ லக்ஷ்மணர்களால் வழி நடந்து வந்த ச்ரமங்களெல்லாம்தீரப்பெற்று லக்ஷ்மணனால் காது மூக்குகள் அறுப்புண்டு கோபமுற்ற சூர்ப்பணகையால் ஆசை மூட்டப்பெற்ற ராவணன் பார்யையைப்பறித்துக் கொண்டுபோக அவளைப் பிரிந்த வருத்தம் பொறுக்கமாட்டாமையால் புருவத்தை நெரிக்க அதைக்கண்டு பயந்த ஸமுத்ரராஜனுடைய வசனத்தினால் ஸமுத்ரத்தில் அணை



1941. ஸீதா விவாஹம்.

கட்டி லங்கையைச்சேர்ந்து துஷ்டர்களான ராவணுதிகளா கிற வ்ருக்ஷங்களைக் காட்டுத்தீபோல்கொளுத்திப் பஸ்மம் செய்து மீண்டும் ஸீதையுடன் கோஸலதேசத்திற்கு வந்து பட்டாபிஷேகம்பெற்றுப் பூமியை ஆண்டுவந்தானல்லவா? இந்த மஹானுபாவன் நம்மைப் பாதுகாப்பானுக. விஶ்வாமித்ர மஹர்ஷியின் யாகத்தில் தம்பி லக்ஷ்மணன் பார்த்துக்கொண்டிருக்கையில் மாரீசன் முதலிய ராக்ஷஸ ஶ்ரேஷ்டர்களை வதித்த ஸ்ரீ ராமபிரான் நம்மைப் பாதுகாப்பானுக. மன்னவனே! ஸீதையின் ஸ்வயம்வரமண்டபத்தில் உலகத்திலுள்ள வீரர்கள் அனைவரும் சேர்ந்திருக்கிற ஸபையில் உறுதியுடையதும் பளுவாயிருப்பதும் முன்னூறு பேர்களால் எடுத்துக்கொண்டு வரப்பட்டதுமாகிய ருத்ர தனுஸ்ஸை எடுத்து நாணேற்றி இழுத்து இளம்யானை கரும்புத்தடியை முறிப்பதுபோல முறித்துவிட்ட இந்த ஸ்ரீராமபிரான் நம்மைப் பாதுகாப்பானுக. தனக்குத் தகுந்த குணம் சீலம் வயது உருவம் அழகு இவை யுடையவளும் ஸீதையென்னும் பெயர் பூண்டு ஜனகவம்சத்தில் தோன்றினவளும் முன்பு தன் மார்பில் இடங்கொடுத்து வெகுமதிக்கப்பெற்றவளுமாகிய ஸ்ரீமஹாலக்ஷ்மியை வில்லை நாணேற்றுகையாகிற பந்தயத்தினுல் ஜயித்து மீண்டு தன் பட்டணத்திற்குப் போகும்பொழுது வழியில் வில்லை முறித்த கோஷங் கேட்டு மனங் கலங்கப்பெற்றவரும் இருபத்தோரு தடவைகள் பூமியில் க்ஷத்ரியப்பூண்டுகளே இல்லாமல் அழிந்துபோகும்படி செய்தவருமான பரசுராமருடைய பெருங்கர்வத்தைப் போக்கின அந்த ஸ்ரீராமபிரான் நம்மைப் பாதுகாப்பானுக. அவன் ஸத்யமாகிற பாசத்தினுல் கட்டுண்டவனும் பெண்டிர்க்கு உட்பட்டவனுமாகிய தந்தையின் ஆஜ்ஞையைச் சிரத்தில் வஹித்துப் பற்றற்ற

யோகி ப்ராணன்களைத் துறப்பதுபோல, ராஜ்யத்தையும் செல்வத்தையும் ப்ரீதியுள்ள நண்பர்களையும் வீடு வாசல்களையும் துறந்து பார்யையோடும் தம்பியோடும் கூடி வனத்திற்குச்சென்றான். ராவணனுடைய உடன் பிறந்தவளாகிய சூர்ப்பணகை மதிகெட்டு ஸீதையை எடுத்துக் கொண்டு போகவிரும்ப அவளுடைய காது மூக்குகளைக் அறுத்து அவளுருவத்தை விரூபமாக்கிக் கரன் தூஷணன் த்ரிசிரன் முதலிய அவன் பந்துக்களைக் கொன்று ஒருவர்க்கும் தடுக்க முடியாத வில்லைக் கையில் ஏந்தி அவ்வனத்தில் வருந்தினாற்போல வாஸம் செய்துகொண்டிருந்தான். பிறகு சூர்ப்பணகை ராவணனிடம் சென்று ஸீதையின் அழகையும் அவள் ராமனுடன் வனத்திற்கு வந்திருக்கும் வ்ருத்தாந்தத்தையும் அறிவிக்க, அவன் அவள்மேல் காமவிகாரங் கொண்டு அவளைப் பறிக்க விரும்பித் தான் நேரில் அவ்விடம் போகப் பயந்து மாரீசனை அனுப்ப, அவனும் ராவணனுடைய நியோகத்தினால் அற்புதமான ஒரு மானுருவம் பூண்டு ராமாஸ்ரமத்திற்கு அருகாமையில் உலாவ, ஸீதையும் அதைக் கண்டு விரும்ப, ராமன் அதைத் தொடர்ந்து செல்ல, மானுருவம் பூண்ட மாரீசனும் ராமனை ஆஸ்ரமத்தினின்று வஞ்சித்து நெடுந்தூரம் இழுத்துக்கொண்டு போகையில், ருத்ரன் தக்ஷனை அடித்தாற்போல, மாயமறிந்த ராமன் சீக்ரமாக அம்மாரீசனைப் பாணத்தினால் அடித்தான். அப்பொழுது லக்ஷ்மணனும் ராமனைத் தொடர்ந்து செல்ல, அவ்விருவரும் இல்லாத ஸமயம் பார்த்து ராக்ஷஸாதமனாகிய ராவணன் வனத்தில் செந்நாய்போல வந்து ஸீதையைப் பறித்துக்கொண்டு போகையில், ராமன் காதலியைப் பிரிந்து லக்ஷ்மணனுடன் கூடித் துக்கித்தவன் போன்று, ஸ்த்ரீகளிடத்தில் மனப்பற்று செய்ய

வர்களின் கதி இத்தகையதென்பதை வெளியிட்டுக் கொண்டு வனத்தில் ஸஞ்சரித்தான். ராவணன் ஸீதையை எடுத்துக்கொண்டு போகும்பொழுது வழியில் அவனைத் தடுத்து ஸீதையை விடுவிக்க முயன்று அவனால் அடியுண்ட ஜடாயுவுக்குத் தஹனஸம்ஸ்காரம் செய்து கபந்தனைக் கொன்று வானரர்களோடு ஸ்னேஹம் செய்து வாலியைக் கொன்று அவ்வானரர்களால் தன் காதலியான ஸீதையின் கதியை அறிந்து ப்ரஹ்ம ருத்ரர்களால் பூஜிக்கப்பட்ட பாதாரவிந்தங்களுடையவனாயினும் மனுஷ்யனாக அவதரித்திருக்கிறானாகையால் தன் மஹிமையை வெளியிடாமல் தான் வல்லமையற்றவன் போல வானரஸ்ரேஷ்டர்களுடைய ஸைன்யங்களோடு ஸமுத்ரக்கரைக்குச் சென்றான். அங்கு ஸமுத்ரராஜனைச் சரணம் அடைந்து மூன்றுராத்ரிகள் உபவாஸமிருந்து எதிர்பார்த்தும் அவன் தோன்றாமையால் கோபித்துக் கண் கலங்கிக் கடைக்கண்ணோக்கத்தை விழவிட, அவ்வளவில் ஸமுத்ரராஜன் சரமாரி பொழிந்தாற்போல முதலைகளும் மகரமீன்களும் பயந்து பரபரக்கவும் பயத்தினால் கோஷம் அடங்கவும் பெற்றுப் பூஜைக்கு வேண்டிய வஸ்துக்களைச் சிரத்தின்மேல் எடுத்துக் கொண்டு உருவத்துடன் வந்து தோன்றிப் பாதாரவிந்தங்களில் விழுந்து இங்ஙனம் மொழிந்தான்.

ஸமுத்ரராஜன் சொல்லுகிறான்:—பெருமை யமைந்தவனே! எங்கும் நிறைந்த பரமபுருஷனே! நீ ப்ராயோபவேசம் செய்திருக்கையில், உன்னை மூடபுத்தியர்களாகிய நாங்கள் இதுவரையில் நிர்விகாரனும் ஜகத்திற்கெல்லாம் ப்ரபுவுமாகிய ஆதிபுருஷனென்று அறியாதிருந்தோம். இப்பொழுது தெரிந்தது. உன் ஸங்கல்பத்தின்படி நடப்பதாகிய ஸத்வகுணத்தினின்று தேவகணங்களும், அத்

தகைய ரஜோகுணத்தினின்று ப்ரஜாபதிகளும், தமோ குணத்தினின்று ருத்ராதிகளும் உண்டானார்கள். ஸத்வாதி குணங்களுக்கு நியாமகனான அந்தப் பகவான் நீயேயென்று இப்பொழுது நான் நினைக்கின்றேன். நீ இஷ்டப்படி ஜலத்தைக் கடந்து சென்று விஸ்ரவஸ்ஸென்னும் ப்ரஜாபதியின் மலம் போன்றவனும் மூன்று லோகங்களையும் அழப்படுத்துகிறவனுமாகிய ராவணனை வதித்து, உன் பத்னியைப் பெறுவாயாக. வீரனே! உனக்கு என் ஜலம் தடையன்று. ஆயினும் உன் புகழ் பரவும்பொருட்டு என் ஜலத்தின்மேல் அணைகட்டுவாயாக. திசைகளையெல்லாம் ஜயித்த மன்னவர்கள் நீ அணைகட்டினதைக் கண்டு இது ஒருவராலும் செய்யமுடியாத செயலென்று, உன் புகழைப் பாடுவார்கள்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஸ்ரீராமன் ஸமுத்ரராஜனுடைய வசனத்தை அங்ஙனமே அங்கீகரித்து வானர வீரர்களின் அகைகளால் அடிக்கப்பட்ட வ்ருக்ஷங்களின் நுனிகளையுடைய பற்பல பர்வதசிகரங்களால் ஸமுத்ரத்தில் அணைகட்டி ஸுக்ரீவன் நீலன் ஹநுமான் முதலிய பல வானரர்களுடன் முன்னமே ஹநுமானால் கொளுத்தப்பட்ட லங்காபட்டணத்திற்குள் விபீஷணன் காட்டின வழியின்படி நுழைந்தான். வானரவீரர்களின் ஸைன்யம் அப்பட்டணத்தில் நுழைந்து விளையாடுமிடங்களையும் செல்கரிசை முதலிய இடங்களையும் கருவூலங்களையும் வீட்டு வாசற்களையும் பட்டணத்து வாசற்களையும் ஸபைகளையும் உப்பரிக்கை முதலிய இடங்களின் முன்கட்டடங்களையும் கொடுங்கைகளையும் திண்ணை முதலிய இடங்களையும் த்வஜங்களையும் பொன்குடங்களையும் நாற்சந்திவீதிகளையும் இடித்துப் பாழ்செய்தது. அங்ஙனம் வானரவீரர்களால் அழிக்கப்பட்ட அந்நகரம் யானைக் கூட்

டங்களால் கலக்கப்பட்ட தாமரையோடை போன்றிருந்தது. ராக்ஷஸர்களுக்குப்ரபுவான ராவணன் வானரவீரர்கள் தன் பட்டணத்தை அழிப்பதைக் கண்டு நிகும்பன் கும்பன் தூம்ராக்ஷன் துர்முகன் ஸுராந்தகன் நராந்தகன் முதலியவர்களில் ஒவ்வொருவனையும் அவனவனுக்கு ஏற்பட்ட ஸைன்யத்துடன் அனுப்ப, அவர்கள் மாண்டு போகையில், தன் பிள்ளையான இந்த்ரஜித்தையும் ப்ரஹஸ்தன் அதிகாயன் அகம்பனன் முதலிய ஸமஸ்தமான ப்ருத்யர்களையும் அவரவர் ஸைனயங்களுடன் அனுப்ப, அவர்களும் மாண்டுபோனமையால் பிறகு கும்பகர்ணனையும் பெரிய ஸைன்யத்துடன் அனுப்பினான். ஸ்ரீராமன் சிறுகத்தி சூலம் தனுஸ்ஸு ஈட்டி தடி சக்தி பாணம் தோமரம் பெருங்கத்தி முதலிய ஆயுதங்களால் நுழையமுடியாதிருக்கின்ற அவ்வரக்கர்ஸைன்யத்தை, ஸுக்ரீவன் லக்ஷ்மணன் ஹனுமான் கந்தமாதனன் நீலன் அங்கதன் ஜாம்பவான் பனஸன் முதலியவர்களோடுகூடி எரித்தான். ஸ்ரீராமனுடைய ஸேனாபதிகளான அங்கதன் முதலிய அவ்வானரவீரர்கள் யானைவரும் யானை காலாள் தேர் குதிரை யுத்தவீரர்கள் ஆகிய இவர்கள் அமைந்திருக்கின்ற அந்த ராக்ஷஸப் படையுடன் இவ்விரண்டு பேர்களாகச் சேர்ந்து ஸீதையைத் தொட்டபாபத்தினால் மங்களம் அழியப்பெற்ற ராவணனை ப்ரபுவாகச் சார்ந்திருக்கின்ற ராக்ஷஸவீரர்களைப் பர்வதங்களாலும் கதைகளாலும் பாணங்களாலும் அடித்து முடித்தார்கள். அப்பால் தன்பலம் அழிந்ததைக் கண்டு கோபித்து ரதத்தின் மேல் ஏறிக்கொண்டு ஸ்ரீராமனை எதிர்த்து, மாதலியால் கொண்டுவரப்பட்டதும் ஒளிப்பெருக்குடன் திகழ்வதுமாகிய இந்த்ரனுடைய ரதத்தின்மேல் ஏறிக்கொண்டு விளங்குகின்றஅந்த ஸ்ரீராமனைக் கத்தியின் நுனிபோன்ற

நுனியுடைய பாணங்களால் அடித்தான். அங்ஙனம் அடிக்கின்ற ராவணனைப்பார்த்து ஸ்ரீராமன் 'அடா! ராக்ஷஸாதம! நாய் ஒருவரும் இல்லாத ஸமயம்பார்த்து வீட்டில் நுழைந்து பக்ஷ்யங்களைக் கொண்டுபோவது போலத் துர்புத்தியாகிய நீ நானில்லாத ஸமயம் பார்த்து என் பார்யையைப் பறித்துக்கொண்டு போயினையல்லவா? இங்ஙனம் நிந்தைக்கிடமான கார்யத்தைச்செய்தும் வெட்கமின்றித் திரிகிற உனக்கு இப்பொழுது ம்ருத்யுவைப்போல் கடக்க முடியாத வீர்யமுடைய நான் அதன் பலனைக் கொடுக்கின்றேன்' என்றான். அங்ஙனம் நிந்தித்துக் கொண்டே தனுஸ்ஸில் தொடுத்த பாணத்தை ப்ரயோகித்தான். அந்தப் பாணம் வஜ்ராயுதம்போல் அவனுடைய ஹ்ருதயத்தைப் பிளந்தது. அந்த ராவணன் பத்துமுகங்களாலும் குருதியைக் கக்கிக்கொண்டு பார்க்க வந்த ஜனங்கள் 'ஆ! ஆ!' என்று சொல்லிக்கொண்டிருக்கையில் புண்யம் க்ஷீணிக்கப் பெற்றவன் ஸ்வர்க்கலோகத்தினின்று விழுவதுபோல, வாஹனத்தினின்று கீழே விழுந்தான். பிறகு ராக்ஷஸிகள் மந்தோதரியுடன் லங்கையினின்று புறப்பட்டு அழுதுகொண்டே ராவணனுடைய அருகாமைக்கு ஓடிவந்தார்கள். அவர்கள் அவ்விடம் சேர்ந்து அங்கு லக்ஷ்மணனுடைய பாணங்களால் அடியுண்டு விழுந்திருக்கிற தங்கள் தங்கள் பந்துக்களை அணைத்துத் தங்களைத் தாங்களே அடித்துக் கொண்டு வருந்தி இனிய குரலுடன் அழுதார்கள்.

ராக்ஷஸிகள் சொல்லுகிறார்கள்:= 'ஆ! நாதா! உலகங்களையெல்லாம் அழச்செய்பவனே! ராவணா! நாங்கள் பாழானோம். இப்பொழுது சத்ருக்களால் பீடிக்கப்பட்டு உன்னையும் பிரிந்திருக்கின்ற லங்காபுரம் யாரைச் சரணம் அடையும்? மஹா பாக்யமுடையவனே! நீ காம

விகாரத்தினால் மதிமயங்கி ஸீதையினுடைய தேஜஸ்ஸின் ப்ரபாவத்தை அறியவில்லை. ஆகையால் தான் நீ இந்தத் தசையை அடைந்தனை. குலத்தையெல்லாம் களிக்கச் செய்பவனே! எங்களையும் இந்த லங்கையையும் விதவைகளாக்கினை. இதோ படுத்திருக்கின்ற உன் தேஹத்தைக் கழுக்குளுக்கு இரையாக்கினை. உன்னை நரகபோகத்திற்கு இலக்காக்கினை.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—பிறகு விபீஷணன் ஸ்ரீராமனால் அபிநந்திக்கப்பட்டுப் பித்ருமேதவிதியில் சொன்னபடி ராவணன் முதலிய பந்துக்களுக்கு ப்ரேதகார்யத்தை நடத்தினான். அப்பால் ஸ்ரீராமபிரான் அசோக வனிகையில் சிம்சுபாவ்ருக்ஷத்தின் அடியில் இருந்துகொண்டு தன்னைப் பிரிந்தமையாகிற நோயால் இளைத்திருக்கின்ற ஸீதையைக் கண்டான். ஸ்ரீராமன் மிகவும் அன்பிற்கிடமான தன் காதலி அங்ஙனம் வருத்தமுற்றிருப்பதைக் கண்டு மனஇரக்கமுற்றான். ஸீதையும் ஸ்ரீராமனைக் கண்டு களித்துத் தாமரை மலர்போன்ற தன் முகம் மலரப்பெற்றாள். ஸ்ரீராமன் அவளைப் புஷ்பகவிமானத்தில் ஏற்றி ஸுக்ரீவன் விபீஷணன் ஹனுமான் இவர்களோடு தானும் அவ்விமானத்தில் ஏறிக்கொண்டான். அந்தப் பகவான் விபீஷணனுக்கு ராக்ஷஸ கணங்களுக்கு ப்ரபுவாயிருக்கையையும் லங்காராஜ்யத்தையும் கல்பம் முடியும் வரையில் ஜீவித்திருக்கும்படியான ஆயுளையும் கொடுத்துத் தந்தையின் கட்டளையை நிறைவேற்றி விபீஷணனோடுகூடவே அயோத்யாபுரத்திற்குச் சென்றான். வழியில் இந்த்ரன் முதலிய லோகபாலர்கள் அவன்மேல் பூமழை பொழிந்தார்கள். ப்ரஹ்மதேவன் முதலிய தேவதைகள் மனக்களிப்புடன் அவன் சரித்ரத்தைப் பாடினார்கள். பேருளாளனான அந்த ஸ்ரீராமபிரான் தன் ப்ராதாவான

பரதன் யவை அரிசியைக் கோமூத்ரத்தில் பசனம்செய்து அந்த அன்னத்தைப் புசித்துக்கொண்டு மரவுரி உடுத்து ஜடைதரித்துத் தர்ப்பம் பரப்பின வெறுந்தரையில் படுத்துக் காலம் கழிப்பதைக் கேட்டுப் பரிதபித்தான். பரதனும் ஸ்ரீராமபிரான் பட்டணத்திற்குத் திரும்பிவரும்செய்தியைக் கேட்டு ஸ்ரீராமபாதுகைகளைத் தன் சிரஸ்ஸில் தரித்துப் பட்டணத்து ஜனங்களும் மந்த்ரிகளும் புரோஹிதர்களும் தொடரப்பெற்றுப்பாட்டுக்களோடும் வாத்ய கோஷங்களோடும் தான் தங்கியிருந்த நந்திக்ராமத்தினின்று புறப்பட்டுத் தமையனாகிய ஸ்ரீராமனை எதிர்கொண்டான். அப்பொழுது ப்ரஹ்மவித்துக்களான ப்ராஹ்மணர்கள் வேதத்தை உரக்க ஓதிக்கொண்டு அவனுடன் சென்றார்கள். நுனியில் பொன்வேலை செய்த பதாகைகளும் விசித்ரமான கொடிகள் கட்டப்பெற்று ஸ்வர்ணாலங்காரமும் செய்யப்பெற்ற ரதங்களும் பொன்னலங்காரம் செய்யப்பெற்ற மேலான குதிரைகளும் ஸ்வர்ண மயமான கவசங்கள் தரித்த போர்வீரர்களும் தாம்பூலங் கொடுப்பவர் முதலிய பணிக்காரர்களும் சிறப்புடைய தேவதாஸிகளும் உபஹாரங்களையேந்திக்கொண்டிருக்கிற ப்ருத்யர்களும் பரதனைத் தொடர்ந்து சென்றார்கள். மற்றும், மஹாராஜனுக்குரிய குடை சாமரம் முதலிய பலவகையான வரிசைகளையும் எடுப்பித்துக் கொண்டு சென்ற அந்தப் பரதன் ராமனைக் கிட்டி ப்ரேமத்தினால் நெஞ்சுருகிக் கண்பனித்துப் பாதுகைகளை முன்னே வைத்துப் பாதாரவிந்தங்களில் விழுந்து எழுந்து கைகளைக் குவித்துக்கொண்டு கண்ணும் கண்ணீருமாக நின்றான். அப்பால் ஸ்ரீராமன் அந்தப் பரதனைக் கைகளால் நெருக்கியணைத்துக் கண்ணீர்களால் நனைத்து, லக்ஷ்மணனும் ஸீதையும் தானுமாய் ப்ராஹ

மணர்களுக்கும் மற்றுமுள்ள பூஜ்யர்களான குலவ்ருத்தர்களுக்கும் நமஸ்காரம்செய்து தானும் ப்ரஜைகளால் நமஸ்காரம் செய்யப்பெற்றான். உத்தரகோஸல தேசத்திலுள்ள ஜனங்கள் நெடுநாள் கழித்துத் திரும்பி வந்திருக்கின்ற தங்கள் ப்ரபுவான ஸ்ரீராமனைக் கண்டு ஸந்தோஷத்தினால் அவன் மேல் புஷ்பங்களை இறைந்து வெள்ளை வீசிக் கூத்தாடினார்கள். ஸ்ரீராமன் பட்டணத்தில் நுழையும்பொழுது பரதன் பாதுகைகளையும், விபீஷணஸுக்ரீவர்கள் சிறந்த சாமரங்களையும், ஹனுமான் வெண்கொற்றக்குடையையும், சத்ருக்னன் தனுஸ்ஸை அம்புறாத்தூணி இவைகளையும், ஸீதை தீர்த்த கமண்டலுவையும், அங்கதன் பொற்கத்தியையும், ஜாம்பவான் பொன்கேடயத்தையும் எடுத்துக் கொண்டு சென்றார்கள். ஸ்ரீராமன் புஷ்பகவிமானத்தில் வீற்றிருந்து ஸ்த்ரீகளாலும் ஸ்துதிபாடகர்களாலும் துதிக்கப்பெற்று, நக்ஷத்ரங்களுடன் ஆகாயத்தில் உதித்த சந்த்ரன் போல விளங்கினான். அவன் பரதன் முதலிய ப்ராதாக்களால் அபிநந்தனம் செய்யப்பெற்று மஹோத்ஸவத்துடன் பட்டணத்திற்குள் ப்ரவேசித்தான். அப்பால் ராஜக்ருஹத்தில் ப்ரவேசித்துக் கைகேயி முதலியவர்களையும் தன் தாயான கௌஸல்யையையும் வஸிஷ்டர் முதலிய குருக்களையும் ஸ்நேஹிதர்களையும் நல்லகுலத்தில் பிறந்த பின்தோன்றல்களையும் பூஜித்தான்; தானும் அவர்களால் பூஜிக்கப்பட்டான். ஸீதையும் லக்ஷ்மணனும் அங்ஙனமே பூஜிக்கவேண்டியவர்களைப் பூஜித்துத் தாமும் பூஜிக்கப்பெற்று ராஜக்ருஹத்திற்குள் ப்ரவேசித்தார்கள். கௌஸல்யை முதலிய தாய்மார்கள் தங்கள் புதல்வர்களைப் பெற்றுத் தேஹங்கள் ப்ராணன்களைப் பெற்று எழுந்திருப்பதுபோல

எழுந்து அவர்களை மடியில் வைத்துக்கொண்டு ஆநந்த நீர்களால் நனைத்துச் சோகங்களைத் துறந்தார்கள். அப்பால் குருவாகிய வஸிஷ்டர் குலவ்ருத்தர்களுடன் விதிப்படி ஜடைகளை விடுவித்து நான்கு ஸமுத்ரங்களி னின்றும் கங்கை முதலிய புண்யதீர்த்தங்களினின்றும் கொண்டுவந்த ஜலங்களால், இந்த்ரனுக்கு அபிஷேகம் செய்வதுபோல, ஸ்ரீராமனுக்கு அபிஷேகம் செய்தார். ஸ்ரீராமன் இங்ஙனம் ஸ்நானம் செய்து அழகான வஸ்த்ரங்களை உடுத்து நன்றாக அலங்கரித்துத் தன்னைப் போலவே நன்றாக அலங்கரித்துக்கொண்டு நல்ல வஸ்த்ரங்களை உடுத்திருக்கின்ற ஸஹோதரர்களோடும் பார்யையோடும் கூடி விளங்கினான். பிறகு உடன்தோன்றலாகிய பரதன் பாதங்களில் விழுந்து வேண்ட ஸ்ரீராமன் ஸிம்ஹாஸனத்தை அங்கீகரித்தான். அப்பொழுது அத்தேசத்திலுள்ள ப்ரஜைகள் அனைவரும் தங்கள் தங்கள் தர்மத்தில் நிலைநின்று வர்ணாச்ரமங்களுக்கு ஏற்பட்ட பஞ்சமஹாயஜ்ஞாதிகர்மங்களை அநுஷ்டித்துக் கொண்டுவந்தார்கள். தன் தந்தையான தசரத சக்ரவர்த்தி ஆண்டுவந்தாற்போலவே ஸ்ரீராமனும் ப்ரஜைகளை ஆண்டுவந்தான். ப்ரஜைகளும் அவனைத் தந்தையாகவே நினைத்திருந்தார்கள். அப்பொழுது தர்மம் மூன்று கால்களுடன் இருக்கப்பெற்ற த்ரேதாயுகம் நடந்துகொண்டிருப்பினும், அக்காலம் தர்மம் நான்கு கால்களுடன் இருக்கப்பெற்ற க்ருதயுகம் போன்றிருந்தது. பரத வம்சாலங்காரனே! ஸமஸ்த பூதங்களுக்கும் ஸுகம் விளைப்பவனும் தர்மங்களை உணர்ந்தவனுமாகிய ஸ்ரீராமன் ராஜனாயிருக்கும்பொழுது வனங்கள் நதிகள் பர்வதங்கள் ரம்யகம் முதலிய வர்ஷங்கள் ஸிம்ஹலம் முதலிய த்வீபங்கள் ஸமுத்ரங்கள் இவையெல்லாம் ப்ரஜைகளுக்கு

விரும்பினவற்றையெல்லாம் கறந்தன. ஸர்வஸ்மாத் பரனும் ஸர்வேஶ்வரனுமாகிய ஸ்ரீராமன் ராஜனயிருக்கும்பொழுது மனேவ்யாதி சரீரவ்யாதி கிழத்தனம் பசி தாஹம் துக்கம் சோகம் பயம் இளைப்பு விரும்பாதவர்களுக்கு மரணம் ஆகிய இவற்றில் எவையும் உண்டாகவில்லை. ஏகபத்னீவ்ரதம் தவருதவனும் ராஜர்ஷியின் சரித்ரமுடையவனும் ராகம் முதலிய ப்ராக்ருத குணங்களற்றவனுமாகிய அந்த ஸ்ரீராமன் க்ருஹஸ்தனுக்கு விதிக்கப்பட்டவைகளும் தன் வர்ணத்திற்கு ஒத்தவைகளுமான தர்மங்களை உலகத்தவர்களுக்குக் கற்பிக்க முயன்று தான் அநுஷ்டித்தான். வணக்கமுடையவளும் கருத்தறிந்தவளும் பதிவ்ரதையுமாகிய ஸீதை ப்ரீதியினுலும் அநுஸரணத்தினுலும் நல்லொழுக்கத்தினுலும் பயத்தினுலும் வெட்கத்தினுலும் மற்றும் பல குணங்களாலும் ஸ்ரீராமனுடைய மனத்தைப் பறித்தாள். பத்தாவது அத்யாயம் முற்றிற்று.

ஸ்ரீராமன் அயோத்யையிலிருந்துகொண்டு யஜ்ஞாதி கர்மங்களை அநுஷ்டித்த விதத்தைக் கூறுதல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிருர்:—ஷாட்குண்ய பூர்ணனை ஸ்ரீராமன் பெரியோர்களான வஸிஷ்டாதி முனிவர்களைக் கொண்டு யஜ்ஞங்களை அநுஷ்டித்து ஆசார்யனை முன்னிட்டு ஸமஸ்த தேவதா ஸ்வரூபனும் தேவஶ்ரேஷ்டனுமாகிய தன்னைத் தானே ஆராதித்தான். அவன் அந்த யாகத்தில் ஹோதாவுக்குக் கிழக்குத் திக்கையும், ப்ரஹ்மாவுக்குத் தெற்குத் திக்கையும், அத்வர்யுவுக்கு மேற்குத் திக்கையும், உத்காதாவுக்கு வடக்குத் திக்கையும் ஆசார்

யனுக்கு அந்தத் திசைகளுக்கு இடையிலுள்ள பூமியையும் தக்ஷிணையாகக் கொடுத்தான். மற்றும், ப்ராஹ்மணன் இப்பூமண்டலத்தை யெல்லாம் பெற்றுக்கொள்ள உரியவனென்று அவன் நினைத்திருந்தானேயன்றித் தான் கொடுத்தவற்றை ஒரு பொருளாக நினைக்கவில்லை. கொடுத்தவற்றில் சிறிதும் மனப்பற்று வைக்கவில்லை. மற்றும், அவர்களுக்குச் சிறந்த ஆடையாபரணம் முதலிய அலங்காரங்களையும் கொடுத்தான். இங்ஙனம் எல்லாவற்றையும் கொடுத்து மேல் துணி கீழ்துணி ஆகிய இரண்டு வஸ்த்ரங்கள் மாத்ரமே மிகப்பெற்றான். ராஜபத்னியாகிய வைதேஹியும் பர்த்தாவின் அபிப்ராயத்தை அறிந்து எல்லா அலங்காரங்களையும் கொடுத்து மங்கல்யம் மாத்ரமே மிகப்பெற்றாள். ஹோதா முதலிய அவ்வந்தணர்கள் ப்ராஹ்மணர்களையே தெய்வமாக நம்பியிருக்கிற அந்த ஸ்ரீராமனுக்குப் பெரியோர்கள்விஷயத்திலுள்ள தானசீலத்தையும் வாத்ஸல்யத்தையும் கண்டு ஸந்தோஷம் அடைந்து 'இந்தத் திசைகளை நாங்கள் பெற்றுக்கொள்ள உரியரல்லோம். இவற்றை நீயே ஆண்டு வருவாயாக' என்று விண்ணப்பம் செய்து மீளவும் இங்ஙனம் மொழிந்தார்கள்.

ப்ராஹ்மணர்கள் சொல்லுகிறார்கள் :—பகவானே! நீ எங்களுக்குக் கொடாதது என்ன இருக்கிறது? எல்லாவற்றையும் கொடுக்க நீ ஸித்தமாயிருக்கின்றனை. நீ ஸர்வேச்வரன். உனக்கு மேற்பட்டவன் எவனும் கிடையான். நீ அவாப்த ஸமஸ்தகாமன். உனக்கு இவற்றால்ஆகவேண்டிய ப்ரயோஜனம் என்ன இருக்கிறது? மற்றும் பரமபுருஷார்த்தமாகிய மோக்ஷத்தை எங்களுக்குக் கொடுக்கும் பொருட்டு எங்கள் ஹ்ருதயத்தில் புகுந்து உன் ப்ரகாசத்தினால் எங்களுடைய அஜ்ஞானத்தைப் போக்குகின்றனை.

இங்ஙனம் தன்னையும் கொடுக்க வழிபார்த்துக் கொண்டிருக்கிற உனக்கு இந்தத் திசைகளைக் கொடுப்பது ஒரு பொருளோ? நீ ப்ராஹ்மண குலத்திற்கு வேண்டியவற்றையெல்லாம் ஸாதித்துக் கொடுப்பவன்; தன் தேஜஸ்ஸினால் திகழுந்தன்மையன்; என்றும் குவியாத அறிவுடையவன்; மிகுந்த புகழுடையவர்களில் முதன்மையானவன். ப்ராணிகளுக்கு த்ரோஹம் செய்கையின்றி, ஸமஸ்த பூதங்களுக்கும் நண்பர்களான முனிவர்கள் உன் பாதாரவிந்தங்களைத் தமது மனத்தில் கொண்டு த்யானிக்கின்றார்கள். உன் குணங்களை எங்களால் வர்ணிக்க முடியுமோ ? உனக்கு நமஸ்காரம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் ஸ்ரீராமன் ஸீதையோடுகூடிப் பதினாயிர மாண்டுகள் ராஜ்யம் ஆண்டு வந்து ஒருசமயம் உலக வ்ருத்தாந்தத்தை அறிய விரும்பி மாறுவேடம் பூண்டு ஒருவர்க்கும் தெரியாமல் ராத்ரியில் பட்டணத்தில் ஆங்காங்கு ஸஞ்சரித்துக் கொண்டு ஒரு புருஷன் தன்பார்யையைப் பார்த்து மொழியும் வார்த்தையைக் கேட்டான். அவன் தன் பார்யையைக் குறித்துப் 'பரபுருஷனுடைய வீட்டிற்கு அடிக்கடி போகின்றவளும் மதிகெட்டவளுமாகிய உன்னை நான் போஷிக்கமாட்டேன். 'நெடுநாள் பிறன் வீட்டிலிருந்த ஸீதையை ராமன் அங்கீகரிக்கவில்லையா ? அவனைவிட நீ மேற்பட்டவனோ' என்றால் சொல்லுகிறேன், கேள். ராமன் ஸ்த்ரீலோலன். ஆகையால் அவன் நெடுநாள் ராவணன் வீட்டிலிருந்த ஸீதையை அங்கீகரித்தான். நானோ வென்றால், அங்ஙனம் ஸ்த்ரீகளுக்கு உட்பட்டவனல்லேன். ஆகையால் உன்னை அங்கீகரிக்கமாட்டேன்' என்று மொழிந்தான். இங்ஙனம் உண்மையை அறியாததும் தோன்றினபடி பலவற்றை மொழிகின்ற

தும் ஆராதிக்க முடியாததுமாகிய உலகத்தினின்றும் பயந்து லோகநாதனாகிய ஸ்ரீராமன் ஸீதையைத் துறக்க, அவளும் கர்ப்பிணியாகவே வால்மீகியின் ஆஸ்ரமத்திற்குச் சென்றாள். பிறகு ப்ரஸவகாலம் ஸமீபித்திருக்கையில் இரட்டைப்பிள்ளைகளைப் பெற்றாள். அவர்கள் குசனென்றும் லவனென்றும் ப்ரஸித்தி பெற்றவர்கள். அவர்களுக்கு ஜாதகர்மாதி ஸம்ஸ்காரங்களையெல்லாம் வால்மீகிமுனிவர் நடத்தினார். அங்ஙனமே லக்ஷ்மணனுக்கு அங்கதன் சந்த்ரகேதுவென்றும், பரதனுக்குத் தக்ஷன் புஷ்கலனென்றும், சத்ருக்னனுக்கு ஸுபாஹு ஶ்ருதஸேனனென்றும் இரண்டிரண்டு பிள்ளைகள் பிறந்தார்கள். பரதன் திக்விஜயம் செய்யும்பொழுது கந்தர்வர்களைக் கோடிகோடியாக வதித்து அவர்களுடைய தனத்தையெல்லாம் கொண்டுவந்து ராஜனான ஸ்ரீராமனுக்குக் கொடுத்தான். சத்ருக்னன் மது வென்னும் அஸுரனுடைய பிள்ளையாகிய லவணனென்னும் ராக்ஷஸனைக் கொன்று மதுவனத்தில் மதுரையென்னும் பட்டணத்தை நிர்மித்தான். தன் கணவனாகிய ஸ்ரீராமனால் துறக்கப்பட்ட ஸீதை வால்மீகி முனிவரிடம் தன் பிள்ளைகளை வைத்து ஸ்ரீராமனுடைய பாதங்களை த்யானித்துக் கொண்டே பூமியின ரந்த்ரத்தில் நுழைந்தாள். அதைக்கேட்ட ஸ்ரீராமபிரான் அந்த ஸீதையின் ஒப்பற்றக் குணங்களை நினைத்துப் புத்தியினால் சோகத்தை அடக்கவல்லவனாயினும் அதை அடக்கமுடியாதவனாயிருந்தான். திறமையமைந்த பெரியோர்களுக்கும் ஆண் பெண்களாய்க் கலந்திருக்கும் விஷயம் இவ்வளவில் இருக்கின்றது. அது எல்லார்க்கும் பயத்தை விளைக்கும். புத்தியின்றி அற்ப ஸுகத்தை விரும்பி இல்லறவாழ்க்கையில் மனம் தாழப்பெற்ற மற்றவர்

களுக்கு அவ்விஷயம் இருக்கும் விதத்தைபபறறிச சொல்லவேண்டுமோ? அதன் பிறகு ஸ்ரீராமன் பதின் மூவாயிரம் வர்ஷங்கள் ப்ரஹ்மசர்யம் தவருமல் அவிச்சின்னமாக அக்னிஹோத்ர ஹோமத்தை நடத்திக் கொண்டு வந்தான். பிறகு ஸ்ரீராமன் வனவாஸம் செய்யும்பொழுது தண்டகாரண்யத்திலுள்ள முட்கள் தைக்கப் பெற்றவைகளும் தளிர்போன்றவைகளுமான தன் பாதாரவிந்தங்களை த்யானிக்கும் ஜனங்களுடைய ஹ்ருதயத்தில் வைத்துப் பரமபதமென்று கூறப்படுகிற தன்னுடைச் சோதிக்கு •எழுந்தருளினன். கோதண்ட பாணியான ஸ்ரீராமன் ராக்ஷஸர்களை வதித்ததும் ஸமுத்ரத்தில் அணைகட்டினதும் ஒரு புகழாகமாட்டாது. அவன் இணையெதிரில்லாத மஹிமையுடையவன். சத்ருக்களை வதிக்கும் விஷயத்தில் அவனுக்கு வானரர்கள் ஸஹாயமோ? அவன் ஸுக்ரீவாதி வானரர்களை ஸஹாயமாகப்பற்றினமை விளையாட்டேயன்றி உண்மையன்று. அங்ஙனமே அணைகட்டினதும் அவனுக்கு ஒரு லீலையே. அவன் தேவதைகளுடைய வேண்டுகோளின்மேல் விளையாட்டிற்காக மானிட உருவம் பூண்டான். மன்னவனே! திக்கஜங்களுக்கு முகப் பட்டம்போல ஆபரணமாயிருப்பதும் பாபங்களைப்போக்குவதுமாகிய எவனுடைய பாதாரவிந்தங்களின் புகழை இப்பொழுதும் ஸபைகளில் ரிஷிகள் பாடுகிறார்களோ இந்த்ரன் முதலிய தேவதைகள் குபேராதிகள் பூமியிலுள்ள ராஜாக்கள்ஆகிய இவர்களின் கிரீடங்களால் வணங்கப்பெற்ற பாதாரவிந்தங்களையுடைய அந்த ஸ்ரீராமனை நான் சரணம் அடைகின்றேன். கோஸல தேசத்து ஜனங்களில் ஸ்ரீராமனுல் தொடப்பட்டவர்களும், பார்க்கப்பட்டவர்களும், அவனுடன் கூட உட்கார்ந்தவர்களும், அவனைப் பின்றொடர்ந்தவர்களு

மஹா யோகிகள் பெறும்படியான பதவியைப் பெற்றார்கள். மன்னவனே! ப்ராணித்ரோஹமின்றி இந்த்ரியங்களை வென்ற புருஷன் ஸ்ரீராமசரித்ரத்தைக் கேட்டு மனத்தில் தரித்துக்கொண்டிருப்பானாயின், ஸம்ஸாரத்திற்குக் காரணமான புண்யபாபகர்மங்களால் விடுபடுவான்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:—அந்த ஸ்ரீராமன் எப்படி இருந்தான்? அவன் தன் ப்ராதாக்களிடத்திலும் தேசத்திலுள்ள ஜனங்களிடத்திலும் எப்படி இருந்தான்? அந்த ஜனங்களும் ப்ராதாக்களும் அவனிடத்தில் எப்படி இருந்தார்கள்?

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அந்த ஸ்ரீராமன் பரதனுடைய வேண்டுகோளின்படி ஸிம்ஹாஸனத்தை அங்கீகரித்த பின்பு மூன்று லோகங்களுக்கும் ப்ரபுவான அம்மஹானுபாவன் திசைகளைப் பாதுகாக்கும்பொருட்டு ப்ராதாக்களை நியமித்துத் தான் கௌஸல்யை முதலிய தாய்மார்களுக்கும் மற்றபந்துக்களுக்கும் மற்றவர்களுக்கும் காட்சி கொடுத்துக்கொண்டு அயோத்யாபுரியை ஆண்டுவந்தான். பட்டணத்து ஜனங்கள் தங்கள் ப்ரபுவாகிய ஸ்ரீராமன் வனவாஸத்தினின்றும் மீண்டு வருவதைக் கண்டு மிகவும் ஸந்தோஷம் அடைந்து பட்டணத்தை அலங்கரித்தார்கள். மார்க்கங்கள் சந்தனஜலங்களாலும் ராமன் பட்டாபிஷேகம் பெற்று ராஜ்யமாளுவதைக் கண்டு மிகவும் மதித்திருக்கின்ற யானைகளின் மதஜலங்களாலும் முழுவதும் நனைக்கப்பட்டு ரமணீயங்களாயிருந்தன. உப்பரிகைகளும் கோபுரங்களும் ஸபைகளும் துளஸிமாடம் முதலிய இடங்களும் தேவாலயங்களும் பொற்குடங்கள் வைத்துப் பதாகைகள் நாட்டி அலங்காரம் செய்யப்பெற்றிருந்தன. பாக்குமரங்களும், இலைகளாலும்

குலைகளாலும் தழைத்து மறைந்திருக்கின்ற வாழைமரங் களும் கட்டித் துணிப்பட்டைகளாலும் கண்ணுடிகளா லும் பூமாலைகளாலும் மங்களதோரணங்கள்கட்டப்பெற் றிருந்தன. பிறகு பட்டணத்துஜனங்கள் பூஜைக்கு வேண் டிய த்ரவ்யங்களைக் கையில் எடுத்துக்கொண்டு ஆங்காங் கு ஸ்ரீராமனைக் கிட்டித் 'தேவனே! நீ முன்பு வராஹாவ தாரம் செய்து ப்ரளயத்தில் அழுந்தின பூமியை மேலுக் கெடுத்தனை. அப்படிப்பட்ட நீ இப்பூமியைப் பாதுகாத் து வருவாயாக' என்று ஆசீர்வாதங்களைச் செய்தார்கள். தங்கள் ப்ரபுவாகிய ஸ்ரீராமன் நெடுநாள் கழித்து வந்தி ருப்பதைக் கேட்டு ஆண்பெண்கள் ஆகிய ப்ரஜைகள் அனைவரும் அவனைப் பார்க்க விரும்பி வீடுவாசல்களை யெல்லாம் இருந்தபடியே விட்டு உப்பரிகைகளின்மேல் ஏறி அவனைக் கண்டும் கண்கள் த்ருப்தி அடையப்பெறா மல் அவன்மேல் புஷ்பத்தை இறைத்தார்கள். அந்த ஸ்ரீ ராமபிரான் தன் வம்சத்தில் பிறந்த இக்ஷ்வாகு முதலிய பூர்வ ராஜாக்கள் வாஸம் செய்து வந்ததும் அழிவில்லாத எல்லாக் கருவூலங்களும்அமைந்து ஸம்ருத்தமாயிருப்பது மாகிய தன் க்ருஹத்திற்குள் ஆத்மாநுபவத்தினால் த்ருப்திஅடைந்த மஹாநுபாவர்களான முனிவர்களுக்கு மிகவும் அன்பனுகித், தன் மனத்திற்கினிய செயலுடைய வளும் மிகுந்த அன்புடையவளுமாகிய ஸீதையுடன் க்ரீ டித்துக்கொண்டிருந்தான். அவனுடைய க்ருஹத்தில் போகத்திற்கு வேண்டிய கருவிகள் அனைத்தும் ஸித்தம் செய்யப்பட்டிருந்தன. அவையெல்லாம் விலையுயர்ந்து அளவற்றவைகளாயிருந்தன. அவ்விடத்தில் வாசல்க ளெல்லாம் பவளத்தினால் இயற்றப்பட்ட படிகளுடையன வாகி மிகவும் அழகாயிருந்தன. வைடூர்ய ரத்னமயமான ஸ்தம்பங்கள் வரிசைவரிசையாயிருந்தன. தரையெல்லாம்

இந்த்ர நீலரத்னங்கள் படுக்கப்பெற்று நிர்மலமாயிருந்தன. சுவர்கள் ஸ்படிக ரத்னங்களால் இயற்றப்பட்டுத் தேய்த்துத் துடைப்பதனால் பளபளவென்று ப்ரகாசித்துக்கொண்டிருந்தன. மற்றும், அம்மாளிகை விசித்ரமாகத் தொடுத்த பூமாலைகளாலும் பதாகைகளாலும் வஸ்த்ரங்களாலும் ரத்ன ஸமூஹங்களாலும் ஸூக்ஷ்ம வஸ்த்ரங்களாலும் சைதன்யம்போல் ஜ்வலித்துக்கொண்டிருக்கிற முத்துக்களாலும் போகத்திற்கு வேண்டிய அழகிய கருவிகளாலும் பரிமளமுடைய தூபங்களாலும் தீபங்களாலும் புஷ்பாலங்காரங்களாலும் அலங்காரம் செய்யப்பட்டிருந்தது. அங்குள்ள ஸ்த்ரீகளும் புருஷர்களும் புஷ்பங்களைச் சூடி ஆபரணங்களை அணிந்து தேவதைகள் போன்று உலாவிக்கொண்டிருந்தார்கள். ஸ்ரீராமன் இத்தகையதான அம்மாளிகையில் வஸித்துக்கொண்டிருந்து பலவாயிரம் வர்ஷங்கள் தன் வர்ணாஸ்ரம தர்மங்களைத் தவறாமல் மனுஷ்யர்களால் த்யானிக்கப்பட்ட தளிர்போன்ற பாதங்களுடையவனாகி உரிய காலங்களில் ஸீதையுடன் காமபோகங்களை அநுபவித்துக்கொண்டு வந்தான். பதினொன்றாவது அத்யாயம் முற்றிற்று.

ஸ்ரீராமனுடைய பிள்ளையான குசனுடைய வம்சத்தைக் கூறுதல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஸ்ரீராமனுடைய பிள்ளையாகிய குசனுக்கு அதிதி யென்பவன் பிறந்தான். அவன் பிள்ளை நிஷதன். அவன் பிள்ளை நபன். அவன் பிள்ளை புண்டரீகன். அவன் பிள்ளை க்ஷேமதன்வா. அவன்பிள்ளை தேவானீகன். அவன் பிள்ளை[1] ஹீனன். அவன் பிள்ளை

1. அனீஹனென்று சிலர்.

பாரியாத்ரன். அவன் பிள்ளை பலன். அவன் பிள்ளை சலன். அவன் பிள்ளை வஜ்ரநாபன். அவன் ஸூர்யனுடைய அம்சத்தினால் பிறந்தவன். அவன் பிள்ளை ககணன். அவன் பிள்ளை வித்ருதி. அவன் பிள்ளை ஹிரண்யநாபன். அவன் யோகாசார்யரான ஜைமினியின் சிஷ்யன். கௌஸல்யரான யாஜ்ஞ்யவல்க்ய ரிஷி இந்த ஹிரண்யநாபனிடத்தினின்று யோகமென்று கூறப்படுவதும் பெரிய நன்மையை விளைப்பதும் அஜ்ஞானத்தைப் போக்குவதுமான அத்யாத்ம சாஸ்த்ரத்தைக் கற்றார். ஹிரண்யநாபன்பிள்ளை புஷ்யன். அவன் பிள்ளை த்ருவஸந்தி. அவன பிள்ளை ஸுதர்சனன். அவன் பிள்ளை அக்னிவர்ணன். அவன் பிள்ளை சீக்ரன். அவன் பிள்ளை மருத்து. அவன் யோகத்தினால் சரீரத்தை வென்றவன். அவன் கலாபக்ராமமென்னும் க்ராமத்திற்குச் சென்று இன்னமும் இருக்கிறான். இவன் கலியுகத்தின் முடிவில் அழிந்துபோன ஸூர்யவம்சத்தை மீளவும் பிள்ளை பேரன் முதலிய பரம்பரையினால் தழைக்கும்படி நடத்தப்போகிறான். அவன் பிள்ளை ப்ரஸுஸு. அவன் பிள்ளை ஸந்தி. அவன் பிள்ளை[2] மர்ஷணன். அவன் பிள்ளை[3] ஸுமஹான். அவன் பிள்ளை விஸ்வஸாஹ்யன். அவன் பிள்ளை ப்ருஹத்பலன். அவன் யுத்தத்தில் உன் தந்தையாகிய அபிமன்யுவால் அடியுண்டு முடிந்தான். இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்த இம்மன்னவர்கள் அனைவரும் கடந்தார்கள். இனிமேல் வரப்போகிற இக்ஷ்வாகு வம்சத்தரசர்களைச் சொல்லுகிறேன், கேட்பாயாக. ப்ருஹத்பலனுடைய பிள்ளை ப்ருஹத்ரணன். அவன் பிள்ளை உருக்ஷதன். அவன் பிள்ளை வத்ஸப்ரீதன். அவன் பிள்ளை ப்ரதிவ்யோமன். அவன் பிள்ளை பானு. அவன் பிள்ளை

2. அமர்ஷணனென்று சிலர்.

3. மஹஸ்வானென்று சிலர்.

தேவாகன். அவன் ஸேனைக்கு ப்ரபுவாயிருப்பான். அவன் பிள்ளை ஸஹதேவன். அவன் பிள்ளை ப்ருஹதச்வன். அவன் வீரனாயிருப்பான். அவன் பிள்ளை பானுமான். அவன்பிள்ளை ப்ரதீகாச்வன். அவன் பிள்ளை ஸுப்ரதீகன். அவன் பிள்ளை மருதேவன். அவன் பிள்ளை ஸுநக்ஷத்ரன். அவன் பிள்ளை[4] ருக்ஷகன். அவன் பிள்ளை அந்தரிக்ஷன். அவன் பிள்ளை ஸுதபன். அவன் பிள்ளை அமித்ரஜித்து. அவன் பிள்ளை ப்ருஹத்வாஜி. அவன் பிள்ளை பர்ஹி. அவன் பிள்ளை தனஞ்சயன். அவன் பிள்ளை ரணஞ்சயன். அவன் பிள்ளை ஸ்ருஞ்சயன். அவன் பிள்ளை சாக்யன். அவன் பிள்ளை சுத்தோதன். அவன் பிள்ளை லாங்கலன். அவன் பிள்ளை ப்ரஸேனஜித்து. அவன் பிள்ளை க்ஷுத்ரகன். அவன் பிள்ளை குணன். அவன் பிள்ளை ஸுரதன். அவன் பிள்ளை ஸுமித்ரன். அவன் அந்த வம்சத்திற்குக் கடையாயிருப்பான். இந்த மன்னவர்கள் ப்ருஹத்பலனுடைய வம்சத்தில் பிறக்கப்போகிறார்கள். இந்த இக்ஷ்வாகுவம்சத்தரசர்களின் வம்சம் ஸுமித்ரனோடு முடியப்போகின்றது. கலியுகத்தில் அந்த ஸுமித்ரன் ராஜனாயிருந்தபின்பு இந்த வம்சம் ஸந்ததியின்றி அப்படியே அழியப்போகின்றது. பன்னிரண்டாவது அத்யாயம் முற்றிற்று.

## இக்ஷ்வாகுவின் பிள்ளையாகிய நிமியின் வம்சத்தைக் கூறுதல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இக்ஷ்வாகுவின் பிள்ளையாகிய நிமி ஒருசமயம் யாகம்செய்யத்தொடங்கி வஸிஷ்டரை ருத்விக்காயிருக்கும்படி வேண்டினன். அம்முனிவர் நிமியைப் பார்த்து 'ஓ மன்னவனே! நான் முன்னமே இத்

4. புஷ்கரனென்று சிலர்.

ரனால் யாகம் செய்விக்கும்படி வரிக்கப்பட்டேன். ஆகையால் இந்த்ரனுடைய அந்த யாகத்தை முடித்துவிட்டு வருகின்றேன். அதுவரையில் என்னை எதிர்பார்ப்பாயாக' என்றார். பிறகு நிமி ஒன்றும் பேசாதிருந்தான். அவ்வஸிஷ்ட முனிவரும் இந்த்ரனுக்கு யாகம் செய்விக்கப் போனார். அப்பொழுது நிமி ப்ரக்ருதி புருஷ ஈஶ்வரர்களென்கிற தத்வங்களின் உண்மையை அறிந்தவனாகையால் மனுஷ்ய சரீரம் நிலையற்றதென்பதை ஆராய்ந்து அம்முனிவர் வருவதற்கு முன்னமே வேறு ருத்விக்குக்களை ஏற்படுத்திக்கொண்டு யாகம் செய்யத் தொடங்கினான். இக்ஷ்வாகுவம்சத் தரசர்களுக்கு ஆசார்யராகிய வஸிஷ்ட முனிவர் இந்த்ரனுடைய யாகத்தை நிறைவேற்றி வந்து சிஷ்யனாகிய நிமிமன்னவன் செய்த அக்ரமத்தைக் கண்டு 'தன்னைத் தானே பண்டிதனாகப் பாவித்துக்கொண்டிருக்கிற நிமியின் சரீரம் அவனை விட்டுப் போகக்கடவது' என்றுசபித்தார். அதைக்கேட்டு நிமியும் தர்மத்தை அநுஸரித்திருக்கின்ற குருவாகிய வஸிஷ்டருக்குப் 'பணத்தாசையால் தர்மத்தை அறியாதிருக்கின்ற உம்முடைய தேஹமும் உம்மைவிட்டுப் போகட்டும்' என்று பதில் சாபம் கொடுத்தான். இங்ஙனம் சொல்லி யோகமார்க்கத்தில் ஸமர்த்தனாகிய நிமி தன் தேஹத்தைத் துறந்தான். அங்ஙனமே எங்கள் பாட்டனாராகிய வஸிஷ்டரும் தேஹத்தைத் துறந்து மித்ராவருணர்களுக்கு ஊர்வசியிடத்தில் பிள்ளையாகப் பிறந்தார். பிறகு சிறப்புடைய முனிவர்கள் துறக்கப்பட்ட நிமியின் தேஹத்தைப் பரிமளவஸ்துக்கள் சேர்த்த ஸுகந்த தைலத்தில் வைத்து ஸத்ரயாகத்தை முடித்துக் கடைசியில் அவ்விடம் வந்திருக்கின்ற தேவதைகளைப் பார்த்து 'ஸமர்த்தர்களான நீங்கள் அருள் புரிவீர்களாயின் இந்த நிமி

மன்னவனுடைய தேஹம் ஜீவிக்குமாக' என்று வேண்டினார்கள். தேவதைகள் அப்படியே ஆகட்டுமென்றார்கள். அதற்கு நிமி 'எனக்கு மீளவும் தேஹஸம்பந்தம் வேண்டியதில்லை. தேஹஸம்பந்தம் நேர்ந்தால் அதை மீளவும் விடவேண்டியதாயிருக்கின்றது. அதில் பலவருத்தங்கள் உண்டு. ஆனதுபற்றியே முனிவர்கள் இந்தச் சரீரபந்தத்தை விரும்புகிறதில்லை. ஸம்ஸாரத்தினின்றும் விடுபட விரும்பிப் பரமபுருஷனுடைய பாதாரவிந்தங்களையே பணிகின்றார்கள். ஆகையால் நான் துக்கங்களுக்கிடமான சரீரத்தைப் பெறவிரும்பமாட்டேன். ஜலத்தில் மத்ஸ்யங்களுக்கு ம்ருத்யு ஸர்வகாலமும் தொடர்ந்திருப்பதுபோலச் சரீரஸம்பந்தமுடைய ஜீவனுக்கு ம்ருத்யு ஸர்வகாலமும் தொடர்ந்துகொண்டேயிருக்கின்றது. ஆகையால் நான் சரீரத்தை ஏற்றுக்கொள்ளமாட்டேன்' என்றான். அதைக்கேட்ட தேவதைகள் 'நிமி தேஹமில்லாமலே ஸூக்ஷ்மதேஹத்துடன் இஷ்டப்படி ப்ராணிகளின் கண்களில் மூடுவது திறப்பது இவைகளை நடத்திக்கொண்டிருப்பானாக. இதனால் நீங்கள் விரும்பினபடி நிமியும் பிழைத்திருப்பான். அவனுக்கும் இஷ்டப்படி ஸ்தூலசரீர ஸம்பந்தமும் நேராதிருக்கும்' என்றார்கள். அதைக் கேட்டு மஹர்ஷிகள் ஜனங்களுக்கு அரசனில்லாமையால் நேரும் பயத்தை ஆலோசித்து நிமியின் சரீரத்தைக் கடைந்தார்கள். அதினின்றும் ஒரு குமாரன் பிறந்தான். அற்புதமாகப் பிறந்தானாகையால் அவன் ஜனகனென்று பெயர்பெற்றான். ஜீவனில்லாத தேஹத்தினின்றும்பிறந்தானாகையால்விதேஹனென்றும் கடைந்ததனால் பிறந்தானாகையால் மிதிலனென்றும்அவன் வழங்கிவந்தான். அவனால் நிர்மிக்கப்பட்ட பட்டணமும் மிதிலையென்று பெயர் பெற்றது. அந்த மிதிலனிடத்தி

னின்றும் உதாவஸு பிறந்தான். அவன்பிள்ளை நந்திவர்த்தனன். அவன் பிள்ளை ஸுகேசன். அவன் பிள்ளை தேவராதன். அவன்பிள்ளை ப்ருஹத்ரதன். அவன் பிள்ளை மஹாவீர்யன். அவன்பிள்ளை ஸுத்ருத்து. அவன்பிள்ளை த்ருஷ்டகேது. அவன் பிள்ளை ஹர்யஸ்வன். அவன்பிள்ளை மரு. அவன் பிள்ளை ப்ரதிந்தகன். அவன்பிள்ளை க்ருதரதன். அவன்பிள்ளை தேவமீடன். அவன்பிள்ளை விக்ருதன். அவன் பிள்ளை மஹாத்ருதி. அவன் பிள்ளை க்ருதிராதன். அவன் பிள்ளை மஹாரோமன். அவன் பிள்ளை ஸ்வர்ணரோமன். அவன் பிள்ளை ஹ்ரஸ்வரோமன். அவன் பிள்ளை ஸீரத்வஜன். அவன் யாகம் செய்யும்பொருட்டு யாக பூமியைக் கலப்பையினால் உழுதுகொண்டிருக்கையில் கலப்பையின் நுனியினின்றும் ஸீதை உண்டானாள். அதைப்பற்றி அவன் ஸீரத்வஜனென்று பெயர்பெற்றான். அவன்பிள்ளை குசத்வஜன். அவன் பிள்ளை தர்மத்வஜன். மன்னவனே! தர்மத்வஜனுக்கு க்ருதத்வஜனென்றும் மிதத்வஜனென்றும் இரண்டுபிள்ளைகள். அவர்களில் க்ருதத்வஜனுடைய பிள்ளை கேசித்வஜன். மிதத்வஜனுடைய பிள்ளை காண்டிக்யன். மன்னவனே! க்ருதத்வஜனுடைய பிள்ளையாகிய கேசித்வஜன் ப்ரஹ்மவித்யையில் நிபுணனாயிருந்தான். மிதத்வஜனுடைய பிள்ளையாகிய காண்டிக்யன் கர்மயோகத்தின் உண்மையறிந்தவன். அவன் கேசித்வஜனிடத்தினின்றும் பயந்து ஓடிப்போனான். கேசித்வஜனுடைய பிள்ளை பானுமான். அவன் பிள்ளை சதத்யும்னன். அவன் பிள்ளை சுசி. அவன் பிள்ளை ஸனத்வாஜன். அவன் பிள்ளை ஊர்த்வகேது. அவன் பிள்ளை அஜன். அவன் பிள்ளை புருஜித்து. அவன்பிள்ளை அரிஷ்டநேமி. அவன் பிள்ளை ஸ்ருதாயு. அவன் பிள்ளை பார்ஸ்வகன். அவன் பிள்ளை சித்ரரதன். அவன்பிள்ளை க்ஷேமாத்ரி. அவன் மிதிலாபட்டணத்

தைச் செழிப்பாக ஆண்டுவந்தான். அவன் பிள்ளை ஹேமரதன். அவன் பிள்ளை க்ருத்யரதன். அவன் பிள்ளை உபகுரு. அவன் பிள்ளை உபகுப்தன். அவன் அக்னியின் அம்சத்தினால் பிறந்தவன். அவன் பிள்ளை ஸ்வஸனன். அவன் பிள்ளை ஸுவர்ச்சஸ்ஸு. அவன் பிள்ளை ஸுபூஷணன். அவன் பிள்ளை ஸ்ருதன். அவன் பிள்ளை ஜயன். அவன் பிள்ளை விஜயன். அவன் பிள்ளை த்ருதன். அவன் பிள்ளை சுனகன். அவன் பிள்ளை வீதிஹவ்யன். அவன் பிள்ளை த்ருதி. அவன் பிள்ளை விபுலாஸ்வன். அவன் பிள்ளை க்ருதி. அவன் பிள்ளை மஹாவசி. ராஜனே! இவர்களெல்லோரும் மிதிலனுடைய வம்சத்தில் பிறந்தவர்கள்; மிதிலாபட்டணத்தை ஆண்டுவந்தவர்கள்; ஆத்ம வித்யையில் ஸமர்த்தர்கள். இவர்கள் இல்லறவாழ்க்கையில் இருப்பினும் யோகேஸ்வரனை பகவானுடைய அநுக்ரஹத்தினால் ஸுகதுக்காதிகளினின்றும் விடுபட்டு ஆத்மாநந்தத்தில் ஆழ்ந்திருந்தார்கள். பதின்மூன்றாவது அத்யாயம் முற்றிற்று.

ஸோம வம்சத்தின் வரலாறு. ப்ருஹஸ்பதியின் பத்னியான தாரையிடத்தில் பிறந்த புதனுக்குப் புரூரவன் பிறந்ததும், அவன் ஊர்வசியிடத்தில் ஆறுபிள்ளைகளைப் பெறுவதும்

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மன்னவனே! இனிமேல் ஸோமவம்சத்தைச் சொல்லுகிறேன், கேட்பாயாக. அது மிகவும் பரிசுத்தமானது. இந்தவம்சத்தில் புண்யமான புகழுடைய [1] ஐலன் முதலிய மன்னவர்கள் பிறந்தார்களென்று சொல்லுகிறார்கள். ஆயிரந்தலைகளுடன் அநிருத்தரூபியாய்க் கர்ப்போதகத்தில் சயனித்துக் கொண்டிருந்த பரம புருஷனுடையநாபியாகிறமடுவினின்றும் ஒருதாமரைமலர்

1. புரூரவன்.

உண்டாயிற்று. அதினின்று ப்ராஹ்மதேவன் உண்டானுன். அந்த ப்ராஹ்மதேவனுக்கு அத்ரிமஹர்ஷி பிள்ளையாகப்பிறந்தார். அவர் குணங்களில் தந்தையோடொத்தவர். அவருடைய ஆநந்தக்கண்ணீரினின்று ஸோமன் பிறந்தான். அவன் அம்ருதமயனுயிருந்தான். ப்ராஹ்மதேவன் அவனை ப்ராஹ்மணர்களுக்கும் ஓஷதிகளுக்கும் ஆம்பல் முதலியவற்றிற்கும் ப்ரபுவாக ஏற்படுத்தினன். அவன் மூன்று லோகங்களையும் ஜயித்து ராஜஸூயயாகம் செய்தான். அவன் ப்ருஹஸ்பதியின் பத்னியாகிய தாரையென்பவளைக் கொழுப்பினுல் பலாத்காரமாக அபகரித்தான். தேவதைகளுக்குக் குருவான ப்ருஹஸ்பதி தன் பத்னியான தாரையை விடும்படி அடிக்கடி வேண்டியும் ஸோமன் கொழுப்பினுல் விடாமலேயிருந்தான். அப்பொழுது அதைப்பற்றித் தேவதைகளுக்கும் தானவர்களுக்கும் சண்டை உண்டாயிற்று. சுக்ரன் ப்ருஹஸ்பதியிடத்தில் த்வேஷத்தினுல் அஸுரர்களுடன் சேர்ந்து ஸோமனைத் தன் பக்ஷத்தில் உட்படுத்திக்கொண்டான். ருத்ரன் பூதகணங்களோடுகூடி ப்ருஹஸ்பதியை ஸ்நேஹத்தினுல் அங்கீகரித்தான். இந்த்ரன் ஸமஸ்த தேவகணங்களோடுங்கூடி ப்ருஹஸ்பதியை அநுஸரித்தான். இப்படியிருக்கையில் தாரையைப் பற்றித் தேவதைகளுக்கும் அஸுரர்களுக்கும் பெரிய யுத்தம் உண்டாயிற்று. அதில் பல தேவதைகளும் பல அஸுரர்களும் அழிந்து போனுர்கள். அப்பொழுது அங்கிரஸ்ஸு ஸோமனை விரட்டி ப்ராஹ்மதேவனிடம் விண்ணப்பம் செய்தார். பிறகு ஸோமன் அதற்குப் பயந்து தாரையை அவனுடைய பர்த்தாவுக்குக் கொடுத்துவிட்டான். அப்பொழுது பர்த்தாவாகிய ப்ருஹஸ்பதி தன் பார்யை கர்ப்பிணியாயிருப்பதை அறிந்து 'அடிமதிகேடீ! என் க்ஷேத்ரமா

கிய உன்னிடத்தில் பிறர் ஆதானம் செய்த கர்ப்பத்தைச் சீக்ரத்தில் விடுவாயாக. நீ இந்தக் கர்ப்பத்தை விட்டால் தான், உன்னை நான் பஸ்மம் செய்யாதிருப்பேன்; இல்லாதபக்ஷத்தில் ஸ்த்ரீயென்பதையும் பாராமல் உன்னை நான் பஸ்மம் செய்துவிடுவேன்' என்றார். அப்பால் தாரை வெட்கித்துத் தங்கத்தின் ஒளிபோன்ற ஒளியுடைய பிள்ளையை ப்ரஸவித்தாள். அப்புதல்வனி டத்தில் ப்ருஹஸ்பதி ஸோமன் இருவரும் மனவிருப்ப முற்று 'இவன் என்னுடையவன். உன்னுடையவன ன்று. உன்னுடையவனன்று" என்று ஒருவரோடொரு வர் விவாதப்பட்டுக் கொண்டிருக்கையில், தேவதைகளும் ரிஷிகளும் தாரையைக் கேட்டார்கள். அவள் வெட் கத்தினால் ஒன்றும் சொல்லவேயில்லை. அப்பால் அப் புதல்வன் கோபித்துத் தாரையை நோக்கிக் 'கெட்ட நடத்தையுடையவளே! வீண்வெட்கத்தை ஏற்றுக்கொ ண்டு ஏன் உண்மையைச் சொல்லாதிருக்கின்றனை? இப் பொழுது, நான் யாருடைய பிள்ளை? அதை எனக்குச் சொல்வாயாக. உன் தோஷத்தை மறைக்காமல் வெளியிடு வாயாக' என்றான். இங்ஙனம் அப்புதல்வன் தாயை விரட்டி வைவதைக் கண்டு ப்ரஹ்மதேவன் அந்தத் தாரையை ஏகாந்தத்தில் அழைத்து நல்வார்த்தை சொல்லி 'இவன் யாருடைய புதல்வன்?' என்று வினவி னான். அவளும் மெல்லமெல்லச் சந்த்ரனுடையவனென் றாள். பிறகு ஸோமன் ப்ரஹ்மாவின் அநுமதியினால் அப்புதல்வனை அங்கீகரித்தான். மன்னவனே! சந்த்ரன் அப்புதல்வனுடைய ஆழ்ந்த மதியைக் கண்டு களித்தா னாகையால் அவனுக்கு ப்ரஹ்மதேவன் புதனென்று பெய ரிட்டான். அந்தப் புதனிடத்தினின்று புரூரவஸ்ஸு பிறந்தான். ஸுத்யும்னன் ஒருவனத்தில் புகுந்து பெண்

ணுருவம் பெற்று இளையென்று பெயர்பூண்டிருந்தா னென்றும், அவளைக் கண்டு புதன் காமவிகாரம் கொண்டு புணர்ந்து ஒருபுதல்வனைப் பெற்றானென்றும் முன்னமே மொழிந்தேனல்லவா? அவனே இந்தப் புரூரவஸ்ஸு. இந்த்ரபவனத்தில் ஊர்வசி அந்தப் புரூரவஸ்ஸினுடைய ஸௌந்தர்யம் ஔதார்யம் சீலம் செல்வம் பராக்ரமம் இக் குணங்களையும் மற்றுமுள்ள காம்பீர்யம் முதலிய பல குணங்களையும் நாரதர்மூலமாய்க் கேட்டுத் தெய்வமடந் தையாகிய அவ்வூர்வசி மித்ராவருணர்களின் சாபத்தி னால் மனுஷ்யப்பெண்ணாய்ப் பிறக்கவேண்டியவளாதலால் மன்மதபாணங்களால் அடியுண்டு வருந்தி அந்தப் புரூர வஸ்ஸின் அருகாமைக்கு வந்தாள். மடந்தையர்மணி யான அந்த ஊர்வசி உருவங்கொண்ட மன்மதன் போல மிக்க ஸுந்தரனும் புருஷர்களிற் சிறந்தவனுமாகிய புரூரவஸ்ஸைக் கண்டு தைர்யத்தை அவலம்பித்து அவ னைக் கிட்டினாள். பிறகு அம்மன்னவன் அம்மடந்தையை நோக்கி ஸந்தோஷத்தினால் கண்கள் மலர்ந்து மயிர்க் கூச்சம் உண்டாகப்பெற்று இனிய உரைகளுடன் அந்தத் தெய்வமடந்தையைக் குறித்து மொழிந்தான்.

புரூரவஸ்ஸு சொல்லுகிறான்:—சிறந்த அழகுடையவ ளே! உனக்கு நல்வரவா? உட்காருவாயாக. நான் நீ சொன் னபடி செய்ய ஸித்தமாயிருக்கிறேன். உனக்கு நானென்ன செய்யவேண்டும்? நீ என்னுடன் கலந்திருப்பாயாக. நமக் குப் பலவாண்டுகள் ப்ரீதி மாறாது நடந்துவருமாக.

ஊர்வசி சொல்லுகிறாள்:—அழகனே! உன்னிடத் தில் எந்த மடந்தையின் மனமும் கண்ணும் பற்றாது? எல்லாருடைய மனமும் கண்ணும் உன்னிடத்திலிருந்து மீண்டுபோகமுடியாது. மதியுடைய மாது உன் மார் பைப் புணர விரும்பிப் பெறுவாளாயின், அதினின்று

என்றும் மீளமாட்டாள். ஸௌந்தர்ய லக்ஷ்மி விருப்பத்துடன் உன் சரீரத்தை அடைந்து நழுவாதிருக்கிறாள். வெகுமதி யளிக்கவல்ல மன்னவனே! இந்த ஆடுகளை உன்னிடத்தில் வைக்கிறேன். இவற்றை நீ என் பிள்ளைகளைப்போலப் பாதுகாத்துவரவேண்டும். இதுவே நீ எனக்குச் செய்யும் வெகுமதி. நான் உன்னுடன் கலந்து விளையாடலுற்றிருப்பேன். எவன் புகழத் தகுந்தவனோ, அவனே மடந்தையர்களுக்கு விரும்பத்தகுந்த மணவாளனாவான். ஓ வீரனே! நான் அம்ருதத்தைப் பக்ஷிப்பேனேயன்றி மற்றவற்றைப் பக்ஷிக்கமாட்டேன். மைதுனகாலம் தவிர மற்ற எக்காலத்திலாயினும் நீ ஆடையின்றி எனக்குப் புலப்படுவாயாயின், அப்பொழுதே நான் புறப்பட்டுப் போய்விடுவேன்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஆழ்ந்த மதியுடைய புரூரவமன்னவன் அதற்கு அப்படியேயென்று ஒப்புக்கொண்டான். மற்றும், அவன் அத்தெய்வமடந்தையை நோக்கி 'உன்னுடைய அழகை என்னென்று சொல்லுவேன்? ஆ! இஃதென்ன ஆச்சர்யம்! உன் கருத்தும் அப்படியே ஆச்சர்யமாயிருக்கின்றது. உன் அழகு கருத்து ஆகிய இவையிரண்டும் மனுஷ்யலோகத்தையெல்லாம் மதிமயங்கச் செய்கின்றன. இத்தகைய தெய்வமடந்தையான நீ, தானே வந்திருக்கையில் எவன்தான் உன்னைப் பணியமாட்டான்?' என்று புகழ்ந்தான். அப்பால் உரியபடி விளையாடல்களை விளைக்கின்ற அந்த ஊர்வசியுடன் புருஷஶ்ரேஷ்டனாகிய புரூரவமன்னவன் தேவதைகள் விளையாடுகின்ற சைத்ரரதம் முதலிய உத்யான வனங்களில் இஷ்டப்படி விளையாடிக்கொண்டிருந்தான். தாமரைத்தாதின் பரிமளம்போன்ற பரிமளமுடைய அந்த ஊர்வசியுடன் ஓயாது விளையாடிக்கொண்டிருக்கிற அம்

மன்னவன் அவளுடைய முகத்தின் வாஸனையால் வஞ்சிக்கப்பட்டுப் பலவர்ஷங்கள் அதிலேயே ஸந்தோஷமுற்றிருந்தான். பிறகு ஒருகால் தேவேந்த்ரன் 'என்னுடைய மண்டபம் ஊர்வசி இல்லாமையால் எனக்கு அழகாகத் தோன்றவில்லை. ஆகையால் நான் அவளை வரவழைக்க வேண்டும்' என்று தனக்குள் விசாரித்து அவளை அழைத்துக்கொண்டு வருவதற்காகக் கந்தர்வர்களை அனுப்பினான். அந்தக் கந்தர்வர்கள் நடுராத்ரியில் இருள் மூடி எல்லோரும் உறக்கந் தலைக்கொண்டிருக்கையில் தெரியாமல் வந்து ஊர்வசி புரூரவமன்னவனிடத்தில் பாதுகாக்கும்படி வைத்திருந்த ஆடுகளை மாயையினால் பறித்துக்கொண்டு போனார்கள். ஊர்வசி தன் பிள்ளைகளைப்போல அபிமானித்திருந்த அந்த ஆடுகள் கந்தர்வர்களால் பறியுண்டு கதறுகையில், ஊர்வசி அதைக் கேட்டு 'ஐயோ! பாழானேனே! திறமையற்றவனும் நபும்ஸகனும் தன்னை வீரனாக வீரனென்று அபிமானித்திருப்பவனுமாகிய இந்தக் கணவனால் நான் பாழானேன். நாதனென்று வீண்பெயர்பூண்ட இம்மன்னவனை நான் நம்பியிருக்கையில், என் குழந்தைகளைத் திருடர் பறித்துக்கொண்டு போனார்களே! நான் இந்தத் திறமையற்ற புருஷனை நம்பிப் புதல்வர்களை இழக்கலானேனே. பெண்பிள்ளை வெளிப்படப் பயந்து இரவும் பகலும் படுத்திருப்பது போல, இப்புருஷனும் படுத்திருக்கிறானே. (என்னைச் சீக்ரம் விடுவிடு. அப்புறம் போ. என்னுடம்பில் சுற்றியிருக்கின்ற உன் கைகளை எடுப்பாயாக. இவன் என்னை விட முடியாமல் பயந்து பெருவிருப்பத்துடன் தொடர்ந்து வருகிறான். இவன் என்ன புருஷனோ?)' என்றாள். இங்ஙனம் வாக்குக்களாகிற பாணங்களால் அடியுண்டு மாவெட்டிகளால் அடியுண்ட யானைபோன்ற அந்தப் புரூரவ

மன்னவன் கோபமுற்று அரையில் ஆடையின்றிக் கத்தியை எடுத்துக்கொண்டு ராத்ரியில் புறப்பட்டோடினான். அப்பொழுது அக்கந்தர்வர்கள் ஆடுகளை விட்டு மின்னல்கள்போல மின்னிப் போனார்கள். பிறகு அம்மன்னவன் ஆடுகளை ஓட்டிக்கொண்டுவருகையில், ஊர்வசி அவன் அரையில் ஆடையின்றியிருக்கக் கண்டு தான் செய்த ஏற்பாட்டிற்கு விபரீதமாக நடந்தானென்று புறப்பட்டுப் போனாள். பிறகு ஐலனென்னும் பேருடைய புரூரவன் படுக்கையில் பத்னியைக் காணாமல் வருந்தி அவளிடத்திலேயே மனம் செல்லப்பெற்றுத் "தைர்யமின்றிச் சோகித்துக்கொண்டு பித்தம பிடித்தவன்போலப் பூமியெல்லாம் சுற்றினான். இங்ஙனம் சுற்றிக்கொண்டிருக்கின்ற அம்மன்னவன் குருக்ஷேத்ரத்தில் ஸரஸ்வதி நதிக்கரையில் ஏகாந்தத்தில் அந்த ஊர்வசியையும் மற்றும் அவள் ஸகிகள் ஐந்துபேர்களையும் கண்டு களிப்புற்று முகம் மலரப்பெற்று இங்ஙனம் அழகாக மொழிந்தான்.

புரூரவ மன்னவன் சொல்லுகிறான்:—அடி. அன்பிற்கிடமான என் மனைவி! நில் நில். என்னைப் பயங்கரமான துக்கஸாகரத்தில் தள்ளவேண்டாம். இஃது உனக்குத் தகாது. இன்னும் நம்முடைய ரஹஸ்யப்பேச்சுக்கள் முடியவில்லையே. நாம் கூடியிருந்து வேடிக்கையாகப் போவோம். ஓ தெய்வமடந்தையே! உனக்காக அழகிய என் தேஹத்தை இவ்வளவு தூரம் இழுத்துக்கொண்டு வந்தேன். இஃது இவ்விடத்தில் விழுந்துபோகின்றது. இனி இதைச் செந்நாய்களும் கழுகுகளும் பக்ஷிக்கப் போகின்றன. நீ அருள் புரியாது போவாயாயின், இப்படியே நடக்கும். இது நிச்சயம்.

ஊர்வசி சொல்லுகிறாள்:—நீ வீண்ப்ரதிஜ்ஞை செய்தவனாகாதே. தீரனாயிரு. மாணம் அடையாதே. இச்செந்

நாய் முதலியன உன் சரீரத்தைப் பக்ஷிக்கவேண்டாம். எங்கும் ஸ்த்ரீகளுக்கு ஸ்நேஹம் நிலைநின்றிராது. ஸ்த்ரீகளின் ஹ்ருதயம் செந்நாய்களின் ஹ்ருதயம் போன்றதே. அவர்களுக்குச் சிறிதும் மனஇரக்கம் கிடையாது. அவர்கள் கொடுந்தன்மை யுடையவர்கள்; பொறுமையற்றவர்கள். ஸாஹஸமென்றால் அவர்களுக்கு மிகவும் ப்ரியமாயிருக்கும். தங்கள் மனத்திற்கு இஷ்டமான கார்யத்தை நிறைவேற்றுவதற்காக எப்படிப்பட்ட ஸாஹஸ கார்யத்தையும் செய்வார்கள். ஸ்வல்ப ப்ரயோஜனத்திற்காகத் தம்மை நம்பியிருக்கின்ற கணவனையும் ப்ராதாவையுங் கூட வதிப்பார்கள். தங்கள் அபிப்ராயத்தை அறியாத மூடர்களிடத்தில் தமக்குப் பெரிய விஸ்வாஸம் உள்ளது போல அபிநயித்து ஸ்நேஹத்தைத் துறந்து மணவாளனைப் புதிது புதிதாகத் தேடுவார்கள்; கள்ள புருஷனை விரும்புந்தன்மை யுடையவர்கள். தங்கள் நெஞ்சில்தோன்றினபடியே செய்வார்களன்றி ஒருவர்க்கும் அடங்கமாட்டார்கள். ஆகையால் நீ என் ஸ்நேஹத்தைத் துறப்பாயாக. காதலனே! ஒரு ஸம்வத்ஸரம் கழிந்தபின்பு நீ என்னுடன் ஒரு ராத்ரி கூடியிருப்பாய். அப்பொழுது நமக்கு இன்னம் சில பிள்ளைகள் பிறக்கப் போகின்றன.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அம்மன்னவன் அவளுடைய வார்த்தையைக் கேட்டு அவள் கர்ப்பிணி யென்பதை அறிந்து தன் பட்டணத்திற்குப் போனான். மீளவும் ஓராண்டு கழிந்த பின்பு ஊர்வசி அம்மன்னவனிடம் வந்தாள். பிறகு புரூரவமன்னவன் வீரனான புத்ரனுடன் வந்திருக்கின்ற ஊர்வசியைக் கண்டு ஸந்தோஷம் அடைந்து அவளுடன் ஓரிரவு கலந்திருந்தான். மீளவும் தன்னை விட்டுப் பிரியமுடியாமல் வருந்துகின்ற அம்மன்னவனை நோக்கி ஊர்வசி மொழிந்தாள்.

ஊர்வசி சொல்லுகிறாள்:—மன்னவனே! நீ இந்தக் கந்தர்வர்களைத் துதித்து அருள்புரியச் செய்வாயாக. அவர்கள், நீ என் லோகத்திற்கு வரும்படியான உபாயத்தை உனக்குத் தெரிவிப்பார்கள்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அங்ஙனமே அம்மன்னவன் கந்தர்வர்களை ஸ்தோத்ரம் செய்தான். அவர்களும் அதற்கு ஸந்தோஷம் அடைந்து அக்னிஸ்தாலியை (அக்னியாதானம் செய்வதற்குரிய ஒரு பாத்ரத்தை)க்கொடுத்தார்கள். அவன் ஊர்வசியைப் பெறுதற்கு ஸாதனமாகக் கொடுத்த அந்த அக்னிஸ்தாலியை ஊர்வசியாகவே நினைத்து வனத்தில் திரிந்துகொண்டிருந்து மறந்து அந்தப் பாத்ரத்தை அவ்விடத்திலேயே வைத்து விட்டு வீட்டிற்குப் போய் இரவில் தினந்தோறும் அந்த ஸ்தாலியை நினைத்துக் கொண்டு அங்கு வஸித்திருந்தான். பிறகு த்ரேதாயுகம் ஆரம்பித்தது. அப்பொழுது அப்புரூரவனுடைய மனத்தில் யஜ்ஞாதி கர்மங்களை அறிவிக்கின்ற வேதங்கள் தோற்றின. அப்பால் அம்மன்னவன் ஸ்தாலியை வைத்த இடத்திற்குப் போய் அங்கு வன்னிமரத்தினிடையில் அரசமரம் முளைத்திருக்கக் கண்டு, தன் மனத்தில் தோன்றின வேதவாக்யத்தில் வன்னிமரத்தினின்று அக்னியைக் கடைந்தெடுப்பதென்னும் பொருள் தெரியப்பெற்று அந்த வன்னிமரத்தினிடையில் முளைத்திருக்கின்ற அரசமரத்தை அக்னியைக் கடைந்தெடுப்பதற்கு உரிய கருவியாகவும் ஆராய்ந்து, அந்த அரசமரத்தினால் அக்னியைக் கடைவதற்குரிய இரண்டு கட்டைகளை ஏற்படுத்திக்கொண்டு ஊர்வசியின் லோகத்தைப் பெறவேண்டுமென்னும் விருப்பத்தினால் மந்த்ரத்தை உச்சரித்துக்கொண்டு கீழரணிக்கட்டையை ஊர்வசியாகவும் மேலரணிக்கட்டையைத் தானாகவும் இர

ண்டிற்கும் இடையிலுள்ள கட்டையைப் பிள்ளையாகவும் த்யானித்துக்கொண்டு கடைந்தான். அவன் கடைந்தத ஞல் அக்னி உண்டாயிற்று. அது போக்ய வஸ்துக்களை யெல்லாம் விளைவிக்கவல்லது. அவ்வக்னி வேதத்தில் விதிக்கப்பட்ட ஆதானமென்னும் ஸம்ஸ்காரம் செய்யப் பெற்று ஆஹவனீயம் கார்ஹபத்யம் தக்ஷிணம் என்று மூன்று வகையாகப் பிரிந்தது. அதை அம்மன்னவன் தனக்குப் புண்யலோகத்தை விளைக்கும் பிள்ளையாக ஏற் படுத்திக்கொண்டான். அவன் ஊர்வசிலோகத்தைப் பெற விரும்பி அவ்வக்னியிஞல் யாகபலன்களைக் கொடுப்பவ னும் ஸமஸ்த தேவதாஸ்வரூபனும் தன்னைப் பற்றினுரு டைய வருத்தங்களைப் போக்குந்தன்மையனும் இந்த்ரியங் களுக்கு விஷயமாகாதவனுமாகிய பகவானை ஆராதித் தான். முன்பு க்ருதயுகத்தில் ஸமஸ்த வர்ணங்களுக்கும் மூலகாரணமான ப்ரணவமொன்றே வேதமாயிருந்தது. நாராயணனொருவனே தெய்வமாயிருந்தான். மற்றொரு வனும் தெய்வமாயிருந்ததில்லை. லௌகிகமான அக்னி யொன்றே இருந்தது. ஹம்ஸர்களென்கிற ஒருவர்ணமே இருந்தது. மன்னவனே! த்ரேதா யுகத்தின் ஆரம்பத்தில் புரூரவனிடத்தினின்று மூன்று வேதங்கள் உண்டாயின. (க்ருதயுகத்தில் அனைவரும் ஸத்வகுணம் தலையெடுத்திரு ந்தார்கள் த்ரேதாயுகத்தில் பெரும்பாலும் ரஜோகுணம் தலையெடுத்திருந்தமையால் வேதங்கள் முதலியன பல வாறு பிரிந்து புரூரவன் மூலமாய்க் கர்மமார்க்கம் வெளி யாயிற்று). பிறகு அந்தப் புரூரவஸ்மன்னவன் தான் பிள்ளை யாக அபிமானித்த அக்னியின் மூலமாகக் கந்தர்வலோகத் தை அடைந்தான். பதிஞன்காவது அத்யாயம் முற்றிற்று.

புரூரவனுடைய வம்சமும், பரசுராமன் கார்த்தவீர்யார்ஜுனனைக் கொன்ற வ்ருத்தாந்தமும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—புரூரவனுக்கு ஊர்வசியின் கர்ப்பத்தினின்றும் ஆயு ச்ருதாயு ஸத்யாயு ரயன் விஜயன் ஜயன் என்று ஆறு பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களில் ச்ருதாயுவின் பிள்ளை வஸுமான். ஸத்யாயுவின் பிள்ளை ச்ருதஞ்சயன். ரயனுடைய பிள்ளை ஏகன். ஜயனுடைய பிள்ளை அமிதன். விஜயனுடைய பிள்ளை பீமன். அவன் பிள்ளை காஞ்சனன். அவன் பிள்ளை ஹோத்ருகன். அவன் பிள்ளை ஜஹ்னு. அவன் கங்கையைக் கண்டூஷம் செய்து குடித்துவிட்டானென்று ப்ரஸித்தம். அவன் பிள்ளை பூரு. அவன் பிள்ளை பலாகன். அவன் பிள்ளை அஜகன். அவன்பிள்ளை குசன். குசனுக்குக் குசாம்பன் மூர்த்தயன் வஸு குசநாபன் என்று நான்கு பிள்ளைகள். அவர்களில் குசாம்பனுடைய பிள்ளை காதி. காதிக்கு ஸத்யவதியென்று ஒரு பெண் பிறந்தாள். அவளை ப்ராஹ்மணச்ரேஷ்டரும் பார்க்கவவம்சத்தில் பிறந்தவருமான ருசீகர் தனக்குக் கொடுக்கும்படி வேண்டினார். அப்பால் காதி அவ்வரன் தன் புதல்விக்கு அநுரூபனுமிராமையை ஆலோசித்துப் பார்க்கவரான அந்த ருசீகரைப் பார்த்து மொழிந்தான்.

காதி சொல்லுகிறான்:—ஒருபக்கத்தில் கறுத்தகாதுடையவைகளும் சந்த்ரனையொத்த ஒளியுடையவைகளுமான ஆயிரங் குதிரைகளைக் கன்யாசுல்கமாகக் கொடுக்க வேண்டும். எங்கள் கன்னிகைக்கு இதுவும் போராது. நாங்கள் கௌசிகர்கள். ஆகையால் எங்கள் ஏற்றத்தை ஆராய்ந்து அதற்கு உரியபடி நடப்பீராக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் சொல்லப்பெற்ற அந்த ருசீகர் காதியின் கருத்தை அறிந்துகொண்டு

வருணனிடம் சென்று அவன் சொன்ன லக்ஷணங்கள் அமைந்த குதிரைகளை யாசித்து வாங்கிக்கொண்டுவந்து கொடுத்து அழகிய முகமுடைய ஸத்யவதியை மணம்புரிந்தார். பிறகு ஒரு காலத்தில் அந்த ருசீகரிஷி பிள்ளை வேண்டுமென்னும் விருப்பத்தினால் பத்னியாலும் மாமியாராலும் வேண்டப்பெற்று ப்ராஹ்மண க்ஷத்ரியர்களென்கிற இரண்டுவர்ணங்களுக்குரிய இருவகை மந்த்ரங்களாலும் இரண்டு வகையான சருவைப் பக்வம்செய்து வைத்து ஸ்நானம் செய்யப்போனார். அவர் ஸ்நானம் செய்து வருவதற்குள், பார்யையிடத்தில் பர்த்தாவுக்கு ஸ்நேஹம் அதிகமாகையால் தன் பெண்ணுடைய ஸத்யவதிக்காகப் பக்வம் செய்த சரு மேலாயிருக்குமென்று பாவித்துத் தன் புதல்வியை வேண்ட, அந்த ஸத்யவதியும் ப்ராஹ்மணமந்த்ரங்களால் மந்த்ரிக்கப்பட்ட தன் சருவைத் தாய்க்குக் கொடுத்து அவளுக்காக க்ஷத்ரியமந்த்ரங்களால் மந்த்ரிக்கப்பட்ட சருவைத் தான் எடுத்துக்கொண்டு இருவரும் பக்ஷித்து விட்டார்கள். பிறகு ருசீகமுனிவர் ஸ்நானம் செய்து வந்து நடந்த ஸங்கதியைத் தெரிந்துகொண்டு பத்னியைப் பார்த்து 'நீ தப்புக் கார்யம் செய்தனை. ஆகையால் எல்லோரையும் தண்டிக்கும்படியான கொடுந்தன்மையுடைய புதல்வன் உனக்குப் பிறப்பான். உன் ப்ராதாவோ வென்றால் பரப்ராஹ்மத்தை உணர்ந்தவர்களில் சிறந்த ப்ராஹ்மண ஶ்ரேஷ்டனாயிருப்பான்' என்றார். பிறகு ஸத்யவதி 'இங்ஙனம் நிக்ரஹிக்கவேண்டாம்' என்று வேண்டுகையில், அந்தப் பார்க்கவர் 'ஆனால் உன்பேரன் கோரனாகப் பிறப்பான். பிள்ளை சாந்தனாகவேயிருப்பான்' என்றார். அப்பால் ஸத்யவதிக்கு ஜமதக்னி பிறந்தார். அனந்தரம் அந்த ஸத்யவதி மிகவும் பரிசுத்தமாயிருப்பதும் உலகங்

களை யெல்லாம் பரிசுத்தமாக்குவதுமான கௌசிகியென்னும் நதியாகப் பெருகினாள். பிறகு ஜமதக்னி ரேணுவின் புதல்வியான ரேணுகையென்பவளை மணம் புரிந்தார். அந்த ரேணுகையிடத்தில் பார்க்கவரிஷிக்கு வஸுமனன் முதலிய புதல்வர்கள் பிறந்தார்கள். இவர்களில் கடைசிப் பிள்ளை ராமனென்று ப்ரஸித்திபெற்றிருந்தான். பெரியோர்கள் அந்த ராமனை வாஸுதேவாம்சமென்று சொல்லுகிறார்கள். மற்றும், அவன் ஹைஹயர்களான கார்த்தவீர்யாதிகளின் குலத்தையெல்லாம் அழித்தான். அன்றியும், அவன் இப்பூமண்டலத்தை இருபத்தோரு தடவை க்ஷத்ரியபீஜமே இல்லாதபடி த்வம்ஸம்செய்தான். ப்ராஹ்மணர்களிடத்தில் நன்மனமின்றி விரோதம் செய்வதும் தர்மத்தில் விருப்பமின்றி வீண்கர்வமுற்றுப் பூமிக்குப் பாரம்போன்றிருப்பதும் ரஜஸ் தமோகுணங்கள் நிறைந்ததுமாகிய க்ஷத்ரியகுலம் சிறிது அபராதம் செய்யினும் அதற்காக அதை வதித்துக் கொண்டிருந்தான்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:—பகவானுடைய அம்சமாகிய ராமன் க்ஷத்ரியவம்சங்களையெல்லாம் அடிக்கடி அடித்து த்வம்ஸம் செய்தானென்றீர். துர்ப்புத்திகளான க்ஷத்ரியர்கள் அந்த ராமன்விஷயத்தில் அப்படி என்ன அபராதம் செய்தார்கள்?

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஹைஹயமென்னும்தேசங்களுக்கு ப்ரபுவும் க்ஷத்ரியர்களில் சிறந்தவனுமாகிய கார்த்தவீர்யார்ஜுனன் நாராயணனுடைய அம்சமான தத்தாத்ரேயரைப் பலவாறு சுச்ரூஷைகளால் ஆராதித்து ஆயிரம் கைகளையும் சத்ருக்களால் பொறுக்கமுடியாத பராக்ரமத்தையும் அழிவில்லாத இந்த்ரியபலம் புத்திபலம் செல்வம் தேஹகாந்தி வீர்யம் புகழ் தேஹபலம்

யோகேஶ்வரத்வம் அணிமாதி ஸித்திகள் அமைந்த ஐஶ்வர்யம் இவற்றையெல்லாம் பெற்றுக் காற்றுப்போல உலகங்களில் எங்கும் தடைபடாத கதியுடையவனாகி ஸஞ்சரித்துக்கொண்டிருந்தான். அவன் ஒருகால் சிறந்த பெண்மணிகளுடன் கூடி வைஜயந்தியென்னும் பூமாலையை அணிந்து ரேவாநதியின் ப்ரவாஹத்தில் விளையாடிக்கொண்டிருந்து மதம் தலையெடுத்துத் தன் புஜங்களால் ரேவாநதியின் ப்ரவாஹத்தை அணை கட்டினாற்போலத் தகைந்தான். அப்பொழுது பத்துத்தலையனான ராவணன் திக்விஜயத்திற்காகப் புறப்பட்டு அர்ஜுனனுடைய பட்டணத்திற்கு அருகாமையில் ரேவாநதிக்கரையில் இறங்கித் தன் விடுதியில் தேவபூஜை செய்துகொண்டிருக்கையில், அர்ஜுனன் 'ப்ரவாஹத்தைத் தடுத்ததனால் மேல் நோக்கிப் பாய்கின்ற ரேவாநதியின் ஜலத்தினால் தன் விடுதியெல்லாம் வெள்ளம் பாய்ந்து முழுகக் கண்டு தன்னைப் பெரிய வீரனாக நினைத்துக்கொண்டிருக்கின்ற ராவணன் அர்ஜுனன் பராக்ரமத்தைப் பொறுமல் அவனை எதிர்த்தோடினான். ஸ்த்ரீகளோடுகூடி விளையாடிக்கொண்டிருக்கின்ற அவ்வர்ஜுனனைப் பரிபவிக்க முயன்று முதலில் அபராதம் செய்த ராவணன் அவனால் ஸ்த்ரீகளின் எதிரில் அவலீலையாகப் பிடித்துத் தன் பட்டணத்தில் கொண்டுபோய்ச் சிறைச்சாலையில் அடைக்கப்பட்டிருந்து பிறகு வானரம்போலவிடுக்கப்பட்டான். அவ்வர்ஜுனன் ஒருகால் வனத்தில் வேடிக்கையாக வேட்டையாடித் திரிந்து தெய்வாதீனமாக ஜமதக்னியின் ஆஶ்ரமத்திற்குச் சென்றான். அரசனாகிய அவ்வர்ஜுனன் வந்ததைக் கண்டு ஸைன்யம் மந்த்ரிகள் வாஹனங்கள் இவற்றோடுகூடின அவ்வர்ஜுனனுக்குத் தபோதனரான அந்த ஜமதக்னிமுனிவர் காமதேனுவைக் கொண்டு அதிதி ஸத்காரம் செய்தார். அப்

பொழுது வீரனாகிய அவ்வர்ஜுனன் தன்னுடைய ஐஸ்வர்யத்தைக் காட்டிலும் மேற்பட்டு அற்புதமாயிருக்கின்ற ஜமதக்னியின் அதிதிஸத்காரஸாமர்த்யத்தைக் கண்டு அதை ஆதரிக்காமல் அம்முனிவருடைய ஹோமதேனுவிடத்தில் விருப்பமுற்றுத் தன் படர்களை நோக்கி ரிஷியின் ஹோமதேனுவாகிய அந்தப் பசுவைப் பறித்துக்கொண்டு போகும்படி ஏவினான். அவர்களும் அப்படியே கன்றுடன் கதறுகின்ற பசுவைப் பலாத்காரமாக மாஹிஷ்மதிபட்டணத்திற்குக் கொண்டுபோய்ச் சேர்த்துவிட்டார்கள். பிறகு அர்ஜுனனானவன் புறப்பட்டுப் போகையில், முன்பு வெளியில் எங்கோ போயிருந்த ராமன் தந்தையின் ஆஸ்ரமத்திற்கு வந்து அவ்வர்ஜுனன் செய்த துஷ்டத்தனத்தைக்கேட்டு அடியுண்ட ஸர்ப்பம்போல் கோபித்துப் பயங்கரமான கண்டக்கோடாலியையும் அம்பறாத்தூணிகளையும் தநுஸ்ஸையும் எடுத்துக்கொண்டு கவசத்தையும் அணிந்து, ஸிம்ஹம் கூட்டத்தில் தலைமையுள்ள பெரியகஜத்தைத் தொடர்வதுபோல, ஒருவராலும் எதிர்க்கமுடியாதவனாகி அர்ஜுனனைப் பின்பற்றினான். அவ்வர்ஜுனனும் பட்டணத்திற்குள் நுழையும்பொழுது, தநுஸ்ஸு பாணம் கண்டக்கோடாலி இவைகளைத் தரித்து ஸூர்யனுடைய ஒளிபோன்ற ஒளியுடைய ஜடைகள் விளங்கப்பெற்று மான்தோலை அரையில் உடுத்துப் பேரொளியுடன் திகழ்கின்றவனும் ப்ருகுவம்சத்தவர்களில் சிறந்தவனுமாகிய ராமன் தன்னைப் பின்றொடர்ந்து வரக் கண்டான். பிறகு அர்ஜுனன் தேர் யானை குதிரை காலாட்கள் அமைந்திருப்பவைகளும் கதை கத்தி பாணம் ருஷ்டி சதக்னி சக்தி முதலிய ஆயுதங்களுடையவைகளும் மிக்கப் பயங்கரங்களுமான பதினேழு அக்ஷௌஹிணி ஸைன்யங்களை ராமன்மேல்

அனுப்பினான். மஹானுபாவனாகிய பார்க்கவராமன் ஸஹாயமின்றித் தானொருவனே அந்த ஸைன்யங்களையெல்லாம் அடித்து முடித்தான். அக்னியின் ஒளிபோன்ற ஒளியுடையவனும் சத்ருஸைன்யங்களை அழிப்பவனுமாகிய அந்த ராமன் சத்ருக்களை அடிக்கின்ற கண்டக்கோடாலியை ஏந்திக்கொண்டு பராக்ரமித்த இடங்களெல்லாவற்றிலும் வீரர்கள் புஜங்களும் துடைகளும் கழுத்துக்களும் முரிந்து தேர்ப்பாகனும் வாஹனமும் ஹதமாய்ப் பூமியில் விழுந்தார்கள். பிறகு ஹைஹயதேசாதிபதியான அர்ஜுனன் தன் ஸைன்யம் முழுவதும் ராமனுடைய கோடாலியாலும் பாணங்களாலும் கவசம் த்வஜம் தனுஸ்ஸு தேஹம் இவை அறுப்புண்டு ரக்தவெள்ளத்தினால் சேறாயிருக்கின்ற யுத்தபூமியில் விழுந்திருப்பதைக் கண்டு கோபத்துடன் எதிர்த்தான். ஐந்நூறு பாணங்களையும் ஐந்நூறு தனுஸ்ஸுக்களையும் ஏந்திக்கொண்டிருக்கிற ஆயிரம் புஜங்களோடு கூடின அவ்வர்ஜுனன் ஒரே தடவையில் ஐந்நூறு தனுஸ்ஸுக்களில் ஐந்நூறு பாணங்களைத் தொடுத்து ராமன்மேல் விடுத்தான். வில்லாளிகளில் தனக்கெதிரில்லாத ராமனும் அந்தப் பாணங்களையெல்லாம் ஒரே தடவையில் தன் பாணங்களால் அறுத்தான். மீளவும் தன் புஜங்களால் பர்வதங்களையும் வ்ருக்ஷங்களையும் பிடுங்கிக்கொண்டு வேகத்துடன் தன் மேல் எதிர்த்து வருகின்ற அவ்வர்ஜுனனுடைய புஜங்களைக்கூரிய நுனியுடைய கோடாலியால் சிரித்துக்கொண்டே வேகமாக ராமன் அறுத்துத் தள்ளினான்; புஜங்கள் அறுப்புண்ட அவ்வர்ஜுனனுடைய சிரத்தையும் பர்வதத்தினின்று சிகரத்தைப் பறிப்பதுபோலப் பறித்துத் தள்ளினான். பிறகு பதினாயிரம் பேர்களான அவ்வர்ஜுனனுடைய பிள்ளைகள் இங்ஙனம் தந்தை முடிந்து

போகையில் பயந்து ஹோமதேனுவைக் கன்றுடன் கொண்டுவந்து ராமனிடம் கொடுத்து ஓடிப்போனார்கள். சத்ரு வீரர்களை அழிக்கவல்ல அப்பார்க்கவராமன் ஆஸ்ரமத்திற்கு வந்து வருந்தியிருக்கின்ற பசுவையும் கன்றையும் தந்தையான ஜமதக்னியிடம் ஸமர்ப்பித்துத் தான் செய்த கார்யத்தைத் தந்தைக்கும் ப்ராதாக்களுக்கும் வர்ணித்தான். அதைக் கேட்டு ஜமதக்னி மொழிந்தார்.

ஜமதக்னி சொல்லுகிறார்:—ராம! ராம! மிகுந்த புஜபலமுடையவனே! நீ பாபம் செய்தனை. ஸமஸ்ததேவதாஸ்வரூபனான அர்ஜுனமன்னவனை வீணாக வதித்தாயல்லவா? நாம் ப்ராஹ்மணர்களல்லவா? அடித்தவர்களையும் அடிக்காதிருக்கையன்றோ ப்ராஹ்மணர்களின் தன்மை? ப்ராஹ்மணர்கள் பொறுமையினால் பூஜிக்கத் தகுந்த பெருமையைப் பெறுவார்கள். உலகங்களுக்கெல்லாம் தந்தையாகிய ப்ராஹ்மதேவன் இந்தப் பொறுமையினால் தான் பாரமேஷ்ட்யமென்னும் பதவியைப் பெற்றான். ப்ராஹ்மண குலத்திற்குச் செல்வமாகிய சமதமாதி குணங்கள் பொறுமையினால் தான் ஸூர்ய கிரணம்போல் விளங்குகின்றன. ஷாட்குண்ய பூர்ணனும் ஸர்வேஸ்வரனுமாகிய ஸ்ரீஹரியும் பொறுமையுடையவர்களுக்கே சீக்ரத்தில் அருள்புரிகின்றான். மற்றும், ஸார்வபௌமனான மன்னவனை வதிப்பது ப்ராஹ்மண வதத்தைக் காட்டிலும் மேற்பட்ட பாபமேயாம். ஆகையால் நீ தன்னைப் பற்றினவர்களைக் கைவிடாத பகவானிடத்தில் நிலைநின்ற மனமுடையவனாகிக் கங்கை முதலிய புண்ய தீர்த்தங்களைப் பணிந்து பாபத்தைப் போக்கிக் கொள்வாயாக. பதினைந்தாவது அத்யாயம் முற்றிற்று.

கார்த்தவீர்யார்ஜுனன் பிள்ளைகள் ஜமதக்னியை வதித்தலும், ராமன் அதற்காக க்ஷத்ரியர்களை அழித்தலும், விஸ்வாமித்ரர் வம்சமும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்.—இங்ஙனம் தந்தையினால் கட்டளையிடப்பெற்ற ராமன் அப்படியேயென்று அங்கீகரித்து ஒரு வர்ஷம் தீர்த்தயாத்ரை நடத்தி மீளவும் ஆஸ்ரமத்திற்கு வந்தான். இங்ஙனம் இருக்கையில் ஒருநாள் ஜமதக்னியின் பார்யையாகிய ரேணுகை கங்கைக்குச் சென்று சித்ரரதனென்னும் கந்தர்வராஜன் அப்ஸர ஸ்த்ரீகளுடன் ஜலக்ரீடை யாடிக் கொண்டிருக்கக் கண்டாள். ஜலம் கொண்டு வருவதற்காகக் கங்கைக்குப் போன ரேணுகை நீர்விளையாட லாற்றிருக்கின்ற சித்ரரதனைப் பார்த்துக் கொண்டே அவனிடத்தில் சிறிதுமன விருப்பமுற்றுப் பர்த்தாவின் அக்னிஹோத்ர ஹோமவேளையை மறந்தாள். அப்பால் ரேணுகை வெகுபுயற்சியின்மேல் அங்ஙனம் ஹோமவேளை கடந்ததென்பதை நினைத்து முனிவரான தன் பர்த்தாவினிடத்தினின்று தனக்குச் சாபம் நேருமென்று சங்கித்து விரைவுடன் வந்து தீர்த்தக்குடத்தைப் பர்த்தாவின் முன்னே வைத்துக் கைகளைக் குவித்துக்கொண்டு நின்றாள். பிறகு ஜமதக்னிமுனிவர் பத்னியின் வ்யபிசாரத்தை அறிந்து மிகவும் கோபித்துப் பிள்ளைகளைப் பார்த்து 'ஓ என் அருமைப் புதல்வர்களே பாபிஷ்டையான இவளைக் கொன்று விடுங்கள்' என்றார். அவர்கள் மாத்ருவதத்திற்குக் கூசி அவர் கட்டளையைச் செய்யாதிருந்தார்கள். பிறகு ராமன் தந்தையால் தூண்டப்பட்டு மாதாவையும் கட்டளையைக் கடந்த ப்ராதாக்களையும் வதித்தான். ராமன் முனிவராகிய தன் தந்தையினுடைய ஸமாதி மஹிமையையும் தவமஹிமையையும் அறிந்தவனாகையால்

'நாம் இதைச்செய்யாமற் போவோமாயின், இவர் நம்மையும் சபித்து விடுவார். வதிப்போமாயின், மீளவும் அருள் புரிவிக்கப் பெற்று மரணமடைந்தவர்களையும் பிழைப்பிக்கச் செய்யலாம்'என்று நிச்சயித்துச் சிறிதும் அஞ்சாமல் மாதாவையும் ப்ராதாக்களையும் தந்தையின் கட்டளைப்படி வதித்தான். பிறகு ஸத்யவதியின் புதல்வராகிய ஜமதக்னி ஸந்தோஷம் அடைந்து ராமனைப் பார்த்து வரம் வேண்டும்படி தூண்டினார். ராமனும், தன்னால் வதிக்கப்பட்ட மாதாவும் ப்ராதாக்களும் ஜீவிக்கவேண்டுமென்றும், அவர்களுக்கு இவன் நம்மை வதித்தான் என்கிற நினைவு மறக்கவேண்டுமென்றும் இவ்வரங்களைக்கேட்டான். பிறகு அந்த ப்ராதாக்களும் மாதாவும் தூங்கியெழுந்திருப்பவர்போலச் சீக்ரத்தில் க்ஷேமமாகப்பிழைத்தெழுந்திருந்தார்கள். தந்தைக்குள்ள இத்தகைய தவமஹிமையை ராமன் அறிந்தவனாகையால் நண்பர்களை வதித்தான். ஆகையால் அவன் செய்தது பிசகன்று. அர்ஜுனனுடைய பிள்ளைகள் பதினாயிரம் பேர்களும் ராமனுடைய வீர்யத்திற்குத் தோற்று ஓடிப்போய் விட்டார்களென்று மொழிந்தேனல்லவா? அவர்கள் தங்கள் தந்தையின் வதத்தை நினைத்து அவ்வருத்தத்தினால் சிறிதும் ஸுகத்தை அடையாதிருந்தார்கள். ஒருகால் ராமன் தன் ப்ராதாக்களுடன் ஆஸ்ரமத்தினின்றும் வனத்திற்குப் போயிருக்கையில், அர்ஜுனன் பிள்ளைகள் ஸமயம் நேரப்பெற்று வைரத்தை நிறைவேற்றிக்கொள்ள விரும்பி ஜமதக்னியின் ஆஸ்ரமத்திற்கு வந்தார்கள். அக்னிஹோத்ர க்ருஹத்தில் உட்கார்ந்து உத்தமஸ்லோகனை பகவானிடத்தில் மனதுக்க முற்றிருக்கின்ற ஜமதக்னி முனிவரைப் பார்த்துப் பாபம் செய்வதில் நிச்சயமுடைய அவ்வர்ஜுனகுமாரர்கள் அவரை வதித்தார்கள். ராம

னுடைய மாதாவான ரேணுகை வேண்டாம் வேண்டா மென்று வேண்டிக்கொண்டிருப்பினும் மிகவும் கொடுந் தன்மையுடையவர்களாகையால் அந்த க்ஷத்ரியாதமர்கள் பலாத்காரமாகத் தலையை அறுத்துக் கொண்டு போனார்கள். அப்பொழுது ரேணுகை துக்கசோகங்களால் பீடிக்கப்பட்டுத் தன்னைத் தானே புடைத்துக் கொண்டு 'ராம ராம' என்று உரக்கக் கதறினாள். தூரத்திலிருந்த அவள் பிள்ளைகள் 'ஆ! ராமா' என்கிற அந்தத் தீனஸ்வரத்தைக் கேட்டு விரைந்தோடி வந்து மாண்டிருக்கின்ற தந்தையைக் கண்டார்கள். அவர்கள் துக்கம் கோபம் பொறுமை தைன்யம் சோகம் இவற்றின் வேகத்தினால் மதி மயங்கி 'ஓ அண்ணா! ஸாதூ! தர்மிஷ்டனே! நீ எங்களைத் துறந்து ஸ்வர்க்கம் போயினை' என்று புலம்பினார்கள். பிறகு ராமன் தந்தையின் சரீரத்தை ப்ராதாக்களிடம் வைத்துத் தான் கோடாலியை எடுத்துக்கொண்டு க்ஷத்ரிய குலத்தையெல்லாம் அழிக்க ஸங்கல்பித்தான் அப்பால் அவன் ப்ராஹ்மணவதத்தினால் அழகழிந்து விளக்கமற்றிருக்கின்ற மாஹிஷ்மதிபுரிக்குச்சென்று அந்தப் பட்டணத்தினிடையில் ஹைஹயதேசாதிபதிகளான அர்ஜுனகுமாரர்களின் சிரங்களை அறுத்துப் பெரிய மலையாகக் குவித்தான். அவர்களின் ரக்தத்தினால் பாபிஷ்டர்களுக்குப்பயத்தை விளைப்பதும் கோரமுமான ஒருநதியை உண்டாக்கினான். ஸமர்த்தனாகிய ராமன், க்ஷத்ரியர்கள் ந்யாயமார்க்கத்தைக் கடந்திருக்கையில் பித்ருவதத்தையே காரணமாக வைத்துக்கொண்டு இருபத்தோரு தடவைகள் பூமியில் க்ஷத்ரியப் பூண்டே இல்லாதபடிசெய்து ஸமந்தபஞ்சகமென்னும் தேசத்தில் ஐந்து ரக்தமடுக்களை உண்டாக்கினான். பிறகு தந்தையின் சிரஸ்ஸை எடுத்து அதை அவருடைய உடலொடு ஸந்தானம்செய்து யஜ்ஞத்தில்

வைத்துப் பலயாகங்களால் ஸமஸ்த தேவதாஸ்வரூபனும் ஸர்வாந்தராத்மாவுமாகிய பரமபுருஷனை ஆராதித்தான். கிழக்குத் திக்கைஹோதாவுக்கும், தெற்குத்திக்கை ப்ரஹ்மாவுக்கும் மேற்குத் திக்கை அத்வர்யுவுக்கும் வடக்குத் திக்கை உத்காதாவுக்கும், அக்னிதிக்கு முதலிய மற்றதிக்குக்களை மற்ற ருத்விக்குக்களுக்கும் இடையிலுள்ள பாகத்தைக் கஶ்யபருக்கும் ஆர்யாவர்த்த தேசத்தை உபத்ரஷ்டாவுக்கும், அதைச் சுற்றிலுமுள்ள பாகத்தை[1] ஸதஸ்யர்களுக்கும் தக்ஷிணையாகக் கொடுத்தான். பிறகு அவப்ருத ஸ்நானம் செய்து பாபங்களெல்லாம் தீரப்பெற்று மேகங்களற்ற ஸூர்யன்போன்று ஸரஸ்வதியென்னும் ப்ரஹ்மநதியின் கரையில் விளங்கினான். அந்த ஜமதக்னிமுனிவரும் முன் நினைவு மாறப்பெறாமல் தன் தேஹத்தைப்பெற்று ராமனால் பூஜிக்கப்பட்டு ஸப்தரிஷிகளின் மண்டலத்தில் ஏழாவராயிருந்தார். ஜமதக்னியின் குமாரனும் மஹானுபாவனும் தாமரையிதழ்போன்ற கண்களையுடையவனுமாகிய ராமனும் வரப்போகிறமன்வந்தரத்தில் ஸப்தரிஷிகளில் ஒருவராயிருந்து வேதத்தை வெளியிடப் போகிறான். இப்பொழுது அந்த ராமன் க்ஷத்ரியவதம் முதலிய தண்டனையைத் துறந்து தெளிந்த மதியுடையவனாகி மஹேந்த்ர பர்வதத்தில் வஸித்துக் கொண்டிருக்கிறான். ஸித்தர்களும் கந்தர்வர்களும் சாரணர்களும் அவன் புகழைப் பாடிக் கொண்டிருக்கிறார்கள். மன்னவனே! ஷாட்குண்ய பூர்ணனும் ஸர்வாந்தராத்மாவும் ஸர்வேஶ்வரனும் தன்னைப் பற்றினாருடைய வருத்தங்களைப் போக்குந் தன்மையனுமாகிய பரமபுருஷன் இங்ஙனம் ப்ருகுவம்சத்தில் பரசுராமனாய் அவதரித்துப் பூமிக்குப் பெரும் பாரமான க்ஷத்ரியர்களையெல்லாம் நிஶ்ஶேஷமாக வதித்

1. ஸதஸ்யர்—ஸபிகர்.

தான். காதி மன்னவனுக்கு எரிகிற அக்னிபோல் மஹா தேஜஸ்வியாகிய விஸ்வாமித்ரனென்ற ஒரு புதல்வன் பிறந்தான். அவன் தவத்தினால் க்ஷத்ரியஜாதியைத் துறந்து ப்ரஹ்மதேஜஸ்ஸைப் பெற்றான். அந்த விஸ்வாமித்ரருக்கு நூற்றொரு பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களில் இடையிலுள்ளவன் மதுச்சந்தனென்னும் பெயருடையவன். அதைப்பற்றி அவர்கள் அனைவரும் மதுச்சந்தர்களென்றே வழங்கி வந்தார்கள். அஜீகர்த்தருடைய நடுப்பிள்ளையும் பார்க்கவ கோத்ரத்தில் பிறந்தவனும் தேவதைகளால் கொடுக்கப்பட்ட ப்ராணனையுடையவனாகையால் தேவராதனென்று மற்றொரு பெயருடையவனுமாகிய சுனச்சேபனை விஸ்வாமித்ரர் தனக்குப் பிள்ளையாக ஏற்படுத்திக்கொண்டு தன் பிள்ளைகளை நோக்கி 'நீங்கள் சுனச்சேபனை உங்களெல்லோர்க்கும் முன் தோன்றலாக அங்கீகரிக்கவேண்டும்' என்றார். சுனச்சேபனென்பவன் தாய்தந்தைகளால் விக்ரயம் செய்யப்பட்டு ஹரிச்சந்த்ரனுடைய யாகத்தில் நரபசுவாயிருந்தான். அவன் விஸ்வாமித்ரரைச் சரணம் அடைந்து அவர் உபதேசித்த மந்த்ரங்களால் வருணன் முதலிய தேவதைகளைத் துதித்துப் பாசபந்தத்தினின்றும் விடுபட்டான்; ஹரிச்சந்த்ரனுடைய யாகத்தில் வருணாதி தேவதைகளால் ப்ராணன்களைக் கொடுக்கப் பெற்றவனாகையால் காதி வம்சத்தவர்களுக்குள் தேவராதனென்று ப்ரஸித்தனாயிருந்தான். அவனே சுனச்சேபன், ப்ருகு வம்சத்தில் பிறந்தவனாகையால் அவனைப் பார்க்கவனென்றும் வழங்குவதுண்டு. அங்ஙனம் விஸ்வாமித்ரர் கேட்டதற்கு மதுச்சந்தனுடைய தமையன்மார்கள் ஐம்பதுபேர்களும் ஒப்புக்கொள்ளவில்லை. அப்பால் விஸ்வாமித்ரமுனிவர் கோபித்து 'ஓ துர்ஜனங்களே! ம்லேச்சர்களாவீர்களாக'

என்று சபித்தார். பிறகு மதுச்சந்தனும் அவன் தம்பிகள் ஐம்பதின்மர்களும் தந்தையை நோக்கி 'நீர் எங்களுக்குக் கட்டளையிட்டபடி நாங்கள் செய்யஸித்தமாயிருக்கிறோம்' என்று மொழிந்து மந்த்ரங்களை உணர்ந்தவனாகிய அந்தத் தேவராதனென்கிற சுனச்சேபனைத் தங்களெல்லோர்க்கும் தமையனாக ஏற்படுத்திக் கொண்டார்கள். அவர்கள் சுனச்சேபனைப் பார்த்து 'நாங்கள் எல்லோரும் உனக்குப் பின் பிறந்தவர்களாகிறோம்' என்று மொழியவும் மொழிந்தார்கள். பிறகு விஸ்வாமித்ரர் அதற்கு ஸந்தோஷம் அடைந்து அந்தப் புதல்வர்களை நோக்கி 'நீங்கள் என்னை வெகுமதித்து என் கருத்தைத் தொடர்ந்து, நான் வீரனான புதல்வனைப் பெற்று மகிழும்படி செய்தீர்களாகையால் நீங்களும் வீரர்களான புதல்வர்களைப் பெற்று க்ஷேமமாயிருப்பீர்கள். ஓ! குசிகர்களே! வீரனாகிய இந்தத் தேவராதனும் என் புதல்வனாகையால் உங்களைச் சேர்ந்த கௌசிகனேயாய் விட்டான். நீங்கள் இவனைத் தொடர்ந்திருப்பீர்களாக' என்றார். பிறகு அந்த விஸ்வாமித்ரருக்கு உஷ்ணீகன் ஹாரீதன் ஜயக்தன் ஸாமதன் முதலிய மற்றும் சில பிள்ளைகளும் பிறந்தார்கள். இங்ஙனம் சிலரைச் சபித்துச் சிலரை அநுக்ரஹித்து வேறொருவனைப் பிள்ளையாக ஸ்வீகரித்தாராகையால் அந்தக் கௌசிக குலம் விஸ்வாமித்ர புத்ரர்களால் பலவாறாயிற்று. தேவராதனைத் தமையனாக ஏற்படுத்திக் கொண்டார்களாகையால் வேறு ப்ரவரத்தையும் பெற்றது. பதினாறாவது அத்யாயம் முற்றிற்று.

## { புரூரவன் பிள்ளைகளில் ஆயுவின் வம்சத்தைக் கூறுதல். }

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—புரூரவனுடைய பிள்ளைகளில் ஆயுவென்பவன் ஒருவன் உண்டென்று மொழிந்தேனல்லவா? அவனுக்கு நஹுஷன் க்ஷத்ரவ்ருத்தன் ரஜி ரம்பன் அனேனன் என்று ஐந்து பிள்ளைகள் பிறந்தார்கள். எல்லோரும் மிகுந்த வீர்யமுடையவர்கள். அவர்களில் க்ஷத்ரவ்ருத்தனுடைய வம்சத்தைச் சொல்லுகிறேன்; கேட்பாயாக. ராஜஸ்ரேஷ்டனே! க்ஷத்ர வ்ருத்தனுடைய பிள்ளை ஸுஹோத்ரனென்பவன். அவனுக்குக் காஸ்யன் குசன் க்ருத்ஸ்னமதனென்று மூன்று பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களில் க்ருத்ஸ்னமதனுடைய பிள்ளை சுனகன். அவனுக்குச் சௌனகர் பிறந்தார். அவர் பஹ்வ்ருசர்களில் சிறந்தவர்; முனிவராயிருந்தார். காஸ்யனுடைய பிள்ளை காசிராஜன். அவன் பிள்ளை தீர்க்கதபன். அவன் பிள்ளை தன்வந்தரி. அவனே ஆயுர்வேதமென்கிற வைத்ய சாஸ்த்ரத்தை வெளியிட்டான். அவன் யஜ்ஞத்தில் ஹவிர்ப்பாகம் பெற்றவன்; வாஸுதேவனுடைய அம்சாவதாரம். நினைத்தமாத்ரத்தில் ரோகத்தைப் போக்கவல்லவன். (இவன் ஸமுத்ரங்கடையும்பொழுது உண்டான தன்வந்தரியைக் காட்டிலும் வேறுபட்டவன்). அவன் பிள்ளை கேதுமான். அவன் பிள்ளை பீமரதன். அந்தக் கேதுமானுக்கு த்யுமானென்று மற்றொரு பிள்ளை உண்டு. அவன் திவோதாஸனென்றும் ப்ரதர்த்தனனென்றும் சத்ருஜித்தென்றும் வத்ஸனென்றும் ருதத்வஜனென்றும் குவலயாஸ்வனென்றும் பல நாமங்களைப் பெற்றான். அவனுக்கு அலர்க்கன் முதலிய பல பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களில் அலர்க்கனொருவனே யௌவனத்துடன்

அறுபத்தாறுயிரம் வர்ஷங்கள் பூமியை ஆண்டுவந்தான். அக்காலத்தில் அவனைத் தவிர மற்றெவனும் யௌவனத்துடன் பூமியை ஆளவில்லை. அலர்க்கன்பிள்ளை ஸந்ததி. அவன்பிள்ளை ஸுகேதன். அவன் பிள்ளை ஸுகேதனன். அவன் பிள்ளை தர்மகேது. அவன்பிள்ளை ஸத்யகேது. அவன் பிள்ளை த்ருஷ்டகேது. அவன் பிள்ளை ஸுகுமாரன். அவன் மன்னவனாயிருந்தான். அவன் பிள்ளை வீதிஹோத்ரன். அவன் பிள்ளை பர்க்கன். அவன்பிள்ளை பர்க்கபூமி. இங்ஙனம் சொல்லப்பட்ட இம்மன்னவர்கள் காஶ்யனுடைய வம்சத்தில் பிறந்தவர்கள்; காஶ்யனுடைய கொள்பாட்டனாகிய க்ஷத்ரவ்ருத்தனுடைய வம்சத்தைச் சேர்ந்தவர்கள். (ஆயுவின் பிள்ளைகளில் ஒருவனான க்ஷத்ரவ்ருத்தனுடைய வம்சத்தை மொழிந்தேன். இனி அவர்களில் மற்றொருவனான ரம்பனுடைய வம்சத்தைச் சொல்லுகிறேன், கேட்பாயாக). ரம்பனுக்கு ரபஸனென்றும் கம்பீரனென்றும் இரண்டு பிள்ளைகள். அவர்களில் ரபஸன் பிள்ளை க்ரது. க்ரதுவின் பார்யையிடத்தில் ப்ராஹ்மணகுலம் உண்டாயிற்று. இனி ஆயுவின் பிள்ளைகளில் மற்றொருவனான அனேனனுடைய வம்சத்தைச் சொல்லுகிறேன், கேட்பாயாக. அனேனனுடைய பிள்ளை சுத்தன். அவன் பிள்ளை சுசி. அவன் பிள்ளை த்ரிககுத்து. அவனுக்குத்[1] தர்மஸாரதியென்று மற்றொரு பெயரும் உண்டு. அவன் பிள்ளை சாந்தரயன். அவன் ஜ்ஞானயோகத்தில் இழிந்து மோக்ஷஸாதனமான கார்யத்தை அநுஷ்டித்துவந்தான். ஆகையால் அவனுக்கு ஸந்ததி கிடையாது. ஆயுவின் பிள்ளைகளில் மற்றொருவனான ரஜிக்கு ஐந்நூறு பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களெல்லாரும் மஹாதேஜஸ்விகள். ரஜி தே

1. ப்ராஹ்மஸாரதி யென்று சிலர்.

வதைகளால் வேண்டப்பெற்றுத் தைத்யர்களை வதித்து அவர்களால் பறிக்கப்பட்ட ஸ்வர்க்கத்தை இந்த்ர னுக்கு மீட்டுக்கொடுத்தான். இந்த்ரன் மீளவும் ப்ராஹ் லாதனிடத்தினின்று மிகவும் சங்கித்து ஸ்வர்க்கத் தை அந்த ராஜிக்கே கொடுத்து அவன் பாதங்களைப் பிடித்துக்கொண்டு தன்னையும் அவனிடத்தில் அர்ப்ப ணம் செய்தான். ராஜியின் பிள்ளைகள் ஐந்நூறுபேர்க ளும் தங்கள் தந்தை மரணம் அடைந்தபின்பு ஸ்வர்க்கத் தைத் தனக்குக் கொடுக்கும்படி வேண்டுகிற தேவேந்த்ர னுக்கு அதைக் கொடாமல், யஜ்ஞபாகங்களையும் பெற் றுக் கொண்டு வந்தார்கள். பிறகு ப்ருஹஸ்பதி அபிசார விதியின் படி அவர்களுக்கு மதிகேடு நேரும்படி அக்னி யில் ஹோமம் செய்தமையால், இந்த்ரபதவியை ஆளும் படியான மதியின் திறமை அமைந்திருக்கையாகிற நல்வழி யினின்று தவறியிருக்கின்ற அந்த ராஜியின் புத்ரர்கள் அனைவரையும் இந்த்ரன் வதித்தான்; ஒருவனும் மிகவில்லை. க்ஷத்ரவ்ருத்தனுடைய பேரனாகிய குசன் பிள்ளை [1] ப்ரீதி யென்பவன். அவன்பிள்ளை ஸஞ்சயன். அவன்பிள்ளை ஜயன். அவன்பிள்ளை க்ருதன். அவன் பிள்ளை ஹர்யபவ கன். அவன் பிள்ளை ஸஹதேவன். அவன் பிள்ளை பீமன். அவன் பிள்ளை ஜயஸேனன். அவன் பிள்ளை ஸங்க்ருதி. அவன் மஹாசூரனும் மஹாரதனுமாயிருந்தான். இப் பொழுது சொல்லப்பட்ட இம்மன்னவர்கள் அனைவரும் க்ஷத்ரவ்ருத்தனுடைய வம்சத்தில் பிறந்தவர்கள். இனி நஹுஷனுடைய வம்சத்து மன்னவர்களைச் சொல்லு கிறேன், கேட்பாயாக. பதினேழாவது அத்யாயம் முற்றிற்று.

---

1. ப்ரதியென்று சிலர்.

யயாதியின் வ்ருத்தாந்தம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ப்ராணிகளுக்கு ஆறு இந்த்ரியங்கள்போல, நஹுஷனுக்கு யதி யயாதி ஸம்யாதி ஆயாதி விக்ருதி க்ருதி என்னும் இவ்வாறு பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களில் மூத்தவனான யதியென்பவன் தந்தை தனக்கு ராஜ்யம் கொடுக்கினும் அதில் கடைசியாக விளையும் துக்கங்களை அறிந்தவனாகையால் அதை அங்கீகரிக்கவில்லை. ராஜ்யத்தில் இழிந்தவன் தன்னை அறியமாட்டானல்லவா? பிறகு நஹுஷன் இந்த்ரபதவியைப் பெற்று இந்த்ராணியைப் புணரவிரும்புகையில், அவள் அகஸ்த்யர் முதலிய ப்ராஹ்மணர்களிடம் விண்ணப்பம் செய்ய, அவர்களும் அவனை வாஹனத்தில் ஏற்றிக்கொண்டு ஊர்கோலம்வர, நஹுஷன் இந்த்ராணியைப் புணரவேண்டுமென்னும் விருப்பத்தினால் விரைந்து சீக்ரம்போகும்படி அம்முனிவர்களைக் கால்கட்டைவிரலால் குற்றித்தூண்ட, அவர்கள் அவனுடைய துர்ப்புத்தியைக் கண்டு கோபித்து 'ஸர்ப்பமாய் விடுவாயாக' என்று சபித்து வாஹனத்தினின்றும் கீழே விழத்தள்ள, அவன் அப்படியே ஸ்வர்க்கத்தினின்று நழுவி மலைப்பாம்பாகப் பிறந்தான். யயாதி தன் தந்தை அங்ஙனம் இந்த்ரபதவியினின்று நழுவினபின்பு ராஜ்யத்தைக் கைப்பற்றி ஆண்டுவந்தான். அவன் தன் தம்பிகளான ஸம்யாதி முதலிய நால்வரையும் நான்கு திசைகளில் ஏற்பாடு செய்து, தான் சுக்ரனுடைய பெண்ணான தேவயானியையும் வ்ருஷபர்வனுடைய பெண்ணான சர்மிஷ்டையையும் மணம்புரிந்து பூமியைப் பாதுகாத்துவந்தான்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:—மஹானுபாவனாகிய சுக்ரன் ப்ரஹ்மர்ஷி. யயாதி க்ஷத்ரியர்களி

னும் தாழ்ந்தவன். ஆகையால் க்ஷத்ரியனுக்கும் ப்ராஹ்மணனுக்கும் ப்ரதிலோமமான ஸம்பந்தம் எப்படி நேர்ந்தது?

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—தானவர்களுக்கு ப்ரபுவான வ்ருஷபர்வனுடைய பெண் சர்மிஷ்டையென்பவள். அவள் மிகுந்த அழகுடையவள். அப்பெண்மணி ஒருகால் ஆயிரம் ஸகிகளுடனும் ஆசார்யரான சுக்ரனுடைய பெண்ணாகிய தேவயானியுடனும் கூடிப் புஷ்பித்த வ்ருக்ஷங்கள் அடர்ந்திருப்பதும் வண்டுகளின் மதுரமான கானத்தினால் ரமணீயமான தாமரையோடைகளின் மணற்குன்றுகள் அமைந்து அழகியதுமான பட்டணத்து உத்யானத்தில் புகுந்து உலாவினாள். பிறகு தாமரைக்கண்ணிகளான அப்பெண்மணிகள் தாமரைத்தடாகத்திற்குச் சென்று பட்டு வஸ்த்ரங்களைக் கரையில் அவிழ்த்து வைத்துத் தடாகத்தில் இறங்கி ஒருவர்மேல் ஒருவர் ஜலத்தை இறைத்துக்கொண்டு விளையாடினார்கள். அப்பொழுது ருத்ரன் பார்வதியோடு வ்ருஷபவாஹனத்தின்மேலேறி அவ்வழியே போகக் கண்டு அப்பெண்கள் அனைவரும் வெட்கி வேகமாகக் கரையேறி வஸ்த்ரங்களை எடுத்து உடுத்திக் கொண்டார்கள். சர்மிஷ்டை வேகத்தில் தெரியாமல் குருபுத்ரியான தேவயானியின் வஸ்த்ரத்தைத் தன்னுடையதென்று ப்ரமித்து உடுத்திக்கொண்டாள். பிறகு தேவயானி அதற்குக் கோபித்துச் சர்மிஷ்டையை நோக்கி இங்ஙனம் மொழிந்தாள்.

தேவயானி சொல்லுகிறாள்:— ஆ! எங்கள் தாஸி செய்யத்தகாத கார்யம் செய்தாள். கண்டீர்களா? நாய் யாகத்தின் ஹவிஸ்ஸைத் தீண்டுவதுபோல நான் உடுத்திக்கொள்ளவேண்டிய வஸ்த்ரத்தை எடுத்துத் தான் உடுத்திக்கொண்டாளல்லவா? ப்ராஹ்மணர்களல்

லவோ தவத்தினால் இவ்வுலகத்தைப் படைத்தார்கள். ப்ராஹ்மணர்களே பரமபுருஷனுடைய முகமென்று வேதங்கள் முறையிடுகின்றன. பரஞ்சோதியான பரப்ராஹ்மத்தை இவர்கள் உபாஸிக்கிறார்கள். இவர்களே நன்மைக்கிடமான வைதிகமார்க்கத்தை வெளியிட்டார்கள். உலகங்களுக்கெல்லாம் ப்ரபுக்களான தேவஸ்ரேஷ்டர்களும் இவர்களை எழுந்தெதிர்கொண்டு வணங்குகிறார்கள். ஸர்வாந்தராத்மாவும் எல்லோர்க்கும் சுத்தியை விளைப்பவனும் ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு வாஸஸ்தானமுமாகிய பகவானுங்கூட இவர்களை எதிர்கொண்டுவணங்குகிறான். இங்ஙனம் பலவகையில் சிறந்த அந்தணர்களிலும் நாங்கள் ப்ருகுவம்சத்தில் பிறந்தவர்கள். இந்தச் சர்மிஷ்டையின் தந்தையாகிய வ்ருஷபர்வனென்பவன் அஸுரன், எங்கள் தந்தையின் சிஷ்யன். இப்படியிருக்க, இங்ஙனம் செய்யத்தகாத இவள், சூத்ரன் வேதத்தை ஓதுவதுபோல, நான் உடுத்திக்கொள்ள வேண்டிய வஸ்த்ரத்தை உடுத்திக் கொண்டாள்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் துர்ப்பாஷைகளால் அவமதிக்கப்பட்ட சர்மிஷ்டை கோபத்தினால் பெண் ஸர்ப்பம்போல் பெருமூச்செறிந்து உதட்டைக் கடித்துக்கொண்டு வைகின்ற குருபுத்ரியான தேவயானியைப் பார்த்து மொழிந்தாள்.

சர்மிஷ்டை சொல்லுகிறாள்:—அடி பிச்சைக்காரப் பெண்ணே! நீ உன் நிலைமையை அறியாமல் பலவாறு பிதற்றுகின்றனை. காக்கைபோலவும் நாய்போலவும் நீ உன் ஜீவனத்திற்காக எங்கள்வீட்டை எதிர்பார்த்துக் கொண்டிருப்பது உனக்குத் தெரியவில்லையா?

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—சர்மிஷ்டை இப்படிப் பட்ட இன்னம் பல கொடிய மொழிகளால் ஆசார்யபுத்ரி

யான தேவயானியைத் திரஸ்கரித்துக் கோபத்தினால் வஸ்த்ரத்தையும் எடுத்துக்கொண்டு அவளைக் கிணற்றில் தள்ளினாள். பிறகு சர்மிஷ்டை புறப்பட்டுப்போகையில் யயாதி மன்னவன் வேட்டையாடிக் கொண்டே தெய்வாதீனமாய்த் தண்ணீர் விரும்பி அக்கிணற்றின் அருகாமைக்கு வந்து அங்கு ஒரு பெண்மணி அரையில் ஆடையின்றி விழுந்திருக்கக் கண்டான். பிறகு ஆடையில்லாதிருக்கின்ற அந்தத் தேவயானிக்கு அம்மன்னவன் தன் மேலுத்தரீயத்தைக் கொடுத்து மனஇரக்கத்துடன் தன் கையால் அவள் கையைப் பிடித்து அவளைக் கரையேற்றினான். சுக்ரனுடைய பெண்ணாகிய தேவயானி தன்னைக் கரையேற்றின வீரனான யயாதியைப் பார்த்து ப்ரேமம் நிறைந்த உரையுடன் கூறினாள்.

தேவயானி சொல்லுகிறாள்:—மன்னவனே! சத்ரு பட்டணங்களை அழிக்க வல்லவனே! நீ என்கையைப் பிடித்தாய். இங்ஙனம் உன்னால் பிடிக்கப்பட்ட என்னை மற்றொருவன் கைப்பிடிக்கலாகாது. ஆகையால் நீயே என்னை மணம்புரியவேண்டும். 'நீ ப்ராஹ்மணப்பெண். நான் க்ஷத்ரியன். நமக்கு விவாஹம் எப்படிக் கூடும்?' என்று சங்கிக்கவேண்டாம். மன்னவனே! நமக்கு இந்த விவாஹஸம்பந்தம தெய்வாதீனமாய் நேரிட்டிருக்கின்ற தேயன்றிப் புருஷயத்னத்தால் நேர்ந்ததன்று. ஆகையால் அவ்விஷயத்தில் தோஷமில்லை. கிணற்றில் விழுந்திருந்த எனக்கு உன்காட்சி நேரிட்டதே; இது தெய்வத்தின் செயலென்பதில் ஸந்தேஹம் உண்டோ? அங்ஙனமே நம்முடைய ஸம்பந்தமும் தெய்வச் செயலால் நேரிட்டது. நீண்டபுஜ தண்டங்களுடையவனே! மற்றும், நான் ப்ராஹ்மணப் பெண்ணாயினும், ப்ராஹ்மணன் என் கையைப் பிடிக்க இடமில்லை. முன்பு ப்ருஹஸ்பதியின் புதல்வனா

இய கசன் என்னால் சபிக்கப்பெற்று எனக்கு அங்ஙனம் மறுசாபம் கொடுத்திருக்கிறான். ஆதலால் நீ இவ்விஷயத்தில் சங்கிக்கவேண்டாம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—பிறகு யயாதிமன்னவன் இதற்குச் சாஸ்த்ரம் இடங்கொடாமையால் தனக்கு அநிஷ்டமாயினும் அது தெய்வாதீனமாய் நேர்ந்திருப்பதையும் அதர்மத்தில் செல்லுந்தன்மையற்ற தன் மனம் அவளிடத்தில் விருப்பமுற்றிருப்பதையும் ஆராய்ந்து அவள் சொன்னதை அப்படியே அங்கீகரித்தான். வீரனான யயாதி மன்னவன் புறப்பட்டுப் போகையில் தேவயானி தந்தையிடம் சென்று அழுதுகொண்டே சர்மிஷ்டை செய்தது சொன்னது எல்லாவற்றையும் அறிவித்தாள். ஜ்ஞானாதி குணங்கள் நிறைந்த சுக்ராசார்யன் அதைக் கேட்டு மனவருத்தமுற்றுப் புரோஹிதத்தொழிலை நிந்தித்து உஞ்சவ்ருத்தியைப் புகழ்ந்துகொண்டு பெண்ணுடன்கூடி வ்ருஷபர்வனுடைய பட்டணத்தினின்று புறப்பட்டுப் போனான். பிறகு வ்ருஷபர்வன் தன் குருவான சுக்ராசார்யன் தன்மேல் கோபித்துத் தன் சத்ருக்களான தேவதைகளுக்கு ஜயத்தை விளைக்கவேண்டுமென்று அபிப்ராயப்பட்டிருப்பதை அறிந்து ஓடிச்சென்று வழியில் பாதங்களில் விழுந்து குருவை அருள்புரியும்படி வேண்டினான். அரைக்ஷணத்திற்குமேல் கோபம் தங்கப்பெறாத மஹானுபாவனான அந்தப் பார்க்கவனும் சிஷ்யனான வ்ருஷபர்வனைப் பார்த்து 'ராஜனே! இவளுடைய விருப்பத்தை நீ நிறைவேற்றவேண்டும். என்னால் இவளைத் துறக்கமுடியாது. எனக்கு இவளிடத்தில் ஸ்நேஹம் அளவற்றிருக்கின்றது' என்றான். வ்ருஷபர்வன் அப்படியே ஆகட்டுமென்று ஒப்புக்கொண்டு நிற்கையில், தேவயானி 'நான் என் தந்தையால் கொடுக்கப்பெற்று எவ்வி

டம் போகிறேனே, அவ்விடத்தில் இந்தச் சர்மிஷ்டை தன் தாஸிகளுடன் என்னைத் தொடர்ந்து வந்து எனக்குத் தாஸியாயிருக்கவேண்டும்' என்று தன் மனக்கருத்தைச் சொன்னாள். பிறகு சர்மிஷ்டை, அந்தச் சுக்ரன் ப்ரதிகூலித்தால் தன் தந்தை முதலியவர்க்கு ஸங்கடம் நேருவதையும், அநுகூலித்தால் பெரிய ப்ரயோஜனம் கைகூடுவதையும் ஆலோசித்துத் தன் ஸகிகளான ஆயிரம் பெண்களுடன் தானும் தாஸிபோல தேவயானிக்குப் பணிவிடை செய்து வந்தாள். அப்பால் சுக்ராசார்யன் தன் புதல்வியான தேவயானியைச் சர்மிஷ்டையுடன் நஹுஷன் பிள்ளையான *யயாதிக்குக் கொடுத்து அவனைப் பார்த்து 'மன்னவனே! சர்மிஷ்டையை ஒருகாலும் படுக்கையில் ஏற்றுக்கொள்ளலாகாது' என்று மொழிந்தான். அனந்தரம் ஒரு காலத்தில் சர்மிஷ்டை யயாதி மன்னவனுடைய பார்யையும் சுக்ரனுடைய பெண்ணுமாகிய தேவயானி அழகான பிள்ளைகளைப்பெற்று வாழ்வதைக் கண்டு தானும் ருதுகாலத்தில் இருப்பதுபற்றித் தன் ஸகியான தேவயானியின் பர்த்தாவான அந்த யயாதி மன்னவனையே தனக்கு ஸந்ததியின் பொருட்டு வேண்டினாள். தர்மஜ்ஞனாகிய யயாதி மன்னவன் அப்பொழுது சர்மிஷ்டையால் ஸந்ததியின்பொருட்டு வேண்டப்பெற்றுத் தர்மஸூக்ஷ்மத்தை ஆராய்ந்து சுக்ரனுடைய வார்த்தை நினைவுக்கு வந்திருப்பினும் அக்காலம் தெய்வாதீனமாய் நேர்ந்திருப்பதைப்பற்றி அவளைப் புணர்ந்தான். தேவயானி யதுவென்றும் துர்வஸுவென்றும் இரண்டு பிள்ளைகளைப் பெற்றாள். வ்ருஷபர்வனுடைய புதல்வியான சர்மிஷ்டை த்ருஹ்யுவென்றும் அநுவென்றும் பூருவென்றும் மூன்று பிள்ளைகளைப் பெற்றாள். அப்பால் பெருஞ் செருக்குடைய தேவயானி, அஸுரனுடைய

குமாரத்தியான சர்மிஷ்டையும் தன் பர்த்தாவிடத்தினின்றே கர்ப்பம் தரித்த செய்தியை அறிந்து பெருங்கோபமுற்றுத் தந்தையின் க்ருஹத்திற்குப் போனாள். காமக் கலவியில் மனம் தாழ்ந்த யயாதி அன்பிற்கிடமான தேவயானியைத் தொடர்ந்து பாதங்களைப் பிடித்துக்கொள்வது முதலிய பல உபசாரங்களைச் செய்து பல நல்வார்த்தைகளைச் சொல்லி வேண்டியும் அவளை அருள் புரிவிக்க வல்லவனாகவில்லை. அப்பொழுது சுக்ரன் கோபித்து அந்த யயாதியை நோக்கிப் 'பெண்ணாசை பிடித்தவனே! பொய்யே ஒரு புருஷ உருவங்கொண்டாற் போலிருப்பவனே! துர்ப்புத்தி! ப்ராணிகளின் அழகைக் குலைக்கவல்ல கிழத்தனம் உன்னைப் பிடித்துக்கொள்ளுமாக' என்று சபித்தான். சபிக்கப்பட்ட அம்மன்னவன் சுக்ரனைப் பார்த்து 'ப்ராஹ்மண ஸ்ரேஷ்டரே! உமது புதல்வியிடத்தில் காம போகங்களால் நான் இன்னும் த்ருப்தி உண்டாகப்பெறாதிருக்கின்றேன். ஆகையால், என்னைப் பொறுத்தருள வேண்டும்' என்றான். அதைக்கேட்ட சுக்ரனும் 'உன் கிழத்தனத்தை எவன் வாங்கிக்கொள்கிறேனென்று ஒப்புக்கொள்கிறானோ அவனுடைய யௌவனவயதை நீ பெற்றுக்கொண்டு உன் கிழத்தனத்தை அவனுக்குக் கொடுப்பாயாக. காமபோகங்களை அநுபவிக்கவேண்டுமென்னும் விருப்பம் எது வரையில் மாறாதிருக்குமோ அது வரையில் நீ உன் கிழத்தனத்தைக் கொடுத்து யௌவனத்தை மாற்றிக்கொள்வாயாக' என்றான். அந்த யயாதி மன்னவன் இங்ஙனம் கிழத்தனத்திற்கு ஒரு எல்லை ஏற்படுத்திக்கொண்டு வந்து தன் பிள்ளைகளில் ஜ்யேஷ்டனான யதுவைப் பார்த்து 'அப்பா! யதூ! உன் பாட்டனால் ஏற்பட்ட இந்த என் கிழத்தனத்தை நீ பெற்றுக்கொண்டு உன் யௌவன வயதை எனக்குக் கொடுப்பா

யாக. நான் இன்னும் சப்தாதி விஷயபோகங்களில் த்ரு
ப்தி உண்டாகப்பெருதிருக்கிறேன். ஆகையால் உன்
னுடைய யௌவனவயதைப் பெற்று நான் இன்னும் சில
வர்ஷங்கள் ஸுகத்தை அனுபவிக்க விரும்புகிறேன்' என்
ருன். அதைக்கேட்ட யது தந்தையை நோக்கி 'உனக்கு
வயதின் நடுவில்நேரிட்டகிழத்தனத்தை வாங்கிக்கொள்ள
எனக்கு இஷ்டமில்லை. விஷயஸுகங்களை அனுபவிக்கா
மல் எவனும் வைராக்யத்தை அடையமாட்டான். அந்த
ஸுகங்களை அனுபவித்த நீயே இன்னும் வைராக்யம்
உண்டாகப்பெறவில்லை. முதலே விஷய ஸுகத்தை அனுப
விக்காத நான் எப்படி வைராக்யத்தைப் பெறுவேன்?'
என்ருன். துர்வஸு த்ருஹ்யு அனு இவர்களும் அங்ஙு
னமே தந்தையால் வேண்டப்பெற்றும், அநித்யமான
தேஹத்தை நித்யமாக ப்ரமித்துத் தர்மத்தை அறியாத
வர்களாகையால் யதுவைப்போலவே கிழத்தனத்தை
வாங்கிக்கொள்ளமாட்டோமென்று அம்மன்னவனைத் திர
ஸ்கரித்தார்கள். பிறகு யயாதிமூன்று பிள்ளைகளைக்காட்டி
லும் வயதில் குறைந்தவனும் குணங்களால் மேம்பட்ட
வனுமாகிய பூருவென்னும் புதல்வனைப் பார்த்துக் 'குழந்
தாய்! நீயும் உன் தமையன்மார்களைப் போல என்னைத்
திரஸ்கரிக்கலாகாது' என்ருன். அதைக்கேட்ட பூரு
தந்தையை நோக்கி 'ஓ மன்னவனே! இவ்வுலகத்தில்
எந்தப் புருஷன் தான் தனக்குத் தேஹத்தை விளைத்துக்
கொடுத்த மஹோபகாரகனுன தந்தைக்குப் பதிலுபகா
ரம் செய்யவல்லனுவான்? புருஷன் தந்தையின் அனுக்ர
ஹத்தினுலல்லவோ மேலான இஹலோகஸுகத்தையும்
பரலோக ஸுகத்தையும் பெறுகின்ருன்? ஆகையால்
அவனுக்குப் பதிலுபகாரம் செய்ய முடியாது. ஆயினும்,
அவன் நெஞ்சில் நினைப்பதைத் தெரிந்துகொண்டு அதை

ன்றவன் உத்தமன். அவன் சொன்னபடி செய்கின்றவன் மத்யமன். அதை அஸ்ரத்தையோடு செய்கின்றவன் அதமன். அஸ்ரத்தையோடும் செய்யாதவன் அத்தந்தையின் மலமூத்ரங்கள் போன்றவனேயன்றி அவன்புதல்வனேயாகமாட்டான்' என்று இங்ஙனம்மொழிந்துகொண்டே ப்ரீதியுடன் தந்தையின் கிழத்தனத்தைப் பெற்றுக்கொண்டு தன்யௌவனத்தை அவனுக்குக் கொடுத்தான். பிறகு அந்த யயாதி மன்னவனும்பிள்ளை கொடுத்த யௌவனவயதைப் பெற்றுக் காமஸுகங்களை இஷ்டப்படி அனுபவித்து வந்தான். அவன் ஏழு த்வீபங்களுக்கும் ப்ரபுவாகி ப்ரஜைகளைத் தந்தைபோலப் பாதுகாத்துக் கொண்டு இந்த்ரியங்களெல்லாம் திடமாயிருக்கப்பெற்று முனவிருப்பத்தின்படி விஷயங்களை அனுபவித்தான். அன்பிற்கிடமான தேவயானி மிகவும் அன்பனாகிய தன் பர்த்தாவுக்கு ஏகாந்தத்தில் மிகுந்த ப்ரீதியை விளைத்தாள். யயாதி மிகப்பெரிய தக்ஷிணைகளையுடைய பல யாகங்களால் ஸமஸ்த தேவஸ்வரூபனும் ஸமஸ்த யஜ்ஞங்களாலும் ஆராதிக்கத் தகுந்தவனும் அவற்றிற்குப் பலன் கொடுப்பவனும் அவற்றின் ஹவிர்ப்பாகங்களைப் புசிப்பவனும் தன்னைப் பற்றினருடைய வருத்தங்களைப் போக்குகின்றவனுமாகிய பரமபுருஷனை ஆராதித்தான். சேதனசேதனரூபமான இந்த ப்ரபஞ்சமெல்லாம் எவனால் தன்னிடத்தில் படைக்கப்பெற்று, ஆகாயத்தில் மேகங்களின் வரிசைபோலவும், ஸ்வப்னம் போலவும், மாயைபோலவும், மனோரதம்போலவும் பலவாறு தோற்றுவதும் மறைவதுமாயிருக்கின்றனவோ, அப்படிப்பட்ட பெருமையுடையவனும் வாஸுதேவனென்று ஓதப்படுகின்றவனும் ஸமஸ்த ப்ராணிகளின் ஹ்ருதய குஹைகளில் வஸிப்பவனும் அணுவான ஜீவனைக் காட்டிலும்

மிகவும் அணுவாயிருப்பவனுமாகிய ஸ்ரீமந் நாராயணனை மனத்தில் த்யானித்துக்கொண்டு ஒரு பலனையும் விரும்பாமல் ஸமர்த்தனாகிய அம்மன்னவன் பல யாகங்கள் செய்தான். பூமண்டலத்திற் கெல்லாம் ப்ரபுவாகிய அந்த யயாதி இங்ஙனம் அடங்காமல் நிந்திக்கத் தகுந்தவைகளான மனம் முதலிய ஆறு இந்த்ரியங்களால் அனேகமாயிரமாண்டுகள் காமபோகங்களை அனுபவித்தும், த்ருப்தி அடையவில்லை. பதினெட்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

(யயாதி விரக்தியினால் தேவயானிக்குத் தன் நிலைமையைக் கூறி மோக்ஷம் பெறுதலும், தேவயானியும் யயாதியின் உபதேசத்தினால் விவேகம் உண்டாகப்பெற்று ஸ்ரீக்ருஷ்ண த்யானத்தினால் சரீரத்தைத் துறத்தலும்.)

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அந்த யயாதி மன்னவன் இங்ஙனம் ஸ்த்ரீலோலனாகிக் காமஸுகங்களை அனுபவித்துக்கொண்டிருக்கையில், ஒரு கால் தன்புத்தி வழி தப்பி மயங்கினதை அறிந்து வெறுப்புற்றுத் தன் காதலியான தேவயானிக்கு ஒரு பழமொழியைக் கூறினான்.

யயாதி சொல்லுகிறான்:—பார்க்கவருடைய புதல்வியே! என்னைப்போன்ற மூடனுடைய வ்ருத்தாந்தத்தை உட்கொண்டிருப்பதாகிய ஒரு பழைய இதிஹாஸத்தைச் சொல்லுகிறேன், கேட்பாயாக. பார்க்கவி! என்னைப்போன்ற மூடனான க்ருஹஸ்தனுடைய வ்ருத்தாந்தத்தை வனத்திலுள்ள ஜிதேந்த்ரியர்கள் மனஇரக்கத்தினால் சோகிக்கிறார்கள். அரண்யத்தில் தனியே திரிந்துகொண்டிருக்கின்ற ஒரு ஆடு தனக்கு இன்பத்தைத் தேடிக்கொண்டு, தன் கர்மத்திற்கு உட்பட்டுக் கிணற்றில்

விழுந்திருக்கின்ற ஒரு பெண்ணாட்டைக் கண்டது. அது காமஸுகத்தை அனுபவிக்கவேண்டுமென்னும் விருப்பமுடையதாகையால் அந்தப் பெண்ணாட்டைக் கிணற்றினின்று கரையேற்றுவதற்கு உபாயத்தை ஆலோசித்துக் கரையில் கொம்பின் நுனியால் மண் முதலியவற்றை எடுத்துக் கரையேறும்வழியை உண்டாக்கிற்று. அனந்தரம் அழகிய இடையின் பின்புறமுடைய அந்தப் பெண்ணாடு கிணற்றினின்று கரையேறி அந்த ஆணாட்டையே தனக்குக் கணவனாகும்படி விரும்பிற்று. அப்பால் அந்தப் பெண்ணாடு விரும்பினதைக் கண்டு மற்றும் பல பெண்ணாடுகளும் அங்கங்களெல்லாம் பருத்துத் தாடி மீசைகள் அமைந்து மிகுந்த ரேதஸ்ஸுடையதும் மைதுனவ்யாபாரத்தில் திறமையுடையதுமாகிய அந்த ஆணாட்டையே மிகுந்த மனவிருப்பத்துடன் மேல்விழுந்து விரும்பின. அந்த ஒரு ஆணாடே பல பெண்ணாடுகளால் சூழப்பட்டு அவையனைத்திற்கும் ஸம்போக ஸுகத்தை மேன்மேலும் விளைத்துக்கொண்டு காமாவேசமாகிற பிசாசத்தினால் பிடியுண்டு விளையாடிக்கொண்டிருந்ததேயன்றித் தனக்கு மேல்வருங் கெடுதியைச் சிறிதும் சிந்திக்கவேயில்லை. அந்த ஆணாடு இங்ஙனம் வேறுசில பெண்ணாடுகளுடன் கலந்து காமஸுகத்தை அனுபவித்துக்கொண்டிருக்கையில், முதலில் கிணற்றினின்று எடுக்கப் பட்ட பெண்ணாடு 'இது நம்மைக்காட்டிலும் அழகான வேறு பெண்ணாட்டை அங்கீகரித்து நம்மைத் துறக்கப் பார்க்கின்றது' என்று பயந்து அந்த ஆணாடு வேறுபெண்ணாட்டுடன் கலந்திருக்கையாகிற அந்தச் செயலைப் பொறுக்க முடியாதிருந்தது. வாஸ்தவத்தில் அந்த ஆணாடு கெட்ட எண்ணமுடையது; மேலுக்கு மாத்ரம் நல்ல எண்ணமுடையதுபோல அபிநயித்துக் கொண்டிருந்தது. அதன்

ஸ்நேஹமெல்லாம் க்ஷணகாலத்திற்குமேல் நிலைநிற்காது. அது காமக்கலவியில் மிகுந்த சபலமுடையது. இந்திரிய ஸுகங்களால் ஸந்தோஷமடையுந் தன்மையுடையதேயன்றித் தர்மத்தைச் சிறிதும் ஆராய்ந்ததன்று. அந்தப் பெண்ணாடு தன் கணவன் அங்ஙனம் வேறு பெண்ணாடுகளுடன் கலந்திருப்பதை அறிந்து அதைத் துறந்து மனவருத்தத்துடன் போய்விட்டது. பிறகு ஸ்த்ரீ சாபலமுடைய அந்த ஆணாடு அதைப் பிரிந்திருக்க முடியாமல் வருந்தி அதை அருள்புரிவிக்கும்பொருட்டுத் தொடர்ந்து சென்று பெண்பூனையைத் தொடர்ந்த ஆண்பூனைபோலப் பல நல்வார்த்தைகளால் நடுவழியில் ஸமாதானப்படுத்த முயன்றும், அதை அருள்புரிவிக்க முடியாதிருந்தது. தொங்கிக்கொண்டிருந்த அந்த ஆட்டின் வ்ருஷணத்தை ஒரு ப்ராஹ்மணன் கோபத்தினால் அறுத்தான். உபாயமறிந்த அந்த ப்ராஹ்மணனே மீளவும் ப்ரயோஜனத்தை ஆராய்ந்து வ்ருஷணத்தை முன்போலவே தொங்கும்படி ஒட்டவைத்தான். நல்லியற்கையுடையவளே! அறுந்த வ்ருஷணத்தைப் பெற்ற அந்த ஆணாடு கிணற்றில் கிடைத்த பெண்ணாட்டுடன் வெகு காலம் பலவாறு காமஸுகங்களை அனுபவித்துக்கொண்டிருப்பினும், த்ருப்தி உண்டாகப் பெறவில்லை. அழகிய புருவங்களுடையவளே! அந்த ஆடுபோலவே நானும் உன் ப்ரீதியினால் கட்டுண்டு உன்மாயையினால் மோஹித்து இப்பொழுதும் என்னை அறியாதிருக்கிறேன். பூமியிலுள்ள நெல் யவை முதலிய தான்யங்களும் பொன் வெள்ளி முதலியவைகளும் பசுக்களும் ஸ்த்ரீகளும் ஆகிய இவையெல்லாம் எவ்வளவு நிறைந்திருப்பினும் சப்தாதி விஷயங்களை அனுபவிக்கவேண்டுமென்னும் விருப்பமுடையவனுக்கு மனக்களிப்பை நிறை

வேற்ற வல்லவையாகமாட்டார். சப்தாதி விஷயங்களை அநுபவிக்கவேண்டு மென்னும் ப்ரீதி ஒருகாலும் அவற்றை அநுபவிக்கையால் அடங்காது. அக்னி நெய்த்தாரைகளால் மேன்மேலும் வளர்ந்தெரிவது போல, அவ்விருப்பம் காமபோகங்களை அநுபவிக்கையால் மேன்மேலும் வளர்ந்துவருமன்றி ஒருகாலும் குறையாது. எத்தகைய ப்ராணிகளிடத்திலும் ராகம் த்வேஷம் முதலிய கெட்ட எண்ணங்களைச் செய்யாமல் எல்லாவற்றையும் தன்னைப் போலவே பார்க்குந்தன்மையுள்ள புருஷனுக்கு எல்லாத் திசைகளும் ஸந்தோஷமயமாயிருக்குமன்றி ராகத்வேஷாதிகளால் மனக்கலக்கமுற்றவனுக்கு ஒருகாலும் பூர்ணமான ஸந்தோஷம் உண்டாகாது. சப்தாதிவிஷயங்களில் விருப்பம் துர்ப்புத்தியுடையவர்களால் துறக்கமுடியாது. புருஷன் கிழத்தன்மையை அடையினும் காமபோகங்களை அநுபவிக்கவேண்டுமென்கிறஅவனுடைய விருப்பம் கிழத்தன்மையை அடையாது. அவ்விருப்பம் புருஷனுக்குப் பற்பல துக்கங்களை விளைக்கும். சிறிதும் துக்கமின்றிக் கேவல ஸுகத்தையே அநுபவிக்கவேண்டு மென்று விரும்புகின்றவன் அவ்விருப்பத்தை அடியோடு நிச்சயமாய்த் துறக்கவேண்டும். தாயோடாயினும் உடன்பிறந்தவளோடாயினும் புதல்வியோடாயினும் ஏகாந்தத்தில் கலந்து உட்காரலாகாது. இந்த்ரியங்கள் மிகுந்த வலிவுடையவை. அவை விவேகமுடையவனையும் இழுத்துக்கொண்டு போய்விடும். ஸர்வகாலமும் தவறாமல் சப்தாதி விஷயங்களை அநுபவித்துக்கொண்டிருக்கிற எனக்கு இப்பொழுது ஆயிரமாண்டுகள் சென்றன. ஆயினும் இப்பொழுதும் அந்தந்த விஷயங்களை அநுபவிப்பதற்குரிய காலங்களில் அவற்றை அநுபவிக்கவேண்டு மென்னும்

விருப்பம் அபாரமாக உண்டாகின்றதேயன்றிச் சிறிதும் குறையவில்லை. காமபோகங்களை அனுபவிக்கவேண்டு மென்னும் விருப்பம் அவற்றை எவ்வளவு அனுபவிப்பி னும் அடங்காததாகையால் நான் இவ்விருப்பத்தைத் துறந்து பரப்ரஹ்மத்தினிடத்தில் மனத்தை நிலைநிறுத் திக் குளிர் வெயில் முதலிய த்வந்த்வங்களால் விளையும் வருத்தங்களின்றித் தேஹாத்மப்ரமத்தையும் வென்று ம்ருகங்களுடன் ஸஞ்சரிக்கப் போகிறேன். அறிவுள்ள புருஷன் இஹலோகஸுகம் பரலோகஸுகம் ஆகிய இரண்டும் புருஷார்த்தமன்றென்றும், அவற்றால் மேன் மேலும் ஸம்ஸாரம் வளர்ந்துவருமென்றும், கடைசியில் ஆத்மநாசமே நேருமென்றும் ஆராய்ந்தறிந்து இஹ பர லோகஸுகங்களை நெஞ்சிலும் நினைக்கமாட்டான். ஆதலால், இனி அனுபவிக்கலாகாதென்பதைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? இங்ஙனம் அறிந்து அவற்றை நெஞ்சிலும் நினையாதிருப்பானாயின், மஹாநந்தஸ்வரூப னான ஆத்மாவின் ஸ்வரூபத்தை உள்ளபடி அறியப் பெறுவான். அத்தன்மையுள்ள புருஷனுக்குக் காம போகங்களை அனுபவிக்க வேண்டுமென்னும் விருப்பம் தானே பறந்து போகும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—நஹுஷன்பிள்ளையான யயாதி இங்ஙனம் தன் பத்னியான தேவயானிக்கு மொ ழிந்து தன் புதல்வனான பூருவுக்கு அவனுடைய யௌவ னவயதைக் கொடுத்துச் சப்தாதி விஷயங்களை அனுப விக்கவேண்டுமென்னும் விருப்பம் தொலையப் பெற்று அந்தப் பூருவினிடத்தினின்று தன்கிழத்தனத்தை வாங்கிக்கொண்டான். பிறகு அம்மன்னவன் அக்னிதிக் கில் த்ருஹ்யுவையும் தென்திக்கில் யதுவையும் மேற்கு திக் கில் துர்வஸுவையும் வடக்குதிக்கில் அனுவையும் பாது

காக்கும்படி ஏற்படுத்தினான். வெகுமதிக்கத் தகுந்த மஹாகுணசாலியான பூருவை அத்திசைகளினிடையிலுள்ள பூமண்டலத்திற்கெல்லாம் அரசனாக அபிஷேகம் செய்து அவன் தமையன்மார்களான யது முதலியவர்களை அவனுக்கு உட்பட்டு நடக்கும்படி ஏற்படுத்தித் தான் வனத்திற்குச் சென்றான். இறகு முளைக்கப்பெற்ற பறவை கூட்டைத் துறப்பது போல, அந்த யயாதிமன்னவன் பல வர்ஷங்களாக ஆறு இந்த்ரியங்களாலும் தான் தடையின்றி அனுபவித்துக்கொண்டுவந்த சப்தாதி விஷயஸுகங்களையெல்லாம் ஒரு க்ஷணகாலத்தில் துறந்தான். ப்ரஸித்தனாகிய அம்மன்னவன் வனத்திற்குச் சென்று அங்குத் தேஹத்திலும் அதைத் தொடர்ந்த மற்றவைகளிலும் மனப்பற்றைத் துறந்து ப்ரஹ்மோபாஸனத்தினால் ஸத்வாதிகுணங்களின் கார்யமான ராகத்வேஷாதிகளெல்லாம் தொலையப்பெற்றுப் பெரியோர்களுக்கு ப்ராப்யமும் வாஸுதேவனென்னும் பெயருடையதுமான பரப்ரஹ்மத்தில் மனத்தை நிலை நிறுத்தி அந்தப் பகவானுடைய பக்தர்கள் பெறும்படியான கதி ஸமீபிக்கப்பெற்றான். தேவயானியோவென்றால் தன் கணவன் சொன்ன பழமொழியைக் கேட்டு, ஆண்களும் பெண்களும் ஒருவர்க்கொருவர் ஸ்நேஹத்தை ஏறிட்டுக்கொண்டு ஒருவரை யொருவர் பிரிந்திரிக்க முடியாமல் வருந்துவதை இங்ஙனம் ஒரு பழமொழிபோல மொழிந்து தன்னைப் பரிஹாஸம் செய்தாற் போல நினைத்தாள். அப்பால் அந்தத் தேவயானி, வழிப்போக்கர்கள் தண்ணீர்ப்பந்தலில் ஒன்று சேருவதுபோல, ஈஶ்வரனுக்கு உட்பட்டவர்களான பிள்ளை பெண்டிர் கணவன் முதலியவர்கள் தத்தம் பந்துக்களோடு சேருவது நிலையற்றதென்றும், ப்ரபுவான ஈஶ்வரனுடைய மாயையினால்

ஏற்பட்டதென்றும் நன்றாகத் தெரிந்துகொண்டு, எல்லாவற்றையும் ஸ்வப்னம்போல நினைத்துத் தேஹம் அதைத் தொடர்ந்தவை முதலிய அனைத்திலும் மனப்பற்றைத் துறந்து ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் மனத்தை நிறுத்தித் தன் சரீரத்தைத் துறந்தாள். [1]உலகங்களை யெல்லாம் படைப்பவனும் ஸமஸ்த பூதங்களுக்கும் ஆதாரமாயிருப்பவனும் பசி தாஹம் முதலிய ஊர்மிகளற்றவனும் குணங்களாலும் ஸ்வரூபத்தினாலும் அளவற்றவனும் ஷாட்குண்ய பூர்ணனும் வாஸுதேவனென்று ப்ரஸித்தி பெற்றவனுமாகிய உனக்கு நமஸ்காரம். பத்தொன்பதாவது அத்யாயம் முற்றிற்று.

{ பூருவின்வம்சமும், சகுந்தலோபாக்யானமும், பரதனுடைய வ்ருத்தாந்தமும். }

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—பரீக்ஷித்து மன்னவனே! நீ எந்த வம்சத்தில் பிறந்தனையோ, அப்படிப்பட்ட பூருவின் வம்சத்தைச் சொல்லுகிறேன். மற்றும், இவ்வம்சத்தில், வம்சத்தை மேன்மேலும் வளர்ப்பவர்களான ராஜர்ஷிகளும் அத்தகைய ப்ராஹ்மணர்களும் பிறந்தார்கள். பூருவின் பிள்ளை ஜனமேஜயன். அவன்பிள்ளை ப்ரசின்வான் அவன்பிள்ளை ப்ரவிரோதன். அவன் பிள்ளை நமஸ்யு. அவன்பிள்ளை சாரு. அவன்பிள்ளை ஸுத்யு. அவன் பிள்ளை பஹுகவன். அவன் பிள்ளை சர்யாதி (ஸம்யாதி). அவன் பிள்ளை அஹம்யாதி. அவன் பிள்ளை ரௌத்ராதி. (ரௌத்ராச்வன்). ஸர்வஸ்மாத்பர

1. ஸ்ரீசுகர், காமக்கலவியில் கால்தாழ்ந்த யயாதியும் தேவயானியும் பகவானுடைய அனுக்ரஹத்தினால் மோக்ஷம் அடைந்தார்களென்று மொழிந்து அப்பகவானுடைய குணங்களை நினைத்துமனமகிழ்ந்து அவனுக்கு நமஸ்காரஞ் செய்கிறார்.

னும ஜகத்ஸ்வரூபனுமாகிய பகவானிடத்தினின்று பத்து இந்த்ரியங்கள் உண்டானாற்போல, அந்த ரௌத்ராதிக்கு க்ருதாசியென்னும் அப்ஸரமடந்தையிடத்தில் ருதேயு, கக்ஷேயு, ஸ்தலேயு, க்ருதேயு, ஜலேயு, ஸந்நதேயு, தர்மேயு, ஸத்யேயு, வ்ரதேயு வனேயு என்று பத்துப் பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களில் ருதேயுவின் பிள்ளை ரந்திஸாரன். அவனுக்கு ஸுமதி த்ருவன் அப்ரதிரதனென்று மூன்று பிள்ளைகள். அவர்களில் அப்ரதிரதனுடைய பிள்ளை கண்வன். அவன்பிள்ளை மேதாதிதி. அவனுக்கு ப்ரஸ்கண்வர் முதலிய ப்ராஹ்மணர்கள் பிறந்தார்கள். ரந்திஸாரனுடைய பிள்ளையாகிய ஸுமதிக்கு ரைப்யனென்பவன் பிறந்தான். அவன் பிள்ளை துஷ்யந்தன். அவன் ப்ரஸித்தன். துஷ்யந்தன் ஒருகால் வேட்டைக்காகத் திரிந்துகொண்டு தெய்வாதீனமாய்க் கண்வமஹர்ஷியின் ஆஶ்ரமத்திற்குச் சென்றான். அம்மன்னவன் அங்கு ஸ்ரீமஹாலக்ஷ்மியைப் போன்று தன் தேஹகாந்தியாலேயே தன்னையும் ஆஶ்ரமத்தையும் அலங்கரிப்பவளும் தேவமாயைபோன்றவளுமான ஒரு மடந்தையைக் கண்டு அப்பொழுதே மோஹித்தான். அவன் அவளைக் கண்டமாத்ரத்தில் மிகவும் ஸந்தோஷம் அடைந்து வேட்டையாடின வருத்தமும் தீர்ந்து மன்மதபாதையால் பரிதபித்துச் சிலபடர்களுடன் சென்று புன்னகை செய்துகொண்டே அம் மடந்தையர் மணியை நோக்கி இனிய உரையுடன் மொழிந்தான்.

துஷ்யந்தன் சொல்லுகிறான்:—மாதாசீ! நீ யார்? உன்னொளி தாமரைப்பூவினுடைய உட்புறத்தின் ஒளி போன்றிருக்கின்றது. மனத்திற்கு இனியவளாயிருக்கின்றனை. நீ யாருடையவள்? ஜனஸஞ்சாரமில்லாத இவ்வனத்தில் நீ என்ன செய்ய விரும்புகின்றனை? அழகிய

இடையுடையவளே! நீ ராஜகுமாரத்தியா யிருக்கவேண்டு மென்று நான் நிச்சயமாக நினைக்கிறேன். பூருவின் வம்சத்தில் பிறந்தவர்களின் மனம் ஒருகாலும் அதர்மத்தில் விருப்பங் கொள்ளாது. (என் மனம் உன்னிடத்தில் விருப்பமுற்றிருக்கையால் நீ க்ஷத்ரியகன்னிகையாயிருக்க வேண்டுமென்று நிச்சயிக்கிறேன்).

சகுந்தலை சொல்லுகிறாள்:—நான் விஸ்வாமித்ராருக்கு மேனகையிடத்தில் பிறந்தவள். (ஆகையால் க்ஷத்ரிய கன்னிகை யென்பது வாஸ்தவமே). என் தாயான மேனகை ஸ்வர்க்கம் போகும்பொழுது என்னை இவ்வனத்தில் விட்டுப்போனாள். இவ்விஷயம் மஹானுபாவரான கண்வருக்குத் தெரியும். வீரனே! உனக்குப் பணிவிடை செய்ய ஸித்தமாயிருக்கின்றேன். உனக்கு நான் என்ன செய்யவேண்டுமோ அதைச் சொல்வாயாக. தாமரைக் கண்ணனே! உட்காருவாயாக. நான் செய்யும் பூஜையை அங்கீகரிக்கவேண்டும். இங்குச் செந்நெல் தான்யங்கள் இருக்கின்றன. அவற்றைப் புசிப்பாயாக.* மனத்திற்கு ருசிக்குமாயின், இங்கு வஸித்திருப்பாயாக.

துஷ்யந்தன் சொல்லுகிறான்:—அழகிய புருவங்களுடையவளே! குசிகவம்சத்தில் பிறந்த நீ இங்ஙனம் சொல்லுவது யுக்தமே. ராஜகன்னிகைகள் தாமே தங்களுக்கு அனுரூபனான மணவாளனைத் தேடி வரிப்பார்களல்லவா?

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—பிறகு அம்மாதரசி துஷ்யந்தன் சொன்னபடி அங்கீகரிக்கையில், தேச காலங்களுக்கு உரியபடி நடத்தவேண்டிய செயல்களை அறிந்த அம்மன்னவனும் காந்தர்வ விவாஹ விதியின்படி தர்மந் தவறாமல் சகுந்தலை யென்னும் பெயருடைய அம்மடக்

தையர்மணியை மணம் புரிந்தான். வீணாகாத வீர்ய முடைய அந்த ராஜர்ஷி தன் மஹிஷியான சகுந்தலை யிடத்தில் வீர்யத்தை ஆதானம் செய்தான் (கர்ப்பா தானம் செய்தான்). பிறகு மற்றைநாள் விடியற்காலை யில் தன் பட்டணத்திற்குச் சென்றான். அப்பால் சகுந் தலை ப்ரஸவகாலம் நேரப்பெற்றுப் புதல்வனைப் பெற்றாள். அந்தப் புதல்வனுக்குச் செய்யவேண்டிய ஜாதகரணம் முதலிய ஸம்ஸ்காரங்களையெல்லாம் கண்வமஹர்ஷி வனத் திலேயே நடத்தினார். அப்பாலவன் மிகுந்த பலமுடைய வனாகையால் ஸிம்ஹத்தைப் பிடித்துக்கட்டி விளையாடிக் கொண்டிருந்தான். சகுந்தலை, அளவற்ற பராக்ரமமுடை யவனும் பகவானுடைய அம்சாம்சத்தினால் பிறந்தவனு மாகிய அப்புதல்வனை எடுத்துக்கொண்டு பர்த்தாவான துஷ்யந்த மன்னவனிடம்வந்தாள். நிந்தைக்கிடமல்லாத பார்யையும் புதல்வனுமாகிய அவ்விருவரும் வந்திருக்கை யில், துஷ்யந்தமன்னவன் தன்னுடைய பார்யாபுத்ரர்க ளென்று அங்கீகரியாதிருந்தான். அப்பொழுது ஸமஸ்த பூதங்களும் கேட்டுக்கொண்டிருக்கையில் ஆகாயத்தில் அசரீரிவாக்கு அம்மன்னவனுக்குச் செவிப்பட்டது. 'தாய் தோல்பைபோலக் கர்ப்பத்திற்கு ஆதாரமாயிருப்பவள். பிள்ளை தந்தையினுடையவனே. பிள்ளை தந்தையிடத்தி னின்று பிறந்தவனாகையால் அவன் அந்தத்தந்தையே யன்றி அவனைக்காட்டிலும் வேறுபட்டவனல்லன். ஆகையால், துஷ்யந்தனே! உன் பிள்ளையாகிய இவனை நீ அங்கீகரித்துப் போஷிப்பாயாக. சகுந்தலையை அவ மதிக்கவேண்டாம். ஸந்ததியை மேன்மேலும் வளரச் செய்யவல்ல புதல்வன் தந்தையை யமலோகத்தினின் றும் மீட்டு ஸ்வர்க்கலோகம் சேரும்படி செய்வான். புரு ஷன் தன்னுடைய ரேதஸ்ஸுக்குப் பிறந்த பிள்ளை

யைத் தான் அங்கீகரிப்பது அவஸ்யமே. இப்புதல்வனைப் பிறப்பித்தவன் நீயே யென்று சகுந்தலை சொல்லுவது ஸத்யமே'. அம்மன்னவனும் அந்த அசரீரிவாக்கைக் கேட்டபின்பு பார்யையையும் பிள்ளையையும் அங்கீகரித்தான். தந்தையாகிய துஷ்யந்தன் மரணம் அடைகையில் பிள்ளையாகிய அந்தப் பரதனும் சக்ரவர்த்தியாகிப் பெரும் புகழுடையிருந்தான். பூமியில் பகவானுடைய அம்சத்தினால் பிறந்த அப்பரதனுடைய மஹிமையைப் பாடுகிறார்கள். அந்தப் பரதனுடைய வலக்கையில் சக்ரரேகையும், பாதங்களில் பத்மரேகையும் விளங்கின. அவன் மஹாபிஷேக விதியின்படி அபிஷேகம் செய்யப்பெற்றுப் பூமண்டலத்திற்கெல்லாம் ப்ரபுவாயிருந்தான். ஸமர்த்தனாகிய அப்பரதன் கங்கையின்கரையில் இருநூற்றைம்பது அஸ்வமேதயாகங்கள் செய்து பகவானை ஆராதித்தான். மற்றும், அவன் யமுனையின்கரையில் தீர்க்கதமஸ்ஸென்னும் ரிஷியைப் புரோஹிதராக ஏற்படுத்திக்கொண்டு எழுபத்தெட்டு அஸ்வமேதயாகங்கள் செய்தான். அந்த யாகங்களில் ஒவ்வொன்றிலும் பணத்தை அபாரமாகக் கொடுத்தான். துஷ்யந்தனுடைய பிள்ளையான அப்பரதன் மிகுந்த குணமுடைய தேசத்தில் [1] அக்னிசயனம் செய்தான். அதில் அம்மன்னவன் பூரிதானமாகக் கொடுத்த பசுக்களை அநேகமாயிரம் ப்ராஹ்மணர்கள் [2] பத்து பத்தாகப் பங்கிட்டுக்கொண்டார்கள். மற்றும் அம்மன்னவன் மஷ்காரமென்னும் புண்யதீர்த்தத்தில் [3] முப்பத்துமூன்று நூறு குதிரைகளைக் கட்டி ராஜாக்களை

1, அக்னிசயனமென்பது வைதிகமான ஒரு கர்மவிசேஷம்.

2 பத்தமென்பது ஸங்க்யாவிசேஷம். பத்து பத்தாகவென்று உலகத்திலும் வழங்குகிறார்கள்.

3. மூவாயிரத்துமுன்னூறு.

யெல்லாம் வியப்புறச் செய்துகொண்டு பெருமாயாவிக ளான தேவதைகளின் மாயைகளை யெல்லாம் கடந்தான். (தேவதைகள் யாகக்குதிரையைப் பறிப்பது முதலிய பல மாயைகளைச் செய்து யாகங்களை நிறைவேற வொட்டார்கள். ராஜாக்களும் தங்களால் கூடுமான வரையில் விக்னங்களைச் செய்வார்கள். அம்மன்னவன் அவ்விருவர்களுடைய விக்னங்களை யெல்லாம் தடுத்து யாகம் செய்தான்). மற்றும், அவன் மஷ்காரமென்னும் கர்மத்தில் வெளுத்த தந்தங்கள் அமைந்து உடம்பெல்லாம் பொன்னலங்காரம் செய்யப்பெற்றுக் கறுத்திருப்பவைகளும் சிறந்தவைகளுமான பதினான்குகோடி யானைகளைக் கொடுத்தான். பரதனுடைய செயல்கள் மிகவும் அற்புதமாயிருப்பவை. அத்தகைய செயல்களை அவனுக்கு முன்பட்ட ராஜாக்களாவது பின்பட்ட ராஜாக்களாவது எவரும் செய்யவில்லை. இனிமேல் வரப்போகிறவர்களும் செய்ய மாட்டார்கள். ஜனங்களில் கைகளால் ஸ்வர்க்கத்தை அடைந்தவர்களுமில்லை. இனி அடையப்போகின்றவர்களுமில்லை. (ஸ்வர்க்கத்தை அடைவதற்கு ஜ்யோதிஷ்டோமம் முதலிய புண்ய கர்மங்கள் ஸாதனமேயன்றி அவரவர்களுடைய புஜங்கள் ஸாதனமாவது எங்கேனுமுண்டோ? அங்ஙனமே பரதனுடைய செயல்கள் அவனையொழிய மற்றவர்களால் செய்யமுடியாது). அம்மன்னவன் திக்விஜயத்தில் தன் பலத்தினால் ப்ராஹ்மணத்வேஷிகளான கிராதர் ஹூணர் யவனர் அந்த்ரர் வங்கர் சகர் கஷர் ம்லேச்சர் முதலிய துஷ்ட ராஜாக்களை யெல்லாம் கொன்றான். முன்பு தேவதைகளை வென்று அவர்களுடைய மடந்தையர்களைப் பறித்துக்கொண்டு பாதாள லோகம் சேர்ந்து வஸித்திருந்த பலிஷ்டர்களான அஸுரர்களையும் ராக்ஷஸர்களையும் வதித்து அம்மடந்தையர்களை மீட்டுக்

கொண்டு வந்து அவரவர்களுக்குச் சேர்ப்பித்தான். மற்றும், பரதன் ராஜனுயிருக்கும்பொழுது, ஆகாயம் பூமி இரண்டும் அவன்ப்ரஜைகள் விரும்பும் விருப்பங்களையெல்லாம் அபாரமாகக் கறந்தன. இங்ஙனம் அம்மன்னவன் இருபத்தொன்பதினுயிரமாண்டுகள் திசைகளில் தன் கட்டளையை நடத்தி வந்தான். இவ்வாறு பூமண்டலத்தை யெல்லாம் பரிபாலித்துக்கொண்டுவந்த அந்தப் பரத மன்னவன் லோகபாலர்களின் ஐஶ்வர்யம், நிகரற்றதான தன் செல்வம், எங்கும் தடைபடாத தன் கட்டளை, ப்ராணன்கள் ஆகிய இவையெல்லாம் நிலையற்றவையென்று நிச்சயித்து அவையெல்லாவற்றினின்றும் மனப்பற்றை மாற்றிக்கொண்டான். அந்தப் பரதமன்னவனுக்கு மிகவும் ப்ரியமான மூன்று பார்யைகள் இருந்தார்கள். அவர்கள் மூவரும் விதர்ப்பராஜன் புதல்விகள். அவர்கள் ஒவ்வொருவரும் தங்களுக்குப் பிறந்த பிள்ளைகளை மன்னவன் பார்த்துத் தனக்கு அனுரூபமாயில்லையென்று சொல்லுகையில், வ்யபிசார சங்கையினுல் நம்மைத் துறப்பானென்று பயந்து கொன்றுவிட்டார்கள். இங்ஙனம் அவனுடைய வம்சம் பாழாகையில், அதற்காக மருத்ஸோமமென்னும் யாகம் செய்கின்ற அம்மன்னவனுக்குத் தேவதைகள் அருள்புரிந்து பரத்வாஜனென்னும் பிள்ளையைக் கொடுத்தார்கள். ஒருகால் ப்ருஹஸ்பதி தம் ப்ராதாவான உசத்யருடைய பார்யையான மமதையென்பவளிடத்தில் மைதுனத்திற்காகத் தொடங்குகையில், கர்ப்பத்திலுள்ள சிசு இரண்டாங்கர்ப்பத்திற்கு இடமில்லாமையால் முறையிட்டுத் தடுக்க, ப்ருஹஸ்பதி கோபித்து 'நீ தீர்க்கமான தமஸ்ஸை அடைவாய். அந்தனுமாவாய்' என்று சபித்துப் பலாத்காரமாக வீர்யத்தை நிஷேகஞ்செய்தான். கர்ப்பத்திலுள்ள சிசு ப்ருஹஸ்பதியின் சாபத்

திலுல் தீர்க்கதமஸ்ஸென்னும் பெயர்பெற்றது. அச்சிசு அவ்வீர்யத்தைத் தன் புறங்காலால் உதைத்து வெளித்தள்ள வீர்யம் பூமியில் விழுந்தவுடன் ஒரு குமாரனுயிற்று. கணவன் கைவிடுவானென்னும் பயத்திலுல் பிறனுடைய வீர்யத்திற்குப் பிறந்த அப்புதல்வனைத் துறக்க விரும்புகின்ற மமதையை நோக்கித் தேவதைகள் ப்ருஹஸ்பதிக்கும் அவளுக்குமான விவாதத்தை உட்கொண்டதும் அப்புதல்வனுடைய நாமத்தை நிரூபிப்பதுமாகிய இம்மொழியைக் கூறினுர்கள். (மமதையைப் பார்த்து ப்ருஹஸ்பதி சொல்லுகிறுர்:—) 'அடி மதிகேடீ! இப் புதல்வனைப் போஷிப்பாயாக. ஒருவனுடைய க்ஷேத்ரத்தில் மற்றொருவனுடைய பீஜத்திற்குப் பிறந்தவனுகையால் இப்புதல்வன் இருவர்களால் உண்டானவன். ஆதலால் இவன் உன்பர்த்தாவுக்கும் புதல்வனே. ஆகையால் உன் பர்த்தாவிடத்தினின்றும் நீ சங்கிக்கவேண்டாம்'. (இங்ஙனம் ப்ருஹஸ்பதியால் சொல்லப்பட்ட மமதை ப்ருஹஸ்பதியைக் குறித்துச் சொல்லுகிறுள்:—) 'ப்ருஹஸ்பதீ! இருவர்க்குப் பிறந்தவனுகிய இப்புதல்வனை நீயே போஷிப்பாயாக. நான் போஷிக்கமாட்டேன்' என்று தாய்தந்தைகளான மமதையும் ப்ருஹஸ்பதியும் விவாதப்பட்டு அப்புதல்வனைத் துறந்துபோனுர்களாகையால் அவன் [1]பாத்வாஜனென்று பெயர்பெற்றுன்'. மமதை இங்ஙனம் மொழிகின்ற தேவதைகளால் தூண்டப்பட்டும், வ்யபிசாரத்திலுல் பிறந்தவனுகையால் இவன் நமக்கு உபயோகப்படமாட்டானென்று துறந்துபோனுள். பிறகு

1. த்வாப்யாம் ஜாயத இதி த்வாஜঃ. இருவர்க்குப் பிறந்தவன் த்வாஜன். பர - என்றுல் போஷிப்பாயாக என்று பொருள். ப்ருஹஸ்பதியும் மமதையும் 'த்வாஜம் பர' என்று விவாதப்பட்டார்களாகையால் அவன் பரத்வாஜனுனுனென்றுணர்க

அப்புதல்வனை மருத்துக்கள் போஷித்தார்கள். பரதனுடைய வம்சம் பாழாயிருக்கையில் அம்மருத்துக்கள் அப்புதல்வனைப் பரதனுக்குக் கொடுத்தார்கள். அதனால் அவன் [1]விததனென்றும் பெயர் பெற்றான். இருபதாவது அத்யாயம் முற்றிற்று.

{ பரதனுடைய ஸந்ததியையும ரந்திதேவனுடைய வ்ருத்தாந்தத்தையும் கூறுதல். }

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—விததனுடைய பிள்ளை மன்யு. அவனுக்கு ப்ருஹத்க்ஷத்ரன் ஜயன் மஹாவீர்யன் நரன் கர்க்கனென்று ஐந்து பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களில் நரனுடைய பிள்ளை ஸங்க்ருதி. பரீக்ஷித்து மன்னவனே! ஸங்க்ருதிக்குக் குருவென்றும் ரந்திதேவனென்றும் இரண்டு பிள்ளைகள் பிறந்தார்கள். ரந்திதேவனுடைய கீர்த்தியை இஹலோகத்திலும் பரலோகத்திலும் பாடுகிறார்கள். அவன் தான் ஒரு முயற்சியும் செய்யாமல் தெய்வாதீனமாய்க் கிடைத்தவைகளைக் கொண்டு ஸந்தோஷமுற்றிருப்பவன்; அவ்வப்பொழுது தெய்வாதீனமாய்க் கிடைத்தவற்றையெல்லாம் புசிக்க விரும்புகின்றவர்களுக்குக் கொடுத்துவிடுந் தன்மையன். ஸாயங்காலத்திற்கென்றாவது நாளைக்கென்றாவது சிறிதும் மிகுத்து வைத்துக்கொள்வது அவனுக்கு வழக்கமில்லை. அவன் குடும்பத்துடன் இளைத்திருப்பினும் ஜிதேந்த்ரியனாகையால் அதைப்பற்றி வருத்தமுறாமலே யிருப்பான். அவன் ஒருகால் ஆஹாரமின்றி ஜலத்தையுங் கூடப் பருகாமல் நாற்பத்தெட்டுநாள் வெறுமனே இருந்

1. வம்சம் அழிந்திருக்கையில் அதை மேன்மேலும் வளரச் செய்தானாகையால் விததனானான். (விதநோதி இதி விதத: விததனென்றால் பரவச்செய்பவன்.

தான். அவனுடைய குடும்பம் வருத்தமுற்றிருந்தது. பசி தாஹங்களால் நடுக்கமுற்றிருக்கின்ற அம்மன்னவன் ஒருநாள் காலையில் தெய்வாதீனமாய்க் கிடைத்த நெய் பாயஸம் அப்பம் இவைகளையும் ஜலத்தையும் புசிக்க விரும்பித் தொடங்குகையில், அப்பொழுது ஒரு ப்ராஹ்மணன் அதிதியாக அவ்விடம் வந்தான். அந்த ரந்தி தேவன் ப்ரீதியுடனும் ஶ்ரத்தையுடனும் கூடி ஸமஸ்த பூதங்களிலும் பரம புருஷன் வஸிக்கிறனுகையால் எல்லாம் பகவத் ஸ்வரூபமென்று பாவித்துத் தான் புசிக்க வைத்திருந்த நெய் பாயஸம் முதலியவற்றை அந்த அதிதிக்குப் பங்கிட்டுக் கொடுத்தான். அந்த ப்ராஹ்மணன் அதைப் புசித்துப் போனான். பிறகு அம்மன்னவன் மிகுந்த அன்னத்தைத் தன் குடும்பத்திற்குப் பங்கிட்டுக்கொடுத்துத் தானும் புசிக்க விரும்புகையில், ஒரு சூத்ரன் மற்றொரு அதிதியாய் வந்து சேர்ந்தான். அம்மன்னவன் பகவானை நினைத்துக்கொண்டு தனக்காக வைத்துக் கொண்டிருப்பதில் அந்தச் சூத்ரனுக்குப் பங்கிட்டுக் கொடுத்தான். அவன் போனபின்பு, மற்றொருவன் நாய்களால் சூழப்பெற்று அதிதியாய் வந்து அம்மன்னவனைப் பார்த்து 'ராஜனே! என் கூட்டத்துடன் பசியினால் வருந்துகின்ற எனக்கு அன்னம் கொடுப்பாயாக' என்றான். அம்மன்னவன் அதிதிகளுக்குக் கொடுத்து மிகுந்திருக்கின்ற அவ்வன்னத்தை வெகுமதியுடன் நாய்களுக்கும் அவற்றை யோட்டிக்கொண்டுவந்தவனுக்கும் கொடுத்துப் பரமபுருஷபாவனையால் அவனுக்கு நமஸ்காரம் செய்தான். பிறகு ஜலம் மாத்ரமே மிகுந்திருந்தது. அதுவும் ஒருவனுக்கு மாத்ரமே த்ருப்தியை விளைக்கக்கூடிய வளவுள்ளதாயிருந்தது. அம்மன்னவன் அந்த ஜலத்தைப் பானஞ் செய்யத் தொடங்குகையில், ஒரு புலையன்

வந்து 'மன்னவனே! நீசனுகிய எனக்கு ஜலங்கொடுப்பாயாக' என்றான். அந்தப் புலையன் மொழிந்த வார்த்தை மிகவும் தீனமாகி அவனுடைய வருத்தத்தையெல்லாம் வெளியிடக்கூடியதாயிருந்தது. ரந்திதேவன் அவ்வசனத்தைக் கேட்டு மன இரக்கத்தினுல் மிகவும் பரிதபித்து அவனைக் குறித்து இங்ஙனம் அம்ருதம்போன்ற வசனத்தை மொழிந்தான்.

ரந்திதேவன் சொல்லுகிறான்:—அணிமாதி அஷ்டைச்வர்யங்களோடு கூடின ப்ரஹ்மாதிகளின் கதியையாவது மோக்ஷத்தையாவது நான் விரும்பவில்லை. பசிதாஹங்களால் வருந்துகிற ப்ராணிகளின் மனத்தில் உண்டாகிற வருத்தத்தையெல்லாம் நானெருவனே அநுபவிக்க வேண்டுமென்று விரும்புகிறேன். ஏனென்றால், அப்பொழுது எல்லோரும் துக்கமற்றிருப்பார்களல்லவா? மன இரக்கத்திற்கிடமாகி ஜீவிக்கவேண்டுமென்று விரும்புகின்றவனுக்கு ப்ராணன்களைத் தரிக்கச் செய்யவல்ல ஜலத்தைக் கொடுப்பதனுலேயே பசிதாஹங்களால் விளையும் வருத்தம் ஶரீராயாஸம் தைன்யம் ஶ்ரமம் சோகம் வ்யஸனம் மோஹம் ஆகிய இவையெல்லாம் பறந்து போகும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— இயற்கையாகவே மன இரக்கமுடைய ரந்திதேவமன்னவன் தான் தாஹத்தினுல் மரணம் அடையுந்தசையில் இருப்பினும் தைர்யத்துடன் இங்ஙனம் மொழிந்து தான் வைத்துக்கொண்டிருந்த ஜலத்தையும் அந்தப் புலையனுக்குக் கொடுத்தான். அர்த்தம் காமம் முதலிய பலனை விரும்புகின்றவர்களுக்கு அப்பலன்களைக் கொடுப்பவர்களும் மூன்று லோகங்களுக்கும் ப்ரபுக்களுமாகிய ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரர்கள் அம்மன்னவனிடம் அருள்புரிந்து அவனுக்குத் தேஹாத்ம விவேகத்தையும் விளைவித்துத் தாங்கள் அவனைப் பரீ

க்ஷிப்பதற்காக அதிதிகளாய் வந்த மாயையையும் அறிவித்தார்கள். அப்பால் அந்த ரந்திதேவன் அந்த ப்ரஹ்மாதிகளுக்கு நமஸ்கரித்துத் தேஹத்திலும் அதைத் தொடர்ந்த மற்றவைகளிடத்திலும் மனப்பற்றைத் துறந்து இஹபரலோக ஸுகங்களில் ஆசையற்றவனாகி ஷாட்குண்ய பூர்ணனான வாஸுதேவனிடத்தில் பக்தியுடன் மனத்தை நிலைநிறுத்தினான். ஒரு ப்ரயோஜனத்தையும் விரும்பாமல் வாஸுதேவனிடத்தில் நிலைநின்ற மனமுடைய அம்மன்னவனுக்கு ஸத்வரஜஸ் தமோகுணமயமான மாயை ஸ்வப்னம்போல்மறைந்தது (ப்ரக்ருதி ஸம்பந்தத்தினின்று விடுபட்டான்). அந்த ரந்திதேவனை அநுஸரித்திருந்தவர்கள் அனைவரும் அவனோடு ஸஹவாஸம் செய்த மஹிமையால் தேஹாத்ம ப்ரமம் முதலிய அஜ்ஞானம் நீங்கி ஆத்மஜ்ஞானம் உண்டாகப்பெற்று ஸ்ரீமந் நாராயணனையே பரம கதியாகப் பற்றினார்கள். கர்க்கனுடைய பிள்ளை சினி. அவன் பிள்ளை கார்க்யன். அவனிடத்தினின்று ப்ராஹ்மணகுலம் உண்டாயிற்று. மஹாவீர்யனுடைய பிள்ளை துரிதக்ஷயன். அவனுக்குத்ரய்யாருணி கவி புஷ்கராருணி என்று மூன்று பிள்ளைகள் பிறந்தார்கள். அம்மூவரும் க்ஷத்ரியகுலத்தினின்று ப்ராஹ்மணத் தன்மையைப் பெற்றார்கள். ப்ருஹத்க்ஷத்ரனுடைய பிள்ளை ஹஸ்தி. இவனே ஹாஸ்தின புரத்தை உண்டாக்கினான். ஹஸ்திக்கு அஜமீடன் த்விமீடன் புருமீடன் என்று மூன்று பிள்ளைகள் பிறந்தார்கள். அஜமீடனுடைய வம்சத்தில் பிறந்த ப்ரியமீடன் முதலியவர்கள் ப்ராஹ்மணர்களானார்கள் அந்த அஜமீடனுக்கே ப்ருஹதிஷுவென்று மற்றொரு புதல்வன் உண்டு. அவன் பிள்ளை ப்ருஹத்தனு. அவன் பிள்ளை ப்ருஹத்காயன். அவன் பிள்ளை ப்ருஹத்ரதன். அவன் பிள்ளை விசதன். அவன் பிள்ளை பேனஜித்து. அவ

னுக்கு ருசிராச்வன் த்ருடஹனு காச்யன் வத்ஸன் என்று நான்கு பிள்ளைகள். அவர்களில் ருசிராச்வன் பிள்ளை ப்ராஜ்ஞன். அவன் பிள்ளை ப்ருதுஸேனன். அவன் பிள்ளை பாரன். அவன் பிள்ளை நீபன். அவனுக்கு நூறு பிள்ளைகள் பிறந்தார்கள். அந்த நீபனே ஸ்ரீசுகருடைய புதல்வியான க்ருதியென்பவளிடத்தில் ப்ரஹ்மதத்தனென்னும் புதல்வனைப் பெற்றான். அவன் மஹாயோகியாயிருந்தான். அவன் தன் பார்யையான ஸாஸ்வதியிடத்தில் விஷ்வக்ஸேனனென்னும் புதல்வனைப் பெற்றான். அவன் ஜைகீஷவ்யருடைய உபதேசத்தினால் யோகசாஸ்த்ரத்தை இயற்றினான். அந்த விஷ்வக்ஸேனனுடைய பிள்ளை உதக்ஸேனன். அவன்பிள்ளை பல்லாதன். இவர்கள் எல்லாரும் அஜமீடனுடைய பிள்ளையாகிய ப்ருஹதிஷுவின் வம்சத்தில் பிறந்தவர்கள். த்விமீடன் பிள்ளை யவீநரன். அவன் பிள்ளை த்ருதிமான் அவன் பிள்ளை ஸத்யத்ருதி. அவன் பிள்ளை த்ருடநேமி. அவன் பிள்ளை ஸுபார்ச்வன். அவன் பிள்ளை ஸுமதி. அவன் பிள்ளை ஸந்திமான். அவன்பிள்ளை க்ருதி. அவன் ஹிரண்யநாபரிடத்தினின்று யோகத்தையும் ஸாமவேதத்தின் ஆறு ஸம்ஹிதைகளையும் பெற்றுப் பிறர்க்கு அத்யயனம் செய்வித்தான். அவன் பிள்ளை உக்ராயுதன். அவன் பிள்ளை க்ஷேம்யன். அவன்பிள்ளை ஸுவீரன். அவன்பிள்ளை ரிபுஞ்சயன். அவன்பிள்ளை பஹுரதன். புருமீடனுக்கு ஸந்ததி கிடையாது. அஜமீடனுக்கு நளினியென்னும் பார்யையிடத்தில் நீலனென்று மற்றொரு புதல்வன் பிறந்தான். அவன்பிள்ளை சாந்தி. அவன் பிள்ளை ஸுசாந்தி. அவன் பிள்ளை புருஜ்ஞன். அவன் பிள்ளை அர்க்கன். அவன்பிள்ளை பர்ம்யாச்வன். அவனுக்கு முத்கலன் யவீநரன் ப்ருஹதிஷு காம்பில்யன் ஸஞ்சயன் என்று

ஐந்து பிள்ளைகள். பர்ம்யாஸ்வன் தன் பிள்ளைகள் ஐவரையும் பார்த்து 'பிள்ளைகளே! நீங்கள் என்னுடைய ஐந்து விஷயங்களையும் பாதுகாக்கவல்லவர்கள்' என்றான். ஆகையால் அவர்கள் பஞ்சாலர்களென்று பெயர் பெற்றார்கள். அவர்களில் முத்கலனிடத்தினின்று மௌத்கல்யமென்று ப்ரஸித்திபெற்ற ப்ராஹ்மணகுலம் உண்டாயிற்று. பர்ம்யாஸ்வனுடைய பிள்ளையாகிய முத்கலனிடத்தினின்று பிள்ளையும் பெண்ணுமாக இரண்டு குழந்தைகள் பிறந்தன. அவற்றில் பிள்ளை திவோதாஸனென்பவன். பெண் அஹல்யையென்பவள். அவளே கௌதமரை மணம் புரிந்து அவரிடத்தினின்று சதாநந்தரைப் பெற்றாள். சதாநந்தருடைய பிள்ளை ஸத்யத்ருதி. அவர் தனுர்வேதத்தில் ஸமர்த்தர். அவர் பிள்ளை சரத்வான். ஊர்வசியைக் கண்டதனால் அவருடைய ரேதஸ்ஸு நழுவிச் சரமென்கிற நாணற்புல்லின் அடியில் விழுந்தது. அதனால் அவர் சரத்வானென்று பெயர் பெற்றார். அந்த ரேதஸ்ஸு பரிசுத்தமான ஆசாரமுடைய ஆணும் பெண்ணுமான இரண்டு குழந்தைகளாயிற்று. சந்தனு மன்னவன் வேட்டைக்குப் போகும்பொழுது தெய்வாதீனமாய் அவ்வாண் பெண் குழந்தைகளைக் கண்டு மன இரக்கத்துடன் கொண்டுபோய் வளர்த்தான். அவ்வாண் பெண் குழந்தைகளில் ஆண்குழந்தை க்ருபாசார்யர். பெண் குழந்தை க்ருபி யென்பவள். அவள் த்ரோணாசார்யருக்குப் பார்யையானாள். இருபத்தொன்றாவது அத்யாயம் முற்றிற்று.

{ திவோதாஸனுடைய வம்சத்தையும், ருக்ஷனுடைய வம்சத்தையும் கூறுதல் }

ஸ்ரீசுகர் சொல்லுகிருர் :—முத்கலனுடைய பிள்ளையாகிய திவோதாஸனுக்குமித்ராயுவென்பவன் பிறந்தான். அவனுக்கு ச்யவனன் ஸுதாஸன் ஸஹதேவன் ஸோமகன் என்று நான்கு பிள்ளைகள். அவர்களில் ஸோமகனுக்கு நூறு பிள்ளைகள். அவர்களில் ஜந்து வென்பவன் எல்லார்க்கும் ஜ்யேஷ்டன். ப்ருஷதனென்பவன் எல்லார்க்கும் கனிஷ்டன். ப்ருஷதனுடையபிள்ளை த்ருபதன். த்ருபதனுக்கு த்ரௌபதியென்னும் புதல்வியும் த்ருஷ்டத்யும்னன் முதலிய புதல்வர்களும் பிறந்தார்கள். த்ருஷ்டத்யும்னனுடைய பிள்ளை த்ருஷ்டகேது பர்ம்யாஸ்வனுடைய வம்சத்தில் பிறந்த இந்த த்ருஷ்டத்யும்னுதிகள் பஞ்சாலரென்னும் பெயருடைய முத்கல வம்சத்தில் பிறந்தவர்களாகையால் பாஞ்சாலகர்களென்று கூறப்படுகிருர்கள். அஜமீடனுக்கு ருக்ஷனென்று மற்றொரு புதல்வன் இருந்தான். அவன் பிள்ளை ஸம்வரணன். அவன் ஸூர்யனுடைய பெண்ணுகிய தபதியென்பவளிடத்தில் குருவென்னும் புதல்வனைப் பெற்றுன். அவன் குருக்ஷேத்ரத்திற்கு ப்ரபு. அந்தக் குருவுக்குப் பரீக்ஷித்து ஸுதனு ஜஹ்னு நிஷதன் என்று நான்கு பிள்ளைகள். அவர்களில் ஸுதனுவின் பிள்ளை ஸுஹோத்ரன். அவன் பிள்ளை ச்யவனன். அவன் பிள்ளை க்ருதி. அவன் பிள்ளை உபரிசரவஸு. அவனுக்கு ப்ருஹத்ரதன் குஸும்பன் மத்ஸ்யன் ப்ரத்யக்ரன் சேதிபன் முதலிய இவர்கள் பிள்ளைகள். அவர்கள் சேதி தேசங்களை ஆண்டு வந்தார்கள். அவர்களில் ப்ருஹத்ரதனுடைய பிள்ளை குசாக்ரன். அவன் பிள்ளை ருஷபன். அவன்பிள்ளை புஷ்பவான். அவன்பிள்ளை ஹிதன் (ஸத்யஹிதன்). அவன் பிள்ளை ஜஹு (ஜகு).

ப்ருஹத்ரானுக்கு மற்றொரு பார்யையிடத்தில் இரண்டு துண்டங்கள் பிறந்தன. அவற்றை அவள் வெளியில் போட்டாள். அங்கு விளையாடிக் கொண்டிருந்த ஜரை யென்னும் ராக்ஷஸி 'ஜீவிப்பாயாக. ஜீவிப்பாயாக.' என்று சொல்லிக்கொண்டு அவ்விரண்டு துண்டங்களையும் ஒன்று சேர்த்தாள். ஜரை ஸந்தானஞ் செய்ததனால் அப் புதல்வன் ஜராஸந்தனென்று பெயர்பெற்றான். ஜராஸந்த னுக்கு ஸஹதேவன் பிறந்தான். ஸஹதேவனுக்கு ஸோமாபியென்றும் ஸ்ருதஸ்ரவனென்றும் இரண்டு பிள்ளை கள் பிறந்தார்கள். குருவின் பிள்ளைகளில் பரீக்ஷித்துக்கு ஸந்ததி இல்லை. ஜஹ்னுவுக்கு ஸுரதனென்பவன் பிறந் தான். அவன் பிள்ளை விதூரதன். அவன் பிள்ளை ஸார்வ பௌமன். அவன் பிள்ளை ஜயஸேனன். அவன் பிள்ளை ராதிகன். அவன்பிள்ளை த்யுமான். அவன்பிள்ளை க்ரோத னன். அவன்பிள்ளை தேவாதிதி. அவன்பிள்ளை ருக்ஷன். அவன்பிள்ளை திலீபன். அவன்பிள்ளை ப்ரதீபன். அவனுக் குத் தேவாபி சந்தனு பாஹ்லீகன் என்று மூன்றுபிள்ளை கள். அவர்களில் தேவாபி தந்தை கொடுத்த ராஜ்யத்தைத் துறந்து வனத்திற்குச் சென்றான். பிறகு சந்தனு ராஜ்யத் தை ஆண்டுவந்தான். அவன் பூர்வஜன்மத்தில் மஹாபிஷ னென்று பெயர்பெற்றிருந்தான். அவன் இந்த ஜன்மத்தில் எவரெவரைக் கைகளால் தொடுகிறானோ, அவர்களனைவ ரும் கிழவர்களாயினும் யௌவனவயதைப் பெற்று மே லான சாந்தி குணத்தையும் அடைந்துகொண்டிருந்தார் கள். அதனால் அவன் ஜனங்களுக்கு ஸுகத்தை விளைத் துக் கொண்டிருந்தானாகையால் சந்தனுவென்று பெயர் பெற்றான். ஒரு கால் அவனுடைய ராஜ்யத்தில் பன்னிர ண்டு வர்ஷங்கள் வரையில் மேகம் மழை பெய்யாமலே யிருந்தது. அப்பொழுது அம்மன்னவன் ப்ராஹ்மணர்கள்

அழைத்து இதற்கென்ன காரணமென்று வினவ, அவர்கள் அம்மன்னவனை நோக்கி 'உன் தமையன் இருக்க அவனுக்கு முன்னே நீ ராஜ்யத்தை அனுபவிக்கிறுயாகையால், தமையன் விவாஹம் செய்துகொள்ளாதிருக்கையில் விவாஹஞ் செய்துகொண்ட தம்பியின் தோஷத்தை ஏற்றுக்கொண்டிருக்கின்றனை. ஆகையால் அந்தத் தோஷம் தீரும்பொருட்டு ராஜ்யத்தைத் தமையனுக்குக் கொடுப்பாயாக. அப்பால் மழை பெய்யும்' என்றுர்கள். அம்மன்னவனும் மழை பெய்து நாடுகளும் நகரங்களும் க்ஷேமப்படவேண்டுமென்று விரும்பி வனத்திற்குச் சென்று 'க்ஷத்ரியனுக்கு ப்ரஜைகளைப் பாதுகாக்கை முதலியவை முக்யமான தர்மம். ஆகையால் நீ ராஜ்யத்தை அங்கீகரிக்க வேண்டும்' என்று தமையனை நல்வார்த்தை சொல்லி வேண்டினன். அதற்கு முன்னமே அவனுடைய மந்த்ரியாகிய அஶ்மராதனென்பவன் தேவாபியைப் பாஷண்டனுக்கி ராஜ்யத்திற்குத் தகாதவனாகச் செய்யும் பொருட்டு அனுப்பியிருந்த அந்தணர்கள் பாஷண்ட மதத்தைச் சார்ந்த உரைகளை மொழிந்து தேவாபியை வேதமார்க்கத்தினின்றும் நழுவச் செய்தார்கள். அதனால் அவன் தன்னை வேண்டுகின்ற சந்தனுவைப் பார்த்து வேதவாதங்களைப் பழித்து வீண் பேச்சுக்களைப் பேசினன். அங்ஙனம் அந்தத் தேவாபி வேதமார்க்கத்தினின்று நழுவி ராஜ்யத்திற்குத் தகாதவனுகிவிட்டபடியால் சந்தனுவினுடைய தோஷம் நீங்கி அவனுடைய ராஜ்யத்தில் மேகம் மழைபெய்தது. தேவாபி கலாபத்திற் சென்று யோகத்தை அனுஷ்டித்துக்கொண்டிருந்து கலியுகத்தில் ஸோமவம்சம் அடியோடு அழிந்து போகையில் அதை மீளவும் புத்ரபௌத்ரபாரம்பர்யமாய் வளர்த்து நிலைநிறுத்தப்போகிறுன். ப்ரதீபனுடைய பிள்ளையாகிய

பாஹ்லீகனுக்கு ஸோமதத்தன் பிறந்தான். அவனுக்குப் பூரி பூரிஶ்ரவஸ் சலன் என்று மூன்று பிள்ளைகள் பிறந்தார்கள். கங்கை ப்ரஹ்மசாபத்தினால் மனுஷ்யஸ்த்ரீயாய்ப் பிறந்து ஸ்வயம்வரத்தில் சந்தனுவை வரித்தாள். அவனுக்கு அந்தக் கங்கையிடத்தில் ஆத்மஜ்ஞானியான பீஷ்மர் பிறந்தார். மற்றும், அவர் தர்மத்தை அறிந்தவர்களில் சிறந்தவர்; மஹாபாகவதர்; வித்வான்; வீரஸைன்யத்திற்கு நாயகராகி முன்னின்று நிர்வஹிக்குந் திறமையுடையவர். அவர் பரசுராமனை யுத்தத்தில் ஸந்தோஷப்படுத்தினார். (முன்பு உபரிசரவஸுவின் வீர்யத்தை மத்ஸ்யம் பக்ஷிக்க, அதன்வயிற்றில் அவ்வீர்யம் ஒரு பெண்ணாகி வளர்ந்தது. செம்படவர்கள் அந்த மத்ஸ்யத்தைப் பிடித்து அதன்வயிற்றிலிருந்த பெண்ணை எடுத்து வளர்த்தார்கள். அவள் மதஸ்யகந்தியென்றும் யோஜனகந்தியென்றும் ஸத்யவதியென்றும் பல பெயர்களைப் பெற்றாள். சந்தனு தன் பார்யையான கங்கை மறைகையில் அந்தச் செம்படவர்கள் வளர்த்த பெண்மணியை மணம்புரிந்தான்). அவனுக்கு அந்த மத்ஸயகந்தியென்னும் செம்படவப் பெண்ணிடத்தில் சித்ராங்கதனென்றும் விசித்ரவீர்யனென்றும் இரண்டுபிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களில் சித்ராங்கதன் தன்னோடொத்த பெயருடைய (சித்ராங்கதனென்கிற) கந்தர்வனால் யுத்தத்தில் முடிக்கப்பட்டான். இந்தச் செம்படவப்பெண்ணைச் சந்தனுபரிக்ரஹிப்பதற்கு முன்னமே இவளுக்குப் பராசரரிடத்தினின்று பகவானுடைய அம்சாவதாரமான வ்யாஸர் பிறந்தார். அவர் வேதங்களையெல்லாம் பாதுகாத்தார். க்ருஷ்ணத்வைபாயனரென்றும் அவரை வழங்குவதுண்டு. சுகரென்று ப்ரஸித்திபெற்ற நான் அவரிடத்தினின்று பிறந்தவன். நானொருவனே இந்த ஸ்ரீபாகவதத்தை அவரிடத்தில் அத்

யயனம் செய்தேன். பாதராயணரென்று ப்ரஸித்தரும் மஹானுபாவருமாகிய அந்த வ்யாஸர் பைலர் முதலிய தன் சிஷ்யர்களை உபேக்ஷித்துத் தம் புதல்வனும் மிகுந்த சாந்தகுணமுடையவனுமாகிய எனக்குமாத்ரமே பரமரஹஸ்யமான இந்த ஸ்ரீபாகவதமென்னும் புராணத்தை உபதேசித்தார். சந்தனுவின் பிள்ளையாகிய விசித்ர வீர்யன், பீஷ்மர் ஸ்வயம்வரத்தினின்று பலாத்காரமாகக் கொண்டு வந்த அம்பிகை அம்பாலிகையென்கிற காசி ராஜன்புதல்விகளிருவரையும் மணம் புரிந்தான். அவர்களிடத்தில் மனம் தாழ்ப்பெற்ற அந்த விசித்ரவீர்யன் க்ஷயரோகத்தினால் மரணம் அடைந்தான். மஹானுபாவராகிய பாதராயணர் தன் தாயான ஸத்யவதியினால் சொல்லப்பட்டு, ஸந்ததியற்ற தன் ப்ராதாவான விசித்ரவீர்யனுடைய க்ஷேத்ரமாகிய அம்பிகையிடத்தில் த்ருதராஷ்ட்ரனையும், அம்பாலிகையிடத்தில் பாண்டுவையும், அவனுடைய தாஸியிடத்தில் விதுரனையும் பிறப்பித்தார். த்ருதராஷ்ட்ரனுக்குத் தன் பார்யையான காந்தாரியிடத்தில் நூறு பிள்ளைகளும் துஸ்ஸலையென்னும் ஒரு பெண்ணும் பிறந்தார்கள். பிள்ளைகளில் ஜ்யேஷ்டன் துர்யோதனன். பாண்டுவுக்குக் குந்தியென்றும் மாத்ரியென்றும் இரண்டு பார்யைகள். அவன் வனத்தில் மானுருவம்பூண்டு க்ரீடித்துக்கொண்டிருந்த ரிஷிதம்பதிகளின்சாபத்தினால் தன் பார்யைகளிடத்தில் ஸம்போகம் தடைபடப்பெற்றிருந்தான். அவன்பார்யையான குந்தியிடத்தில் தர்மன் வாயு இந்திரன் இவர்களிடத்தினின்று யுதிஷ்டிரன் முதலிய மூன்று பிள்ளைகளும், மற்றொரு பார்யையான மாத்ரியிடத்தில் அஸ்விதேவதைகளிடத்தினின்று நகுலன் ஸஹதேவன்என்று இரண்டுபிள்ளைகளும் பிறந்தார்கள். யுதிஷ்டிரன்முதலிய ஐவர்களுக்கும் ஒரேபார்யையாகிய த்ரௌ

பதியிடத்தில் ஐந்து பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்கள் ஐவரும் ஸந்ததியில்லாமலே முடிந்தார்கள். த்ரௌபதியிடத்தில் யுதிஷ்டிரனுக்கு ப்ரதிவிந்தனும், பீமஸேனனுக்கு ஶ்ருதஸேனனும், அர்ஜுனனுக்கு ஶ்ருதகீர்த்தியும், நகுலனுக்குச் சதானீகனும், ஸஹதேவனுக்கு ஶ்ருதகர்மாவும் பிறந்தார்கள். மற்றும் யுதிஷ்டிராதிகளுக்கு வேறு பார்யைகளிடத்தில் வேறு பிள்ளைகளும் பிறந்திருந்தார்கள். யுதிஷ்டிரனுக்குப்பௌரவியிடத்தில் தேவகனும், பீமஸேனனுக்கு ஹிடிம்பையிடத்தில் கடோத்கசனும், அவனுக்கே காளியிடத்தில் ஸர்வகதனும், ஸஹதேவனுக்குப் பர்வதபுத்ரியாகிய விஜயையிடத்தில் ஸுஹோத்ரனும், நகுலனுக்குக் கரேணுமதியிடத்தில் வீரமித்ரனும் (நிரமித்ரனும்) பிறந்தார்கள். அர்ஜுனன் இராவதியிடத்தில் இராவானையும், மணலூருபதியின் புதல்வியாகிய உலூபியிடத்தில் பப்ருவாஹனனையும் பெற்றான். மணலூருமன்னவன் தன் புதல்வியை அர்ஜுனனுக்குக் கொடுக்கும்பொழுது 'ப்ராதாவில்லாத இக்கன்னிகையை அலங்கரித்து உனக்குக் கொடுக்கிறேன். இவளிடத்தில் பிறக்கும் பிள்ளையை எனக்குப் பிள்ளையாகக் கொடுக்கவேண்டும்' என்னும் ஏற்பாட்டுடன் கொடுத்தானகையால், பப்ருவாஹனன் அர்ஜுனன் பிள்ளையாயினும் தன் பாட்டனாகிய மணலூருபதியின் புதல்வனாயினான். அவ்வர்ஜுனனுக்கு ஸுபத்ரையிடத்தில் உன் தந்தையாகிய அபிமன்யு பிறந்தான். அவன் அதிரதர்களான ஸமஸ்த வீரர்களையும் ஜயித்தவன்; மஹாவீரன். அந்த அபிமன்யுவுக்கு உத்தரையிடத்தில் நீ பிறந்தனை. துர்யோதனன் முதலிய கௌரவர்கள் அனைவரும் பாழாகையில் கோபமுற்ற அஶ்வத்தாமாவின் ப்ரஹ்மாஸ்த்ர தேஜஸ்ஸினால் நீ கர்ப்பத்திலிருக்கும்பொழுதே கொளுத்தப்

பட்டனை. பிறகு ஸ்ரீக்ருஷ்ணனுடைய மஹிமையினால் நீ ம்ருத்யுவிடத்தினின்று விடுபட்டுப் பிழைத்தனை. அப்பா! மன்னவனே! ஜனமேஜயன் ஶ்ருதஸேனன் பீமஸேனன் உக்ரஸேனன் என்கிற இந்நால்வரும் உன் பிள்ளைகள், இவர்களில் ஜனமேஜயன், நீ தக்ஷகனால் மரணமடைந்ததை அறிந்து பெருங்கோபமுற்றுக் காவஷேயரான துரரென்பவரைப் புரோஹிதராகஏற்படுத்திக்கொண்டு ஸர்ப்பயாகஞ் செய்யத்தொடங்கி அந்த யாகாக்னியில் ஸர்ப்பங்களையெல்லாம் ஹோமம் செய்யப்போகிறான். மற்றும், அவன் முயன்று பூமண்டலத்திலுள்ள ஸமஸ்த ராஜாக்களையும் ஜயித்து அஶ்வமேத யாகங்கள் செய்யப்போகிறான். அவனுக்குச் சதாநீகனென்னும் புதல்வன் பிறக்கப்போகிறான். அவன் யாஜ்ஞ்யவல்க்யரிடத்தில் வேதங்களை ஓதி க்ருபரிடத்தில் அஸ்த்ரஜ்ஞானத்தையும், மௌனகரிடத்தில் ஆத்மபரமாத்ம ஜ்ஞானத்தையும் பெறப்போகிறான். அந்தச் சதாநீகனுக்கு ஸஹஸ்ராநீகனும், அவனுக்கு அஶ்வமேதஜனும், அவனுக்கு அஸீமக்ருஷ்ணனும், அவனுக்கு நிச்சக்ருவும் பிறக்கப்போகிறார்கள். ஹஸ்தினபுரம் கங்காப்ரவாஹத்தில் அமிழ்ந்துபாழாகையில், அவன் அதினின்று புறப்பட்டுக் கௌசாம்பியென்னும் பட்டணத்தில் வஸிக்கப்போகிறான். (அதைப்பற்றியே அவன் நிச்சக்ருவென்று பெயர் பெறப்போகிறான்). அவனுக்கு உக்தனும், அவனுக்குச் சித்ராதனும், அவனுக்குச்சுசிரதனும், அவனுக்கு வ்ருஷ்டிமானும், அவனுக்கு ஸுஷேணனும், அவனுக்கு ஸுநீதனும், அவனுக்கு ந்ருசக்ஷுவும், அவனுக்கு ஸுகீநலனும், அவனுக்குப்பாரிப்லவனும், அவனுக்கு மேதாவியும், அவனுக்கு ஸுநயனும், அவனுக்கு ந்ருபஞ்சயனும், அவனுக்குத் தூர்வனும், அவனுக்கு திமியும், அவனுக்கு ப்ரு

ஹத்ரதனும், அவனுக்கு ஸுதாஸனும், அவனுக்குச் சதானீகனும், அவனுக்குத் துர்த்தமனனும், அவனுக்கு விஹீனரனும், அவனுக்குத் தண்டபாணியும், அவனுக்கு நிதியும், அவனுக்கு க்ஷேமகனும் பிறக்கப்போகிறார்கள். இங்ஙனம் ப்ராஹ்மணகுலத்திற்கும் க்ஷத்ரியகுலத்திற்கும் காரணமான ஸோமவம்சம் தேவதைகளாலும் அருள் புரியப்பெற்றது. இவ்வம்சம் கலியுகத்தில் க்ஷேமகராஜன் வரையில் தொடர்ந்துவந்து அவனோடு முடியப்போகின்றது.[1] இனி, மகததேசாதிபதிகளாக வரப்போகிற மன்னவர்களைச் சொல்லுகிறேன், கேட்பாயாக. ஜராஸந்தனுடைய பிள்ளையான ஸஹதேவனுக்கு மார்ஜாலேயனும், அவனுக்கு ஶ்ருதஶ்ரவனும், அவனுக்கு அயுதாயுவும், அவனுக்கு நிரமித்ரனும், அவனுக்கு ஸுநக்ஷத்ரனும், அவனுக்கு ப்ருஹத்ஸேனனும், அவனுக்குக் கர்மஜித்தும், அவனுக்கு ஶ்ருதஞ்சயனும், அவனுக்குச் சுசியென்னும் ப்ராஹ்மணனும், அவனுக்கு க்ஷேமனென்னும் க்ஷத்ரியனும், அவனுக்கு ஸுவ்ரதனும், அவனுக்குத் தர்மநேத்ரனும், அவனுக்கு த்ருடஸேனனும், அவனுக்கு ஸுமதியும், அவனுக்கு ஸுபலனும், அவனுக்கு ஸுநீபனும், அவனுக்கு ஸத்யஜித்தும், அவ

1. அஜமீடனுடைய பேரனாகிய ஸம்வரணன் பிள்ளை குரு. அவனுக்குப் பரீக்ஷித்து முதலிய நான்கு புதல்வர்கள். அவர்களில் பரீக்ஷித்துக்குப்பிள்ளையில்லையென்று முன்னமே மொழியப்பட்டது. ஸுதனு ஜஹ்னு இவர்களின் வம்சம் கூறப்பட்டது. நிஷதனுடைய வம்சம் சொல்லவில்லை. ஸுதனுவின்பிள்ளைகளில் ஒருவனான ப்ருஹத்ரதனுடையவம்சம் ஜகுவரையில் சொல்லப்பட்டது. மற்றொருவனுடைய வம்சமும் ஶ்ருதஶ்ரவன் வரையில் கூறப்பட்டது. இப்பொழுது ஶ்ருதஶ்ரவனுடைய பாட்டனும் மகததேசாபதியுமான ஸஹதேவனுடைய வம்சத்தில் வரப்போகிற மன்னவர்களைச் சொல்லத் தொடங்குகிறார்.

னுக்கு விஸ்வஜித்தும், அவனுக்குப் புரஞ்சயனும் பிறக்கப்போகிறார்கள். இவர்கள் அனைவரும் ப்ருஹத்ரதனுடைய வம்சத்தில் வரப்போகிறவர்கள். இவ்வம்சம் ஆயிரமாண்டுகள்வரையில் தொடர்ந்துவந்து அப்பால் முடியப்போகின்றது. இருபத்திரண்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

{ யயாதியின் பிள்ளைகளான அனு த்ருஹ்யு துர்வஸு யது இவர்களின் வம்சத்தைக் கூறுதல். }

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—யயாதியின் நான்காம் பிள்ளையாகிய அனுவுக்கு ஸபாநரன் சக்ஷு பரோக்ஷன் என்று மூன்று பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களில் ஸபாநரன் பிள்ளை காலநாபன். அவன் பிள்ளை ஸ்ருஞ்சயன். அவன் பிள்ளை ஜனமேஜயன். அவன் பிள்ளை மஹாசாலன். அவன்பிள்ளை மஹாமனஸ்ஸு. அவனுக்கு உசீனரனென்றும் திதிக்ஷுவென்றும் இரண்டு பிள்ளைகள். அவர்களில் உசீரனுக்குச் சிபி வனன் க்ரிமி தர்ப்பன் என்று நான்கு பிள்ளைகள். அவர்களில் சிபிக்கு வ்ருஷதர்ப்பன் ஸுவீரன் மத்ரன் கேகயன்என்று நான்கு பிள்ளைகள். உசீனரனுடைய தம்பியாகிய திதிக்ஷுவின்பிள்ளை வ்ருஷத்ரதன். அவன்பிள்ளை ஹேமன். அவன் பிள்ளை ஸுதபஸ்ஸு. அவன் பிள்ளை பலி (பிலன்). அந்தப் பலியின் பார்யையிடத்தில் தீர்க்கதமஸ்ஸென்னும் மஹர்ஷியால் அங்கன் வங்கன் கலிங்கன் ஸிம்ஹன் புண்ட்ரன் அந்த்ரன் என்பவர்கள் பிறந்தார்கள். அவர்களெல்லோரும் மன்னவர்களாயிருந்தார்கள். அவர்கள் கிழக்குத் திக்கில் தங்கள் தங்கள் பெயரால் ஆறு தேசங்களை உண்டாக்கினார்கள். அவர்களில் அங்கன் பிள்ளை கனபானன். அவன் பிள்ளை ஹவிரதன். அவன் பிள்ளை

தர்மரதன். அவன் பிள்ளை சித்ரரதன். அவனுக்குப் பிள்ளையில்லை. அவனே ரோமபாதனென்று ப்ரஸித்தனுயிருந்தான். அவனுக்கு ஸ்நேஹிதனுன தசரதன் தன் புதல்வியான சாந்தையென்பவளைக் கொடுத்தான். அப்பெண்மணியை ருஶ்யஶ்ருங்கர் மணம் புரிந்தார். அவர் விபண்டகமுனிவர்க்குப் பெண்மானிடத்தில் பிறந்தவர். ரோமபாதனுடைய ராஜ்யத்தில் மழை பெய்யாதிருக்கையில், மழைக்காக அம்மன்னவனுல் அனுப்பப்பட்ட விலைமாதர்கள் சென்று நாட்யம் ஸங்கீதம் வாத்யம் இவைகளாலும் விலாஸங்களாலும் ஆலிங்கனம் முதலியவைகளாலும் அவரை வசப்படுத்திப் பட்டணத்திற்கு வரவழைத்தார்கள். அந்த ருஶ்யஶ்ருங்கமுனிவர் ஸந்ததியற்ற தசரதமன்னவனைக் கொண்டு மருத்வானைக் குறித்து ஒரு யாகஞ் செய்வித்து அவனுக்கு ஸந்ததி உண்டாகும்படி செய்தார். பிள்ளையில்லாதிருந்த அம்மன்னவனும் அதனுல் பிள்ளைகளைப் பெற்றுன். ரோமபாதன் பிள்ளை சதுரங்கன். அவன்பிள்ளை ப்ருதுலாக்ஷன். அவனுக்கு ப்ருஹத்ரதன் ப்ருஹத்கர்மன் ப்ருஹத்பானு என்று மூன்று பிள்ளைகள். அவர்களில் ப்ருஹத்ரதன் பிள்ளை ப்ருஹன்மனஸ்ஸு. அவன் பிள்ளை ஜயத்ரதன். அவனுக்கு ஸம்பூதியென்னும் பார்யையிடத்தில் விஜயன் பிறந்தான். அவன் பிள்ளை த்ருதி' அவன் பிள்ளை த்ருதவ்ரதன். 'அவன் பிள்ளை ஸத்யகர்மன். அவன்பிள்ளை அதிரதன். இவன் கங்கையின்கரையில் விளையாடிக்கொண்டிருக்கையில், குந்தி தனக்குப் பிறந்த பிள்ளையை ஒரு பெட்டியில் வைத்து மூடிக் கங்கையின் வெள்ளத்தில் விட, அதில் அடித்துக்கொண்டு வருகின்ற அந்தப் பெட்டியை, ஸந்ததியற்ற அம்மன்னவன் கண்டெடுத்து அதற்குள்ளிருந்த குழந்தையைத்

தனக்குப் பிள்ளையாக வைத்துக்கொண்டான். அவன். குந்திக்குக் கன்னித்தன்மை கழியாதிருக்குந் தசையில் பிறந்தவன்; கர்ணனென்னும் பெயருடையவன். அவன் பூரியை ஆண்டுவந்தான். அவன் பிள்ளை வ்ருஷஸேனன். (இனி யயாதியின் மூன்றாம் பிள்ளையான த்ருஹ்யுவின் வம்சத்தைச் சொல்லுகிறேன்). த்ருஹ்யுவின் பிள்ளை பப்ரு. அவன் பிள்ளை ஸேது. அவன் பிள்ளை ஆரப்தன். அவன் பிள்ளை காந்தாரன். அவன்பிள்ளை தர்மன். அவன் பிள்ளை த்ருதன். அவன் பிள்ளை துர்மதன். அவன்பிள்ளை ப்ரசேதஸ்ஸு. அவனுக்கு நூறு பிள்ளைகள். அவர்கள் வடதிசையில் சென்று ம்லேச்சதேசங்களுக்கு ப்ரபுக்களாயிருந்தார்கள். (இனி யயாதியினுடைய இரண்டாம் பிள்ளையான துர்வஸுவின்வம்சத்தைச் சொல்லுகிறேன்) துர்வஸுவின் பிள்ளை வஹ்னி. அவன் பிள்ளை பர்க்கன். அவன் பிள்ளை வஹ்னிமான் (பானுமான்). அவன் பிள்ளை ஸுபானு. அவன்பிள்ளை கர்த்தமன். அவன் கம்பீரமான மதியுடையவன். அவன் பிள்ளை மருத்தன். அவனுக்கு ஸந்ததி கிடையாது. அவன் பூருவின் வம்சத்தில் பிறந்த துஷ்யந்தனைப் பிள்ளையாக வளர்த்துக் கொண்டான். அவன் ராஜ்யத்தை விரும்பித் தன் ஜனக வம்சத்தையே அடைந்தான். இனி, யயாதியின் ஜ்யேஷ்ட புத்ரனாகிய யதுவின் வம்சத்தைச் சொல்லுகிறேன். அது மிகவும் பரிசுத்தமானது; ப்ராணிகளின் ஸமஸ்தபாபங்களையும் போக்கும். ஷாட்குண்ய பூர்ணனாகிய பரமபுருஷன் இந்த யதுவம்சத்தில் மானிட உருவம்பூண்டு அவதரித்தானாகையால் இவ்வம்சத்தைக் கேட்கிற மனிதன் ஸமஸ்த பாபங்களாலும் விடுபடுவான். யதுவுக்கு ஸஹஸ்ரஜித்து க்ரோஷ்டு நலன் ரிபு என்று நான்கு பிள்ளைகள். அவர்களில் முதல்வனாகிய ஸஹஸ்ரஜித்

தின் பிள்ளை சதஜித்து. அவனுக்கு மஹாஹயன் வேணுஹயன் ஹேஹயன் என்று மூன்று பிள்ளைகள். அவர்களில் ஹேஹயன் பிள்ளை தர்மன். அவன் பிள்ளை நேத்ரன். அவன் பிள்ளை குந்தி. அவன் பிள்ளை ஸோஹஞ்சி. அவன் பிள்ளை மஹிஷ்மான். அவன் பிள்ளை பத்ரஸேனகன். அவனுக்குத் துர்மதன் தனகன் என்று இரண்டு பிள்ளைகள். அவர்களில் தனகனுக்கு க்ருதவீர்யன் க்ருதாக்னி க்ருதவர்மன் க்ருதௌஜஸ்ஸு என்று நான்கு பிள்ளைகள். அவர்களில் க்ருதவீர்யன் பிள்ளை அர்ஜுனன். அவன் கார்த்தவீர்யனென்று ப்ரஸித்தனாயிருந்தான். அவன் ஏழு த்வீபங்களுக்கும் ப்ரபுவாயிருந்தான். மற்றும், அவன் பகவானுடைய அம்சாவதாரமாகிய தத்தாத்ரேயரிடத்தினின்று யோகத்தையும் அணிமாதிஸித்திகளையும் பெற்றான். ஆயிரஞ் சொல்லி என்? உலகத்திலுள்ள மன்னவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்தாலும் யஜ்ஞம் தானம் தவம் யோகம் இவைகளாலும் ஶாஸ்த்ரஜ்ஞானம் வீர்யம் ஜயம் இவை முதலியவைகளாலும் கார்த்தவீர்யார்ஜுனனுடைய கதியை அநுஸரிக்கமாட்டார்கள். இது நிச்சயம். மற்றும் எங்கும் தடைபடாத பலமுடைய அவ்வர்ஜுனன் பகவானுடைய அம்சமாகிய தத்தாத்ரேயரைத் தினந்தோறும் நினைத்துக்கொண்டே எண்பத்தையாயிரம் வர்ஷங்கள் ராஜ்யபரிபாலனம் செய்து வந்தான். அவனை நினைத்தமாத்ரத்தில் கெட்டுப்போன வஸ்துக்களும் தானே அகப்படும். அவன் ஆறு இந்த்ரியங்களாலும் அழிவற்ற ஸுகத்தை அநுபவித்தான். அவனுக்கு ஆயிரம் பிள்ளைகள். அவர்களில் ஜயத்வஜன் ஶூரஸேனன் வ்ருஷணன் மது ஊர்ஜிதன் என்று ஐந்து பெயர்கள் மாத்ரமே மிகுந்தார்கள். மற்றவர்கள் எல்லோரும் பார்க்கவராமனால் யுத்தத்தில்

மாண்டு போனார்கள். மிகுந்த அவர்களில் ஜயத்வஜனு டைய பிள்ளை தாலத்வஜன். அவனுக்கு நூறுபிள்ளைகள்; தாலஜங்கர்களென்னும் பெயருடையவர்கள்; க்ஷத்ரியர்கள். அவர்கள் ஔர்வமஹர்ஷியின் தேஜஸ்ஸினால் உதவி செய்யப்பெற்ற ஸகரனால் அழிக்கப்பட்டார்கள். அவர்களில் ஜ்யேஷ்டன் வீதிஹோத்ரன். அவன் பிள்ளை மது. அவனுக்கு நூறு பிள்ளைகள். அவர்களில் வ்ருஷ்ணியென்பவன் ஜ்யேஷ்டன். அவர்கள் மதுவின் பேரன்மார்களாகையால் மாதவர்களென்றும், அவர்களில் வ்ருஷ்ணியே முக்யனாயிருந்தானாகையால் வ்ருஷ்ணிகளென்றும், யதுவின் வம்சத்தில் பிறந்தவர்களாகையால் யாதவர்களென்றும் ப்ரஸித்திபெற்றிருந்தார்கள். (இங்ஙனம் யதுவின் பிள்ளைகளில் முதல்வனுடைய வம்சம் சொல்லப்பட்டது. இனி இரண்டாவனுடைய வம்சத்தைச் சொல்லுகிறேன்). யதுவின் பிள்ளையாகிய க்ரோஷ்டுவின் பிள்ளை வ்ருஜினவான். அவன்பிள்ளை ஸ்வாஹிதன். அவன் பிள்ளை உருசங்கு. அவன் பிள்ளை சித்ரரதன். அவன் பிள்ளை சசிபிந்து. அவன் மஹாயோகி, மிகுந்த பாக்யமுடையவன்; குணங்களால் சிறப்புற்றிருந்தான். அவனிடத்தில் [1]பதினான்கு மஹாரத்னங்கள் இருந்தன. அவன் ஏழு த்வீபங்களுக்கும் ப்ரபுவாகி ஒருவராலும் வெல்லப்படாமல் ஜயசீலனாயிருந்தான். அவனுக்குப் பத்தாயிரம் பார்யைகள் இருந்தார்கள். பெரும்புகழுடைய அம்மன்னவன் ஒவ்வொருத்தியிடத்திலும் லக்ஷம்பிள்ளைகள்வீதம் அந்தப் பார்யைகளிடத்தில் பத்தாயிர லக்ஷம்

1. யானை, குதிரை, தேர், அஸ்த்ரம், பாணம், நிதி, பூமாலை, வஸ்த்ரம், வ்ருக்ஷம், சக்தி, பாசம், ரத்னம், குடை, விமானம் ஆகிய இவையெல்லாம் அவனிடத்தில் சிறந்தவைகளாயிருந்தமையால் பதினான்கு மஹாரத்னங்களென்று வழங்கிவந்தன.

பிள்ளைகளைப் பெற்றான். அவர்களில் ஆறுபேர்கள் ப்ரதானர்களாயிருந்தார்கள். அவர்களில் ப்ருதுஶ்ரவனென்பவன் ப்ரதானன். அவன்பிள்ளை தர்மன். அவன்பிள்ளை உஶனன். அவன் நூறு அஶ்வமேதயாகங்கள் செய்தான். அவன்பிள்ளை ருசகன். அவனுக்குப் புருஜித்து ருக்மன் ருக்மேஷு ப்ருது ஜ்யாமகன் என்று ஐந்துபிள்ளைகள். அவர்களில் ஜ்யாமகன் சைப்யையென்பவளை மணம்புரிந்தான். அவன் அவளிடத்தில் ஸந்ததி உண்டாகப் பெறாதிருந்தும் அவளிடத்தில் பயந்து மற்றொரு பார்யையை மணம்புரியவில்லை. இப்படி இருக்கையில், அவன் சத்ருக்களை ஜயித்து அவர்களுடைய க்ருஹத்தினின்று தன்னுடைய போகத்திற்காக ஒரு கன்னிகையைக் கொண்டு வந்தான். அம்மன்னவனுடன் ரதத்தில் இருக்கின்ற அந்தக் கன்னிகையைப் பார்த்துச் சைப்யை கோபமுற்றுக் கணவனை நோக்கி 'வஞ்சகனே! நான் உட்கார வேண்டிய இடத்தில் ஒரு பெண்ணை உட்காரவைத்துக் கொண்டு வந்திருக்கின்றனையே; இவள் யார்? நான் உட்காரவேண்டிய இடத்தில் மற்றொருத்தியை எப்படி உட்காரவைத்துக்கொண்டனை?' என்றாள். அப்பால் அம்மன்னவன் அவளிடத்தில் பயந்து 'இவள் உன்னுடைய நாட்டுப்பெண்ணென்று கொண்டு வந்தேன்' என்றான். சைப்யை அதைக் கேட்டுச் சிரித்துக்கொண்டே 'நான் மலடி. எனக்குச் சக்களத்தியும் கிடையாது. ஆகையால் இவள் எங்ஙனம் எனக்கு நாட்டுப்பெண்ணாவாள்?' என்றாள். அம்மன்னவனும் அதைக் கேட்டு 'ராஜபத்னீ! நீ பெறப்போகிற பிள்ளைக்கு இவள் பார்யையாகி உனக்கு நாட்டுப் பெண்ணாவாள்' என்றான். அப்பால் அந்தச் சைப்யை அப்படியேயென்று அங்கீகரித்தாள். அப்பொழுது பார்யையிடத்தில் பயத்தினால் உடம்பெல்

லாம் நடுங்கி வேர்த்திருக்கின்ற அம்மன்னவனுடைய ப்ராணஸங்கடத்தைப் பார்த்து முன்பு அவனால் வெகுகாலம் ஆராதிக்கப்பட்ட விஸ்வதேவதைகளும் பித்ருதேவதைகளும் அப்படியே ஆகட்டுமென்று அநுமோதனம் செய்தார்கள். பிறகு சைப்யை கர்ப்பந் தரித்துக் காலத்தில் சுபலக்ஷணங்கள் அமைந்த புதல்வனைப் பெற்றாள். அவன் விதர்ப்பனென்று ப்ரஸித்தனாயிருந்தான். பிறகு சைப்யை தன் பிள்ளைக்குப் பதிவ்ரதையான அந்த நாட்டுப் பெண்ணை மணம்புரிவித்தாள். இருபத்து மூன்றாவது அத்யாயம் முற்றிற்று.

—{ விதர்ப்பனுடைய பிள்ளைகளின் வம்சங்களைக் கூறுதல். }—

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—சைப்யை மணம்புரிவித்த அப்பெண்மணியிடத்தில் விதர்ப்பன் குசனென்றும் க்ரதனென்றும் இரண்டு பிள்ளைகளைப் பெற்றான். அப்பால் அவளிடத்திலேயே அவ்விதர்ப்பன் ரோமபாதனென்கிற மூன்றாம் பிள்ளையையும் பெற்றான். அவன் வைதர்ப்பகுலத்தை மேன்மேலும் வளரச் செய்தான. ரோமபாதன் பிள்ளை பப்ரு. அவன் பிள்ளை க்ருது. அவன்பிள்ளை குசிகன். அவன்பிள்ளை சேதி. அவனுக்குச் சைத்யன் முதலியவர்கள் பிறந்தார்கள். அவர்களெல்லோரும் அரசர்களாயிருந்தார்கள். விதர்ப்பனுடைய பிள்ளையாகிய க்ரதனுக்குக் குந்தியென்பவன் பிறந்தான். அவன்பிள்ளை வ்ருஷ்ணி. அவன்பிள்ளை நிர்வ்ருதி (வித்ருதி). அவன் பிள்ளை தசார்ஹன். அவன்பிள்ளை வ்யோமன். அவன் பிள்ளை ஜீமூதன். அவன்பிள்ளை விக்ருதி. அவன் பிள்ளை தீவ்ரரதன். அவன்பிள்ளை நவரதன். அவன்பிள்ளை தசரதன். அவன்பிள்ளை சகுனி. அவன்பிள்ளை கரம்பன். அவன்

பிள்ளை தேவராதன். அவன்பிள்ளை தேவக்ஷத்ரன். அவன் பிள்ளை மது. அவன்பிள்ளை குருரகன். அவன்பிள்ளை புருஹோத்ரன். அவன்பிள்ளை ஸாத்வதன். அவனுக்குப் பஜமானன், பஜி, திப்தன், வ்ருஷ்ணி, தேவாப்ருதன், அந்தகன், மஹாபோஜன் என்று ஏழு பிள்ளைகள். அவர்களில் யஜமானனுக்கு ஒரு பார்யையிடத்தில் நிம்ரோசி கங்கணன் வ்ருஷ்ணி என்று மூன்று பிள்ளைகளும், மற்றொருபார்யையிடத்தில் சதஜித்து ஸஹஸ்ராஜித்து அயுதஜித்து என்று மூன்று பிள்ளைகளும பிறந்தார்கள். ஸாத்வதனுடைய பிள்ளைகளில் தேவாப்ருதனுடைய பிள்ளைப் பருவென்பவன். தந்தையும் புதல்வனுமாகிய தேவாப்ருதன் பப்ரு இவர்களின் மஹிமையைப் பற்றிப் பெரியோர்கள் இங்ஙனம் பாடுகிறார்கள். 'தேவாப்ருதன் பப்ரு இவர்களிருவரையும் தூரத்தில் எப்படிப்பட்ட குணமுடையவர்களென்று கேட்கிறோமோ, ஸமீபத்திலும் அவர்களை அப்படிப்பட்ட குணமுடையவர்களாகவே காண்கின்றோம். பப்ரு மனுஷ்யர்களில் சிறந்தவன். தேவாப்ருதன் தேவதைகளோடொத்தவன். பப்ருவுக்கும் தேவாப்ருதனுக்கும் பின்பு அவர்களுடைய வம்சத்தில் பதினாலாயிரத்து அறுபத்தைந்து புருஷர்கள் உண்டானார்கள். அவர்கள் எல்லோரும் இவர்களின் ப்ரபாவத்தினால் முக்தியை அடைந்தார்கள்' என்று பெரியோர்கள் பாடுகிறார்கள். ஸாத்வதனுடைய பிள்ளையாகிய மஹாபோஜன் மஹாதர்மிஷ்டன். அவனுடைய வம்சத்தில் போஜர்களென்னும் அரசர்கள் பிறந்தார்கள். ஸாத்வதன்பிள்ளைகளில் மற்றொருவனாகிய வ்ருஷ்ணிக்கு ஸுமித்ரனென்றும் யுதாஜித்தென்றும் இரண்டு பிள்ளைகள். அவர்களில் யுதாஜித்துக்குச் சினியென்றும் மித்ரனென்றும் இரண்டு பிள்ளைகள். அவர்களில்

மித்ரன் பிள்ளை நிம்னன். அவனுக்கு ஸத்ராஜிதனென்றும் ப்ரஸேனனென்றும் இரண்டு பிள்ளைகள். அந்த அனமித்ரனுக்கே மற்றொரு பார்யையிடத்தில் சினியென்பவன் பிறந்தான். அவன் பிள்ளை ஸத்யகன். அவன் பிள்ளை யுயுதானன். (அவனை ஸாத்யகி யென்றும் வழங்குவார்கள்). அவன் பிள்ளை ஜயன். அவன் பிள்ளை குணி. அவன்பிள்ளை யுகந்தரன். அனமித்ரனுக்கே மற்றொரு பார்யையிடத்தில் ப்ருஶ்னியென்பவன் பிறந்தான். அவனுக்கு ஶ்வபல்கனென்றும் சித்ரகனென்றும் இரண்டுபிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களில் ஶ்வபல்கனுக்குக் காந்தினியிடத்தில் அக்ரூரனும், மற்றும் ப்ரஸித்தர்களான பன்னிரண்டு பிள்ளைகளும் பிறந்தார்கள். அவர்கள் அஸங்கன், ஸாரமேயன், ம்ருதுகன், ம்ருதுபத்து, சிவன், வர்மத்ருக்கு, த்ருஷ்டவர்மன், க்ஷத்ரோபேக்ஷன், அரிமர்த்தனன், சத்ருக்னன், கந்தமாதன், ப்ரதிபாஹு என்னும் பெயருடையவர்கள். அவர்களுக்கு உடன்பிறந்தவள் ஸுசாரையென்பவள். அவர்களில் அக்ரூரனுக்குத் தேவவான் உபதேவன் என்று இரண்டுபிள்ளைகள். சித்ரரதனுக்கு ப்ருதுவென்பவனும் விதூரதன் முதலிய மற்றும் பல பிள்ளைகளும் பிறந்தார்கள். வ்ருஷ்ணிக்குக் குகுரன் பஜமானன் சுசி கம்பலபர்ஹிஷன் இவர்கள் பிறந்தார்கள். அவர்களில் குகுரன்பிள்ளை விலோமன். அவன்பிள்ளை கபோதரோமன். அவனுக்குத் தும்புரு ஸ்நேஹிதராயிருந்தார். அவன் பிள்ளை துந்துபி. அவன்பிள்ளை தரித்யோதன். அவன் பிள்ளை புனர்வஸு. அவனுக்கு ஆஹுகனென்னும் பிள்ளையும் ஆஹுகியென்னும் புதல்வியும் பிறந்தார்கள். ஆஹுகனுக்குத் தேவகன் உக்ரஸேனன் என்று இரண்டு பிள்ளைகள். அவர்களில் தேவனுக்குத்

தேவவான், உபதேவன், ஸுதேவன், தேவார்த்தனன் என்று நான்கு பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களுக்கு உடன்பிறந்த பெண்கள் த்ருததேவை, ஶாந்திதேவை. உபதேவை, ஸ்ரீதேவை, தேவரக்ஷிதை, ஸஹதேவை, தேவகி என்று ஏழு பெயர்கள். அவர்களை வஸுதேவன் மணம்புரிந்தான். உக்ரஸேனனுக்குக் கம்ஸன், ஸுநாமன், ந்யக்ரோதன், கஹ்வன், சங்கு, ஸுபு, ராஷ்ட்ரபாலன், விஸ்ருஷ்டன், துஷ்டிமான் என்னும் பிள்ளைகளும், கம்ஸை, கம்ஸவதி, கங்கை, ஶூரபூ, ராஷ்ட்ரபாலிகை என்னும் பெண்களும் பிறந்தார்கள். அப்பெண்களை வஸுதேவனுடைய தம்பிகள் மணம் புரிந்தார்கள். விதூரதன்பிள்ளை ஶூரன். அவன்பிள்ளை த்வஜமானன். அவன்பிள்ளை ஶிமி. அவன்பிள்ளை ஸ்வயம்போஜன். அவன் பிள்ளை ஹ்ருதிகன். அவனுக்குத் தேவபாஹு, சதகனு க்ருதவர்மன் முதலியவர்கள் பிறந்தீர்கள். தேவமீடனுடைய பிள்ளையாகிய ஶூரனுடைய பத்னி மாரிஷை யென்பவள். அவன் அவளிடத்தில் பரிசுத்தமானபத்துப் பிள்ளைகளைப் பெற்றான். அவர்கள் வஸுதேவன். தேவபாகன், தேவஶ்ரவஸ்ஸு, ஆனகன், ஸ்ருஞ்ஜயன், ஶ்யாமகன்; கங்கன், அனீகன், வத்ஸகன், வ்ருகன் என்னும் பெயருடையவர்கள். வஸுதேவன் பிறந்த பொழுது தேவதைகள் துந்துபி வாத்யங்களையும் கனகத்தம் பட்டங்களையும் முழக்கினார்கள். ஆகையால் அந்த வஸுதேவனை ஆனகதுந்துபியென்று சொல்லுகிறார்கள். அந்த வஸுதேவனிடத்தினின்றே பகவான் ஸ்ரீக்ருஷ்ணனாக அவதரித்தான். இந்த வஸுதேவன் முதலியவர்களுக்கு ப்ருதை ஶ்ருததேவை ஶ்ருதகீர்த்தி ஶ்ருதஶ்ரவை ராஜாதிதேவி என்னும் இப்பெண்கள் உடன்பிறந்தவர்கள். வஸுதேவாதி

களின் தந்தையாகிய சூரன் தன் புதல்வியான ப்ருதை யென்பவளைத் தன் ஸ்நேஹிதனும் ஸந்ததியற்றவனுமாகிய குந்திபோஜனுக்குப் பெண்ணாகக் கொடுத்தான். (அதைப் பற்றியே அவள் குந்தியென்றும் பெயர் பெற்றாள்.) ஒருகால் அவள் துர்வாஸமுனிவரைச் சுஶ்ரூஷைகளால் அநுக்ரஹம்புரியச் செய்து அவரிடத்தினின்றும் தேவதைகளை வரவழைக்கும்படியான ஒரு வித்யையைப் பெற்றாள். அவள் அவ்வித்யையின் திறமையைப் பரீக்ஷித்துப் பார்க்கும் பொருட்டு ஸூர்யனைப் பூமியில் வரும்படி அழைத்தாள். அப்பொழுதே வந்திருக்கின்ற தேவனாகிய ஸூர்யனைக் கண்டு மனத்தில் வியப்புற்று அந்த ஸூர்யனை நோக்கித் 'தேவனே! நான் வீர்யத்தைப் பரீக்ஷிக்கும்பொருட்டு இந்த வித்யையை உபயோகப்படுத்திப் பார்த்தேனன்றி வேறில்லை. ஆகையால் நீ திரும்பிப் போவாயாக. நான் செய்த இந்த அபராதத்தைப் பொறுப்பாயாக' என்றாள். அதைக் கேட்ட ஸூர்யனும் 'பெண்ணே! தேவதைகளின் காட்சி வீணாகாது. ஆகையால் உன்னிடத்தில் தேவதை போன்றவனும் வீணாகாத வீர்யமுடையவனுமாகிய ஒரு புதல்வனைப் பிறப்பிக்க விரும்புகிறேன். 'நான் கன்னிகழியாதவளாயிருக்கிறேனே' என்று நீ சங்கிக்கவேண்டாம். அழகிய இடையுடையவளே! உன்னுடைய அல்குல் கெடாதிருக்குமாறு நான் செய்கிறேன்' என்று மொழிந்து அந்த ப்ருதையிடத்தில் கர்ப்பத்தை ஆதானஞ் செய்து ஸூர்யன் ஸ்வர்க்கலோகஞ் சென்றான். பிறகு உடனே குமரன் பிறந்தான். அவன் இரண்டாவது ஸூர்யன் போன்றிருந்தான். அவள் உலகத்திற்குப் பயந்து மனவருத்தத்துடன் அக்குமாரனை நதீப்ரவாஹத்தில் துறந்தாள். அந்த ப்ருதையை உன்பாட்டனும் ஸத்யபராக்ரமனுமா

கிய பாண்டுமன்னவன் விவாஹஞ் செய்துகொண்டான். ப்ருதையின் தங்கையாகிய ப்ருததேவையைக் கருஷனுடைய பிள்ளையாகிய த்ருடவர்மன் மணம்புரிந்தான். ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் த்வாரபாலகனாகிய விஜயன் ஸனகாதி மஹர்ஷிகளின் சாபத்தினால் திதியிடத்தில் ஹிரண்யனென்னும் பெயர் பூண்டு பிறந்தான். அவனே இப்பொழுது இந்த ப்ருததேவையிடத்தில் தந்தவக்த்ரனாகப் பிறந்தான். கேகயனும் த்ருஷ்டகேதுவும் ப்ருதகீர்த்தியைத் திருட்டு ஸம்போகத்தினால் தூஷித்தார்கள். அவளிடத்தில் கேகயனுக்கு ஸந்தர்த்தனன் முதலிய ஐந்து பிள்ளைகள் பிறந்தார்கள். ராஜாதிதேவியிடத்தில் அவந்தியின் பிள்ளைக்கு ஜயத்ஸேனன் பிறந்தான். சேதிராஜனாகிய தமகோஷன் ப்ருதப்ரவஸ்ஸை மணம் புரிந்தான். அவனுக்குச் சிசுபாலன் பிறந்தான். அவன் பிறந்த விதத்தை முன்னமே மொழிந்தேன். தேவபாகனுக்குக் கம்ஸையென்னும்பார்யையிடத்தில் சித்ரகேது ப்ருஹத்பலன் என்று இரண்டு பிள்ளைகள் பிறந்தார்கள். தேவப்ரவஸ்ஸுக்குக் கம்ஸவதியென்னும்பார்யையிடத்தில் ஸுவீரன் இஷுமான் என்று இரண்டு பிள்ளைகள் பிறந்தார்கள். கங்கனுக்கு அவனுடைய பார்யையாகிய கங்கையிடத்தில் பகன் ஸத்யஜித்து புருஜித்து என்று மூன்று பிள்ளைகள் பிறந்தார்கள் ஸ்ருஞ்சயன் தன் பார்யையாகிய ராஷ்ட்ரபாலியிடத்தில் வ்ருஷன் துர்மர்ஷணன் முதலிய பிள்ளைகளைப் பெற்றான். ஸ்யாமகன் தன் பார்யையாகிய ஸுரபூமியிடத்தில் ஹரிகேசன் ஹிரண்யாக்ஷன் என்னும் பிள்ளைகளைப் பெற்றான். வத்ஸகனும் மிஸ்ரகேசியென்னும் அப்ஸரமடந்தையிடத்தில் பகன் முதலிய ஒன்பது பிள்ளைகளைப் பெற்றான். வ்ருகன் துர்வாக்ஷி யென்னும் தன்பார்யையிடத்தில் தக்ஷன் புஷ்

கரன் ஸால்வன் முதலிய பிள்ளைகளைப் பெற்றான். சமீகன் ஸுதாமையென்னும் தன்பார்யையிடத்தில் ஸுமித்ரன் அனீகபாலன் முதலிய பிள்ளைகளைப் பெற்றான். ஆனகன் கர்ணிகையென்னும் பார்யையிடத்தில் ருததாமன் ஜயன் என்னும் பிள்ளைகளைப் பெற்றான். பௌரவி ரோஹிணி பத்ரை மதிரை ரோசனை இலை இவர்களும் தேவகி முதலியவர்களும் வஸுதேவனுடைய பத்னிகள். வஸுதேவன், அவர்களுக்குள் ரோஹிணியிடத்தில் பலன் கதன் ஸாரணன் துர்மதன் விபுலன் த்ருவன் இவர்களையும் க்ருபன் முதலியவர்களையும் பெற்றான். பௌரவியிடத்தில் ஸுபத்ரன் பத்ரபாஹு துர்மதன் பத்ரன் பூதன் முதலிய பன்னிரண்டு பிள்ளைகளைப் பெற்றான். நந்தன் உபநந்தன் க்ருதகன் சூரன் முதலியவர்கள் மதிரையின் பிள்ளைகள். கௌஸல்யையான பத்ரை குலத்தை வளரச்செய்பவனை கேசியென்னும் ஒரு புதல்வனைப் பெற்றாள். ரோசனையிடத்தில் ஹஸ்தன் ஹேமாங்கதன் முதலியவர்கள் பிறந்தார்கள். அவன் இலையிடத்தில் உருவல்கன் முதலிய யாதவஸ்ரேஷ்டர்களைப் பெற்றான். அவ்வஸுதேவனுக்கு த்ருததேவையென்னும் பார்யையிடத்தில் த்ரிப்ருஷ்டனென்னும் ஒரு புதல்வன் பிறந்தான். அவனுக்குச் சாந்திதேவையிடத்தில் ப்ரஸமன் ப்ரஸிதன் முதலியவர்கள் பிறந்தார்கள். அவனுக்கு உபதேவையிடத்தில் கல்பவர்ஷன் முதலிய பத்துப் பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களெல்லோரும் ராஜாக்களாயிருந்தார்கள். அவனுக்கு ஸ்ரீதேவையிடத்தில் வஸு ஹம்ஸன் ஸுவம்சன் முதலிய ஆறு பிள்ளைகள் பிறந்தார்கள். அவனிடத்தினின்று தேவரக்ஷிதை கதன் முதலிய ஒன்பது பிள்ளைகளைப் பெற்றாள். தர்மன் அஷ்டவஸுக்களைப் பெற்றாற் போல அவ்வஸுதேவன் ஸஹதேவையால் பௌரவன்

ஸ்ருதன் முதலிய எட்டுப்பிள்ளைகளைப் பெற்றான். ஆழ்ந்த மதியுடைய அவ்வஸுதேவன் தேவகியிடத்திலும் எட்டுப் பிள்ளைகளைப் பெற்றான். கீர்த்திமான் ஸுஷேணன் பத்ரஸேனன் ருஜு ஸமதனன் பத்ரன் என்று ஆறு பேர்கள். ஏழாம்பிள்ளை நாகேந்த்ரனாகிய ஸங்கர்ஷணன். அந்தத் தேவகீ வஸுதேவர்களுக்கு ஸ்ரீபகவான் தானே எட்டாம் பிள்ளையாகப் பிறந்தான். அவர்களுக்கு ஸுபத்ரையென்று ஒரு பெண்ணும் பிறந்தாள். அவள் உன் பாட்டனாகிய அர்ஜுனனை மணம் புரிந்தாள். மன்னவனே! எவ்வெப்பொழுது தர்மம் குறைந்து அதர்மம் தலையெடுக்கின்றதோ, அவ்வப்பொழுதெல்லாம் தன் பக்தர்களின் மனவருத்தங்களைப் போக்குந்தன்மையுடைய பகவான் தன்னைப் படைக்கின்றான் (தான் அவதரிக்கின்றான்). மன்னா! இவனுடைய பிறவிக்கும் செயலுக்கும் இவனுடைய ஸங்கல்பமொழிய மற்றொரு காரணம் கிடையாது. இவன் புண்யபாப கர்மங்களைச் செய்கின்ற ஜீவாத்மாக்களை ஸாக்ஷாத்கரிக்கிறவனேயன்றித் தான் கர்மங்களைச் செய்கிறவனன்று; சேதநா சேதந ரூபமான ஜகத்திற்கெல்லாம் அந்தராத்மாவாயிருந்து அதைத் தரித்துக்கொண்டிருப்பவன். இவனுடைய மாயா சேஷ்டிதம் ஜீவாத்மாக்களின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களுக்காகவேயன்றித் தனக்காகவன்று. இவன் அவற்றை நடத்துவதும் அவர்களை அநுக்ரஹிப்பதற்காகவே. இவன் ராமக்ருஷ்ணாதி அவதாரங்களைச் செய்து சிலரைப் படைப்பதும், சிலரைப் பாதுகாப்பதும், சிலரை அழிப்பதும் செய்து தன் திவ்ய மங்களவிக்ரஹஸம்பந்தம் சேரப்படுப்பது உட்காருவது புஜிப்பது காட்சிகொடுப்பதுமுதலியவற்றால் அவர்களெல்லோரையும் தேஹாவஸானத்தில் முக்தி அடையும்படி

செய்கிறான். 'என்னுடைய ஸ்ருஷ்டி முதலிய செயல்களைக் கண்டு என் பெருமையை அறிந்து என்னை அடைவதற்கு ஸாதனமான பக்தியோகத்தை அனுஷ்டித்து மோக்ஷத்தைப்பெறவேண்டும்' என்று இவன் அவதாரங்களைச் செய்து ஆச்சர்யமான சேஷ்டிதங்களை நடத்திக் காட்டுகிறான். ஆகையால் இவனுடைய பிறவியும் செயலும் ஜீவாத்மாக்களுடைய அநுக்ரஹத்திற்காகவே. மன்னவர்கள்போலத் தோற்றுகின்ற அஸுரர்கள் பல அக்ஷௌஹிணிஸைன்யங்களோடு பூமிக்குப் பெரும் பாரமாயிருக்கின்றார்களென்று அதை நீக்கும்பொருட்டுப் பகவான் ஸ்ரீக்ருஷ்ணனாக அவதாரம் செய்தான். அந்த ஸ்ரீக்ருஷ்ணபகவான் பலராமனுடன் தேவஸ்ரேஷ்டர்களான ப்ரஹ்மாதிகள் மனத்தினாலும் நினைக்கமுடியாத பல செயல்களை நடத்தினான். கலியுகத்தில் பிறக்கப்போகிற தன் பக்தர்களை அநுக்ரஹிக்கும் பொருட்டு அவர்களுடைய துக்கம் சோகம் அஜ்ஞானம் இவைகளைப் போக்குவதும் புண்யத்தை விளைப்பதுமாகிய தன் புகழைப் பரவச் செய்தான். ஸத்புருஷர்களின் காதுகளுக்கு அம்ருதம் போன்ற அந்தப் புகழாகிற சிறந்த புண்ய தீர்த்தத்தில் எவனேனும் ஒருகால் காதாகிற அஞ்சலியால் சிறிது பருகுவானாயின், அவன் கர்மவாஸனைகளை உதறி மோக்ஷத்தை அடைவான். போஜர் வ்ருஷ்ணிகள் அந்தகர் மதுக்கள் சூரஸேனர் தசார்ஹர் இவர்களாலும் குருக்கள் ஸ்ருஞ்சயர் பாண்டவர் இவர்களாலும் புகழப்பட்ட சேஷ்டிதங்களையுடையவனாகி ஸ்நேஹம் நிறைந்த கண்ணோக்கங்களாலும் கம்பீரமான வாக்யங்களாலும் நடையழகினாலும் ஸர்வாங்க ஸுந்தரமான தன் திவ்யமங்களவிக்ரஹத்தினாலும் மனுஷ்யலோகத்தை யெல்லாம் மனக்களிப்புறச் செய்தான். மகா

குண்டலங்களை அணிந்தழகிய காதுகள் தொங்கப் பெற்று விளங்குகின்ற கபோலங்களால் ரமணீயமாயிருப்பதும் விலாஸங்களோடு கூடின புன்னகை அமைந்திருப்பதும் அழியாத சோபையுடையதும் காண்போர்களுக்கு நித்யோத்ஸவத்தைக் கொடுப்பதுமாகிய இந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய முகத்தைக் கண்களால் கண்டு பெண்களும் புருஷர்களும் த்ருப்தி அடையாமல் இமைகளைக் கொட்டும்படி செய்து கண்பார்வையை மறைக்கின்ற நிமியின் மேல் பெருங்கோப முற்றிருந்தார்கள். முதலில் ஆதியஞ்சோதியுருவுடன் அவதரித்த ஸ்ரீக்ருஷ்ண பகவான் பிறகு மனுஷ்யர்களோடொத்த உருவத்தை ஏற்றுக் கொண்டு தந்தையினிடத்தினின்று கோகுலத்திற்குச் சென்று அங்குள்ள நந்தாதிகளின் மனவிருப்பங்களையெல்லாம் நிறைவேற்றிப் பூதனை சகடாஸுரன் முதலிய சத்ருக்களைக் கொன்று ருக்மிணீ முதலிய பதினாறாயிரம் பார்யைகளை மணம்புரிந்து அவர்களிடத்தில் பற்பல புதல்வர்களையும் பெற்றுத் தன் கட்டளையான வேதத்தின் கருத்தை ஜனங்களுக்கு விளங்கச் செய்துகொண்டு யாகங்களால் தன்னையே ஆராதித்தான். பின்பு குருக்களுக்குள் ஒருவரோடொருவர்க்குக் கலஹத்தை உண்டாக்கிப் பூமியின் பெரும்பாரத்தை நீக்க முயன்று யுத்தத்தில் ராஜஸைன்யத்தையெல்லாம் கண்ணோக்கத்தினாலேயே பரிபவித்து அர்ஜுனன் எல்லோரையும் ஜயித்தானென்னும் பெருங்கோஷத்தை விளைவித்து உத்தவருக்குப் பரதத்வத்தை உபதேசித்துத் தன் ஸ்தானமாகிய வைகுண்டலோகத்தை அடைந்தான். இருபத்துநான்காவது அத்யாயம் முற்றிற்று.

ஒன்பதாவது ஸ்கந்தமும் முற்றுப்பெற்றது.